# இந்நூற்பதிப்பில் அடங்கியவை

# PREFACE.

FROM time out of mind, South India was the home of three great dynasties and Kings, the Cheras, the Cholas and the Pandyas. The territory belonging to these three was collectively known as *Tamilagam* or *Tamilnadu.* It stretched from the Venkata Hills (Tirupati) in the north to Cape Comorin inthe south, while the seas enclosed it in the eastern and western directions. *Tamilagam* or Tamil India knew no subjugation by foreign invaders ; its ancient sovereignty as is well known, finds eloquent expression in the Asokan inscriptions.

Of the three crowned heads to whom this sovereign land belonged, the Cheras stand pre-eminent and are invariably mentioned first among the Tamil kings. What may be the reasons for this special eminence of the Cheras ? The wide expanse of the Kerala country, the fertility of its soil, the heroism of its warriors and the far-famed munificence of its monarchs obviously entitled the Cheras to this pride of place. While the Pandya and the Chola Kingdoms comprised only fifty-six and twenty-four *kadams* * respectively, the Chera country is stated to extend to eighty kadams, an area equal to that of both the Pandya and Chola Kingdoms put together. No better testimony to the fertility of the Chera Kingdom can be found than Sekkilar who sings in his *Peria-Puranam:*

" The infinite wealth borne in by the waves of the sea, the

A *kadam* is equivalent to about 4 miles.

fertility of the cultivated soil and the riches of the hills mingle together in riotous excess in the *Malainadu.*

The heroism and the never-failing bounty of the Cheras are frequently celebrated in early literature.

Passing in review the literature in Tamil specifically devoted to the Cheras, we find that the eight Sangam classics known as *Ettut-tokai* very often sing their praises. The *Patirruppattu* numbered among the eight classics, is exclusively devoted to the description of the glories of the Cheras, their matchless prowess in war and endless generosity in peace. In the epic of the *Silappadikaram*, the whole of the third canto is concerned with the memorable exploits of a great Chera King, *Senkuttuvan.* Of the country and the capital towns of the Cheras, their chiefs in battle, and allied kings owing allegiance to them or claiming kinship with them, we have many descriptions in the various ancient collections of songs that have been handed down to us. Even a casual study of this mass of literature is enough to convince us of the unique position that the *Cheras* occupied in the life of Tamilagam. It is indeed true that proverbially the credit goes to the Pandyas for their patronage of Tamil. But to any one who reads the anecdotes and traditions of the princely benefactions of the Cheras spread throughout Tamil literature, it will appear equally true that the Cheras were second to none in their patronage of the Tamil language. It is particularly noteworthy that the Sangam verses about the Chera monarchs are far greater in number than those relating to the other Tamil kings. Likewise, the number of songs sung by Chera kings in their individual capacity is very considerable.

The Chera country is familiarly known as *Malainadu* and *Malaimandalam*, the land of the mountains.

If all the songs sung by various poets on Chera kings and allied chiefs including songs by the kings themselves were brought together for coordinated study, I felt that it would prove a beautiful and perhaps a monumental anthology. The authorities of the University of Travancore were kind enough to approve of my proposal to compile this work and gave me all encouragement in its preparation.

This anthology is divided into three major sections: the Sangam Age, the Middle Period and the Later Period. Poems relating to the Sangam Age included in the present volume have been classified under five smaller sections for the sake of convenience: (i) Poems on the Chera Kings, (ii) Poems by the Chera Kings, (iii) Poems on the kinsmen of the Chera Kings, (iv) Poems on the Chera country, towns, etc. and (v) Poems relating to allied kings and chiefs reigning over Chera territory. The *Patirruppattu*, the *Vanjikkandam* of the *Silappadikaram*, as well as the Palaikkali of *Cheraman Perunkadungo* figure in this volume. Apart from these, all songs of Chera interest ascribed to various poets in the Sangam works have been selected and strung together. Three hundred and forty one stanzas have been thus collected and arranged according to chronological sequence.

The present collections relating to the Sangam epoch is only the first volume of the Anthology of Poems on the Cheras. Poems relating to the middle and later periods will be included in later volumes of the series.

Considerations of space have prevented my writing a full commentary on all the poems now collected. I have contented myself with appropriate explanatory notes and comments. These will, I hope, serve the purpose, indicating the import of the songs as well as points of special literary, historical or cultural interest. I have

also added a note on the history of the Chera kings, and explanatory glossaries on words and names of persons and places. These will, I believe, serve to give the necessary background to the understanding of the poems.

While expressing my gratefulness to the authorities of the University of Travancore for enabling this compilation to be made, I cannot refrain from adding that they have placed the entire Tamil public within and without the Travancore State under a deep debt of gratitude by the publication of this work. It is needless to add that an anthology of this type will bring home to us the culture and civilization of ancient Kerala, of which we may justly feel proud.

I have to acknowledge with thanks the useful service that Pandit Krishna Ayyangar of the Research Department did both in the preparation of the manuscript and getting it printed. My thanks are also due to Vidvan Veerabhadra Chettiar, M. A., L. T., formerly Research Assistant under me, for his enthusiastic assistance in the course of the work, and to Mr. N. Padmanabha Ayyangar,, Proprietor, Bhaskara Press, for the excellent get-up of the book.

University of Travancore,
Trivandrum.
1-10-1947.

M. RAGHAVA AYYANGAR.

ஸ்ரீ

# முகவுரை

—:·:—

இப் பரதகண்டத்தின் தென்கோடியில் உள்ள நிலப்பகுதி, அநாதிகாலமாகவே, சேரசோழபாண்டியர் என்ற மூவேந்தர்க்கும் உரியதாகும்; "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" என்றார் தொல்காப்பியனார். வடவேங்கடம் தென்குமரிகட்கும், கீழ்கடல் மேல்கடல்கட்கும் இடைப்பட்ட இப் பகுதி, தமிழகம் தமிழ்நாடு எனப்படும். இது சுதந்தரம்பெற்ற தனித்தேசமாக முற்காலத்தே விளங்கியதென்பது, சங்கநூல்களாலும் அசோக சக்கரவர்த்தியின் சாஸனங்களாலும் நாம் நன்கறிந்தது. தமிழகத்தை ஆட்சிபுரிந்து வந்த அம் மூவேந்தர்களில், சேரவேந்தரே முற்படவைத்து நன்கு மதிக்கப்பெற்றவர். இம் மதிப்புக்குக் காரணங்கள்:— அவர்நாட்டின் விரிவும், வளமும், வீரமும், தமிழபிமானமும், கொடையுமேயாம். சேரநாடு, ஏனைய பாண்டிய சோழநாடுகளினும் பழைமையாகவே அளவிற் பெரியது. ஐம்பத்தாறுகாதம் பாண்டிநாடும், இருபத்து நான்குகாதம் சோழநாடும் கொண்டதாயிருக்கச் சேரநாடோ எண்பதுகாத அளவினது என்று முன்னோர் கூறியிருத்தல் இங்கே குறிப்பிடத்தக்கது.* இதனால் பாண்டிய சோழநாடுகள் இரண்டும் சேர்ந்த அளவைச் சேரநாடு ஒருங்குபெற்றிருந்த செய்தி தெரிய வரும். அளவில்மட்டுமன்றி, நிலவளத்திலும் இம் மலைநாடு ஏனைய தமிழ்நாடுகளினும் மேம்பட்டுவிளங்குவதை யாவரும் நன்கறிவர். "திரைசெய் கடலின் பெருவளமும் திருந்து நிலனின் செழுவளமும், வரைசெய் வளமும் உடன்பெருகி மல்குநாடு மலைநாடு" என்றார் சேக்கிழாரும்.

இனி, இந் நாட்டு வேந்தரது வீரச்சிறப்போ, அவரது குணங்களிலெல்லாம் மேம்பட்டு விளங்கியதொன்று. அவ்வாறே, தமிழ்

* பெருந்தொகை, பாடல்–2091, 2093, 2098.

மொழியை அறிந்துவளர்த்த செயலினும் கொடைத்திறத்தினும் ஏனைத் தமிழ்வேந்தர்க்குச் சிறிதும் குறைந்தவரல்லர் சேரமான்கள். இவையாவும் நாம் முன் னூல்களைத் துணைக்கொண்டு தெளிவாக அறியக்கூடியனவாம். ஆகவே, உலகவழக்கும் செய்யுள்வழக்கும் ஒரு சேரச் சேரவரசரை முற்படவைத்துச் சிறப்பித்திருப்பதில் வியப்பில்லை.

இவ் வேந்தரைப்பற்றியமைந்த பழம்பாடல்களை எட்டுத் தொகைநூல்களிலே பரக்கக் காணலாம். அத் தொகைகளுள் ஒன்றான பதிற்றுப்பத்து, சேரரின் செங்கோன்மையையும் பேராற்றலையும் வள்ளன்மையையும் குறிக்கும் தனிநூலாகும். சிலப்பதிகாரத்தின் மூன்றாங்காண்டம் முழுவதுமே சேரர்பெருமானொருவனது வீரவரலாற்றை விளக்குவது.* இவையன்றி, சேரர்கிளையினரான அரசரையும் படைத்தலைவரையும் அவர்நாடுநகர் முதலியவற்றையும் பற்றிய பாடல்களும் தொகைநூல்களிலே பலவாகக் காணப்படுகின்றன. இவற்றையெல்லாம் ஆராயுமிடத்து, தமிழகத்தில் சேரவேந்தர் பெற்றிருந்த பெருமை இணையற்றிருந்ததென்பது மலையிலக்காகின்றது. தமிழ்மொழியை வளர்த்துவந்த சிறப்புப் பழைமையாகவே பாண்டியர்க்கு உரியதென்பது உண்மையே. ஆனால், பெரும்புலவர்கட்கும் இரவலர்க்கும் வேண்டியவற்றை வாரிவழங்கி அவரை ஆதரித்த வரலாறுகள், பதிற்றுப்பத்து புறநானூறு முதலிய சங்க நூல்களில் மலிந்துகிடப்பதை நோக்குமிடத்து, தமிழ்வளர்த்த திறத்தில் சேரவேந்தர் எவ் வரசர்க்கும் குறைந்தவர்அல்லர் என்பதே புலப்படக்கூடியது. இஃதன்றி, ஏனைத் தமிழரசரைப்பற்றி அமைந்த சங்கச்செய்யுட்களின் அளவினும், சேரரைப்பற்றிய பாடல்களின் தொகை மிக அதிகமாகக் காணப்படுவதும், சேரவேந்தர்கள் பாடிய செய்யுட்களின்தொகையும் அவ்வாறே மிகுதிப்பட்டிருத்தலும் ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை.

' கபேர் யாத்திரை ' என்பதொன்றும், சேரமானொருவனது வெற்றிப்புகழைக் கூறும் தனிநூலாகும். ஆனால், இந்நூலின் ஒருசில பாடல்கள், புறத்திரட்டு என்ற தொகைநூலிற் காணப்படுவதன்றி, நூன்முழுதும் கிடைக்கவில்லை.

இவ்வாறு, நல்லிசைப் புலவர்களாற் பாடப்பெற்றும் தாமே பாடியும் போந்த சேரமன்னர் செய்யுட்களையும், அவர் கிளையினரைப் பற்றிய செய்யுட்களையும் திரட்டிநோக்குவோமாயின் அஃது ஒரு தனிநூலாகித் தமிழைப் பெரிதும் அலங்கரிப்பதாகும். அன்றியும், பழைய சரித்திரங்களையும் பிற அரியசெய்திகளையும் அறிந்து கொள்வதற்கு அஃது ஒரு தக்க கருவியுமாகும். ஆதலால், அத்தகைய தொகைநூலொன்று வெளிவருதலை யான் பெரிதும் விரும்பலானேன். என் விருப்பத்தைத் திருவாங்கூர்ச் சர்வகலாசங்கத்தாரும் ஆமோதித்து அநுமதி அளித்ததோடு, அஃது இனிதுமுடிதற்கு உரியவற்றைப் புரிந்தும் உதவினார்கள்.

இத்தொகைநூல், சங்ககாலப்பகுதி, இடைக்காலப்பகுதி, பிற்காலப்பகுதி என்ற மூன்று பெரும்பகுதிகள் கொண்டது. இவற்றுட் சங்ககாலப்பகுதியில், (1) பாடல்பெற்ற சேரவேந்தர், (2) பாடிய சேரவேந்தர், (3) சேரவேந்தர் கிளையினர், (4) சேரவேந்தர் நாடுநகர் முதலியன, (5) சேரமண்டலப்பகுதிகளை ஆண்ட பிற தலைவர்கள் என்ற ஐந்து உட்பிரிவுகள் உண்டு. இந்நூற்பாடல்களிலே பதிற்றுப்பத்துச் செய்யுட்களும், சிலப்பதிகார வஞ்சிக்காண்டமும், சேரமான் பெருங்கடுங்கோ பாடிய பாலைக்கலியும் அடங்கியுள்ளன. ஏனையவெல்லாம் தொகைநூல்களிலே புலவர் பலர் பாடியனவாக உள்ள செய்யுட்களாம். இவ்வாறாக மொத்தங்கூடிய செய்யுட்களின் தொகை முந்நூற்றுநாற்பத்தொன்று. இவையாவும், பெரும்பாலும் காலமுறைப்படி வைத்துத் தொகுக்கப்பெற்று, **சேரவேந்தர் செய்யுட்கோவை** என்ற தலைப்பெயருடன் முதற்றொகுதியாக இப்போது வெளியிடப்படுகின்றது. இதன் பாடல்களின் பொருள் நன்குவிளங்கும்படி உரையெழுதி வெளியிட முதலில் யான் விரும்பியதுண்டு. அவ்வாறு எழுதுமிடத்து, நூலின் அளவு மிகப் பெரிதாகிவிடும் என்று தோற்றியதால், கருத்துரையும் குறிப்புரையுமே எழுதப்பெற்றன. அவற்றைக் கீழ்க்குறிப்பில் உரியவிடங்களில் அமைத்துள்ளேன். அவ்வுரைக் குறிப்புக்களால் பாடல்களின் பருப்பொருளும் பிற செய்திகளும் ஒருவாறு விளங்கக் கூடியன.

இம் முதற்றொகுதியில் அமைந்த சங்கச்செய்யுட்கள்போலவே, இடைக்காலத்தனவும் பிற்காலத்தனவுமாக உள்ள சேரவேந்தர் பாடல்களும் பலவுள. அவை யாவும் இப்பதிப்புமுறையில் இரண்டாந்தொகுதியாக இனி வெளியிடப்பெறும்.

இத் தொகை நூலால், பழைய சேரமான்களின் சரித்திரங்கள் மட்டுமன்றி, மலைநாட்டு வழக்கவொழுக்கங்களையும், வாழ்க்கை வரலாறுகளையும், பழைய நாகரிகங்களையும் நன்கறியவும், அறிந்து இந்நாட்டுமக்கள் பெருமைபாராட்டிக்கொள்ளவும் கூடும் என்பதில் ஐயமில்லை.

இந்நூற்கு அங்கமாகச் சேர்த்துள்ள சேரவேந்தர் வரலாறு, அநுபந்தம், பெயர்க்குறிப்பு, பொருட்குறிப்பு முதலியவை, பாடற் பொருள்களையும் சரித்திரங்களையும் ஆராய்ச்சி செய்துகொள்ள உதவக்கூடும் என்றே நம்புகிறேன்.

இப்புதிய நூலொன்று இனிதுமுடியும்படி செய்துதவிய திருவாங்கூர்ச் சர்வகலாசாலைத் தலைவர்க்கு இந்நாட்டார்மட்டுமன்றிப் பொதுவாகத் தமிழ்மக்களெல்லாம் நன்றிகூறக் கடமைப்பட்டவர்கள். இந்நூற்பதிப்புக்கு இன்றியமையாத உதவிகளை எனக்குப் புரிந்து வந்தவர், இச் சர்வகலாசாலைத் தமிழாராய்ச்சித் துறையில் என் கீழமர்ந்து துணைபுரியும் பண்டிதர் T. N. கிருஷ்ணையங்கார் அவர்கள். இவர்க்கும், இவ்வாராய்ச்சித் துறையில் பலமாதங்கள்வரை எனக்கு உதவியாளராயிருந்த வித்வான் R. வீரபத்திரச் செட்டியார் M. A., L. T., அவர்கட்கும், இந்நூற்பதிப்பு நன்கமைதற்கு வேண்டியவற்றை யெல்லாம் ஊக்கத்துடன் நிறைவேற்றிவைத்த இந்நகர்ப் "பாஸ்கர" அச்சுக்கூடத் தலைவர் ஸ்ரீ N. பத்மநாப ஐயங்கார் அவர்கட்கும், இம் முகவுரையை ஆங்கிலத்தில் அழகுற மொழிபெயர்த்துதவிய ஸ்ரீ J. பார்த்தஸாரதி M.A., L.T., அவர்கட்கும் என் நன்றிகள் பெரிதும் உரியனவாகும்.

இங்ஙனம்,

திருவாங்கூர்ச் சர்வகலாசாலை,
15—2—1123.

மு. இராகவையங்கார்,
தமிழ்ப்பேராசிரியர்.

# சேரவேந்தர் சரித்திரச்சுருக்கம்.

## 1. பாடல்பெற்ற சேரவேந்தர்

—:0:—

### 1. சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன்

*சேரர்மரபில் தோன்றிய வேந்தருள் இவனே பழைமையான வனாகத் தெரிகின்றான். இவனைப்பாடிய புலவர் முரஞ்சியூர் முடிநாகராயர் என்பவர். இவரைத் தலைச்சங்கப்புலவருள் ஒருவராகக் களவியலுரைப் பாயிரம் கூறுகின்றது. பாரதப் பெரும்போரில் பாண்டவகௌரவப் படைகளிரண்டற்கும், அப்போர் முடியுந்துணையும் பெருஞ்சோறிட்டு உதவியதால், பெருஞ்சோற்றுதியன் என்ற சிறப்புப்பெயர் இவனுக்கு வழங்கியது. "முதியர்ப்பேணிய உதியஞ் சேரல் பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை" (அகநா. 233) என்றார் மாமூலனாரும். இவ்வரசனும் இவனைப்பாடிய புலவரும் பழைமையுடையராதலால், புறநானூறு தொகுத்த ஆசிரியரும் இவர்களை முதற்கண்வைத்துச் சிறப்பிக்கலாயினர். முரஞ்சியூர் முடிநாகராயரைப் பற்றிய பிறசெய்திகளை, இந்நூல் 2, 3-ஆம் பக்கக் குறிப்புக்களிற் காண்க.*

### 2. உதியஞ்சேரல்

*இவன், மேற்கூறிய உதியஞ்சேரலின் வேறானவனாய், அவன் வழியில் வந்தவன். பதிற்றுப்பத்தினுள் இரண்டு மூன்றும் பத்துக்களைக் கொண்ட நெடுஞ்சேரலாதனுக்கும் பல்யானைச் செல்கெழு குட்டுவனுக்கும் இவ்வுதியஞ்சேரல் தந்தையாவன். இளங்கீரனார் என்ற புலவர் பாடிய உதியன் (இந்நூல். 4) என்பான், இவன் போலும்.*

### 3. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

*இவன், மேற்குறித்த உதியஞ்சேரல் என்ற வேந்தனுக்கு வெளியன்வேண்மாள் நல்லினி என்ற பெருந்தேவியிடம் பிறந்த மகன் [வெளியன்வேண்மாள் நல்லினி-வெளியன் என்ற வேளின் மகளான நல்லினி]. இந் நெடுஞ்சேரலாதன், இமயம்வரை படையெடுத்துச் சென்று, தன் இலாஞ்சனையாகிய வில்லை அம் மலைமேற்*

பொழித்தவன்; தமிழகமுழுதையும் தன் செங்கோலின்கீழ்வைத்து ஆண்டவன்; தன்னுடன்பொருத ஆரியவரசரை வென்று அவரை வணங்கச்செய்தவன்; யவனவேந்தரைப் போரிடையே பிடித்து, அக்காலவழக்கின்படி அவர்தலையில் நெய்யைப் பெய்தும் கைகளைப் பின்கட்டாகக் கட்டியும் கொணர்ந்தவன்; விலையுயர்ந்த அணிகளையும் வயிரங்களையும் அவரிடத்தினின்று தண்டமாகப் பெற்றுத் தன் தலை நகரிற் சேமித்துவைத்தவன்; கடலிடையே தீவொன்றில் வாழ்ந்து வந்த தன்பகைவர்மேற் கப்பற்படையுடன் சென்று, அவரது காவன் மரமான கடம்பை வெட்டியெறிந்து அப் பகைவரை அழித்தவன்; அவ் வெற்றிக்குறியாக அக்கடம்பின் அடிமரத்தால் தனக்குப் போர் முரசை அமைத்துக் கொண்டவன்.

பதிற்றுப்பத்து இரண்டாம்பத்தால் இவனைப் பாடியவர், அந்தணரான குமட்டூர்க்கண்ணனார் என்ற புலவர். இது பாடியதற்குப் பரிசாக, உம்பற்காடு என்ற பிரதேசத்து ஐந்நூறு ஊர்கள் பிரமதாயமும் தென்னாட்டுவருவாயிற் பாகமும் இவர் பெற்றார்.

நெடுஞ்சேரலாதன், தான் பகைவரிடமிருந்து கைப்பற்றிய பெருநிதிகளை மாந்தை என்ற கடற்கரைப் பட்டினத்தில் சேமித்து வைத்திருந்தான் என்பர் மாமூலனார் (அகா. 127). இவ்வரசன் ஐம்பத்தெட்டாண்டுகள் ஆண்டான்.

## 4. பல்யானைச் *செல்கெழுகுட்டுவன்

இவன், மேற்கூறிய நெடுஞ்சேரலாதனுக்குத் தம்பியாகச் சேரநாட்டினை ஆண்டவன்; உம்பற்காடு† முழுதையும் தன் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தவன்; பகைவரது வெல்லற்கரிய 'அகப்பா' என்ற பேரரணை அழித்தவன்; தன்குலத்து முதியோரைப் பேணி அவர்க்கு நாடுகளைப் பகுத்தளித்தவன்; மேற்றிசை கீழ்த்திசைகளின் கடலளவுவரை யானைக்கூட்டங்களை நீளப் பரப்பி, அவற்றின்மூலம் இருகடல் நீர்களையும் கொணர்வித்து ஒரு பகலில் புண்ணியதீர்த்தமாடியவன். இதுபற்றிப் பல்யானைக்குட்டுவன் (இந்நூல், 26-14) எனப்பட்டான். தன்னாட்டு அயிரை மலையிலுள்ள§ கொற்றவைக்

---

* பல்யானைச் செல்கெழு — பல யானைகளாகிய மேகத்தையுடைய.

† உம்பற்காடுபற்றிய குறிப்பை இந்நூல் 34-ம் பக்கத்துக் காண்க.

§ இது யானைமலைத் தொடர்களுள் ஒன்று. ஐவர்மலை என்று இக்காலத்து வழங்குவது.

கடவுளைத் தன் முன்னோர்போலவே பலியிட்டு வழிப்பட்டுவந்தவன்; தன் குலகுருவான நெடும்பாரதாயனார்* என்பவர் துறவுபூண்டு வனஞ்செல்ல, அதுகண்டு தானும் துறவுள்ளம் பிறந்து காட்டிற் சென்று தவம்புரிந்தான். வீரனும் ஞானியுமான இவ் வேந்தன் இருபத்தைந்தாண்டுகள் ஆட்சிபுரிந்தனன்.

பதிற்றுப்பத்து மூன்றாம்பத்தால் இவனைப்பாடியவர், அந்தணரான குமட்டூர்க்கண்ணனார் என்ற புலவர். இவர் பாடல்களைக் கேட்டுமகிழ்ந்த அரசன், 'நீர் வேண்டியது கொண்மின்' என்றுகூற, "யானும் என் பார்ப்பனியும் சுவர்க்கம் புகல்வேண்டும்" என்று இப் புலவர் வேண்டினர். உடனே இக் குட்டுவன், பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டு, ஒன்பது பெருவேள்விகளை வேட்பிக்கப் பத்தாம் பெருவேள்வியில், இப் புலவரும் இவர் பார்ப்பனியும் காணாராயினர். "இவ்வாறு இவர் துறக்கம் பெற்ற சரிதம் மலைநாட்டிற் கர்ணபரம்பரையில் இக்காலத்தும் வழங்குகின்றது" என்பர்† (பதிற். பதிப்பு, பாடினோர் வரலாறு, ixv).

## 5. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்

இவன், சேரலாதனுக்கு வேளாவிக்கோமான் பதுமன் என்பவன் மகளான பெருந்தேவியிடம் பிறந்த மகனாவன். இவ்வேந்தன் முடிசூடுகின்ற சமயத்தில், முடித்தற்குரிய கண்ணியும் கிரீடமும், பகைவர் கவர்ந்ததனால் உதவாமற்போனதுபற்றி, அவற்றிற்குப் பிரதியாகக் களங்காயால் கண்ணி(முடிமாலை)யும் நாரால் முடியுஞ் செய்து புனைந்துகொண்டு சிங்காதனமேறினமையால் இப்பெயர் பெற்றான்.

இச்சேரனுக்குப் பெரும்பகைவனாய் இவனது நாட்டைக் கவர்ந்தவன், கடம்பின்பெருவாயில் என்ற நகரிலிருந்தாண்ட நன்னன் என்பவன். இவனை, மேற்றிசையிலுள்ள வாகைப்பெருந்துறை என்ற இடத்தில் நடந்த பெரும்போரிலே கொன்று தானிழந்த நாட்டைத் திரும்பப்பெற்றான் என்று கல்லாடனார் என்ற புலவர் கூறுவர் (சே. கோ. 363). இவ்வாறு பெற்றது பூழிநாடாகும்§ (ஷை, 39).

---

* பாரதாயன்–பாரத்துவாசன் என்பதன் திரிபு. சாஸனங்களிலும் இவ்வாறு பயிலும்.

† இளங்கோவடிகளும் இவ்வரலாற்றைக் கூறினர் (சிலப். 28, 137–8).

§ பூழிநாடு பற்றிய குறிப்பை, இந்நூல் 45-ஆம் பக்கத்துக் காண்க.

இவனைப் பதிற்றுப்பத்து நான்காம்பத்தாற் பாடிச் சிறப்பித்தவர் காப்பியாற்றுக் காப்பியனார் என்ற புலவர். இதுபாடியதற்குப் பரிசிலாக, நாற்பது நூறாயிரங் காணமும், தன்னாட்டிற் பாகமும் கொடுத்தான் இச் சேரவேந்தன். இவன் இருபத்தைந்தாண்டு அரசாண்டான்.

## 6. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்

இவன், நெடுஞ்சேரலாதனுக்குச் சோழன் மணக்கிள்ளியின் மகளான நற்சோணை என்ற பெருந்தேவியிடம் பிறந்தவன். இச் செங்குட்டுவன், பத்தினிக்கடவுளான கண்ணகியின் உருவம் வகுத்தற்குரிய இமயக்கல்லை எடுத்துவருதற்கும் தமிழர்வீரத்தை இகழ்ந்த ஆரியவரசரை வென்றுவருதற்குமாகப் பெரும்படையுடன் வடநாடு சென்று அவ்வருஞ்செயல் இரண்டையும் முடித்துவந்தவன். இடும்பில், வியலூர், கொடுகூர் என்ற இடங்களில் நடந்த போர்களிலே வெற்றி பெற்றவன்; தன் நட்பினனான அறுகை என்ற அரசன்பொருட்டு, அவன்பகைவன் பழையன் என்பானது காவல்மரமான வேம்பை வெட்டி அதன் துண்டங்களை வண்டியில் ஏற்றிக் கொணர்ந்தவன்; தன் மைத்துனச் சோழனுடன் பகைத்துக் கேடுவிளைத்துவந்த சோழ வமிசத்தவர் ஒன்பதின்மரை நேரிவாயில் என்ற போர்க்களத்தே அழித்தவன்; கடலிடையே வாழ்ந்துவந்த பகைவர்மேற் கப்பற் படையுடன் சென்று அவரை வென்றவன்.

இவனை ஐந்தாம்பத்தாற் பாடிய புலவர்பெருமான், பரணர் ஆவர். இதுபாடிய புலவர்க்கு உம்பற்காட்டு வருவாயையும் தன்மகன் குட்டுவஞ்சேரலையும் பரிசிலாக இவ் வேந்தன் அளித்தான். இந்த மகனைப் பரிசளித்தானென்பது, அவனை அப் புலவரிடம் குருகுலவாசஞ்செய்து கற்றுவல்லனாம்படி ஒப்பித்ததாகவே கருதத் தகும். இச் செங்குட்டுவனது பின்வாழ்க்கை வரலாற்றை, இவனிளவலான இளங்கோவடிகள் சிலப்பதிகாரம், வஞ்சிக்காண்டத்தால் விளக்கினர். இவன் ஐம்பத்தைந்தாண்டுகள் ஆட்சிபுரிந்தான்.*

---

* இவ் வேந்தனது வரலாறுமுழுதும் என்னால் எழுதப்பட்ட "சேரன் செங்குட்டுவன்" என்ற தனிநூலிற் பரக்கக் காணலாம்.

## 7. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

இவன், நெடுஞ்சேரலாதனுக்கு வேள் ஆவிக்கோமான் மகளான பெருந்தேவியிடம் பிறந்த மகன். களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் தம்பியாக இவனைக் கருத இடமுண்டு. இவனது அரிய செயல்களிலே, ஆரியநாட்டுள்ள தண்டாரணியம் என்ற பகுதியில் பகைவரால் கவரப்பட்ட ஆட்டுநிரைகளை மீட்டுத் தொண்டியிற் கொணர்ந்து சேர்ப்பித்ததே சிறப்புடையதாகும். இதுபற்றியே 'ஆடுகோட்பாட்டு' என்று விசேடிக்கப்பட்டான். குடநாட்டிலுள்ள ஊரொன்றைக் குராற்பசுவோடு அந்தணர்க்கு இச்சேரன் தானஞ் செய்தான். இவன் வாழ்ந்த தலைநகர் நறவு* என்ற பெயருடையது (70).

இவனை ஆறாம்பத்தாற் பாடியவர், காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்ற பெண்பாற்புலவர். இது பாடியதற்குப் பரிசாக அணிகலன் செய்துகொள்வதற்கென்று ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரங் காணமுங்கொடுத்தும், அவரைத் தன் ஆஸ்தானத்துக் கொண்டும் அபிமானித்தனன். இச் சேரவேந்தன் முப்பத்தெட்டாண்டுகள் ஆட்சிபுரிந்தான்.

## 8. சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேர லிரும்பொறை

சேரர் முன்னோனை பெருஞ்சோற்றுதியன் சேரலாதனை அடுத்த சேரனாகப் புறநானூறு தொகுத்த புலவர் இவனை அமைத்துள்ளார். அதனால் இவ்விரும்பொறையும் பழைமையானவனாகவே தெரிகின்றான். நரிவெரூஉத்தலையார் என்ற புலவர் யாதுகாரணத்தாலோ தம்முடம்பு வேறுபட்டிருந்து, இச்சேரனைக் கண்டளவில் அவ்வேறுபாடு நீங்கித் தம் பழைய நல்லுடம்பு பெறலாயினர். இதனை வியந்து இப்புலவர் பாடியது புறநானூற்றின் ஐந்தாம் பாடலாகும். பேராசிரியரும்—'நரிவெரூஉத்தலையார் தம்முடம்பு பெற்று வியந்து கூறிய பாட்டு" என்றார் (தொல். மெய்ப். 7).

பெரிப்ளஸ் (Periplus) என்ற பழைய யவனாசிரியரால் குறிப்பிடப்பட்ட நௌரா (Naoura) என்ற மேல்கடற்கரையூரே இஃது என்றும், அப்பக்கத்துள்ள மங்களூராக இதனைக் கருதத் தகும் என்றும் கூறுவர் (*Cera Kings*, by Sri K. G. Sesha Aiyar, p. 29)

'கருவூரேறிய' என்று இவன் விசேடிக்கப்படுதலால், சேரர்தலைநகர் ஒருகால் பகைவராற் கைப்பற்றப்பட்டுப் பின் இவனால் திரும்பக் கைக்கொள்ளப்பெற்றது என்று கருதத்தகும். 'இரும்பொறை' என்ற சிறப்புப்பெயர் தரித்த சேரருள் இவனே முதல்வன் என்றும் தோற்றுகின்றது.

## 9. மாந்தரம் பொறையன் கடுங்கோ

இவன் பெருவீரனும் வள்ளலுமாக விளங்கியவன். இவனைப் பாடியவர் பரணர் (இந்நூல்-74). 'மாந்தரன்' எனப் பெயர்பெற்ற சேரர்முன்னோன் ஒருவன் உண்டு; 'அறன்வாழ்த்த நற்காண்ட, விறன்மாந்தரன் விறன்மருக' (பதிற். 90) எனக்காண்க.

## 10, சேரமான் அந்துவஞ்சேர லிரும்பொறை

இவன், சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளியோடு பகைமை பூண்டவன். அச் சோழன், தன் பாசறையினின்று ஏறிவந்த களிறு, மதங்கொண்டு கட்டுக்கடங்காமல் கருவூருக்குட் புகுந்தது. அதனை மாடத்தின்மேலிருந்து கண்ட இவ்வந்துவஞ்சேரலிரும்பொறை சினங்கொண்டு 'யார் இவன்' என்று, தன் பக்கத்திருந்த உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்ற புலவரை உசாவினன். அதற்கு விடையாக அவர் "இவன்யார் என்குவையாயின்" (புறநா. 13) என்ற பாட்டைப்பாடிச் சேரன் சினத்தைத் தணிப்பித்தனர். இம் முடமோசியார் அந்தணராவர்* இப்புலவர் வேள் ஆய் என்ற வள்ளலைப் புகழ்ந்துபாடிய பாடல்கள் பல உள (இந்நூல், பக். 376-393).

## 11, செல்வக்கடுங்கோ வாழியாதன்

இவன், அந்துவஞ்சேரல் என்ற வேந்தற்குப் பொறையன் பெருந்தேவி என்ற மனைவியிடம் பிறந்த மகன். இவ் வந்துவஞ்சேரல், மேற்கூறிய அந்துவஞ்சேரலிரும்பொறை போலும். இவன் மகன் செல்வக்கடுங்கோ, பெருங்கொடையாலும் அருங்குணங்களாலும் பேர்பெற்றவன்; திருமால்பத்தியிற் சிறந்து விளங்கியோன்; கபிலர் என்ற புலவர்பெருமான், தம் உயிர்த்துணைவனாக விளங்கிய வேள்பாரி

---

* சாஸனங்களில் 'முடமோசிகாராயணக் கிரமவித்தர்' என்றவாறு அந்தணர்சிலர்க்கு இப்பெயர் விசேடணமாக வழங்கியிருத்தல் குறிப்பிடத்தக்கது.

என்பான் இறந்தபின், அப் பாரியின் உத்தமகுணங்கள் பலவும் இச் செல்வக்கடுங்கோ வாழியாதனிடம் உள்ளனவாகக் கேள்வியுற்று இவனைக் காணச் சென்றனர்; கண்டுமகிழ்ந்து, ஏழாம்பத்தை இவன் முன்னிலையிற் பாடினர்.* இப்பாடல்களைக்கேட்டு வியந்த செல்வக் கடுங்கோ, அப் புலவருக்கு நூறாயிரம் காணம் சிறுகொடையாகவும், நன்றா என்னுங் குன்றின்மேல் அப்புலவருடன் தான் ஏறிநின்று தன் கண்ணிற்கண்ட நாடெல்லாங்காட்டி அவற்றைப் பெருங்கொடையாகவும் புலவர்க்கு அளித்தனன். இவ்வரிய கொடைத்திறத்தை 'நனவிற் பாடிய நல்லிசைக் கபிலன் பெற்ற வூரினும் பலவே' எனப் பெருங்குன்றூர்கிழார் என்ற புலவரும் சிறப்பித்தனர் (இந்நூல், 105).

இவனது நாட்டிலே, அரிய அணிகலன்கள்செய்யும் பணியிற் பெயர்பெற்ற கொடுமணம் என்ற ஊரும், நன்முத்துக்கள் மிகப் பெற்ற பந்தர் என்ற பட்டினமும், அயிரை, சேரி, நன்றா என்ற மலைகளும் கபிலராற் சிறப்பிக்கப்படுகின்றன. திருமால் வழிபாட்டின் பொருட்டு ஒகந்தூர் என்ற வளம்பெற்ற ஊரொன்று இவனால் அளிக்கப்பட்டது. இச் செல்வக்கடுங்கோ தன் குலகுருவான புரோகிதனினும் அறிவிற் சிறந்திருந்தான் என்பர். இவனைப்பாடிய வேறு புலவர், குண்டுகட் பாலியாதன் என்பார் (77).

இவ் வேந்தன் இருபத்தைந்தாண்டு வீற்றிருந்து ஆட்சி புரிந்தான். சிக்கற்பள்ளி என்ற இடத்தில் இறந்தவனாதலின், "சிக்கற்பள்ளித் துஞ்சிய" என இவன் விசேடிக்கப்பட்டான்.†

## 12. சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறை

இவன், மேற்கூறிய செல்வக்கடுங்கோவுக்கு வேளாவிக் கோமான் பதுமன் மகளான பெருந்தேவியிடம் பிறந்த வீரமகனாவன். இப் பெருஞ்சேரல், கொல்லிமலை சூழ்ந்த நாட்டினை ஆண்ட

---

* இவ் வேழாம்பத்தின் முதற் பாட்டு, மேற்கூறிய வரலாற்றைக் குறிப்பிடுகின்றது (இந்நூல், பக். 160).

† கொச்சியரசரும் கோழிக்கோட்டு சாமூதிரியரசரும் இறந்தபின், அவர் இறந்தவிடத்தை அவர்பெயருக்கு விசேடணமாக்கிக் கூறுவது வழக்கென்று தெரியவருகிறது ( *History of Kerala* by K. P. Padmanabha Menon, vol. I, p. 539; *Purananuru*, 3rd Ed. p. 673).

அதியமானது தகடூரின்மேற் படையெடுத்துச் சென்று அவனூரை அழித்து அவனையும் போரிடையே கொன்றனன். இப்போர் நிகழ்ச்சியினைத் 'தகடூர் யாத்திரை' என்ற நூலால் முன்னோர் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவ்வெற்றிபற்றியே, 'தகடூரெறிந்த' என்ற அடையுடன் இப்பெருஞ்சேரல் வழங்கப்படுவன். இவனால் வெல்லப்பட்ட அதியமானும் சேரமரபில் ஒருகிளையினன்* என்றே தெரிகின்றது. இவனன்றி, காமூர்த்தலைவனான கழுவுள் என்ற இடையர்குலத் தலைவனும் இச்சேரனால் வெல்லப்பட்டான்.

இப் பெருஞ்சேரலை எட்டாம்பத்தாற் புகழ்ந்து பாடியவர், அரிசில்கிழார் என்ற பெரும் புலவர். இவர் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்த இச்சேரன், தானும் தன் கோயிலாளான தேவியும் வெளியே வந்துநின்று, தன் அரண்மனையில் உள்ளனவெல்லாம் கொள்க என்று ஒன்பது நூறாயிரங்காணத்தோடு தன் சிங்காதனத்தையும் புலவர்க்குக் கொடுப்ப, அவர் 'யானிரப்ப நீ ஆள்க' என அவற்றைத் திரும்பக் கொடுத்து அவ்வரசனுக்கு அமைச்சுப்பூண்டார்.

இவ்வேந்தனைப்பாடிய வேறு புலவர் மோசிகீரனார் என்ற புலவர். ஒருகால், இவர், அரசமுரசுக்குரிய உயர்ந்தபீடத்தில் அறியாது ஏறிப் படுத்துறங்கிவிட்டனர் என்றும், அஃதறிந்த சேரன் அவர்க்குத்தீங்கிழையாமல், அவர் துயிலெழுந்துணையும் கவரிகொண்டு வீசிநிற்க, துயிலெழுந்த புலவர் அஃதறிந்து அவனது பெருந்தமிழுணர்ச்சியையும் அபிமானத்தையும் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்தனர் என்றும் புறப்பாடலொன்று குறிப்பிடும் (இந்நூல், பக். 100). இச் சேரவேந்தன் பதினேழாண்டு வீற்றிருந்து அரசாண்டான்.

## 13 இளஞ்சேரலிரும்பொறை

இவன், மேற்கூறிய பெருஞ்சேரலிரும்பொறைக்கு மையூர் கிழான் மகளான அந்துவஞ்செள்ளையிடம் பிறந்த அருமைமகன்; "ஒண்ணுதல் கருவிற், காவற்கமைந்த அரசுதுறை போகிய, வீறுசால் புதல்வற்பெற்றனை" (92) என்று இவன் தந்தையை அரிசில் கிழார் புகழ்வர். இதனால், பெருஞ்சேரலிரும்பொறை ஆட்சி

---

* அதியமான் நெடுமானஞ்சியின் வரலாறு பார்க்க.

புரிந்துவந்தகாலத்தே இவ்விளஞ்சேரல் அரசியலறிவும் ஆட்சித் திறமையும் பெற்றுவிளங்கியவன் என்பது புலப்படுகின்றது.

இவனைப் பதிற்றுப்பத்தின் ஒன்பதாம்பத்தாற் பாடியவர் பெருங்குன்றூர்கிழார் என்ற புலவர். இவர் பாடல்களைக் கேட்டு உவந்த இளஞ்சேரல் முப்பத்தீராயிரங்காணம்—தாம்வேண்டியவர்க்கு உதவும்படி—கொடுத்தும், புலவரறியாமலே அவர் ஊரும் மனையும் வளமிகப் படைத்து வரும் இன்பமும் இயல்வரப்பரப்பியும், எண்ணற்காகா அருங்கலவெறுக்கையொடு பன்னீராயிரம் பாற்படவகுத்துக் காவல்வீரரைப் பாதுகாவற்கு வைத்தும் உலகோர்வியக்கும்படி சிறப்பித்தனன். பெருங்குன்றூர்கிழார் இவ்வேந்தனைப் பாடியனவாக அமைந்த புறப்பாடல்களால் (இந்நூல், 112-3), அப்புலவர்பாட்டுக்களைக் கேட்டுமகிழ்ந்த சேரன், அவரை நெடுங்காலம் தன்னிடங் காக்கவைத்துப் பின் முகமாறியவன்போல் உதாசினனாக, அது பற்றிப் புலவர் அவனைச் சினந்துகூறி மனமுடைந்து சென்றசெய்தி தெரியலாகும். இதனால், பெருங்குன்றூர்கிழாரது நல்வாழ்வுக்கு வேண்டிய அனைத்தையும் அவரூரில் அவரறியாமலே அமைத்து வைத்துப் பின்பு வெறுங்கையோடு அவரை விடுத்தவன் இவ்விளஞ்சேரல் என்பது உய்த்துணரப்படுகின்றது. இச்சரிதம்போலச் சத்திமுற்றப்புலவர் என்பார் வரலாறொன்று பிற்காலத்தே வழங்குதல் ஒப்பிடத்தக்கது.

இச்சேரவரசன், விச்சி, இளம்பழையன்மாறன், பெருஞ்சோழன், பாண்டியன் என்ற அரசர்களைப் போரில் வென்றவன்; சதுக்கப்பூதர் என்ற தெய்வங்களைத் தன் தலைநகரிலே தாபித்துச் சாந்திவேள்வி செய்தவன்; மையூர் கிழானைத் தனக்கு மந்திரியாக அமைத்துக்கொண்டவன்; இத்தகைய சேரல், பதினாறாண்டு வீற்றிருந்து ஆட்சிபுரிந்தான்.

## 14. ஆதன் அவினி

இவன், செங்கோலாட்சியானும் சீரியகுணங்களானும் பெயர் பெற்ற சேரவேந்தருள் ஒருவன். "வேட்கைப்பத்து" என்னும் பகுதியால் ஓரம்போகியார் என்ற புலவர் இவனைச் சிறப்பித்துள்ள பாடல்கள், ஐங்குறுநூற்றின் மருதத்திணையுள் கோக்கப்பட்டுள்ளன.

## 15. யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை.

பெருவீரமும் வள்ளன்மையும் பெற்றிருந்த சேரர்களிலே இவனும் ஒருவன். மேல்கடற்கரையில் உள்ள தொண்டிப்பட்டினம்

இவனது தலைநகரமாகும். விளங்கில் என்ற ஊரார்க்குப் பகைவரால் விளைந்த துன்பத்தை இவன் தீர்த்துவைத்தான். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியுடன் இவன் ஒருகாற் போர்செய்ய நேர்ந்ததென்றும், மலையமான் திருமுடிக்காரி என்பவன் சோழனுக்குத் துணையாக அப்போரில் நின்றான் என்றும் தெரிகின்றன (புறநா. 125). புலவர் பெருமானாகிய கபிலரிடம் இவன் பெருமதிப்பு வைத்திருந்தவன். ஒருகாலத்தே, பாண்டியன் தலையாலங்கானத்து வென்ற நெடுஞ்செழியனால் போரில் பிணிப்புண்ட இச்சேரமான், பின் உபாயத்தால் அதனைநீக்கிக்கொண்டு தன் அரசுகட்டிலில் மீண்டும் ஏறிப் பெரும்புகழ்பெற்றான். 'புலத்துறைமுற்றிய கூடலூர் கிழார்' என்ற புலவரைக்கொண்டு ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்தவன் இவ்வேந்தனே. யானையின் கண்களைப் போன்ற கண்களை உடைமையால், யானைக்கட்சேய் என இவன் விசேடிக்கப்பட்டனன். மாந்தரஞ்சேரலிரும்பொறை என்றும் இவ்வரசன் வழங்கப்படுவன். இவனைப்பாடிய புலவர்கள்:— குறுங்கோழியூர்கிழார், பொருந்தில் இளங்கீரனார், கூடலூர்கிழார் என்போர். இவன் இறந்தபோது மிகவும் இரங்கிப்பாடியவர் கூடலூர்கிழாராவர்.

## 16. சேரமான் வஞ்சன்

இவன், பரிசிலர்க்கு வேண்டியன அளித்துதவிய வள்ளல்; பாயல் என்ற மலை இவனுக்குரியதாகும், இவனைப்பாடிய புலவர் திருத்தாமனார் என்பவர்.

## 17. சேரமான் குட்டுவன்கோதை

இவன், பெருவீரனும் வள்ளலுமாக விளங்கியவன். குட்டுவன்கோதை என்பது குட்டுவன்மகன் கோதை எனவும் விரியும். இவனைப் பாடியவர், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் என்ற புலவராவர்.

## 18. சேரமான் மாரிவெண்கோ

இவன் காலத்து அரசர்கள், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதியும் சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் ஆவர். அவ்விருவருடன் சேர்ந்து இவன் ஒருகால் மகிழ்ந்திருந்தபோது, நல்லிசைப்புலவராகிய ஔவையார் அம்மூவர் கூட்டத்தைக் கண்டுகளித்து—"இருபிறப்பாளர் முத்தீப் புரையக், காண்டக இருந்த கொடித்தேர் வேந்திர்! ... உயர்ந்து மேந்தோன்றிப்

பொலிக நும் நாளே" (132) என்று வாழ்த்துவாராயினர். இச்சேரமான் பெரிய வண்மையுடையவன்; அதனால் 'மாரிவண்கோ' என்பது இவன் பெயராகக் கொள்ளத்தகும்.

## 19. சேரமான் கோக்கோதைமார்பன்

இவன், மேல்கடற்கரையில் உள்ள தொண்டி என்ற பட்டினத்திலிருந்து ஆண்டவன்; கொடையும் வீரமும் கொண்டவன். இவனது நாடு, குறிஞ்சி முதலிய நான்குநிலங்களின் செறிவால் வளமிகப் படைத்ததென்பர். பாண்டிய சேனபதியான பழையன் மாறன் என்பான், கிள்ளிவளவன் என்ற சோழனோடு மதுரைப் பக்கத்தில் நடந்த போரிற் பெற்ற பெருவெற்றியைக் கேட்டு, இக் கோதைமார்பன் பெரிதும் உவந்தான் என்று நக்கீரனார் கூறுவர் (135). இச்சேரமானைப் பாடியவர், பொய்கையார் என்ற புலவர்.

## II பாடிய சேரவேந்தர்.

## 20. சேரமான் எந்தை

தலைமகனது செலவுக்குறிப்பறிந்து ஆற்றாளான தலைவியைத் தோழி ஆற்றுவித்த துறைபற்றிக் குறுந்தொகையில் இவர் பாடிய பாடல் (22) ஒன்றே உள்ளது.

## 21. நம்பி குட்டுவன்

குட்டுவன் என்ற பெயரிலிருந்து, சேரர்மரபினன் இவன் என்பது தெரியலாகும். நம்பி என்பது சிறந்தோன், சான்றோன், நமக்குரியவன் என்ற கருத்தில் அடைமொழியாகப் பெரியோர்க்கும் அரசர்க்கும் வழங்குவதுண்டு. நம்பி நெடுஞ்செழியன், பாண்டியன் அறிவுடைநம்பி என அரசரும் இவ்வாறு சிறப்பிக்கப்படுதல் காண்க. இந் நம்பிகுட்டுவன், நெய்தற்றிணைபற்றிப் பாடிய பாடல்களில் இரண்டு குறுந்தொகையில் கோக்கப்பட்டுள்ளன.

## 22. குட்டுவன் கண்ணன்

இப்பெயரிலிருந்து சேரர்மரபினன் இவன் என்று கருதப்படும். குட்டுவன் கண்ணன் என்பது குட்டுவனுக்கு மகன் கண்ணன் என்றும் பொருள்தரக்கூடியது. பகல்வந்து தலைவியைக் கூடிச்செல்வானை இரவுக்குறி நேர்ந்தவள்போலக் கூறி, தோழி தலைவனை மணம்புரிந்துகொள்ளும்படி குறிப்பிடுந்தன்மை, இச்சேரனால் சுவைபெருகப் பாடப்பட்டுள்ளது. குறுந்தொகையுள் இவன் பாடிய செய்யுள் ஒன்றேயாகும்.

## 23. கருவூர்ச் சேரமான் சாத்தன்

இவன், கருவூரில் இருந்தாண்ட சேரவேந்தன் என்பது இவன்பெயரால் தெளிவாம். குறுந்தொகையுள் இவன் இயற்றியதாக ஒருபாடல் உள்ளது. தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குக் கூறியதாய் அமைந்த இச்செய்யுள் இன்பம்விளைப்பதாகும்.

## 24. சேரமான் இளங்குட்டுவன்

இச்சேரவேந்தன், பாலைத்திணையில், மகட்போக்கிய செவிலித்தாயின் கூற்றாகப் பாடிய பாட்டொன்று, அகநானூற்றுட் காணப்படுகின்றது. இதனால், இவனது வாக்கின் இனிமையும், பொருளின் அருமையும் நன்கு புலப்படும்.

## 25. சேரமான் கணைக்காலிரும்பொறை

இரும்பொறை என்ற சிறப்புப்பெயர் தரித்த சேரவரசருள் இச்சேரமான் சங்ககாலத் திறுதியில் வாழ்ந்தவனென்று தெரிகின்றான். சோழன் செங்கணானுடன் பகைமைபூண்டு, அவனுடன் பொருதவன் இச்சேரன்; திருப்போர்ப்புறம் என்ற களத்தில் அச்சோழனுடன் நடந்த போரிலே, அவனாற் பிடிக்கப்பட்டுச் சிறைப்படுத்தப்பட்டான். அப்போது, நாவறட்சியால் தண்ணீர் வேண்டுமென்று சிறைகாவலரை இவன்கேட்டிம் காலத்தில் அது பெறவில்லை, பின்பு அந்நீரை இவன் பெறநேர்ந்தபோது அதனைப் பருகாமல் "குழவி யிறப்பினும்" என்ற பாடலைக் கூறி மூர்ச்சித்துவிட்டனன். இதனையறிந்த பொய்கையார் என்ற புலவர், சோழன் செங்கணான்மேல் களவழிநாற்பது என்ற நூலைப் பாடி இக்கணைக்காலிரும்பொறையைச் சிறைமீட்டனர் என்பர். சேரநாட்டுக் கழுமலம் என்ற இடத்தும் அச்சோழனுடன் இவன் பெரும்போர் நடத்தியவன், இச் சேரனது வீரத்திறமும் தமிழ்ப் புலமையும் மேற்குறித்த இவனது பாட்டிலே திகழ்ந்து ஒளிர்கின்றன.

## 26. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

தன் கோப்பெருந்தேவி இறந்தபோது, அவளை ஈமத்தேற்றிய நிலையில் இவ்வேந்தன் பாடிய பாடல் படிப்போர் மனத்தை உருக்கக் கூடியது. இதனால், இச் சேரமானது தமிழ்ப்புலமைத்திறம் வெளியாகின்றது. கோட்டம்பலம் என்ற இடத்தில் இவன் இறந்தவன்,

### 27. சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ

இவர், பேய்மகள் இளவெயினி என்ற பெண்பாற் புலவராற் புகழ்ந்து பாடப்பெற்றவர்; சேரவேந்தருள் பெரும்புலவராக விளங்கியவர் இவரே. அகப்பொருளில் மிகத்திகழும் பகுதி ஆகிய பாலைத் திணைச் செய்திகளைப் பாடுவதில் இவர்க்கிருந்த ஆற்றல், பிறபுலவர் எவர்க்கும் இல்லாததாகும். அவ்வாறு இவர்பாடிய பாலைப்பாடல்கள்:- நற்றிணையில் பத்தும், குறுந்தொகையில் பத்தும், அகநானூற்றிற் பன்னிரண்டும், கலித்தொகையிற் பாலைக்கலி முப்பத்தாறும் ஆகும். இவையாவும் பிரிவுபற்றிய பாலைத்துறைகள் பலவற்றைப் பெருஞ் சுவைபடக் கூறுவன. இவரது கலிப் பாடல்களுள், தமிழ்மணங் கமழும் மதுரையும் வையையாறும் சிறப்பிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு பாலைத்திணையைச் சிறப்பித்துள்ளமை பற்றிப் "பாலைபாடிய" என்ற விசேடணம் இவர்பெயருடன் அமைந்தது. வீரனொருவன் போர்க்களத்துப் பட்டுவீழ்ந்த தன்மைபற்றி இவரது வாக்காயமைந்த புறப் பாடலொன்றும் படித்து இன்புறத்தக்கது (144). பாடல்பெற்றவரும் பாடியவருமான சேரவேந்தர், இதுவரைதெரிந்தவரில், இவர் ஒருவரே எனலாம்.

---

## III. சேரவேந்தர் கிளையினர்.

### 28. ஆட்டன் அத்தி

இவனை "வஞ்சிக்கோன்" என்று இளங்கோவடிகள் கூறுவர். சோழன் கரிகால்வளவனது மகளான ஆதிமந்தி என்பாளாற் காதலிக்கப் பெற்றவன். அழகிலும் கூத்தாட்டு நிகழ்த்துவதிலும் இவன் ஒப்பற்றவன். இவனது வரலாற்றை இந் நூல் 293-ஆம் பக்கத்துக் கீழ்க்குறிப்பிற் காண்க.

### 29. அதியமான் நெடுமானஞ்சி

அதியமான் என்போர் சேரவேந்தரின் ஒரு கிளையினராவர். தகடூர் என்பது இவர் தலைநகராகும். இம்மரபிலுதித்த நெடுமானஞ்சி தன் பெருங்கொடைத்திறத்தால் கடையெழுவள்ளல்களுள் ஒருவனாக மதிக்கப் பெற்றவன்; போர்புரிவதில் பேர்பெற்றிருந்த வீரன்; இவன் முன்னோர், தேவர்களை வழிபட்டு விண்ணுலகத்திலிருந்து கரும்பை இவ்வுலகத்திற் கொணர்ந்தவரென்றும், இவர்க்கு வரங் கொடுப்பதற்கென்று தேவர்கள் வந்து தங்குவதோர் சோலை இவன் தலைநகரில் இருந்ததென்றும் கூறப்படுகின்றன. "மழவர்" என்ற

ஒருவகை வீரர்படை இவனுக்கிருந்தது. இவன், நல்லிசைப் புலவரான ஒளவையாரால் பெரிதும் மதிக்கப்பெற்றவன் ; தன்னை உண்பவர்க்கு நெடுங்காலம் உயிர்வாழ்வு அளிக்கும் கருநெல்லிப் பழத்தைப் பெற்று அதனை ஒளவையார்க்கே கொடுத்துப் பெரும்புகழ் பெற்றவன்; காஞ்சியிலிருந்தாண்ட தொண்டைமானரசனிடம் ஒருமுறை ஒளவையாரைத் தூதாக விடுத்துத் தன் பெருமையை அவனறியச் செய்தான். தமிழ் மூவேந்தருடன் திதியன், எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் ஆக இவ்வெழுவரும் கூடிவிளைத்த பெரும்போரில் வெற்றி பெற்றவன்; அவ்வெற்றிக்குறியாக அவர்களுடைய எழு இலாஞ்சனைகளையும் தனக்குரியனவாகக் கொண்டவன்; பரணர் என்ற புலவர் பெருமான் புகழ்ந்து பாடும்படி, மலையமானது கோவலூரை எறிந்து வென்றவன்; அள்ளன் என்ற தலைவனொருவனும் இவ் வதியமானால் வெல்லப்பட்டவன் என்பர் மாமூலனார் (இந் நூல், 246). பொகுட்டெழினி என்பவன் இவனுடைய வீரமகனாவன். குதிரைமலையென்பது இவனது மலையாகும்.

இவன், பெருஞ்சேர லிரும்பொறை என்ற சேரமானோடு பகைமை பூண்டிருந்ததனால், அவனுக்கும் இவ்வதியமானுக்கும் தகடூரில் பெரும்போர் மூண்டது. அப் போரிலே, இவ்வதியமான் இறந்தனன். இப்போர் நிகழ்ச்சிகளே "தகடூர் யாத்திரை" என்ற தனி நூலால் கூறப்படுவன வாகும். புறத்திரட்டு என்ற தொகை நூலிற் கண்ட அந்நூற் பாடல்கள் சிலவற்றால், பெருஞ்சேர லிரும்பொறைக்குத் தம்பி முறையினன் இவ் வதியன் என்பது தெரிய வருகின்றது. அச் சேரனை நோக்கி, "பொறையகேள், நும்பியைக் கோல்கொண்டு மேற்சேறல் வேண்டா" என்றும், அதியமானை நோக்கி "நும்முற்கு* நீதுணை யாகலும் உளையே" (புறத். 776, 785) என்றும், அவரவரைச்சார்ந்த சான்றோர் கூறியதாக அமைந்துள்ள அந்நூற்பகுதிகள் இங்கே குறிப்பிடத்தக்கன. இத்தொடர்களாலும் பிற்காலத்து அதியமானஞ்சியின் வமிசத்தவர் தம்மை'வஞ்சியர்குலபதி எழினி' எனவும், "சேரவமிசத்து அதியமானெழினி" எனவும் கூறிக்கொள்வனவாலும்†, பனந்தார் இவர்க்கு மாலையாதலாலும், புறநானூற்

* 'நும்மூர்க்கு' என்றுள்ள அச்சுப் பிரதிபேதத்தை 'நும்முற்கு' என்று திருத்திக்கொள்க. [முற்கு—முன்னோனுக்கு, தமையனுக்கு]

† ஆராய்ச்சித்தொகுதி.

றுரைகாரர் குறிப்பாலும் இவ்வதியமான் சேரமரபினனே என்றும், நாட்டின் பிரிவுபற்றிய தாயவழக்கே, சேரமானுக்கும் இவனுக்கும், போர்புரியக் காரணமாயிற்றென்றும் அறியக்கிடக்கின்றன.

இவ்வதியமானுல் மிகுதியும் ஆதரிக்கப்பெற்றவர், ஔவையாரேயாவர். இவனைப்பாடிய வேறுபுலவர்கள்:—பரணர், மாமூலனார் பெருஞ்சித்திரனார், அரிசில்கிழார், பொன்முடியார், அஞ்சியத்தை மகள் நாகையார் என்போர். இறுதியிற்கூறிய நாகையார், தாம்பாடிய அகப்பாட்டொன்றில் அஞ்சியைக் குறிப்பிடுகின்றார். அஞ்சியத்தை மகள் என்ற இவரது அடைமொழியால், இந்நெடுமானஞ்சியின் அத்தை மகளாய்ப் புலமையிற் சிறந்திருந்தவர் இப்பெண்புலவர் என்பது தெரியலாம். இவ்வதியமானை எழினி, அஞ்சி என்று தனியே வழங்குவதுமுண்டு,

## 30. பொருட்டெழினி

இவன், மேற்கூறிய அதியமான்நெடுமானஞ்சியின் தவமகன். நெடுமானஞ்சி, பகைவருடன் பெரும்போர் புரிந்துகொண்டிருந்த சமயத்தில், தனக்கு இத் தவமகன் பிறந்துள்ள செய்தியைக் கேள்வியுற்று, அப்போரிடையே தன்னூர்சென்று 'புத்திரமுகதரிசனம்' செய்துவந்தான் என்று ஔவையார் பாடுவர் (இந்நூல், 239). இப்பொருட்டெழினியும், தந்தைபோலவே வீரனும் வள்ளலுமாக விளங்கியவன். 'பல்வேலெழினி' எனப்பட்டவனும் (252, 258) இவன் போலும். இவ்வெழினியைப் பாடிய புலவர்கள்:— ஔவையாரும் தாயங்கண்ணனாரும் ஆவர்.

## 31. வாட்டாற்று எழினியாதன்

வாட்டாறு என்பது தென்திருவாங்கூர்ச் சீமையிலுள்ள திருவாட்டாறு என்ற திருமால் தலமாகும். இவ்வூரில் இருந்தாண்ட சிற்றரசனாக இவன் வேள் என்றும் சிறப்பிக்கப்படுவன். எழினி என்ற அடைமொழியால் அதியமான்மரபினன் இவன் என்பதும், ஆதன் என்று சேரர்தரித்துவந்த பெயரால் சேரர்கிளையினன் என்பதும் தெரியவருகின்றன. இவனாட்டின் வளத்தையும் இவனது கொடைச் சிறப்பையும் பாடியவர், மதுரைக்காஞ்சியின் ஆசிரியரான மாங்குடி மருதனார் என்ற புலவராவர். இவனைப்போலவே, சோணாட்டுக் கடற்கரையிலுள்ள செல்லூர் (செல்லி)த் தலைவனொருவன் ஆதனெழினி (அகநா. 216) என்றும், நடுநாட்டுத் தலைவனொருவன் கண்ணனெழினி என்றும் பெயர்பெற்றிருத்தலை நோக்குமிடத்து, அதியமான்மரபினர் தமிழகத்தில் அங்கங்கே தலைமைபெற்று வாழ்ந்துவந்தவர் என்பது புலப்படும்.

## 32. கண்ணனெழினி

எழினி என்ற பெயரினின்றும் அதியமான் வமிசத்தவனுக இவன் கருதப்படுகின்றுன். இவன் ஒரு பெருவீரன் என்பதும்; நடுநாட்டுள்ள முதுகுன்றம் (விருத்தாசலம்) இவனுக்குரிய மலை என்பதும்—இவனைப்பாடிய மாமூலனர் பாடலினின்று அறியப்படும்.

## 33. வானவன் மறவன் பிட்டன்

இவன், குதிரைமலைக்குத் தலைவன்; வீரத்தாலும் கொடையாலும் மேம்பட்டு விளங்கியவன். 'வானவன் மறவன்' என்று இப்பிட்டன் விசேடிக்கப்படுதலால், சேரமான் படைத்தலைவன் இவன் என்பது விளங்கும். இவனைப்பாடிய புலவர்கள்—ஆலம்பேரி சாத்தனர், மருதனிளநாகனர் என்போர்.

இப்பிட்டனுக்குக் கொற்றன் என்ற மகனெருவன் வீரமும் வள்ளன்மையுங்கொண்டு விளங்கினன். இவனைப் பிட்டங்கொற்றன் என்பர் [பிட்டங்கொற்றன்—பிட்டனுக்கு மகன் கொற்றன்] பிட்டனென்றே இவனையும் வழங்கியதுண்டு. இம்மகனும் சேரன்படைத் தலைவனுனவன் என்பது தெரியவில்லை.

## IV சேரநாட்டுப்பகுதிகளை ஆண்ட பிறதலைவர்கள்.

## 34. வேள் ஆயண்டிரன்

இவன், வேளிர்மரபினன்; கடையெழுவள்ளல்களில் ஒருவன்; பொதியில் கவிரம் என்ற மலைகளும், ஆய்குடி, தலையாறு என்ற ஊர்களும் இவன் நாட்டில் உள்ளவை, இவ் வேளிர்தலைவன் வீரப்பெருமை வாய்ந்தவன். ஒருகால் கொங்குநாட்டாருடன் போர்புரிந்து அவரை மேல்கடற்பக்கத்திற்கு ஓட்டினுன். ஆய்வேளின் பெருவள்ளன்மை சங்கத்துச்சான்றோர் பலராலும் புகழ்ந்து பாராட்டப்பட்டுள்ளது. புலவர் பாணர் கூத்தர் என்ற முத்தமிழ்வாணர்க்கும் யானைகளைப் பரிசிலாக மிகுதியும் இவன் வழங்கினவன். இவனது மலைக்காடுகள் யானைக்கூட்டங்களைக் கொண்டவை. ஒருகால், நீலநாகமொன்று தனக்கு அளித்த அரிய ஆடையொன்றை, இவ் வேள்ஆய் சிவபிரானுக்குச் சாத்தி மகிழ்ந்தான்.* இதனுல் இவனது தெய்பக்தித் திற

* 'நச்சாடைவிங்கர்' என்ற திருநாமமுள்ள சிவபிரான், மேற்குத்தொடர் மலைக்குக் கீழ்பாலுள்ள சேற்றூரில் கோயில்கொண்டுள்ளார். இப்பெருமான் அவ்வூர்த்தலைவருடைய குலதெய்வமாவர். புராணவழக்கு வேறுபட்டிருப்பினும் இச்சிவபிரான், வேளாயினுல் ஆடையளித்து வழிபடப்பெற்ற மூர்த்தியோ என்று ஊகிக்க இடமுண்டு.

மும் விளங்குகின்றது, சுரபுன்னைப்பூ இவனது முடிமாலையாகும். உரிமைத்தேவியர் பலரை இவன் உடையனாயிருந்தான். அத்தேவியரும் கொடைத்திறம் பெற்றிருந்தனர். அண்டிரன் என்பது இவனது இயற்பெயராகும். சங்கப்புலவர்கள் வாக்கால், இவனது அரிய நற்குண நற்செய்கைகள் பலவும் அறியக்கிடக்கின்றன. முடிவில் இவன் துறக்கம்பெற்றபோது, அதனை முடமோசியார் என்ற புலவர் தற்குறிப்பேற்றம் என்ற அணிபெறப் பாடிச் சிறப்பித்திருப்பது குறிப்பிடத்தக்கது. இவன் இறந்தபின் இவனதுரிமை மகளிர் பலரும் எரியின்மூழ்கி உயிர்நீத்தனர். இவ்வள்ளலது பிரிவுக்குப் பெரிதும் இரங்கிப் புலவர்கள்பாடிய பாடல்கள் எல்லாமனங்களையும் உருக்கக்கூடியவை. இவனைப் பாடியவர்கள்—உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், துறையூர் ஓடைகிழார், குட்டுவன் கீரனார், காரிக்கண்ணனார் என்போர். இவருள் முதலிற்குறித்த மோசியாரே இவ் வேளால் மிகுதியும் அபிமானிக்கப் பெற்றவர் என்பது 'மோசிபாடிய ஆயும்' என்ற பெருஞ்சித்திரனார் வாக்கால் தெரிகின்றது (புறநா. 158).

ஆயின் நாடு தென்திருவாங்கூர்ப் பகுதி என்பது, தாலமி (Ptolemy) என்ற யவன ஆசிரியர் குறிப்பால் அறியப்படுவதாம். ஆய் மரபினர், கி. பி. 8-ஆம் நூற்றாண்டின்பின்பும் இப்பகுதியை ஆண்டுவந்தனர். இவ் வேள்குலத்தாரது ஆட்சிக்கு உரிமையானமை பற்றி, 'வேள்நாடு' என்ற பெயர் தென் திருவாங்கூர்ப் பகுதிக்கு வழங்கியதாகக் கருதல் பொருந்தும். இப்பகுதி, கேரளநாட்டரசரது ஆட்சிக்குட்பட்டுப் பலநூற்றாண்டுகள் ஆயின.

## 35. நாஞ்சில் வள்ளுவன்

இவன், நாஞ்சில் என்ற மலைக்குரிய தலைவன்; நாஞ்சிற் பொருநன் என்றும் இவனை வழங்குவர். 'தென்னவர் வயமறவன்' என கூறப்படுதலால், பாண்டியர்க்குப் படைத்தலைமை பூண்டவன் இவன் என்று தெரியவருகின்றது. பரிசிலர்க்கு வேண்டியன அளித்து வந்தவன், இத்தலைவன். திருவாங்கூர்த் தென்கோடியில் உள்ள நாஞ்சில்நாட்டுப்பகுதி இவனாட்சிக்கு உட்பட்டதாகும். இந்நாஞ்சில் வள்ளுவனுடைய தலைவனான அரசனைச் சேரனாகப் புறநானூற்றுரைகாரர் குறிப்பிட்டனராயினும் அதற்கு மூலமேற்கோள் காணப்படவில்லை. இவ்வள்ளுவனைப் பாடிய புலவர்கள்:- ஒருசிறைப் பெரியனார். மருதனிளநாகனார், ஒளவையார், கருவூர்க் கதப்பிள்ளை என்போர்.

## 36. நன்னன்

இவன், மலைநாட்டின் வடவெல்லைப் பகுதியை ஆண்டுவந்த வேளிர்மரபினன்; நன்னன் வேண்மான், நன்னனுதியன் எனவும் வழங்கப்படுவன். கொண்கானநாட்டு ஏழிற்குன்றமும் பாழிச்சிலம்பும் இவன் மலைகளாம். வியலூர், பாழி, பாரம், கடம்பின் பெருவாயில் என்பன இவனாட்டு ஊர்களிற் சிறந்தவை. பெரும்பூட்சென்னி என்ற சோழனைத் தலைவர்பலருடன் சேர்ந்து எதிர்த்தவன் இவன்; மிக்க வீரமுடைய பிண்டன் என்பானை வென்றவன். சேரர்க்குரிய பூழி நாட்டை இவன் கைப்பற்றியதனால், சேரமான் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரனுக்கும் இந்நன்னனுக்கும், மேல்பாலுள்ள வாகைப் பெருந்துறை என்ற களத்தில் பெரும்போர் மூண்டது. அதனில் சேரமான் இவனை வென்று தானிழந்த நாட்டை மீட்டுப்பெற்றனன். அப்போரில் இந்த நன்னன் எதிர்த்துநிற்கமுடியாமல் ஓடிக் காட்டினிடையே ஒளித்துவாழ்ந்தனன் என்பர் மோசிகீரனார் (அகநா. 392). இவனது பாழிமலையில், இவன்குலத்து வேளிர்கள் பொற்குவியல் களைச் சேமித்துக் காப்புள்ளதாகச் செய்து வைத்திருந்தனர். பொற் சுரங்கமும் இவன் மலையில் உள்ளதாகத் தெரிகின்றது; இவனது படைத்தலைவன், மிஞிலி என்பவன்.

இவனுக்குரிய ஏழின்மலை 'சப்த சைலம்' என இப்போது வழங்குவதாம். இது மேலைக்கடலருகில் கண்ணனூரிலிருந்து வடக்கே 18 மைலில் உள்ளது. இவனது வியலூர் சேரன்செங்குட்டுவனால் ஒருகால் அழிக்கப்பட்டது.

இந் நன்னன் சேரர்தொடர்புடையவன் என்பது, 'நன்னனுதியன்' எனச் சேரர்பெயரை இவன் தரித்திருத்தலால் கருதப்படுகின்றது. இவன், கொடுமையுடையவனாகவும் புலவரை அனாதரித்தவனாகவும் ஔவையார் முதலிய புலவர்களால் கூறப்படுகின்றான். ஆயினும் பரணர், மாமூலனார், முள்ளியூர்ப்பூதியார், மோசிகீரனார் என்ற பெரும்புலவர்கள் இவனைப்பாடிய பாடல்களினின்று, வீரச் சிறப்பும் கொடைத்திறமும் உடையவனாகவே இவன் தோற்றுகின்றான்.

# உள்ளுறை.

## I. பாடல்பெற்ற சேரவேந்தர்.



## II. பாடிய சேரவேந்தர்.

## III. சேரவேந்தர் கிளையினர்.



## IV. சேரரின் நாடு, நகர், மலை முதலியன.



## V. சேரநாட்டின் பகுதிகளை ஆண்ட வேற்றரசர்.

### இந்நூலுள்

## எடுத்தாளப்பட்ட சங்கநூல்கள்



| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அகநானூறு | ... | பாடல்கள் | 62 |
| 2. | ஐங்குறுநூறு | .... | ,, | 10 |
| 3. | கலித்தொகை | ... | ,, | 35 |
| 4. | குறுந்தொகை | ... | ,, | 38 |
| 5. | சிலப்பதிகாரம் | ... | ,, | 8 |
| 6. | சிறுபாணாற்றுப்படை | ... | ,, | 1 |
| 7. | தொல்காப்பியம் | ... | ,, | 1 |
| 8. | நற்றிணை | ... | ,, | 22 |
| 9. | பதிற்றுப்பத்து | ... | ,, | 90 |
| 10. | புறத்திரட்டு | ... | ,, | 3 |
| 11. | புறநானூறு | ... | ,, | 68 |
| 12. | மணிமேகலை | ... | ,, | 2 |
| 13. | மதுரைக்காஞ்சி | ... | ,, | 1 |
| | | | ஆகமொத்தம் பாடல்கள் | 341 |

# வாழ்த்து.

சேர குலவேந்தர் செய்யுட்கோ வைக்குரிய
சேரலர்கோமான் சித்திரைத்திருநாள்—பேருலகில்
வாழியரோ வாழியவன் வைத்தகலா மன்றமும்பல்
லூழிகலைச் செல்வத் துயர்ந்து.

மலைநாட் டகிலகலா மன்றில் தமிழ்க்கோர்
நிலைநாட்ட நீணிதியம் நேர்ந்தே—கலைநாட்டும்
வள்ளல் அழகப்பன் மன்னவர்பின் னேன்புகழை
உள்ளமுவந் தேத்தும் உலகு.

ஸ்ரீ:

# சேரவேந்தர்

# செய்யுட்கோவை

## *சேரமான்

## பெருஞ்சோற்றுதியன் சேரலாதன்

(1.) மண்திணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென்றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலும் அளியும் உடையோய்!

---

(1.) புறநானூறு, 2. திணை-பாடாண்டிணை; துறை—செவியறிவுறூஉ; வாழ்த்தியலுமாம்.

(அடி 1.) மண்—மண் அணுக்கள். (3) தைவருதல்—தடவிக்கொண்டு செல்லுதல். (4) வளித்தலைஇய—காற்றுடன் கூடிய. (7) போற்றார்—பகைவர். சூழ்ச்சி—மந்திராலோசனை. (8) தெறல்—எரித்தல், அழித்தல். அளி—அருள்.

(6—8) நிலமுதலிய ஐம்பெரும்பூதங்களின் இயற்கைகள் போல, நீயும் போற்றாரைப் பொறுத்தல், சூழ்ச்சியது அகலம், வலி, தெறல், அளி என்னும் ஐந்து இயல்புகள் உடையாய் என்றவாறு. பஞ்சபூதங்களையும் சரீரமாக உடைய பரம்பொருளை—"கரவிசும்பு எரிவளி நீர்நில மிவைமிசை; வரல் நவில் தெறல்வலி யளிபொறை யாய்நின்ற பரன்" என்றார் சடகோபரும். [விசும்புக்கு 'மிசைவரல்' என்ற இயல்பினைச் 'சூழ்ச்சியதகலம்' என்பதற்குப் பிரதியாக ஆழ்வார் கூறினார். மேலிடமாகப் பரவுதல் விசும்பினியல்பு; 'நிலனேந்திய விசும்பு' என இப்புலவர் கூறுவதும் காண்க. நவில்தெறல்—குணமாகச் சொல்லப்பட்ட எரிக்கை எ-று.]

நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந!
வான வரம்பனை நீயோ பெரும!
அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!
பாஅல்புளிப்பினும் பகலிருளினும்
நாஅல்வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ அத்தை அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி யந்தணர் அருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கில் துஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே.

முரஞ்சியூர் முடிநாகராயர்.

---

(12) வானவரம்பன்—அடிவானத்தின் எல்லையையே தன்னாட்டின் எல்லையாக உடையவன்; 'நின் கடற் பிறந்த ஞாயிறு...நின் குடகடற் குளிக்கும்... நன்னாட்டுப் பொருந' என்றதனால் இப்பொருள் விளக்கமாம்.

(13) ஐவர்-பாண்டவர். நிலம் தலைக்கொண்ட—தம் உரிமைநாட்டைக் கவர்ந்துகொண்ட. (15) ஈரைம்பதின்மர்-கௌரவர். (19) சேண்விளங்கி—நெடுங்காலம் வாழ்ந்து. (20) நிலியர்—நிலைத்து நிற்பாயாக. அத்தை—அசைநிலை.

(21—24) சிறிய தலைகளையுடைய குட்டிகளோடுகூடியவும் பெருங்கண்களையுடையவுமான மான்பெடைகள் அந்தணரது முத்தீவிளக்கொளியில் கவலையின்றித் தூங்கும் என்றது, நெருப்பிற்கு அஞ்சிப் புலி முதலியன அங்கு வாராமையால் என்க. 'ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉம்' (ஐங்குறு 307) 'கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து, மடமான் பெருநிரை வைகு துயில்' (புறநா. 247) என்பர்.

குறிப்பு:- முரஞ்சியூர்முடிநாகராயர் என்பார், தலைச்சங்கப்புலவருள் ஒருவராகவும் கூறப்படுவர் (இறை, களவியல், 1, உரை). முடியில் நாகவுருவைத் தரித்த நாகர் என்ற குலத்தவர்க்கு அரசர் என்பது இவர்பெயரின் பொருள். [ராயர்-ராஜர்]; சேரர்மரபினரான கொச்சியரசர்கிளை ஐந்தனுள் ஒன்றற்கு

(2.) அலமரல் மழைக்கண் மல்குபனி வாரநின்
அலர்முலை நனைய அழாஅல் தோழி!
எரிகவர் புண்ட கரிபுறப் பெருநிலம்
பீடுகெழு மருங்கின் ஓடுமழை துறந்தென
ஊனில் யானை உயங்கும் வேனில்
மறப்படைக் குதிரை மாறா மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
கூளிச் சுற்றம் குழீஇயிருந் தாங்குக்
குறியவும் நெடியவுங் குன்றுதலை மணந்த
சுரனிறந் தகன்றன ராயினும் மிகநனி
மடங்கா உள்ளமொடு மதிமயக் குறாஅப்
பொருள்வயின் நீடலோ இலர்நின்
இருளேங் கூந்தல் இன்துயில் மறந்தே.

மாமூலனார்.

'முரிஞ்ஞியூர்த் தாய்வழி' என்பது பெயராகும். சேரனைப்பாடிய இப்புலவரது முரஞ்சியூர், அம் முரிஞ்ஞியூர் போலும். தலைச்சங்க காலத்தவராக முடிநாகராயர் கூறப்படுவதற்கேற்பப் பாரதப்பெரும்போரில் உணவிட்டுதவிய உதியஞ்சேரலாதனை இவர் பாடியிருப்பதும், இவர்பாடல் புறநானூற்றில் முதலாவதாக வைத்துத் தொகுக்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கவை.

**(2.) அகநானூறு, 235**—பாலைத்திணை. பிரிவின்கண் வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது.

**கருத்து:**—'யானை முதலிய பிராணிகள் நீரின்றி வருந்தும் இளவேனிற் பருவத்தில், நம் தலைவர் பொருளீட்டல் கருதிக் கொடிய பாலைவனத்தைக் கடந்து நம்மைவிட்டு அகன்றனராயினும், உன்னுடன் கூடி இன்துயில்கொள்ளும் இன்பத்தை மறந்து, பொருளிடத்தே மதிமயங்கி நெடுங்காலம் நீட்டிக்க மாட்டார். ஆதலால் அழகிய கூந்தலையுடையாய்! கண்ணீர் பெருக்கிக் கலங்கி அழல் வேண்டா' என்று தோழி தலைவியைத் தேற்றுவாளாயினள் என்க.

**குறிப்பு:—(6—11)** பாலைநிலத்தில் சிறியவும் பெரியவுமான குன்றுகள் திரண்டிருந்ததற்கு, பாரதப்போரில் உதியஞ்சேரலாதன் பெருஞ்சோறு வழங்கியபோது, குறியவும் நெடியவுமான பேய்க்கணங்கள் அச்சோறு பெற விரும்பி அங்கே கூடியிருந்த நிலைமை ஆசிரியரால் உவமிக்கப்படுகின்றது. போர்க்களம் பாலை நிலமானதால், அப்பாலைக் குன்றுகள் பேய்க்கூட்டம் போன்றன என்க.

## உதியஞ்சேரல்

(3.) உன்னங் கொள்கையொ டுளங்கரந் துறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரஞ் சேரா இயல்பிற் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்
நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்
பாடிச் சென்ற பரிசிலர் போல
உவவினி வாழி தோழி! அவரே
பொம்மல் ஓதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரால் இன்றே மலைதொறும்
மால்கழை பிசைந்த கால்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்
வான்றோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஅவுயர் நனந்தலை
உயவல் யானை வெரிநுச்சென் றன்ன
கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறிக்
காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்
ஆறுகடி கொள்ளும் அருஞ்சுரம் பணைத்தோள்
நாறைங் கூந்தற் கொம்மை வரிமுலை
நிரையித ழுண்கண் மகளிர்க்கு
அரிய வாலென அழுங்கிய செலவே.

மாமூலனார்.

---

(3.) அகநானூறு, 65.—பாலை. வேறுபட்ட தலைமகட்குத் தலைமகன் உடன்போக்குவலித்தமை தோழி சொல்லியது.

குறிப்பு:—(5) இப் பாட்டுடைத்தலைவனை உதியஞ்சேரல், பெருஞ் சோற்றுதியன் சேரலாதனின் வேறானவனாய் அவன் வழியில் வந்தவன். பதிற்றுப்பத்துள் இரண்டு மூன்றாம் பத்துக்களை முறையே கொண்ட நெடுஞ்சேரலாதனும், பல்யானைச் செல்கெழுகுட்டுவனும் இவ்வுதியஞ்சேரற்கு மக்களாகத் தெரிகின்றார். (5—6) இவ்வடிகளால், இச்சேரவேந்தனது கொடைச்சிறப்புக் கூறப்பட்டது. (5) நாடுகண் அகற்றிய—பிறநாட்டைக்கொண்டு தன்னாட்டைப் பரப்பிய.

(4.) உழையணந் துண்ட இறைவாங் குயர்சினைப்
புல்லரை யிரத்திப் பொதிப்புறப் பசுங்காய்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்கா டிறந்து மெய்தவந் தனவால்
அருஞ்செயற் பொருட்பிணி முன்னி யாமே
சேறு மடந்தை யென்றலின் தான்தன்
நெய்த லுண்கண் பைதல் கூரப்
பின்னிருங் கூந்தலின் மறையினள் பெரிதழிந்து
உதியன் மண்டிய வொலிதலை ஞாட்பின்
இம்மென் பெருங்களத் தியவ ரூதும்
ஆம்பலங் குழலி னேங்கிக்
கலங்கஞ ருறுவோள் புலம்புகொள் நோக்கே.

இளங்கீரனார்.

---

கருத்து:—'தோழீ! அன்னை குறிப்பாற் கூறும் சொல்லினின்றும், சேரிப் பெண்டிர் தம்முட்கூடிப்பேசும் அலர்மொழியினின்றும் தப்பிவிட்டோம்; உதியஞ்சேரலைப் பாடிச்சென்ற பரிசிலரைப் போல நீ மகிழ்வாயாக. தலைவர் உன்னையும் அழைத்துக்கொண்டு சுரம் (பாலைவனம்) கடந்து செல்லுதற்கு இசைந்தார்' என்று உடன்கொண்டுசெல்லத் துணிந்ததைத் தோழி தலைவிக்குக் கூறினாள்.

(4.) நற்றிணை, 113—பாலை. இடைச்சுரத்து ஆற்றாறைய தலைவன் சொல்லியது.

கருத்து:—பொருள்வயிற்சென்ற தலைவன் பாலைவனத்து இடைவழியில் தலைவியின் உருவெளித் தோற்றங்கண்டு, 'முன்பு நான் பிரிவுகூறி விடைபெறும்பொழுது, பின்னிய தன் கூந்தலில் முகத்தை மறைத்துக்கொண்டு வாய்விட்டேங்கி வருத்தமுற்றுநின்ற என் காதலியின் துன்பநோக்கம், இப்பெருங்காட்டினைக் கடந்தும் என் எதிரே வந்து நின்றன; என்னே!' என்று ஆற்றாறாகித் தலைவன் கூறினன்.

குறிப்பு:—இங்குத் தலைவி பிரிவாற்றாது ஏங்கியழுத குரலுக்கு, உதியன் பகைவருடன் நடத்திய பெரும்போரிலே, வாச்சியக்காரர் அப்போர்க்களத்தில் ஊதிய ஆம்பற்குழல் உவமையாகத் தரப்பட்டுள்ளது. (9) உதியன் என்பான் முன்பாட்டிற் குறித்த உதியஞ்சேரல் போலும். ஞாட்பு—போர்க்களம். (10) இயவர்— வாச்சியம் வாசிப்போர். (11) ஆம்பல்—ஒரு பண்; வெண்கலத்தால் அணைசுபண்ணி அமைக்கப்பட்ட ஊதுகுழல் என்றும் கூறுவர். (1—4) மானினம் தலைமிர்ந்துகொண்டு உண்ணுதலால், சிறிது வளைந்த கிளைகளையும் புல்லிய அடியையும் உடைய இலந்தை மரங்களின் பசுங்காய்கள் உதிர்ந்து பரவும் கல்சேர் சிறுநெறிகளையுடைய பெருங்காடு என்க.

## இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

(5.) இலங்குவளை நெகிழச் சாஅய் அல்கலுங்
கலங்கஞ ருழந்து நாமிவண் ஒழிய
வலம்படு முரசிற் சேர லாதன்
முந்நீ ரோட்டிக் கடம்பறுத் திமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்
பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்
பொன்செய் பாவை வயிரமொ டாம்பல்
ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றவண்
நிலந்தினத் துறந்த நிதியத் தன்ன
ஒருநாள் ஒருபகற் பெறினும் வழிநாள்
தங்கலர் வாழி தோழி! செங்கோற்
கருங்கால் மராத்து வாஅன் மெல்லிணர்
சுரிந்துவணர் பித்தை பொலியச் சூடிக்
கல்லா மழவர் வில்லிடந் தழீஇ

---

(5.) அகநானூறு, 127—பாலை. பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

கருத்து:—'தோழி! பொருள்வயிற் பிரிந்து வேற்றுநாடு சென்ற நின் காதலர் தாம்தேடவிரும்பும் செல்வத்தைப் பெற்றபின் அங்கே சிறிதும் தங்குப வரல்லர்' என்று கூறித் தலைவியைத் தோழி தேற்றலாயினள். சேரலாதன் ஒருபகலில் பகைவென்று பெற்ற நிதியம்போன்ற பெருஞ்செல்வத்தை நின் தலைவரும் விரைந்துபெறும் ஆற்றலுடையர்; ஆதலால் அது பெற்றதும் மறு நாளே நின் துயர்நீங்க அவர் திரும்பிவருதல் திண்ணமென்றாள்.

குறிப்பு:—(3—10) சேரலாதன் கடற்கடம்பறுத்தும், இமயத்தில் தன் இலாஞ்சனையாகிய வில்லைப் பொறித்தும் பெற்ற வெற்றியால் பகைவர் பணிந்து தந்த நன்கலம், பொற்பாவை, வயிரமுதலியவற்றை ஆம்பல் என்ற அளவினதாகத் தன் தலைநகரமான மாந்தைப்பட்டினத்திற் குவித்து அவற்றை நிலந்தின்னும்படி இவ்வுலகைத் துறந்த செய்தி இப்பாட்டில் கூறப்படுதல் காண்க. நிலந்தினும்படி துறக்த நிதியம் என்றதனால், அச்செல்வத்தின் நிலையாமையும், நாளது சின்மையும், இளமையது அருமையும் தலைவர் அறிந்தவர் என்று குறிப்பித்தபடி.

(15) மழவர்—ஆறலைகள்வர்.

வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை
மொழிபெயர் தேஎத்த ராயினும்
பழிதீர் காதலர் சென்ற நாட்டே.

மாமூலனார்.

---

(6.) தோளுந் தொல்கவின் தொலைய நாளும்
நலங்கவர் பசலை நல்கின்று நலியச்
சால்பெருந் தானைச் சேர லாதன்
மால்கடல் ஓட்டிக் கடம்பறுத் தியற்றிய
பண்ணமை முரசின் கண்ணதிர்ந் தன்ன
கவ்வை தூற்றும் வெவ்வாய்ச் சேரி
அம்பல் மூதூர் அலர்நமக் கொழியச்
சென்றன ராயினுஞ் செய்வினை அவர்க்கே
வாய்க்கதில் வாழி தோழி! வாயாது
மழைகரந் தொளித்த கழைதிரங் கடுக்கத்
தொண்கேழ் வயப்புலி பாய்ந்தெனக் குவவடி
வெண்கோட் டியானை முழக்கிசை வெரீஇக்
கன்றொழித் தோடிய புன்றலை மடப்பிடி
கைதலை வைத்த மையல் விதுப்பொடு

(10) கவலை — கவர்பட்ட வழி.

(6.) அகநானூறு, 347—பாலை. தலைமகன்பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

கருத்து:—தோழி! நம் தோள்நலன் தொலைந்து பசலையூர்ந்து நலியவும், சேரிப்பெண்டிர் தூற்றும் அலர் (அபவாதம்) நம்மிடத்தே தங்கவும் நம் தலைவர் நம்மைப் பிரிந்து சென்றனராயினும், அவர் மேற்கொண்ட செய்வினை அவர்க்கு வாய்த்துப் பயனளிப்பதாக என்று, பிரிவின்கண் ஆற்றாளாய தலைவி தோழிக்குக் கூறினாள்.

(10—16) வேங்கைப்புலி தன்மேற் பாய்ந்ததால் களிற்றியானை இடும் பிளிற்றோசைக்கு அஞ்சித் தன் கன்றையும் விட்டோடிய பெண்யானை, கையைத் தலைமேல் வைத்துக்கொண்டு மதிமயங்கிப் பிள்ளையைத் தவறவிட்ட பெண்டிர்போலத் தேடியலையும் மழையற்றுத் தீய்ந்த அடுக்கம் என்று தலைவர் பிரிந்துசென்ற மலையின் கொடுமை கூறியவாறு.

கெடுமகப் பெண்டிரிற் சேரும்
நெடுமர மருங்கின் மலையிறந் தோரே.

மாமூலனார்.

---

(7.) வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூல்
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்குச்
செவ்வாய் எஃகம் விலங்குநர் அறுப்ப
அருநிறம் திறந்த புண்ணுமிழ் குருதியின்
மணிநிற இருங்கழி நீர்நிறம் பெயர்ந்து

---

குறிப்பு:—பெரிய கடலில் மரக்கலங்களைச் செலுத்திப் பகைவரது காவல் மரமான கடம்பை வெட்டி அதனாற் செய்த சேரலாதனது முரசின் வாயானது, அடிபடும்போது ஒலிக்கும் முழக்கம்போல, பிறர் பழியே தூற்றும் கொடிய வாயையுடைய சேரிப்பெண்டிர் கூறும் அலர் என்க. 'அறைபறை யன்னர் கயவர்' என்பர் (குறள்). இதனால், சேரனது வெற்றி முரசின் பெருமை கூறியவாறு.

(7). பதிற்றுப் பத்தினுள், இரண்டாம் பத்தின் முதற் பாட்டு.

கருத்து:—நின் வேலால் பகைவருடல் குருதிகொப்புளிக்கும்படி போர் விளைத்தலிற் பெருஞ்சிறப்பும் உயர்ந்த ஊக்கமும் உடையோய்! பகைவர் பலர் கூடிக் காவல்புரிந்த கடம்பின் அடிமரம் பிளவுபட வாளை ஏவி, அம்மரத்தால் வெற்றிமுரசஞ் செய்வித்துப் போர்கள் பலவும் வென்ற சேரலாத! வடவிமயம் தென்குமரிகட்கு இடையில் உள்ள பேரரசர்களின் வீரந்தொலையும்படி செய்து அலங்காரமாக விளங்கும் பட்டவர்த்தனக்களிற்றின்மேல் பொலிந்துசெல்லும் நின்தோற்றம், பெருங்கடலிடையே அவுணர்கள் காவல்புரிந்துவந்த சூரபன்மாவாகிய மாமரத்தை அடியற வெட்டிச்சாய்த்த பேரிசையும் கடுஞ்சினமும் கொண்ட முருகக்கடவுள், பிணிமுகம் என்னுந் தன் பெருங்களிற்றின் மேற்கொண்டு செல்வது போலும். இத்தகைய நினது பலர்புகழ் பெருஞ் செல்வத்தை யானும் இனிது கண்டு மகிழ்ந்தேன்—என்று சேரனது வெற்றிச் செல்வத்தைச் சிறப்பித்தவாறு.

மனுலக் கலவை போல அரண்கொன்று
முரண்மிகு சிறப்பின் உயர்ந்த ஊக்கலை
பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுதல் துமிய ஏஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்
நாரரி நறவின் ஆர மார்பிற்
போரடு தானைச் சேர லாத !
மார்புமலி பைந்தா ரோடையொடு விளங்கும்
வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்
பொலனணி யெருத்த மேல்கொண்டு பொலிந்தநின்
பலர்புகழ் செல்வம் இனிதுகண் டிகுமே
கவிர்ததை சிலம்பில் துஞ்சுங் கவரி
பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும்
ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே.

குமட்டூர்க் கண்ணனார். †

(8) வயவர் வீழ வாளரில் மயக்கி
இடங்கவர் கடும்பின் அரசுதலை பனிப்பக்
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே!
தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகிர்
அரிமான் வழங்குஞ் சாரற் பிறமான்
தோடுகொள் இனநிரை நெஞ்சதிர்ந் தாங்கு
முரசுமுழங்கு நெடுநகர் அரசுதுயி லீயாது
மாதிரம் பனிக்கும் மறம்வீங்கு பல்புகழ்

இப்பாட்டின் துறை—செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—புண்ணுமிழ்குருதி (8)

† இப்பத்து முழுதும் பாடியவர் இப்புலவரே.

(8) ஷை, ஷை, இரண்டாம் பாட்டு, துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—மறம்வீங்குபல்புகழ் (9)

கேட்டற் கினிதுநின் செல்வங் கேட்டொறும்
காண்டல் விருப்பொடு கமழும் குளவி
வாடாப் பைம்மயி ரிளைய ஆடுநடை
அண்ணல் மழகளி றரிஞிமி றோப்புங்
கன்றுபுணர் பிடிய குன்றுபல நீந்தி
வந்தவ ணிறுத்த இரும்பே ரொக்கல்
தொல்பசி யுழந்த பழங்கண் வீழ
எஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை
மையூன் பெய்த வெண்ணெல் வெண்சோறு
நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி
நீர்ப்படு பருந்தின் இருஞ்சிற கன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை
நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ
வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்தோள்
வசையில் மகளிர் வயங்கிழை யணிய
அமர்புமெய் யார்த்த சுற்றமொடு
நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே.

---

கருத்து:—வாட்போரில் அரசரெல்லாம் தலைநடுங்கும்படி கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே! சிறிய சிங்கம் நடையாடும் மலைச்சாரலில் அது கண்ட மான்கூட்டம் நெஞ்சு கலங்கினாற்போல, பெரிய தலைநகரங்களில் உள்ள பகையரசர்கள் துயிலின்றியொழியும்படி திசைகளை நடுங்கச் செய்யும் வீரச்சிறப்பும் மற்றும் பல்புகழ்களுமுடைய நினது செல்வம் கேட்குந்தோறும் கேட்டற்கு இனிதாயுள்ளது. உன்னைக் காணும் விருப்புடன், கன்றுடன் கூடிய பிடிகளோடு களிறுகள் வாழும் குன்றுகள் பலவுங் கடந்து, நின்னிடம் வந்து தங்கிய கூத்தர் பாணர்களின் குடும்பங்கள் பழம்பசியால் உழந்தவருத்தம் ஒழியும்படி வெள்ளிய நிணத்துண்டங்களையும் ஆட்டிறைச்சி கலந்த வெண் சோற்றையும் கள்ளின்தெளிவோடு உண்ணுமாறுசெய்தும் அவருடுத்த சிதைந்த கந்தைகளைக் களைவித்துப் பட்டுநூலாடையை அவர் அரையில் உடுப்பித்தும் உயர்ந்த ஆபரணங்களை அவர்மகளிர் அணிந்து பொலியும்படி செய்தும், இவ்வாறு அலங்காரமாக அமர்ந்த சுற்றத்துடன் ஆரவாரம் அமைந்த உன் ஓலக்கத்துச் செல்கின்ற விநோதமகிழ்ச்சி அனுபவித்தற்கு இனிதாயிருந்தது—என்று சேரனது வென்றிச்சிறப்பும் அவனது அத்தாணிச் சிறப்பும் உடன்கூறியவாறு.

(9) தொறுத்தவயல் ஆரல்பிறழ்நவும்
ஏறுபொருதசெறு உழாதுவித்துநவுங்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்கண் எருமையின் நிரைதடுக் குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்
ஒலிதெங்கின் இமிழ்மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்
நாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்
விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க
ஊரிய நெருஞ்சி நீறுடு பறந்தலைத்
தாதெரு மறுத்த கலியழி மன்றத்து
உள்ள மழிய ஊக்குநர் மிடல்தபுத்து
உள்ளுநர் பனிக்கும் பாழா யினவே
காடே கடவுள் மேன புறவே

---

(9) ஷை, ஷை, மூன்றாம் பாட்டு. துறையும் வண்ணமும் அவை. தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—பூத்தநெய்தல் (௩)

கருத்து:—பெருமானே! நீ சினந்து படையெடுத்த அரசரின் பேரூர்கள், கூற்றங்கொள்ள நின்ற யாக்கைபோலப் பொலிவழிந்து, நினைப்பவர் நெஞ்சம் நடுங்கும்படி பாழாயின. நீ காத்துப் பேணிய நாட்டிலோ, பெருங்காடான இடங்களெல்லாம் கடவுளரின் கோயில்களால் மேம்பட்டன. சிறு காட்டிடங்கள் யாவும் நின் படையாளர்கள் மகளிரோடு உறையும் படைநிலைகள் ஆயின. அவையல்லாத பெருவழியிடங்கள் ஆறலைகள்வராலும் பிறவற்றாலும் நேரும் இடையூறின்றி முன்சொன்ன கடவுளரும் வீரர்களும் உறையும் இடங்களாயின. மேற்குடிகளையும் கீழ்க்குடிகளையும் ஓம்பி நீ காத்துவரும் நாடு, வேண்டிய இடங்களில் மாரி நின்று பொழிய நோயொடு பசியும் நீங்கிப் பூத்தது—என்று சேரனது வென்றிப்பெருமையும் அவன் நாடுகாத்தற் சிறப்பும் உடன்கூறியவாறு.

ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன
ஆறே அவ்வனைத் தன்றியும் ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பாரம் ஓம்பி
அழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப
நோயொடு பசியிகந் தொரீஇப்
பூத்தன்று பெரும நீ காத்த நாடே.

---

(10) நிலநீர் வளிவிசும் பென்ற நான்கின்
அளப்பரி யையே
நாள்கோள் திங்கள் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுத்த ஈரைம் பதின்மரொடு
துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை
அக்குர னனைய கைவண் மையையே
அமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீ டழித்த செருப்புகல் முன்ப!
கூற்றுவெகுண் டு வரினும் மாற்றுமாற் றலையே
எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை!

---

(10) ஷை, ஷை, நான்காம் பாட்டு. துறை—அது. வண்ணம்—ஒழுகு வண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு—செந்தூக்கு. பெயர்—சான்றோர் மெய்ம்மறை (12)

கருத்து:—நிலம், நீர், வளி, விசும்பு என்ற பூதம் நான்கும்போல அளத்தற்கரிய பெருமையுடையாய்! நாண்மீன் கோண்மீன் திங்கள் ஞாயிறு அங்கி என்ற ஐந்தையும் விளக்கத்தால் ஒத்துள்ளாய்! கௌரவர் நூற்றுவர்க்கும் துணை வலியானவனும் பேராண்மை உடையவனுமான அக்குரனைக் கைவண்மையால் ஒப்பாய்! போரில் வலியோனே! நின் வலிமையை உள்ளவாறு சொல்லின் கூற்று வெகுண்டுவந்தாலும் அதனையும் மாற்றவல்ல ஆற்றலுடையை. ஆதலால்

வாணுதை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பின்
ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ!
பல்களிற்றுத் தொழுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையேர் உழவ! பாடினி வேந்தே!
இலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்
கடலக வரைப்பினிப் பொழின்முழு தாண்டநின்
முன்திணை முதல்வர் போல நின்றுநீ
கெடாஅ நல்லிசை நிலைஇத்
தவாஅ லியரோவிவ் வுலகமோ டுடனே.

---

(11) யாண்டு தலைப்பெயர வேண்டுபுலத் திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதில்மர முருக்கி
நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்
பரந்தாடு கழங்கழி மன்மருங் கறுப்பக்
கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர
அழல்கவர் மருங்கின் உருவறக் கெடுத்துத்
தொல்கவின் அழிந்த கண்ணகன் வைப்பின்
வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்துப்

எழுமுடிதாித்த மார்பினையுடைய வேந்தே! கடல்சூழ்ந்த இப்பூவுலகு முழுதையும் ஆண்ட உன் பண்டைக் குலமுதல்வர்போல, நல்லிசையை நிலைப்பித்து இவ்வுலகத்தோடுகூடக் கெடாது வாழ்வாயாக—என்று சேரனது பல குணங்களையும் ஆற்றலையும் ஒருங்குகூறி வாழ்த்தியவாறு.

(11) ஷை, ஷை, ஐந்தாம் பாட்டு. துறை—ஷை. வண்ணம்—ஒழுகு வண்ணம். தூக்கு—ஷை. பெயர்—நிரையவெள்ளம் (4)

கருத்து:—பகைப் புலங்களிலே நீ பலவாண்டுகள் தங்கி, நின் படைகளைக் கொண்டு எரியிட்டழித்தலால் தொல்கவினிழந்த பேரூர்களையும், குடியோடிப் பாழடைந்த சிற்றூர்களையும் உடைய உன் பகைவர்நாடுகளையுங் கண்டு வந்தேன். கடல்வளம் மலைவளம் யாற்றுவளமுதலியவை நிரம்பியுள்ள உன் தேயத்துள் நீ ஓம்பிக்காத்தலால் பாணர்முதலியோர் யாழோடு உன்னைக் வாழ்த்தியும், நல்வாழ்க்கையும் வாய்மையடக்கங்களும் புண்ணியச்செயல்களுமுடைய

பிரிவர்பு பரந்த நீரறு நிறைமுதற்
சிவந்த காந்தள் முதல்சிதை மூதிற்
புலவுவில் லுழுவிற் புல்லாள் வழங்கும்
புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பின்
அறியா மையான் மறந்துதுப் பெதிர்ந்தநின்
பகைவர் நாடுங் கண்டுவந் திசினே
கடலவும் கல்லவும் யாற்றவும் பிறவும்
வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு
விழவறு பறியா முழவிமிழ் மூதூர்க்
கொடிநிழற் பட்ட பொன்னுடை நியமத்துச்
சீர்பெறு கலிமகி ழியம்பு முரசின்
வயவர் வேந்தே! பரிசிலர் வெறுக்கை!
தாரணிந் தெழிலிய தொடிசிதை மருப்பிற்
போர்வல் யானைச் சேர லாத!
நீவா ழியரிவ் வுலகத் தோர்க்கென
உண்டுரை மாறிய மழலை நாவின்
மென்சொற் கலப்பையர் திருந்துதொடை வாழ்த்த
வெய்துற வறியாது நந்திய வாழ்க்கைச்
செய்த மேவ லமர்ந்த சுற்றமொடு
ஒன்றுமொழிந் தடங்கிய கொள்கை யென்றும்
பதிபிழைப் பறியாது துய்த்த லெய்தி
நிரைய மொரீஇய வேட்கைப் புரையோர்
மேயின ருறையும் பலர்புகழ் பண்பின்
நீபுறந் தருதலின் நோயிகந் தொரீஇய
யாணர்நன் னாடுங் கண்டுமதி மருண்டனென்
மண்ணுடை ஞாலத்து மன்னுயிர்க் கெஞ்சாது
ஈத்துக்கை தண்டாக் கைகடுந் துப்பிற்
புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி
ஏம மாகிய சீர்கெழு விழவின்
நெடியோ னன்ன நல்லிசை
ஒடியா மைந்தநின் பண்புபல நயந்தே.

பெரியோர் தங்கள் சுற்றத்துடன் வேண்டியவற்றை நுகர்ந்து நோயின்றியே வாழ்ந்துவரும் நின் சீரியநாட்டையும் கண்டு மதிமருண்டேன், மன்னுயிர்க்கும் தேவாலயங்கட்கும் வேண்டியவற்றைக் குறைவற வழங்கித் திருமால்போன்ற பெரும்புகழுடைய உன் பண்புகள் பலவற்றையும் காணவிரும்பி — என்று சேரனது வென்றிச்சிறப்பும் நாடுகாத்தற்சிறப்பும் கூறியவாறு.

(12) கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி
நாடுகண் டன்ன கணைதுஞ்சு விலங்கற்
றுஞ்சுமரக் குழாஅந் துவன்றிப் புனிற்றுமகள்
பூணா ஐயவி தூக்கிய மதில
நல்லெழில் நெடும்புதவு முருக்கிக் கொல்லுபு
ஏன மாகிய நுனைமுரி மருப்பிற்
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
மரங்கொல் மழகளிறு முழங்கும் பாசறை
நீடினை யாகலிற் காண்குவந் திசினே
ஆறிய கற்பின் அடங்கிய சாயல்
ஊடினும் இனிய கூறும் இன்னகை
அமிர்துபொதி துவர்வாய் அமர்த்த நோக்கிற்
சுடர்நுதல் அசைநடை உள்ளலு முரியள்
பாய லுய்யுமோ தோன்றல்! தாவின்று
திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்
வயங்குகதிர் வயிரமொ டுறழ்ந்துபூண் சுடர்வர
எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
புரையோ ருண்கண் துயிலின் பாயல்
பாலுங் கொளாலும் வல்லோய்நின்
சாயல் மார்பு நனியலைத் தன்றே.

(12) துறை, வண்ணம், தூக்கு, ஆறும்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—துயிலின் பாயல் (18)

கருத்து:—பகைவரது வலிமிக்க மதிலரண்களை அழிக்கும் சினங்கொண்ட மதயானைகளின் முழக்கத்தையுடைய பாசறையிலே, நீ நெடுங்காலந் தங்கி விட்டனை. ஆதலால் நின்னைக் காணவேண்டி இங்கு வந்தேன். ஆறிய கற்பும் பேரழகும் வாய்ந்த உன்தேவி நின்னை நினைத்தலும் உரியள். எழுமுடி தாங்கிய நின் திருமார்பு அவளை மிகவும் வருத்தியது காண். நீ அவள்பால் விரைந்தெழுவாயாக—என்று சேரனது வென்றிச்சிறப்பும் குலமகளோடு நிகழ்ந்த இன்பச்சிறப்பும் கூறியவாறு.

(13) புரைவது நினைப்பிற் புரைவதோ வின்றே
பெரிய தப்புந ராயினும் பகைவர்
பணிந்துதிறை பகரக் கொள்ளுநை யாதலின்
துளங்குபிசி ருடைய மாக்கடல் நீக்கிக்
கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை
ஆடுநர் பெயர்ந்துவந் தரும்பலி தூஉய்க்
கடிப்புக் கண்ணுறூஉந் தொடித்தோள் இயவர்
அரணங் காணாது மாதிரந் துழைஇய
நனந்தலைப் பைஞ்ஞிலம் வருகவிந் நிழலென
ஞாயிறு புகன்ற தீதுதீர் சிறப்பின்
அமிழ்துதிகழ் கருவிய கணமழை தலைஇக்
கடுங்கால் கொட்கும் நன்பெரும் பரப்பின்
விசும்புதோய் வெண்குடை நுவலும்
பசும்பூண் மார்ப! பாடினி வேந்தே!

---

(14) உண்மின் கள்ளே அடுமின் சோறே
எறிக திற்றி ஏற்றுமின் புழுக்கே
வருநர்க்கு வரையாது பொலங்கலந் தெளிர்ப்ப
இருள்வண ரொலிவரும் புரியவி ழைம்பால்

---

(13) ஷ, ஷ, எழாம் பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—வலம்படு வியன்பணை(5)

**கருத்து:**—பெரிய கடலைக்கடந்து பகைவரது கடம்ப மரத்தை அறுத்து அதனால் செய்த நின் வெற்றிமுரசைப் பலிதூவி வழிபட்டு, 'அரண்புகும் இடங்காணாமல் வருந்தும் மக்கட்கூட்டம் இந்நிழற்கண்ணே வருக' என்று யாவரும் அறியும்படி, இயவர்கள் நின் வெண்கொற்றக்குடையின் அருட்சிறப்பை முழக்குதற்குக் காரணமாய் நின்ற பசும்பூண்மார்பனே! நின் பகைவர் பெரிய குற்றங்களைச் செய்தவராயினும் பணிந்து திறையளப்பதாகக் கூறுவராயின், அவரை நட்பினராகக் கொள்ளும் இயல்பினை; ஆதலால், உனக்கு ஒப்பை நினைக்குமிடத்து, ஒப்பானதொன்று பிறிதில்லை—என்று சேரனது பொறையுடைமையோடு அவன் வென்றிச்சிறப்பும் கூறியவாறு.

(14) ஷ, ஷ, எட்டாம்பாட்டு. துறை—இயன்மொழி வாழ்த்து. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—கூந்தல்விறலியர். (6)

**கருத்து:**—கள்ளினை உண்ணுமின், சோற்றை அடுமின், தின்னுதற்கு ஆட்டிறைச்சியை அறுமின், புழுக்கப்படுமவற்றை அடுப்பிலே ஏற்றுங்கள், வரு

ஏந்துகோட் டல்குல் முகிழ்நகை மடவரற்
கூந்தல் **விறலியர்** வழங்குக அடுப்பே
பெற்ற துதவுமின் தப்பின்று பின்னும்
மன்னுயி ரழிய யாண்டுபல துளக்கி
மண்ணுடை ஞாலம் புரவெதிர் கொண்ட
தண்ணிய லெழிலி தலையாது மாறி
மாரி பொய்க்குவ தாயினும்
சேர லாதன் பொய்யலன் நசையே.

---

**(15)** கொள்ளை வல்சிக் கவர்காற் கூளியர்
கல்லுடை நெடுநெறி போழ்ந்துசுர னறுப்ப
ஒண்பொறிக் கழற்கால் மாறா வயவர்
திண்பிணி எஃகம் புலியுறை கழிப்பச்
செங்கள விருப்பொடு கூல முற்றிய
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
மண்ணுறு முரசங் கண்பெயர்த் தியவர்
கடிப்புடை வலத்தர் தொடித்தோ ளோச்ச
வம்புகளை வறியாச் சுற்றமொ டம்புதெரிந்து

---

பவர்களுக்கு இல்லை என்னுமல் விரைந்து உதவும்பொருட்டு, அடுப்புத்தொழிற்கு உரியரல்லாத வரிசைமகளிருங்கூட அத்தொழிலை நடத்துங்கள். இன்னும் வருவோர்க்குச் சோறிடுதலேயன்றி, சேரனிடம் நாம் பொருளாகப்பெற்றவற்றைக் கொடுங்கள். இவ்வாறு எல்லாம் கொடுத்தாலும் நம் காரியங்களுக்குப் பின் குறைவு வாராது. காரணம் யாதெனின், மன்னுயிரழிய மாரி பொய்த்தாலும், சேரலாதன், நாம் விரும்பியன கொடுப்பதிற் பொய்க்கமாட்டான்: அதுதான் இவ்வாறு கூறுதற்குக் காரணம் என்று—சேரனது பெருங்கொடைச் சிறப்புக் கூறியவாறு.

(15) ஷை, ஷை. ஒன்பதாம் பாட்டு. துறை—பரிசிற்றுறைப் பாடாண்பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு—ஷை. பெயர்—வளனறுபைதிரம் (18)

கருத்து:—நீ பகைவர்நாட்டில் வீரமிக்க நின்படையாளரோடு போர்த்தொழிலில் மூண்டுநின்றாய்; அதனால் பகல்முழுதும் வருந்தியிருந்து இரவிற் சிறு

அவ்வினை மேவலை யாகலின்
எல்லு நனியிருந் தெல்லிப் பெற்ற
அரிதுபெறு பாயற் சிறுமகி ழானும்
கனவினு ளுறையும் பெருஞ்சால் பொடுங்கிய
நாணுமலி யாக்கை வாணுத லரிவைக்கு
யார்கொ லளியை
இனந்தோ டகல ஊருட னெழுந்து
நிலங்கண் வாட நாஞ்சில் கடிந்துநீ
வாழ்த லீயா வளனறு பைதிரம்
அன்ன வாயின பழனந் தோறும்
அழல்மலி தாமரை ஆம்பலொடு மலர்ந்து
நெல்லின் செறுவின் நெய்தல் பூப்ப
அரிநர் கொய்வாள் மடங்க அறைநர்
தீம்பிழி எந்திரம் பத்தல் வருந்த
இன்றோ அன்றோ தொன்றோர் காலை
நல்லமன் அளிய தாமெனச் சொல்லிக்
காணுநர் கைபுடைத் திரங்க
மாணா மாட்சிய மாண்டன பலவே.

---

துயிலிற் காணும் கனவிடையே உன்னைக் கண்டு உயிர்வாழ்ந்து உறையும் உன் பெருந்தேவிக்கு, நெடுங்காலம் பெருந்தூரத்தில் இருந்துவரும் நீ என்ன உறவுடையை? நீ மேற்கொண்ட பகைநாட்டழிக்கும் காரியமோ முழுதும் முற்றியது. அதனால் அது குறை என்று நீ சொல்ல இயலாது. நின் அன்பின்மை தான் குறையாகும். இனி நீ அவளிடம் கடிது எழுவாயாக— என்று, பாணன், சேரனது பாசறைக்கண்வந்து அவன்தேவியின் ஆற்றாமையை கூறி, அவனை விரைவில் அடையும்படி இரந்துவேண்டியமை கூறியவாறு.

(16) நுங்கோ யாரென வினவின் எங்கோ
இருமுந்நீர்த் துருத்தியுள்
முரணியோர்த் தலைச்சென்று
கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின முன்பின்
நெடுஞ்சேர லாதன் வாழ்கஅவன் கண்ணி
வாய்ப்பறி யலனே வெயிற்றுக ளனைத்தும்
மாற்றோர் தேளத்து மாறிய வினையே
கண்ணி னுவந்து நெஞ்சவிழ் பறியா
நண்ணார் தேஎத்தும் பொய்ப்பறி யலனே
கனவினும், ஒன்னார் தேய ஓங்கி நடந்து
படியோர்த் தேய்த்து வடிமணி யிரட்டும்
கடாஅ யானைக் கணநிரை யலற
வியலிரும் பரப்பின் மாநிலங் கடந்து
புலவ ரேத்த ஓங்குபுகழ் நிறீஇ
விரியுளை மாவும் களிறுந் தேரும்
வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசிக்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
நெடுமதில் நிலைஞாயில்
அம்புடை யாரெயில் உள்ளழித் துண்ட
அடாஅ அடுபுகை அட்டுமலர் மார்பன்

---

(16) ஷை, ஷை, பத்தாம் பாட்டு. துறை—இயன்மொழி வாழ்த்து. வண்ணம்—ஷை. தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—அட்டு மலர்மார்பன் (20)

கருத்து:—சேரலாதனால் சிறப்புப்பெற்ற பாணனொருவன், தன்னெதிரே வந்த பாணனொருவனுக்கு அச்சேரலாதனது பெருமையைக் கூறி வாழ்த்திய தாக அமைந்தது இச்செய்யுள்.

'நின் இறைவன் யார்' என வினவுகின்றாயாயின், என் இறைவன், கடலிடத்து அமைந்த தீவத்தில் இருந்துகொண்டு தன்னோடு பகைத்த அரசரது நாட்டிற் படையெடுத்துச்சென்று அவரது காவல்மரமான கடம்பை வெட்டிச் சாய்த்த வலியோனான நெடுஞ்சேரலாதன் என்பவன். அவன் முடிமாலை வாழ்வதாக. அவனியல்பு இருக்குமாறு சொல்லுமிடத்து, பகைநாட்டில் புரியும் போரிலே மாறுபட்ட வினைசெயலை அணுவும் அறியான். அப் பகைநாட்டிலும் பொய்த்தல் என்பதைக் கனவினுந் தெரியாதவன். பகைவரது காலாட்படையுஞ்

எமர்க்கும் பிறர்க்கும் யாவ ராயினும்
பரிசில் மாக்கள் வல்லா ராயினும்
கொடைக்கட னமர்ந்த கோடா நெஞ்சினன்
மன்னுயி ரழிய யாண்டுபல மாறித்
தண்ணியல் எழிலி தலையா தாயினும்
வயிறுபசி கூர ஈயலன்
வயிறுமா சிலீயரவன் ஈன்ற தாயே.

---

**பதிகம்.**

(17) மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் **உதியஞ் சேரற்கு**
**வெளியன் வேண்மாள் நல்லினி** ஈன்றமகன்
அமைவர லருவி யிமையம் விற்பொறித்து
இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபின் ஆரியர் வணக்கி
நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறல் மூதூர்த் தந்துபிறர்க் குதவி

---

யானைப்படையும் அழிய அகன்ற பூமியை வென்று, புலவரேத்தத் தன்புகழை நிறுவியவன். போரிடைக் கவர்ந்த குதிரை தேர் யானைகளைத் தனக்கெனவைத்துக்கொள்ளாமல் கூத்தர் பாணர்கட்கு வீசி மகிழ்பவன். எல்லா உறுப்புக்களுமுடைய பகைவரது பேரெயில்களைச் சுட்டெரித்து அதனால் மலர்ந்த மார்பு உடையவன். பரிசில்வேண்டி வருவோர் கல்லாதவராயினும் கொடைக்கடனமர்ந்த கோடா நெஞ்சினன். மன்னுயிர்கள் அழியும்படி பல ஆண்டுகள் மழையற்ற வறட்காலமாயினும், தன் பரிகரங்கள் வயிறுபசிக்கும்படி சிறிதாகக் கொடான். இவற்றால், அவனை ஈன்ற தாய் வயிறுவிளங்குவாளாக—என்று 'யான் இன்னாருடைய பாணன்' எனச் சேரனது குணங்களை வாழ்த்தியவாறு.

(17) குறிப்பு:—(8) பிணித்து—போரிலே அகப்படுத்தி. (9) தோற்றார்

அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்ருள்
இமய வரம்பன் நெடுஞ்சேர லாதனைக்
குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம்;-புண்ணுமிழ் குருதி, மறம்வீங்கு பல்புகழ், பூத்த நெய்தல். சான்றோர்மெய்ம்மறை, நிரையவெள்ளம், துயிலின் பாயல், வலம்படு வியன்பணை, கூந்தல் விறலியர், வளனறு பைதிரம், அட்டுமலர்மார்பன்; இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்; உம்பற்காட்டு ஐந்நூறூர் *பிரமதாயங்கொடுத்து முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகங்கொடுத்தான் அக் கோ.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டியாண்டு வீற்றிருந்தான்.

---

## பல்யானைச் செல்கெழு குட்டுவன்.

(18) சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்று
ஐந்துடன் போற்றி அவைதுணை யாக
எவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கைக்
காலை யன்ன சீர்சால் வாய்மொழி
உருகெழு மரபிற் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடரெழு தோறும்
விரும்புமெய் பரந்த பெரும்பெய ராவுதி

---

தலையிலே நெய்யைப் பெய்து அவரது கைகளைப் பின்கட்டாகக் கட்டி. *பிரமதாயம்—அந்தணர்க்கு விடப்படும் இறையிலிநிலம்.

(18) ஷை, மூன்ரும்பத்தின் முதற்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண் பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—அடு நெய்யாவுதி (13)

இதுமுதல் பத்துப்பாட்டும் பாடியவர், பாலைக்கௌதமனார்.

கருத்து:—அந்தணரது வேள்வியின் ஆவுதிப்புகையும், ஏனையோர் விருந்தினரை உபசரித்தற்காக அடுகின்ற நெய்யாவுதிப்புகையும் மலிந்த தலைநகரில்

வருநர் வரையார் வார வேண்டி
விருந்துகண் மாறா துணீஇய பாசவர்
ஊனத் தழித்த வானிணக் கொழுங்குறை
குய்யிடு தோறும் ஆனா தார்ப்பக்
கடலொலி கொண்டு செழுநகர் வரைப்பின்
நடுவண் எழுந்த அடுநெய் யாவுதி
இரண்டுடன் கமழும் நாற்றமொடு வானத்து
நிலைபெறு கடவுளும் விழைதகப் பேணி
ஆர்வளம் பழுனிய ஐயந்தீர் சிறப்பின்
மாரியங் கள்ளின் போர்வல் யானைப்
போர்ப்புறு முரசங் கறங்க ஆர்ப்புச்சிறந்து
நன்கலந் தரூஉம் மண்படு மார்ப!
முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்
புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பிக்
கல்லுயர் கடத்திடைக் கதிர்மணி பெறூஉம்
மிதியற் செருப்பிற் பூழியர் கோவே!
குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை!
பல்பயந் தழீஇய பயங்கெழு நெடுங்கோட்டு
நீரறல் மருங்கு வழிப்படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய
நேருயர் நெடுவரை அயிரைப் பொருந!
யாண்டுபிழைப் பறியாது பயமழை சுரந்து
நோயில் மாந்தர்க் கூழி யாக
மண்ணா வாயில் மணங்கமழ் கொண்டு
கார்மலர் கமழுந் தாழிருங் கூந்தல்

---

குறைவற்ற செல்வமும் கொடையும் உடையனாக விளங்கும் சேரவேந்தே! செருப்பு என்னும் பெயர்கொண்ட மலையையுடைய பூழிநாட்டின் அரசே! வீரர்க்கெல்லாம் கவசம்போன்றோய்! அயிரைமலைக்குரிய வீரனே! ஆண்டுகள்தோறும் மழைதவறாமல் சுரந்தும் மாந்தர்க்கு நோயின்றியும் ஊழிகள் பலவாகுக. மலர்மணங் கமழுங் கூந்தலையும் மதர்த்த குளிர்ந்த கண்களையும் வேய்போலும் தோளிணையுமுடைய உன் பெருந்தேவியாகிய இவளுடன் பல்லாயிரவெள்ளம் வாழ்வாயாக—எனச் சேரன் நாடுகாத்தற்சிறப்புக் கூறியவாறு.

ஓரீஇயின போல இரவுமலர் நின்று
திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்
அலங்கிய காந்தள் இலங்குநீ ரழுவத்து
வேயுறழ் பணைத்தோள் இவளோடு
ஆயிர வெள்ளம் வாழிய பலவே.

பாலைக் கௌதமனார்.

---

(19) சினனே காமம் கழிகண் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொல் அன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவுமிவ் வுலகத்து
அறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்
தீதுசே ணிகந்து நன்றுமிகப் புரிந்து
கடலுங் கானமும் பலபய முதவப்
பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது
மையி லறிவினர் செவ்விதின் நடந்துதம்
அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி உய்த்த உரவோ ரும்பல்!
பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறுசில ஊறிய நீர்வாய்ப் பத்தற்
கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்

---

(19) ஷை, ஷை, இரண்டாம் பாட்டு. துறை—வஞ்சித்துறைப் பாடாண் பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணமும், சொற்சீர் வண்ணமும். தூக்கு—செந் தூக்கும், வஞ்சித்தூக்கும். பெயர்—கயிறுகுறுமுகவை (14)

கருத்து:— குடிமக்களெல்லாம் நற்குணநற்செய்கைகளுடன் மூத்தயாக்கையோடு நோயின்றிக் கழியும்படி நெடுங்காலம் ஆட்சிபுரிந்த வலியோரது மரபில் உதித்தவனே! நீர்வளம் அற்றதும் பசுவிரை உள்ளதுமான கொங்கர் நாட்டைத் தன்னாட்சிக்குள்ளாக்கிய தோன்றால்! எல்லா மதிலுறுப்பும் உடைய அகப்பா என்ற பகைவரரணை அழித்த வெல்போர்க் குட்டுவ! எங்கும்பரந்த

ஆகெழு கொங்கர் நாடகப் படுத்த
வேல்கெழு தானை வெருவரு தோன்றல்!
உளைப்பொலிந்த மா
இழைப்பொலிந்த களிறு
வம்புபரந்த தேர்
அமர்க்கெதிர்ந்த புகன்மறவரொடு
துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை
ஓங்குநிலை வாயில் தூங்குபு தகைத்த
வில்விசை மாட்டிய விழுச்சீர் ஐயவிக்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
நெடுமதில் நிரைப்பதணத்து
அண்ணலம் பெருங்கோட் டகப்பா எறிந்த
பொன்புனை உழிஞை வெல்போர்க் குட்டுவ!
போர்த்தெறிந்த பறையால் புனல்செறுக் குநரும்
நீர்த்தரு பூச லினம்பழிக் குநரும்
ஒலித்தலை விழவின் மலியும் யாணர்
நாடுகெழு தண்பணை சீறினை யாதலிற்
குடதிசை மாய்ந்து குணமுதற் றோன்றிப்
பாயிரு ளகற்றும் பயங்கெழு பண்பின்
ஞாயிறு கோடா நண்பக லமயத்துக்
கவலை வெண்ணரி கூஉமுறை பயிற்றிக்
கழல்கட் கூகைக் குழறுகுரற் பாணிக்
கருங்கட் பேய்மகள் வழங்கும்
பெரும்பா ழாகுமன் அளிய தாமே.

நீர்வளத்தால் திருவிழாப்போல ஆரவாரமிகுந்த பகைவரது நாடுகள், நீ சீறுதலால், நல்ல பகற்காலத்தும் வெண்ணரிகள் கூவுவனவாகவும், கோட்டான்களின் பாடலும் பேய்மகளின் ஆடலும் உடையனவாகவும் பெரும்பாழாயின. இது பெரிதும் இரக்கத்தக்கது—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(20) அலந்தலை யுன்னத் தங்கவடு பொருந்திச்
சிதடி கரையப் பெருவறங் கூர்ந்து
நிலம்பை தற்ற புலங்கெடு காலையும்
வாங்குபு தகைத்த கலப்பையர் ஆங்கண்
மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
வயிரிய மாக்கள் கடும்பசி நீங்கப்
பொன்செய் புனையிழை ஒலிப்பப் பெரிதுவந்து
நெஞ்சுமலி உவகையர் உண்டுமலிந் தாடச்
சிறுமகி ழானும் பெருங்கலம் வீசும்
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ!
நின்னயந்து வருவேம் கண்டனம் புல்மிக்கு
வழங்குந ரற்றென மருங்குகெடத் தூர்ந்து
பெருங்கவி னழிந்த ஆற்ற ஏறுபுணர்ந்து
அண்ணல் மரையா அமர்ந்தினி துறையும்
விண்ணுயர் வைப்பின காடா யினநின்
மைந்துமலி பெரும்புக ழறியார் மலைந்த
போரெதிர் வேந்தர் தாரழிந் தொராலின்
மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்
மணல்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு
முருக்குத்தாழ் பெழிலிய நெருப்புறழ் அடைகரை
நந்து நாரையொடு செவ்வரி உகளும்
கழனி வாயிற் பழனப் படப்பை
அழல்மருள் பூவின் தாமரை வளைமகள்
குறுஅது மலர்ந்த ஆம்பல்
அறுஅ யாணரவர் அகன்றலை நாடே.

(20) ஷை, ஷை, மூன்றும் பாட்டு. துறை அது. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—ததைந்தகாஞ்சி (19)

**கருத்து:**—நாடு முழுதும் பசுமையற்ற கடும்பஞ்சகாலத்திலும் வயிரியரது கடும்பசியை நீக்கி அவர் களித்தாடப் பேரணிகளை வழங்கும் குட்டுவ! உன் வலிமையறியாமல் உன்னுடன் போரெதிர்ந்த வேந்தர்கள் போரழிந்து

(21) நெடுவயின் ஒளிறு மின்னுப்பரந் தாங்குப்
புலியுறை கழித்த புலவுவா யெஃகம்
ஏவ லாடவர் வலனுயர்த் தேந்தி
ஆரரண் கடந்த தாரருந் தகைப்பிற்
பீடுகொள் மாலைப் பெரும்படைத் தலைவ!
ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றலென் றாறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி
ஞாலம் நின்வழி யொழுகப் பாடல்சான்று
நாடுடன் விளங்கு நாடா நல்லிசைத்
திருந்திய இயல்மொழித் திருந்திழை கணவ!
குலையிழி பறியாச் சாபத்து வயவர்
அம்புகளை வறியாத் தூங்குதுளங் கிருக்கை
இடாஅ ஏணி யியலறைக் குருசில்!
நீர்நிலம் தீவளி விசும்போ டைந்தும்
அளந்துகடை யறியினும் அளப்பருங் குரையைநின்
வளம்வீங்கு பெருக்கம் இனிதுகண் டிகுமே
உண்மரும் தின்மரும் வரைகோ ளறியாது
குரைத்தொடி மழுகிய உலக்கை வயின்றோறு
அடைச்சேம் பெழுந்த ஆடுறு மடாவின்
எஃகுறச் சிவந்த ஊனத்து யாவரும்

---

ஓடுதலால், அவரது அழகும்வளமும் வாய்ந்த நாடுகளின் பெருவழிகள், வழங்குவாரில்லாமையின் புல்முளைத்துப் பொலிவிழந்தனவாகவும், ஆணுடன்கூடி மரையாக்கள் இனிது தங்கும் காடாகவும் ஆயின. உன்னைக் காணும் வேட்கையோடு வந்த நாங்கள் இவற்றைக் கண்டோம்—என்று சேரனது வென்றிச் சிறப்புக் கூறியவாறு.

(21) ஷை, ஷை, நான்காம் பாட்டு, துறை—இயன்மொழி வாழ்த்து. வண்ணம்—அது. தூக்கு—செந்தூக்கு. பெயர்—சீர்சால்வெள்ளி (24)

கருத்து:—"வெற்றிபெறும் இயல்பமைந்த வீரர்படைக்குத் தலைவனே! அறுதொழிலாளரும் அறநெறியில் நடப்பவருமான அந்தணர் மொழிப்படி நீ ஒழுக, உலகம் நின்வழி ஒழுகுதலால் புலவர்பாடலுக்கு அமைந்த புகழுடையோய்! இன்மொழியுடைய உத்தமபத்தினியின் கணவனே! நாணேற்றலை

கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி
வயங்குகதிர் விரிந்து வானகம் சுடர்வர
வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயங்கெழு பொழுதோ டாநியம் நிற்பக்
கலிழுங் கருவியொடு கையுற வணங்கி
மன்னுயிர் புரைஇய வலனேர் பிரங்கும்
கொண்டற் றண்டளிக் கமஞ்சூல் மாமழை
காரெதிர் பருவ மறப்பினும்
பேரா யாணர்த்தால் வாழ்கநின் வளனே.

---

(22) மாவாடியபுலன் நாஞ்சிலாடா
கடாஅஞ்சென்னிய கடுங்கண்யானை
இனம்பரந்தபுலம் வளம்பரப்பறியா
நின்படைஞர், சேர்ந்த மன்றங் கழுதை போகி
நீ, உடன்றோர் மன்னெயில் தோட்டி வையா
கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் துருத்துப்
பசும்பிசிர் ஒள்ளழல் ஆடிய மருங்கின்
ஆண்டலை வழங்கும் கானுணங்கு கடுநெறி

ஒழியாத வில்லையுடைய வீரனே! படையாளர் செறிந்து தங்கும் பாசறையை யுடைய குருசில்! பஞ்சமாபூதங்களையும் அளந்து முடிவறிந்தாலும் அளத்தற்கரிய பெருமை உடையை; நீ, யாவருங்கண்டு மதிமயங்கும்படி அட்ட பெருஞ்சோறு, உண்போர் அளவிறந்திருந்தும், மழையற்ற வறட்காலத்திலும் குறையாத வளமுடையதாயிருந்தது. அத்தகைய நின் வளப்பெருக்கை நாங்கள் நன்கு கண்டோம். அவ்வளம் என்றும் வாழ்வதாக—என்று சேரன் பெருமையும் கொடைச் சிறப்பும் கூறியவாறு.

(22) ஷை, ஷை, ஐந்தாம்பாட்டு. துறை—வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர் வண்ணமும். தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—கானுணங்குகடுநெறி (8)

கருத்து:—இடிபோல ஒலிக்கும் முரசுடன் குதிரைகள் வேகமாகப் பறந்தோடும்படி நீ தேரோட்டிய பகைவரது அகன்ற நாடுகள் அழிந்தபடியைச்

முனையகன் பெரும்பா ழாக மன்னிய
உருமுறழ் பிரங்கு முரசிற் பெருமலை
வரையிழி அருவியின் ஒளிறுகொடி நுடங்கக்
கடும்பரிக் கதழ்சிற கைகைப்ப நீ
நெடுந்தேர் ஓட்டியபிறர் அகன்றலை நாடே.

---

(23) தேஎர்பரந்தபுலம் ஏஎர்பரவா
களிறாடியபுலம் நாஞ்சிலாடா
மத்துரறியமனை இன்னியமிமிழா
ஆங்குப், பண்டுநற் கறியுநர் செழுவளம் நினைப்பின்
நோகோ யானே நோதக வருமே
பெயல்மழை புரவின் றாகி வெய்துற்று
வலமின் றம்ம காலையது பண்பெனக்
கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்

---

சொல்லுமிடத்து, அந்நாட்டில் உன் பரிமாக்கள் வழங்கிய வயல்களிலே பின்பு கலப்பைகள் செல்லாவாயின. உன் மதயானைக் கூட்டம் பரந்த வயல்கள் பின்பு வளம்பரத்தலை அறியாவாயின. உன் படையாளர் சேர்ந்த மன்றங்கள் கழுதையால் உழப்பட்டன. நீ சினந்த அரசரது அரணுள்ள நகரங்கள், பின்பு தமக்குக் காவலாளர் வைக்கப்படாவாயின. அழலாடித் தீந்த காட்டுப்பக்கங்கள், ஆண்டலைப் புட்கள் வழங்கும் கடுநெறியுடையனவாகவும், ஆறலை கள்வர் பொருகின்ற போரிடங்களாகவும் ஆயின—என்று சேரனது வென்றிச் சிறப்புக் கூறியவாறு.

(23) ஷை, ஷை, ஆறும் பாட்டு. இதுவும் அது. பெயர்—காடுறு கடுநெறி (11)

கருத்து:—கூற்றத்தை ஒத்த உன் வீரர்கள் சினந்து சீறிய பகைநாடுகள், அவர் சீறுதற்கு முன்பு இருந்தபடி சொல்லுமிடத்து—ஒருகால் தேர்பரந்தோடிய வயல்கள், அது பரந்தோடிய அளவிலே சேறாகிப் பின் உழுதற்கென்று ஏர்பரவா ஆயின. பன்றிகள் உழுத கொல்லைப்புனங்கள் அவை உழுதவளவிலே புழுதியாகிப் பின்பு கலப்பை வழங்கவேண்டா ஆயின. மத்துக்கள் ஒலிக்கின்ற மனைகள், அம் மத்தொலிமிகுதியால், இனிய வாத்தியவொலிகள்

பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்
காடுறு கடுநெறி யாக மன்னிய
முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்
உரும்பில் கூற்றத் தன்னநின்
திருந்துதொழில் வயவர் சீறிய நாடே.

---

(24) சிதைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலின்
தொடர்ந்த குவளைத் தூநெறி யடைச்சி
அலர்ந்த ஆம்ப லகமடி வையர்
சுரியலஞ் சென்னிப் பூஞ்செய் கண்ணி
அரியலார் கையர் இனிதுகூ டியவர்
துறைமணி மருத மேறித் தெறுமார்
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற்

ஒலியாவாயின. இவ்வாறு வளப்பம் பெருகியிருந்தது. இப்பொழுது மழை பெய்யாமையால் செழிப்பின்றாயிற்று. 'இது காலக்கொடுமை' என்று கண்ணீர் பெருக்கிக் கையைப் புடைத்தவர்களாய் மெலிந்த நெஞ்சுடன் சிறுமைமிக்கனர் மக்கள். அவர்கள் வாழ்ந்த மனைகள் பாழானமையால் பீர்க்குப்படர்ந்து கடிய காட்டுவழிகளாயின. முன்பு இந்நாட்டின் வளத்தை நன்கறிந்தவர்க்கு பழைய நிலைமையை நினைக்குமிடத்து, துன்பம் பெரிதும் உண்டாகும். யானும் அதற்கு நோகின்றேன்—என்று சேரன் வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(24) ஷை, ஷை, ஏழாம் பாட்டு. துறை—செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—தொடர்ந்தகுவளை (2)

கருத்து:—தழையுடையையும் பூமாலையையுந் தரித்தவரும் கள்ளுண்டு களித்துக் கூடியிருப்பவருமான உழவர்மகளிர், புட்கள் வயல்களிற் புகுந்து உழக்காதிருத்தலை வேண்டி நீர்த்துறையிலுள்ள மருதமரத்தில் ஏறிக்கொண்டு தெளிந்த குரலோசையை இடுவராயின், இனிய வாத்தியங்களை இசைப்போரின் ஒலிகேட்ட பழக்கத்தாலே, தம்மைக் கடிய எழுந்த மகளிரொலியையும் வாத்தியவொலியாகவே கருதி மயில்கள் ஆடும் தன்மையது; சேறுபட்ட செய்களில் அகப்பட்ட வண்டிகளின் வலிய சக்கரங்கள் உருண்டு விரைந்து செல்லும்படி தூண்டி வெருட்ட, நல்ல எருதுகள் அளற்றைக் கடப்பதற்காக வருந்தி முயலுங்காலத்து, ஓட்டுவோர் இடும் ஆரவாரமல்லாமல் போரின்

பழனக் காவிற் பசுமயி லாலும்
பொய்கை வாயிற் புனல்பொரு புதவின்
நெய்தல் மரபின் நிரைகட் செறுவின்
வல்வா யுருளி கதுமென மண்ட
அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப
நல்லெருது முயலும் அளறுபோகு விழுமத்துச்
சாகாட் டாளர் கம்பலை யல்லது
பூச லறியா நன்னாட்டு
யாண ரறாஅக் காமரு கவினே.

---

(25) திருவுடைத் தம்ம பெருவிறற் பகைவர்
பைங்கண் யானைப் புணர்நிரை துமிய
உரந்துரந் தெறிந்த கறையடிக் கழற்காற்
கடுமா மறவர் கதழ்தொடை மறப்ப
இளையினிது தந்து விளைவுமுட் டுறாது
புலம்பா வுறையுள் நீதொழி லாற்றலின்
விடுநிலக் கரம்பை விடரளை நிறையக்
கோடை நீடக் குன்றம் புல்லென
அருவி யற்ற பெருவறற் காலையும்
நிவந்துகரை யிழிதரு நனந்தலைப் பேரியாற்றுச்
சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇயர்
உவலை சூடி உருத்துவரு மலிர்நிறைச்
செந்நீர்ப் பூச லல்லது
வெம்மை யரிதுநின் அகன்றலை நாடே.

ஆர்ப்பை அறியாதது; இத்தகைய சீரிய நாடுகளில் விளங்கிய அழகு, நீ சிவந்து நோக்கினமையால் பெரிதும் சிதைவுற்றது—என்று அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாறு.

(25) ஷை, ஷை, எட்டாம் பாட்டு. துறை—நாடுவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—உருத்துவருமலிர்நிறை (12)

**கருத்து:**—இடமகன்ற உன் நாடு, நீ நன்கு பாதுகாத்துவருதலால் விளைவு குன்றுதல் இல்லை. உன் வெற்றி வீரர்கள், போரில்லாமையால் அம்புவிடுக்

(26) அவலெறிந்த உலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்
முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தாள் நாரை யிரிய அயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பும்
அழியா விழவின் இழியாத் திவவின்
வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ
மன்றம் நண்ணி மறுகுசிறை பாடும்
அகன்கண் வைப்பின் நாடுமன் அளிய
விரவுவேறு கூலமொடு குருதி வேட்ட
மயிர்புதை மாக்கண் கடிய கழற
அமர்கோள் நேரிகந் தாரெயில் கடக்கும்
பெரும்பல் யானைக் குட்டுவன்
வரம்பில் தானை பரவா வூங்கே.

---

---

தொழிலை மறக்கும்படி ஆயிற்று. கோடைநீடுதலால் மலையருவி அற்றொழிந்த பெரிய வறட்காலத்திலும், கரைகடந்து செல்லும் பேரியாறுனது, தழைகளைச் சூடிக்கொண்டு, போரை விரும்பிப் படையெடுத்து வருவாரைப்போலப் பெருக்கெடுத்துவரும்போது அப்பெருக்கினைத் தடுப்பதற்காக விளைபுலங்களில் உண்டாகும் பூசலல்லது வேறு போர்க் கொடுமை இல்லை. இவற்றால், உன்தேயம் வியக்கத்தக்க செல்வப் பொலிவுகொண்டு விளங்குகின்றது—என்று சேரன் நாடு காத்தற்சிறப்புக் கூறியவாறு.

(26) ஷை, ஷை, ஒன்பதாம் பாட்டு. துறை—வஞ்சித்துறைப் பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—வெண்கைமகளிர் (6)

கருத்து:—பல்யானைக்குட்டுவனது சேனைகள் பரவியதால் இப்பொழுது அழிந்து கிடக்கின்ற இந்நாடுகள், அச்சேனைகள் பரவாதமுன்பு, கதிர்க்கனத்தாலே வளைந்து முடமான நெற்பயிர்களுள்ள வயல்களில் பரவிய நாரைகளும் ஓடும்படி மகளிர் வெண்குருகுகளை ஓட்டுதலையுடையனவாகவும், ஒழிவில்லாத விழாவினையுடையனவாகவும்; வயிரியமாக்கள் யாழொடுகூடிப் பண்களைப் பாடுதலுடையனவாகவும் இப்பெற்றிப்பட்ட சிறப்புடையவாயிருந்தன. அச்

(27) இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்
பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை
வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளும்
அல்குறு கானல் ஓங்குமணல் அடைகரை
தாழடும்பு மலைந்த புணரிவளை ஞரல
இலங்குநீர் முத்தமொடு வார்துகி ரெடுக்கும்
தண்கடற் படப்பை மென்பா லனவும்
காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்
செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்
குன்றுதலை மணந்த புன்புல வைப்பும்
கால மன்றியும் கரும்பறுத் தொழியாது
அரிகா லவித்துப் பலபூ விழவின்
தேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாயம்
முழவிமிழ் மூதூர் விழவுக்காணூஉப் பெயரும்
செழும்பல் வைப்பிற் பழனப் பாலும்
ஏனல் உழவர் வரகுமீ திட்ட
கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை
மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்
புன்புலந் தழீஇய புறவணி வைப்பும்
பல்பூஞ் செம்மற் காடுபய மாறி

---

சிறப்பெல்லாம் அழிந்து கண்டார்க்கு இரக்கமுண்டாக்குவன ஆயின, இப்போது—எனச் சேரன்வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(27) ஷை, ஷை, பத்தாம்பாட்டு. துறை—பெருஞ்சோற்று நிலை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—புகன்றவாயம் (19)

**கருத்து:**—கடலும் கடல்சேர்ந்த நிலமுமாகிய மென்பால் முதலாகப் பாலையீறாக எண்ணப்பட்ட ஐவகை நிலத்து மக்களும், அந்நிலங்களை ஆளும் வேந்தரும் வேளிரும் நடுங்கும்படி, நின் வெற்றிமுரசானது, பிண்டமும் பலியும்

அரக்கத் தன்ன நுண்மணற் கோடுகொண்டு
ஒண்ணுதல் மகளிர் கழலொடு மறுகும்
விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும் பிறவும்
பணைகெழு வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து
கடலவும் காட்டவும் அரண்வலியார் நடுங்க
முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்து
அருந்திறல் மரபிற் கடவுட் பேணியர்
உயர்ந்தோ னேந்திய அரும்பெறற் பிண்டம்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் தூஉய நிறைமகி ழிரும்பலி
எறும்பு மூசா இறும்பூது மரபிற்
கருங்கட் காக்கையொடு பருந்திருந் தார
ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்
பெருஞ்சமம் ததைந்த செருப்புகல் மறவர்
உருமுநில னதிர்க்குங் குரலொடு கொளைபுணர்ந்து
பெருஞ்சோ றுகுத்தற் கெறியும்
கடுஞ்சின வேந்தே! நின் தழங்குகுரல் முரசே.

---

பதிகம்.

(28) இமைய வரம்பன் தம்பி அமைவர
உம்பற் காட்டைத் தன்கோல் நிறீஇ
அகப்பா எறிந்து பகற்றீ வேட்டு

---

பெற்று, போர்வேட்ட வீரரது ஆர்ப்பொலியோடு பொருந்தி அவர்க்கெல்லாம் பெருஞ்சோறு வழங்குதற்பொருட்டு அறையப்படுகின்றது—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(28) குறிப்பு:— (2) உம்பற்காடு—திருவிதாங்கூர் ராஜ்யத்தின் வடமேற்கிலுள்ள யானைமலைப் பகுதியாம் என்றும், வைக்கத்துள்ள ஒரு வீட்டிற்கு

*மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇக்*
*கண்ணகன் வைப்பின் மண்வகுத் தீத்துக்*
*கருங்களிற் றியானைப் புணர்நிரை நீட்டி*
*இருகடல் நீரும் ஒருபகல் ஆடி*
*அயிரை பரைஇ ஆற்றல்சால் முன்போடு*
*ஒடுங்கா நல்லிசை உயர்ந்த கேள்வி*
நெடும்பார தாயனார் *முந்துறக் காடுபோந்த*
பல்யானைச் செல்கெழு குட்டுவனைப்
பாலைக்கௌதமனார் *பாடினார் பத்துப்பாட்டு.*

*அவைதாம்; அடுநெய்யாவுதி, கயிறுகுறுமுகவை, தசைந்த காஞ்சி, சீர்சால்வெள்ளி, கானுணங்குகடுநெறி, காடுறுகடுநெறி, தொடர்ந்த குவளை, உருத்துவருமலிர்நிறை, வெண்கைமகளிர், புகன்றவாயம்; இவை பாட்டின் பதிகம்.*

*பாடிப்பெற்ற பரிசில்: 'நீர் வேண்டியது கொண்மின்' என, 'யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம்புகல் வேண்டும்' என, பார்ப்பாரிற் பெரியோரைக்கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப் பத்தாம் பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினார்.*

*இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.*

---

'உம்பற்காட்டு வீடு' என்ற வழக்கு இன்றும் உள்ளதென்றும் கூறுவர் (Cera Kings by Sri K. G. Sesha Aiyar, p. 14). (6—7.) கீழ்கடனீரும் மேல்கடனீரும் ஒருபகலிலே வரும்படி யானைகளை நிரைத்துத் தருவித்து ஆடி. (௯) அயிரை பரைஇ—தன்னாட்டு அயிரை என்னும் மலையில் வாழும் கொற்றவைக்கடவுளைத் தன் முன்னோர்போல வழிபட்டு. (10) தன் புரோகிதனை நெடும்பாரதாயனார் தனக்கு முன்னே துறந்து காடுபோக, அதுகண்டு தானும் துறவுள்ளம்பிறந்து துறந்து காட்டிலேபோன என்று. பாரதாயன் —

(29) குன்றுதலை மணந்து குழூஉக்கட லுடுத்த
மண்கெழு ஞாலத்து மாந்த ரொராங்குக்
கைசுமந் தலறும் பூசல் மாதிரத்து
நால்வேறு நனந்தலை ஒருங்கெழுந் தொலிப்பத்
தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென
உண்ணுப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்
அலங்கற் செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி உவகையர் துஞ்சுபதிப் பெயர
மணிநிற மையிரு ளகல நிலாவிரிபு
கோடுகூடு மதிய மியலுற் றுங்குத்
துளங்குகுடி விழுத்திணை திருத்தி முரசுகொண்டு
ஆண்கட னிறுத்தநின் பூண்கிளர் வியன்மார்பு
கருவி வானந் தண்தளி தலைஇய
வடதெற்கு விலங்கி விலகுதலைத் தெழிலிய
பனிவார் விண்டு விறல்வரை யற்றே
கடவு ளஞ்சி வானத் திழைத்த
தூங்கெயிற் கதவங் காவல் கொண்ட
எழூஉநிவந் தன்ன பரேரெறுழ் முழவுத்தோள்
வெண்டிரை முந்நீர் வளைஇய உலகத்து
வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து

---

பாரத்துவாசன் என்பதன் திரிவு; சாஸனங்களிலும் இவ்வாறே திரிந்து பயிலும். பார்ப்பனி—பிராம்மணி (பார்ப்பனன் மனைவி).

(29) ஷை, ஷை, நான்காம்பத்தின் முதற்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—கமழ்குரற்றுழாய். (8)

இதுமுதற் பத்துப்பாட்டும் பாடியவர் காப்பியாற்றுக் காப்பியனார்.

கருத்து:—குருசிலே! உன் மார்பு விரிந்துபரவிய வரைபோலும். உன் தோள்கள் எழூஉப் (தம்பம்) போலும். நீதான் உலகிற் பெரும்புகழை நிறுத்த

*வண்டன் அனையைமன் நீயே வண்டுபட*
*ஒலிந்த கூந்தல் அறஞ்சால் கற்பின்*
*குழைக்குவிளக் காகிய ஒண்ணுதற் பொன்னின்*
*இழைக்குவிளக் காகிய அவ்வாங் குந்தி*
*விசும்புவழங்கு மகளி ருள்ளுஞ் சிறந்த*
*செம்மீ னனையள்நின் தொன்னகர்ச் செல்வி*
*நிலனதிர் பிரங்கல வாகி வலனேர்பு*
*வியன்பணை முழங்கும் வேல்மூ சழுவத்து*
*அடங்கிய புடையற் பொலங்கழல் நோன்றாள்*
*ஒடுங்காத் தெவ்வர் ஊக்கறக் கடைஇப்*
*புறக்கொடை யெறியார்நின் மறப்படை கொள்ளுநர்*
*நகைவர்க் கரண மாகிப் பகைவர்க்குச்*
*சூர்நிகழ்ந் தற்றுநின் தானை*
*போர்மிகு குருசில்நீ மாண்டனை பலவே.*

**காப்பியாற்றுக் காப்பியனார்.**

---

*வண்டன் என்ற சேரனை ஒப்பாய். உன் தேவி அருந்ததியனையவள். உன் படைவீரர் புறங்கொடுத்தோடுவோரை எறியார். நின்சேனைகள் பகைவர்க்கெல்லாம் பேரச்சம் விளைப்பன. இவ்வாறாக நீ பல்லாற்றானும் மாட்சிமை பெற்றனை—என்று சேரற்கு உள்ள சிறப்புக்களையெல்லாம் எடுத்துப் புகழ்ந்தவாறு.*

*குறிப்பு:—(1-10) கடல்மலைநாட்டிலுள்ள மக்களெல்லாம் கைகளைத் தூக்கித் தொழுது வாழ்த்தும் பேரொலி எங்கும் நிறைந்தன. அப்போது தீர்த்தமாடுதற்கு இது சமயம் என்பதைக் குறிப்பிடும் மணி யொலித்தது. அதனைக்கேட்டு, திருமாலிடம் வரம்வேண்டி உண்ணாவிரதமிருந்த மக்கட்கூட்டம் கடல்துறையில் தீர்த்தமாடலாயினர். பின் திருவனந்தபுரத்துத் திருமாலின் சேவடிகளைத் துதித்து நெஞ்சுமலிந்த உவகையோடும் தத்தம் பதிநோக்கிச் சென்றனர். அப்போது நிலாவைப் பரப்பி உவா மதியமும் தோன்றியது. அத்தகைய மதியம்போல நீயும் குடிகட்கு இன்பமூட்டி இயல்கின்றாய்—என்று*

(30) மாண்டனை பலவே போர்மிகு குருசில்! நீ
மாதிரம் விளக்கும் சால்பும் செம்மையும்
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று
துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப
ஈத்தான் ருனு இடனுடை வளனுந்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
எல்லா மெண்ணின் இடுகழங்கு தபுந [கொற்றவ!
கொன்னொன்று மருண்டனென் அடுபோர்க்
நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமியப்
பெருமலை யானையொடு புலங்கெட இறுத்துத்
தடந்தாள் நாரை படிந்திரை கவரும்
முடந்தை நெல்லின் கழையமல் கழனிப்
பிழையா விளையுள் நாடகப் படுத்து
வையா மாலையர் வசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத் தாயினுஞ்
சினவா யாகுதல் இறும்பூதாற் பெரிதே.

---

கூறப்பட்டிருத்தல் குறிப்பிடத்தக்கது. இதனால் திருவனந்தபுரத்தில் இன்றும் நிகழும் கடலாட்டாகிய 'ஆறாட்டு' சங்ககாலத்தும் நிகழ்ந்ததென்பது தெரிய வருகின்றது. (23) வண்டன்—முன்னோனாகிய ஒரு சேரன்.

(30) ஷை, ஷை, இரண்டாம்பாட்டு. இதுவும் அது. பெயர்—கழைய மல்கழனி (13)

கருத்து:—குருசில்! நீ சால்பு, செம்மை, ஈகை, வென்றி முதலிய பல குணங்களாலும் மாட்சிமைப்பட்டனை. அப் பலகுணங்களும் எண்ணப்புகுமிடத்து அளவுகடந்தவையாயிருக்கும். அவற்றுள் ஒன்றனைக் கொன்னே யான் வியந்தேன். அவ்வியப்பான குணம் யாதெனின், பகைவர்செய்த குற்றத்துக்குத் தண்டமாக அவர்நாட்டைக் கைக்கொண்டு கொடியரான அப்பகைவரிடம் நீ சினவாதொழிகின்றாய். இப்பொறை, எமக்குப் பெரிதும் வியப்பாகாநின்றது—எனச் சேரனது பல குணங்களைப் பொதுவாகவும் அவனது பொறையுடைமையைச் சிறப்பாகவும் புகழ்ந்தவாறு. (10) நெடுமிடல்—அஞ்சி என்னும் தலைவன்.

(31) இரும்பூதாற் பெரிதே கொடித்தே ரண்ணல்!
வடிமணி யணைத்த பணைமருள் நோன்றாட்
கடிமரத்தாற் களிறணைத்து
நெடுநீர துறைகலங்க
மூழ்த்திறுத்த வியன்றானையொடு
புலங்கெட நெரிதரும் வரம்பில் வெள்ளம்
வாண்மதி லாக வேல்மிளை யுயர்த்து
வில்விசை யுமிழ்ந்த வைம்முள் ளம்பிற்
செவ்வா யெஃகம் வளைஇய அகழிற்
காரிடி யுருமி னுரறு முரசிற்
கால்வழங் காரெயில் கருதிற்
போரெதிர் வேந்த ரொருஉப நின்னே.

---

(32) ஒருஉப நின்னை ஒருபெரு வேந்தே!
ஓடாப் பூட்கை ஓண்பொறிக் கழற்கால்

---

(31) ஷை, ஷை, மூன்றாம்பாட்டு. துறை—வஞ்சித்துறைப் பாடாண் பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—வரம்பில் வெள்ளம் (6)

கருத்து:—கொடித்தே ரண்ணால்! இது பெரிதும் வியப்பாயிருந்தது. எயில் போல அமைந்த நின் படைவெள்ளம் போர் செய்யக் கருதின், போரெதிர்ந்த பகைவேந்தர் பொரமாட்டாமல் உன்முன் நில்லாதோடுவர்; இதுதான் அவ் வியப்பு—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு:—(3) கடிமரம்—காவல்மரம். (3–4) பகைவரது கடிமரத்தில் தம் களிற்றைக் கட்டுதலும், அவர் நாட்டு நீர்நிலைகளை உடைத்தலும் மரபு.

(32) ஷை, ஷை, நான்காம்பாட்டு. துறை—தும்பையரவம். வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—ஒண்பொறிக் கழற்கால் (2)

கருத்து:—பெருவேந்தே! பரிமா ஊர்ந்து பகையரசர் அழியும்படி வெல்லும் ஆற்றலுடைய தனிவீரனே! அவ்வாற்றலில் வரும் குறைகளுக்குப் பிறரை ஏவாது அவற்றை நீயே பாதுகாத்துச் செய்தலால், போரிடைப் பின்வாங்காத பகைமன்னரும் நின்னையஞ்சி விலகிவிடுவர்—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

இருநிலந் தோயும் விரிநூ லறுவையர்
செவ்வுளைய மாவூர்ந்து
நெடுங்கொடிய தேர்மிசையும்
ஓடை விளங்கும் உருகெழு புகர்நுதற்
பொன்னணி யானை முரண்சேர் எருத்தினும்
மன்னிலத் தமைந்த ..............................
மாறா மைந்தர் மாறுநிலை தேய
முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழ
அரசுபடக் கடக்கும் ஆற்றல்
புரைசால் மைந்தநீ யோம்பன் மாறே.

---

(33) புரைசால் மைந்தநீ ஓம்பன் மாறே
உரைசான் றனவாற் பெருமைநின் வென்றி
இருங்களிற் றியானை இலங்குவான் மருப்பொடு
நெடுந்தேர்த் திகிரி தாய வியன்களத்து
அளகுடைச் சேவற் கிளைபுகா வாரத்
தலைதுமிந் தெஞ்சிய மெய்யாடு பறந்தலை
அந்தி மாலை விசும்புகண் டன்ன
செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்துப்
பேஎ யாடும் வெல்போர்
வீயா யாணர் நின்வயி னானே.

---

குறிப்பு:-(3) நிலத்திற் படும்படி ஆடையை அணிதல் பெருமிதங்குறிப்பதாம். (10) ஆர்ப்பு—வீரகோஷம். (12) ஓம்பன்மாறு—பாதுகாத்தலால்.

(33) ஷை, ஷை, ஐந்தாம்பாட்டு. துறை—வாகைத்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம்—அது. தூக்கு—செந்தூக்கு. பெயர்—மெய்யாடுபறந்தலை (6)

கருத்து:—மேம்பாடு மிக்க வீரனே! நின் படை அழிவுபடாதவாறு நீ அவற்றைப் பாதுகாக்கும் வினைகளைப் புரிந்தமையால், நின் வென்றிகளின் பெருமை, பிறருதவியாற் பெற்றதன்றித் தன் வலியாற் கொண்டதாய் நின்னிடத்தே புகழ்ச்சிக்குரியதாக அமைந்தது—என்று சேரனது வென்றிச் சிறப்புக்கூறியவாறு.

(34) வீயா யாணர் நின்வயி னானே
தாவா தாகு மலிபெறு வயவே
மல்ல லுள்ளமொடு வம்பமர்க் கடந்து
செருமிகு முன்பின் மறவரொடு தலைச்சென்று
பனைதடி புனத்திற் கைதடிபு பலவுடன்
யானை பட்ட வாண்மயங்கு கடுந்தார்
மாவும் மாக்களும் படுபிண முணீஇயர்
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புற எருவைப் பெடைபுணர் சேவல்
குடுமி யெழாலொடு கொண்டுகிழக் கிழிய
நிலமிழி நிவப்பின் நீள்நிரை பலசுமந்து
உருவெழு கூளிய ருண்டுமகிழ்ந் தாடக்
குருதிச் செம்புன லொழுகச்
செருப்பல செய்குவை வாழ்கநின் வளனே.

---

(35) வாழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புகழ் ஏத்தப்
பகைவ ராரப் பழங்க ணருளி
நகைவ ரார நன்கலஞ் சிதறி

---

(3!) ஷை, ஷை, ஆறாம்பாட்டு. துறை—களவழி. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—வாண்மயங்குகடுந்தார் (6)

கருத்து:-மனவெழுச்சியோடு பகைவர் செய்த புதிய போரைக் கடந்து, அவரது தூசிப்படையில் மாவும் மாக்களுமாகிய படுபிணங்களைப் பருந்துகள் உண்ணுதற்குக் கீழே இழியவும், பேய்கள் உண்டுமகிழ்ந்து ஆடவும் குருதிச் செம்புனலொழுகும்படி செருப் பலவுஞ் செய்குவை. அதனால், நின்வலி நின்னிடத்துக் கேடுபடாததாயிருந்தது. நின் போர்வளம் வாழ்க—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(35) ஷை, ஷை, ஏழாம்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண்பாட்டு; வண்ணமுந் தூக்கும் அவை. பெயர்—வலம்படுவென்றி. (7)

ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்!
வான்தோய் நல்லிசை உலகமொ டுயிர்ப்பத்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
மாயிரும் புடையல் மாக்கழல் புனைந்து
மன்னெயில் எறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பின் நின்னிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையும்
நன்றுபெரி துடையையால் நீயே
வெந்திறல் வேந்தே! இவ் வுலகத் தோர்க்கே.

---

(36) உலகத் தோரே பலர்மற் செல்வர்
எல்லா ருள்ளும்நின் நல்லிசை மிகுமே
வளந்தலை மயங்கிய பைதிரந் திருத்திய
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்!
எயில்முகஞ் சிதையத் தோட்டி யேவலின்

---

கருத்து:—நற்குணவமைதியும் பணிவும் உடைய செம்மால்! வறுமை முதலியவற்றால் நடுக்கமுற்ற இழிக்குடிகளை மேம்படச் செய்த வலம்படுவென்றியும் பகையரசர் எயில்களை அழித்து அவற்றில் வாழும் மறவர்களைப் பிடித்துக் கொண்டு நின் நிழலில்வாழும் வீரர்க்குக் கொடுமையில்லையாம்படி வைத்த மாறுபடாத கோட்பாடும் நீ பெரிதும் உடையை. ஆதலால் வேந்தே! இவ்வுலகத்தோர் ஆக்கத்தின்பொருட்டு நின் செல்வமும் வாழ்நாளும் வாழ்வனவாகுக— என்று சேரனுக்குள்ள குணங்களையெல்லாம் எடுத்துப்புகழ்ந்து அவன்செல்வத்தையும் அவனையும் வாழ்த்தியவாறு.

(36) ஷை, ஷை, எட்டாம் பாட்டு. இதுவும் அது. பெயர்—பரிசிலர் வெறுக்கை (9)

கருத்து:— களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்! சேரலர்வேந்தே! பரிசில் பெற வருவாரது செல்வம் அனையாய்! பாணர் புகழ்ச்சிக்குரிய நாளோலக்கம் உடையாய்! வாணுதல்கணவ! வீரசிங்கமே! வானவரம்ப! செல்வர் உலகத்

தோட்டி தந்த தொடிமருப் பியானைச்
செவ்வுளைக் கலிமா ஈகை வான்கழற்
செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே!
பரிசிலர் வெறுக்கை! பாணர் நாளவை!
வாணுதல் கணவ! மள்ள ரேறே!
மையற விளங்கிய வடுவாழ் மார்பின்
வசையில் செல்வ! வான வரம்ப!
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்
பகுத்தூண் தொகுத்த வாண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே.

---

(37) பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே
எமக்கிலென் னார்நின் மறங்கூறு குழாத்தர்
துப்புத்துறை போகிய வெப்புடைத் தும்பைக்
கறுத்த தெவ்வர் கடிமுனை யலற
எடுத்தெறிந் திரங்கும் ஏவல் வியன்பணை
உருமென அதிர்பட்டு முழங்கிச் செருமிக்கு
அடங்கா ராரரண் வாடச் செல்லும்
கால னனைய கடுஞ்சின முன்ப!

---

தாரிற் பலர் உளர். அச்செல்வர்கள் எல்லாருள்ளும் பிறர்க்கென வாழ்தி நீ ஆகலான் நின் நல்லிசை மிகுவதாம்—என்று சேரனது கொடைச் சிறப்புக் கூறியவாறு.

(37) ஷை, ஷை, ஒன்பதாம் பாட்டு. துறை—வாகை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—ஏவல்வியன்பணை (5)

கருத்து:—பகையரண்கள் அழியும்படி எடுத்துச்செல்லும் காலனனைய கடுஞ்சின முன்ப! நார்முடிச்சேரல்! நீ பிறர்க்கென வாழ்தியாகலான், உன் போர்நிழலில் விரும்பிவாழ்ந்து நின்னைப்புகழும் படைவீரர், இரந்துசென்ற

வாலி தின், நூலி னிழையா நுண்மயி ரிழைய
பொறித்த போலும் புள்ளி யெருத்தின்
புன்புறப் புறவின் கணநிரை அலற
அலந்தலை வேலத் துலவை யஞ்சினைச்
சிலம்பி கோலிய அலங்கற் போர்வையின்
இலங்குமணி மிடைந்த பசும்பொற் படலத்து
அவிரிழை தைஇ மின்னுமிழ் பிலங்கச்
சீர்மிகு முத்தந் தைஇய
நார்முடிச் சேரல்! நின் போர்நிழற் புகன்றே.

---

**(38)** போர்நிழற் புகன்ற சுற்றமொ டூர்முகத்து
இறாஅ லியரோ பெரும! நின் தானை
இன்னிசை இமிழ்முர சியம்பக் கடிப்பிகூஉப்
புண்தோ ளாடவர் போர்முகத் திறுப்பக்
காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல்
வந்திறை கொண்டன்று தானை யந்திற்
களைநர் யாரினிப் பிறரெனப் பேணி
மன்னெயில் மறவ ரொலியவிந் தடங்க
ஒன்னார் தேயப் பூமலைந் துரைஇ
வெண்டோடு நிரைஇய வேந்துடை யருஞ்சமங்
கொன்றுபுறம் பெற்று மன்பதை நிரப்பி
வென்றி யாடிய தொடித்தோள் மீகை

---

எமக்கு இல்லை என்று சொல்லார்—என்று சேரன் கொடைச்சிறப்பும் அவன் வெற்றிச்சிறப்பும் உடன் கூறியவாறு.

(38) ஷை, ஷை, பத்தாம் பாட்டு. துறை—விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—நாடுகாணவிர்சுடர் (29).

**கருத்து:**—நார்முடிச்சேரல்தான் நேரிமலையில் உள்ளான். இளையர் உவகையோடு களம்வாழ்த்த, மகளிர் இழையணிந்து நலஞ்சிறப்ப, யாணர் பசும்பொற்பூவை மிலையப் பழகிய உயர்ந்த யானைகளைக் கொடுப்பான்; ஆன

எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்!
புன்கால் உன்னஞ் சாயத் தெண்கண்
வறிதுகூட் டரியல் இரவலர்த் தடுப்பத்
தான்தர உண்ட நனைநறவு மகிழ்ந்து
நீரிமிழ் சிலம்பின் நேரி யோனே
செல்லா யோதில் சில்வளை விறலி!
மலர்ந்த வேங்கையின் வயங்கிழை யணிந்து
மெல்லியல் மகளி ரெழில்நலஞ் சிறப்பப்
பாணர் பைம்பூ மலைய இளையர்
இன்களி வழாஅ மென்சொ லமர்ந்து
நெஞ்சுமலி உவகையர் வியன்களம் வாழ்த்தத்
தோட்டி நீவாது தொடிசேர்பு நின்று
பாக ரேவலின் ஒண்பொறி பிசிரக்
காடுதலைக் கொண்ட நாடுகா ணவிர்சுடர்
அழல்விடுபு மரீஇய மைந்தின்
தொழில்புகல் யானை நல்குவன் பலவே.

---

பின்பு, சில்வளைவிறலி! நீ அவன்பாற் பரிசில்பெறச் செல்லாயோ—எனச் சேரனது கொடைச்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு:— (13) எழுமுடி—பகையரசரின் எழுகிரீடங்களாற் செய்த சேரன்அணிந்த மாலை. (14-16) "குடாஅது, இரும்பொன் வாகைப் பெருந் துறைச் செருவில், பொலம்பூண் நன்னன் பொருதுகளத் தொழிய, வலம்படு கொற்றந் தந்த வாய்வாட், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்" என அகநானூற்றுள் (199) வருவது ஒப்பிடத்தக்கது.

### பதிகம்

(39) ஆராத் திருவிற் சேர லாதற்கு
வேள்ஆவிக் கோமான்
பதுமன் தேவி யீன்ற மகன்முனை
பனிப்பப் பிறந்து பல்புகழ் வளர்த்து
ஊழி னாகிய உயர்பெருஞ் சிறப்பிற்
பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ
உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச்செருவி னாற்றலை யறுத்தவன்
பொன்படு வாகை முழுமுதல் தடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சரம் ஈர்ப்பச்
செருப்பல செய்து செங்களம் வேட்டுத்
துளங்குகுடி திருத்திய வளம்படு வென்றிக்
**களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக்**
**காப்பியாற்றுக் காப்பியனார்** பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம் ; கமழ்குரற்றுழாய், கழையமல்கழனி, வரம்பில் வெள்ளம், ஒண்பொறிக்கழற்காய், மெய்யாடுபறந்தலை, வாண்மயங்குகடுந்தார், வலம்படுவென்றி, பரிசிலர்வெறுக்கை, ஏவல்வியன்பணை, நாடுகாணவிர்சுடர்; இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: நாற்பது நூறாயிரம்பொன் ஒருங்கு கொடுத்துத் தான் ஆள்வதிற் பாகங்கொடுத்தான் அக் கோ.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

---

குறிப்பு:— (6) பூழிநாடு — கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்றாகக் கூறப்படும். இது, சேரநாட்டின் ஒருபகுதியாம். இது மலபார்ஜில்லா, பொன்னானித்தாலூகாவில் அடங்கியதென்பர் (Malabar Manual, Vol. I, p.p. 647, 666).

## கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்

(40) புணர்புரி நரம்பின் தீந்தொடை பழுனிய
வணரமை நல்யாழ் இளையர் பொறுப்பப்
பண்ணமை முழவும் பதலையும் பிறவும்
கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்
கைவ லிளையர் கடவுட் பழிச்ச
மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு
வரைசேர் பெழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி அணிபெற மிலைச்சிச்
சேஎ ருற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் போரெதிர்ந் தாங்கு
வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்
மழைபெயல் மாறிய கழைதிரங் கத்தம்
ஒன்றிரண் டலபல கழிந்து திண்டேர்
வசையில் நெடுந்தகை! காண்குவந் திசினே
தாவ லுய்யுமோ மற்றே தாவாது
வஞ்சின முடித்த ஒன்றுமொழி மறவர்
முரசுடைப் பெருஞ்சமத் தரசுபடக் கடந்து
வெவ்வ ரோச்சம் பெருகத் தெவ்வர்

---

(40) டை, டை, ஐந்தாம்பத்தின் முதற்பாட்டு. துறை—காட்சிவாழ்த்து. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—சுடர்வீவேங்கை (8). இதுமுதற் பத்துப்பாட்டும் பாடியவர் பரணர்.

**கருத்து:**—நெடுந்தகாய்! களிறுகளின் பிளிற்றோசையுடையதும், மழையற்று வறண்டதுமான மலைகளின் கடுவழிகளைக் கடந்து நின்னைக் காண வேண்டி யான் வந்தேன். பகைவரை அழிப்பதற்காகப் பனிக்கடலில் உழந்த நின் தாள்கள் அவ் வுழந்த வருத்தத்தினின்றும் நீங்குமோ?—எனச் சேரன் தன்வேலை ஏவிக் கடல்பிறக்கோட்டிய வென்றியைச் சிறப்பித்தவாறு.

**குறிப்பு:**—(1—10) கூத்தருள் இளையவர் மலையிடையில் கடவுளை வாழ்த்தும் ஒலியைப் புலியின்முழக்கம் என்று எண்ணிய களிறு, பூத்துநின்ற

மிளகெறி யுலக்கையின் இருந்தலை யிடித்து
வைகார்ப் பெழுந்த மைபடு பரப்பின்
எடுத்தே றேய கடிப்புடை வியன்கண்
வலம்படு சீர்த்தி யொருங்குட னியைந்து
காலுளைக் கடும்பிசி ருடைய வாலுளைக்
கடும்பரிப் புரவி யூர்ந்தநின்
படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே.

(41) இரும்பனம் புடைய லீகை வான்கழல்
மீன்தேர் கொட்பிற் பனிக்கயம் மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசேர் உடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி
அன்னோர் பெரும! நன்னுதல் கணவ!
அண்ணல் யானை அடுபோர்க் குட்டுவ!
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ
இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கைத்
தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்

---

வேங்கைமரத்தைப் புலியெனக் கருதிச் சிதைத்தது என்க. (11—13) வேங்கையைப் பிளந்து அதன்கிளையைத் தலையில் ஏந்திக்கொண்டு பிளிறும் களிறு, தண்டாயுதந்தாங்கிப் போரேற்றுச் செல்லும் வீரர்போன்றது எ—று.

(41) ஷ, ஷ இரண்டாம்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—தசும்புதுளங்கிருக்கை (11).

**கருத்து:**—வீரர்பெருமானே! நன்னுதல்கணவ! அண்ணல்யானை அடுபோர்க்குட்டுவ! வெற்றிவீரர்க்கு இன்சுவைமதுவையும் ஈகையால் மகிழ்ச்சியையும் அளித்தபோது, கோடியர்கிளை வாழும்படி அவர்க்கு நீ கொடுத்த

ஓம்பா ஈகையின் வண்மகிழ் சுரந்து
கோடியர் பெருங்கிளை வாழ ஆடியல்
உளையவிர் கலிமாப் பொழிந்தவை யெண்ணின்
மன்பதை மருள அரசுபடக் கடந்து
முந்துவினை யெதிர்வரப் பெறுதல் காணியர்
ஒளிறுநிலை யுயர்மருப் பேந்திய களிறூர்ந்து
மான மைந்தரொடு மன்ன ரேத்தநின்
தேரொடு சுற்ற முலகுடன் மூய
மாயிருந் தெண்கடல் மலிதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப்பிசி ருடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே.

---

(42) கவரி முச்சிக் கார்விரி கூந்தல்
ஊசல் மேவற் சேயிழை மகளிர்
உரல்போற் பெருங்கால் இலகுவாள் மருப்பிற்
பெருங்கை மதமாப் புகுதரின் அவற்றுள்
விருந்தின் வீழ்பிடி எண்ணுமுறை பெறாஅக்
கடவுள் நிலைய கல்லோங்கு நெடுவரை
வடதிசை யெல்லை இமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை அரசர்
முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த

---

உயர்ந்த குதிரைகளை எண்ணுமிடத்து அவை கடலலைகளினும் பல—என்று அவன் கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் உடன்கூறியவாறு.

(12) ஷை, ஷை, மூன்றும்பாட்டு. துறை—இயன்மொழிவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—ஏறுவேணி (33).

**கருத்து:**—வடவிமயமும் தென்குமரியும் எல்லையாக இவற்றின் இடையிலுள்ள அரசர்களைப் போரில்வென்று அவர்நாட்டின் பழைய அழகுகளை அழித்த குட்டுவ! பெரிய வறட்காலத்திலும், மேகம் முழக்கத்துடன் மழைத் துளிகளைச் சொரிந்தாற்போலத் தன்னையடைந்தவர்கள் நிரம்ப உண்ணும்

போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ!
இரும்பணை திரங்கப் பெரும்பெய லொளிப்பக்
குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ
அருவி யற்ற பெருவறற் காலையும்
அருஞ்செலற் பேராற் றிருங்கரை யுடைத்துக்
கடியேர் பூட்டுநர் கடுக்கை மலைய
வரைவி லதிர்சிலை முழங்கிப் பெயல்சிறந்து
ஆர்கலி வானந் தளிசொரிந் தாஅங்கு
உறுவ ராரா ஓம்பா துண்டு
நகைவ ராரா நன்கலஞ் சிதறி
ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக
துய்வீ வாகை நுண்கொடி உழிஞை
வென்றி மேவல் உருகெழு சிறப்பிற்
கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே என்றும்
இகல்வினை மேவலை யாகலிற் பகைவரும்
தாங்காது புகழ்ந்த தூங்குகொளை முழவின்
தொலையாக் கற்ப! நின் நிலைகண் டிகுமே
நிணஞ்சுடு புகையொடு கனல்சினந் தவிராது
நிரம்பகல் பறியா ஏரூ வேணி
நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர்
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்மை வேந்தே! நின் கலிமகி ழானே.

---

படியும், நட்பினர் வேண்டிய அணிகலன்களைப்பெறவும் வழங்கினை. இவற்றோடு, 'பாடிவரும் விறலியர் பலபிடிகளையும் பெறுக. போர்வெற்றிபெற்ற வீரர்கள் மதக்களிறுகளைப் பெறுக. பூண்பிடித்த நுண்கோலைக் கையிற்கொண்டு களம் வாழ்த்தும் பாணர் குதிரைகளைப் பெறுக' என்றுகூறிப் போர்ச்செயல்களில் மூண்டுநிற்கும் உனது பகைவரும் புகழும் பெருநிலையை, வயிரியர்க்கு வேண்டிய வளவு அளிக்கும் கள்ளின்கொடையுடைய உன் மகிழ்ச்சியாரவாரத்தின்கண்ணே கண்டேன்—என்று சேரனது செல்வமகிழ்ச்சி கூறியவாறு.

(43) நிலம்புடைப் பன்னஆர்ப் பொடுவிசும்பு துடையூ
வான்தோய் வெல்கொடி தேர்மிசை நுடங்கப்
பெரிய வாயினும் அமர்கடந்து பெற்ற
அரிய வென்னு தோம்பாது வீசிக்
கலஞ்செலச் சுரத்த லல்லது கனவினுங்
களைகென அறியாக் கசடில் நெஞ்சத்து
ஆடுநடை யண்ணல்! நிற் பாடுமகள் காணியர்
காணி லியரோநிற் புகழ்ந்த யாக்கை
முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை
நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை
சேணனு யினுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்கு
அரண்கள் தாவுறீஇ அணங்குநிகழ்ந் தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை உய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை
முரசுடைத் தாயத் தரசுபல ஓட்டித்

---

(43) ஷை, ஷை, நான்காம்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண் பாட்டு. வண்ணமுந் தூக்கும் அவை. பெயர்—நோய்தபுநோன்றொடை (9).

கருத்து:- போரில்வல்லவனுன அறுகை என்ற தலைவன் 'சேய்மையில் உள்ளவனுயினும் தனக்கு நட்பினன்' என்று கூறி, பகைவனுன மோகூர் மன்னனுல் அவன் அஞ்சியொளிக்கும்படி நேர்ந்த துயர் நீங்கும்வண்ணம், அம்மன்னனுடன் பொருது அவனது முரசத்தைக் கைப்பற்றியும், வஞ்சினங் கூறி அவனது காவன்மரமான வேம்பின் அடிமுதலைத் தனக்கு முரசுசெய் தற்கு ஏற்றபடி துண்டங்களாகத் தறிப்பித்தும், அத்துண்டங்களை வண்டிகளில் ஏற்றி அம்மோகூர்மன்னன் யானைகளையே எருதுகளாகப் பூட்டி இழுப்பித்தும், போர்க்களத்தில் வெற்றியாற்பெற்ற பொருள்களின் அருமைநோக்காமல் வேண்டியவர்களுக்கு வீசியும் போந்த அண்ணலே! நின்னைப் பாடும் பாண்மகள், நிரம்பிய மெய்வலி தங்கியதும் நோயற்றதும் வீரர்புகழ்ச்சிக் குரியதுமான நின்யாக்கையை என்றும் காண்பாளாக. பகையரசரை வென்று

துளங்குநீர் வியலகம் ஆண்டினிது கழிந்த
மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே.

---

(44) பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
புற்றடங் கரவின் ஒடுங்கிய அம்பின்
ஒசிவுடை வில்லி ஞெசியா நெஞ்சிற்
களிறெறிந்து முரிந்த கதுவாய் எஃகின்
விழுமியோர் துவன்றிய அகன்கண் நாட்பின்
எழுமுடி மார்பின் எய்திய சேரல்!
குண்டுக ணகழிய மதில்பல கடந்து
பண்டும் பண்டுந்தாம் உள்ளழித் துண்ட
நாடுகெழு தாயத்து நனந்தலை அருப்பத்துக்
கதவங் காக்குங் கணையெழு வன்ன
நிலம்பெறு திணிதோ ளுயர ஓச்சிப்
பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடிச்
சோறுவே றென்னா ஊன்றுவை யடிசில்
ஓடாப் பீட ருள்வழி இறுத்து
முள்ளிடு பறியா ஏணித் தெவ்வர்
சிலைவிசை யடக்கிய மூரி வெண்டோல்
அனைய பண்பிற் றானை மன்னர்

---

உலகத்தை இனிதாண்டு இறந்த மன்னரைக் கவித்த தாழிகளையும் வன்னி மரமுள்ள மன்றத்தையும் உடைய இடுகாடு உன் யாக்கையைக் காணுதொழிவதாக—என்று, நெடுங்காலம் வாழுமாறு சேரனை வாழ்த்தியவாறு.

(44) ஷை, ஷை, ஐந்தாம் பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—ஊன்றுவையடிசில் (13).

**கருத்து:**—எழுமுடியாரத்தை மார்பிலணிந்த வேந்தே! பகைவரின் மதிலரண்கள் பலவற்றையும்வென்று கைப்பற்றி, வீரர்நிறைந்த போர்க்களத்தில் பிணங்களின் பரப்பிடையே 'தோளோச்சித் துணங்கைக்கூத்தாடியும், தன் புறங்கொடா வீரர்க்கெல்லாம் தனக்குரிய ஊன்றுவை அடிசிலாகிய பெருஞ்

இளியா ருளரோநின் முன்னு மில்லை
மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு
முழங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே.

---

(45) இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமிர் அவிர்தொடி செறித்த முன்கைத்
திறல்விடு திருமணி இலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர்
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
பணியா மரபின் உழிஞை பாட
இனிதுபுறந் தந்தவர்க் கின்மகிழ் சுரத்தலிற்
சுரம்பல கடவுங் **கரைவாய்ப் பருதி**
ஊர்பாட் டெண்ணில் பைந்தலை துமியப்
பல்செருக் கடந்த கொல்களிற் றியானைக்
கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்டு
உடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய
வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்
செல்குவ மென்னார் பாடுபு பெயர்ந்தே.

---

சோற்றை ஒக்க உண்ணும்படி உதவியும், கடலுள் வேலையேற்றிச் சென்று 'பகையழித்தலாகிய வினையைக் கடலிடையிற் செய்தல் அரிது' என்று கூறப்படுவதை மறுத்தும் போந்த அரசர் நின்னைப்போல இனி யாவர் உளர்? முன்னும் இத்தகையோர் இல்லை—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு

(45) ஷை, ஷை., ஆறும் பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—கரைவாய்ப்பருதி (8).

**கருத்து:**—இழைகுழைமாலை முதலியன அணிந்துவிளங்கும் பாண்சாதி மகளிர் பேரியாழில் பாலைப்பண்ணை அமைத்து, பகைவரது எயிலை வளைக்கும் குட்டுவனது உழிஞைச்செயலைப் பாட, அவரை இனிதுபேணித் தன் இன்முக

(46) அட்டா னனே குட்டுவன் அடுதொறும்
பெற்றா னரே பரசிலர் களிறே
வரைமிசை இழிதரும் அருவியின் மாடத்து
வளிமுனை அவிர்வருங் கொடிநுடங்கு தெருவிற்
சொரிசுரை கவரும் நெய்வழி புராலிற்
பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல
நன்னுதல் விறலியர் ஆடும்
தொன்னகர் வரைப்பினவன் உரையா னவே.

---

(47) பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி
ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டி
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்

---

மும் அளித்தலால், கடல்கலங்கும்படி வேலையேற்றிப் பகைவரது அரண் வலியை அழித்து வெற்றிப்புகழ்பெற்ற அக்குட்டுவனைக் கண்டோர் அவனைப் பாடியபின் மீண்டுசெல்வோம் என்று கருதார்—என்று சேரனது வென்றிச் சிறப்புக் கூறியவாறு.

(46) ஷை, ஷை, ஏழாம்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—நன்னுதல்விறலியர் (7).

கருத்து:—குட்டுவன் பகைவரை அழித்தலினின்றும் ஒழியான். அவ்வாறு அழிக்குந்தோறும், அப் பகைப்புலத்தினின்று கவர்ந்த யானைகளைப் பெறுவதைப் பரிசிலர் ஒழியார். மலையருவிகள்போலக் கொடிகள் அசையும் மாட வீதிகளிலே பாண்டில்விளக்கின் பெருஞ்சுடர் ஒளிவீச இரவில் நன்னுதல் விறலியர் ஆடும் அவனது நகரவெல்லையுள் அவனைப்பற்றிய புகழ்ச்சியுரைகளும் ஒழியாவாயின—என்று சேரனது கொடையையும், அக்கொடைக்கு வருவாயாகிய பகைவரையழித்தலையும் உடன்கூறியவாறு.

(47) ஷை, ஷை, எட்டாம் பாட்டு. துறை—இயன்மொழிவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—பேரெழில்வாழ்க்கை (15)

கருத்து:—பாணர்க்குப் பொற்றாமரைப்பூவைச் சூட்டியும் விறலியர்க்கு முத்தாரங்களைப் பூட்டியும் அழியாப்புகழை நிறுவி, கடனீரிலே புகுந்து அதன்

கடலோ டுழந்த பனித்துறைப் பரதவ!
ஆண்டுநீர்ப் பெற்ற தாரம் ஈண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினின் ஈயுங்
கல்லா வாய்மையன் இவனெனத் தத்தங்
கைவ லிளையர் நேர்கை நிரைப்ப
வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை
முனைசுடு கனையெரி எரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்ப!நின் பெயர்வா ழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டும்
மலிபுனல் நிகழ்தருந் தீநீர் விழவிற்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமொ டுண்டினிது நுகருந்
தீம்புன லாய மாடுங்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே

---

(48) யாமுஞ் சேறுகம் நீயிரும் வம்மின்
துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்
கொளைவல் வாழ்க்கைநுங் கிளையினி துணீஇயர்

---

கண்ணே உழந்த கடற்றுறைக்குரிய பரதவனே! அக்கடலில் அரிதிற்பெற்ற பண்டங்களைத் தரம்போதாதார் பாடுகின்ற மனங்கொள்ளாப் பாடற்கும் எளிதிலேகொடுக்கும் பேதை இவன் என்று பிறர் இழித்துக்கூறுதற்கேற்ப, தத்தம் தொழிலில்வல்ல இளையர்க்கு ஏற்ற கைநிறையக் கொடுப்பவனே! மகளிரிடம் வணங்கிய மென்மையையும் பகைவரிடம் வணங்காத ஆண்மையையும் உடையோய்! நீர்விழாவில் வேனிற்காலத்திலே சுற்றத்தோடு பொழிலில் வதிந்து உண்டுமகிழும் செல்வவாழ்க்கையுடைய மக்கட்கூட்டம், தீம்புனலில் ஆடும் காஞ்சியம்பெருந்துறையில் உள்ள மணலினும் நின்பெயர் பலகாலம் வாழ்வதாக—என்று சேரனை வாழ்த்தியவாறு.

குறிப்பு:—'பரதவன்' என்றும், 'கல்லாவாய்மையன்' என்றும் (4, 7) கூறியவை பழிப்பதுபோலப் புகழ்புலப்படுத்தும் அணிவகை. காஞ்சி—கொங்கு நாட்டதோர் நதி; நொய்யல் என்பர் இக்காலத்தார்.

(48) ஷை, ஷை, ஒன்பதாம் பாட்டு. துறை—விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—செங்கைமறவர் (10).

கருத்து:—வேந்தரும் வேளிரும் தன்னுடன் சேர்ந்து வஞ்சினம் கூற, அத்துணைவலியால் செருக்கி நால்வகைப்படையுடன் திரண்டுவந்த மோகூர் மன்

களிறுபரந் தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
எஃகுதுரந் தெழுதருங் கைகவர் கடுந்தார்
வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரு மோகூர்
வலம்படு குழூஉநிலை அதிர மண்டி
நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்
நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி
மழைநாட் புனலின் அவற்பரந் தொழுகப்
படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து
படுகண் முரசம் நடுவட் சிலைப்ப
வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்
கருஞ்சினை விறல்வேம் பறுத்த
பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே.

---

(49) மாமலை முழக்கின் மான்கணம் பனிப்பக்
கான்மயங்கு கதழுறை ஆலியொடு சிதறிக்
கரும்பமல் கழனிய நாடுவளம் பொழிய
வளங்கெழு சிறப்பின் உலகம் புரைஇச்
செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறைக்

---

னனது சேனைகள் நடுங்கும்படி தாக்கி, படுபிணங்கள் குவியும்படி போரிலே பாழ்பல செய்து, அவனது காவல்மரமான வேம்பினைத் தறித்த குட்டுவனைக் கண்டுவருவதற்காக யாமும் செல்வேம். விறலியரே! நும் இளையினர் இனிது உண்பார்களாக; நீயிரும் உடன் வருதிர்—என்று சேரனது வரையா ஈகை கூறியவாறு.

(49) ஷை, ஷை, பத்தாம் பாட்டு. துறை—வஞ்சித்துறைப் பாடாண் பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர் வண்ணமும். தூக்கு—செந் தூக்கு. பெயர்—வெருவருபுனற்றார் (11).

கருத்து:—நாடு வளம்பொழிய உலகத்தைப் புரந்து நேர்கிழக்காகச் செல்லும் காவிரியோடு ஆன்பொருநையும் குடவனாறும் ஆகிய மூன்றுநதிகளும்

காவிரி யன்றியும் பூவிரி புனலொரு
மூன்றுடன் கூடிய கூட லனையை
கொல்களிற்று, உரவுத்திரை பிறழ அவ்வில் பிசிரப்
புரைதோல் வரைப்பின் எஃகுமீன் அவிர்வர
விரவுப்பணை முழங்கொலி வெரீஇய வேந்தர்க்கு
அரண மாகிய வெருவரு புனற்றார்
கல்மிசை யவ்வும் கடலவும் பிறவும்
அருப்ப மமைஇய அமர்கடந் துருத்த
ஆள்மலி மருங்கின் நாடகப் படுத்து
நல்லிசை நனந்தலை இரிய ஒன்னார்
உருப்பற நிரப்பினை யாதலிற் சாந்துபுலர்பு
வண்ணம் நீவி வகைவனப் புற்ற
வரிஞிமி றிமிரு மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தல் மெல்லணை வதிந்து
கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கத்துப்
பொழுதுகொள் மரபின் மென்பிணி அவிழ
எவன்பல கழியுமோ பெரும! பன்னாள்
பகைவெம் மையிற் பாசறை மரீஇப்
பாடரி தியைந்த சிறுதுயி லியலாது
கோடுமுழங் கிமிழிசை யெடுப்பும்
பீடுகெழு செல்வ மரீஇய கண்ணே.

சேரும் முக்கூடலை நீ ஒத்துள்ளாய். நின் தூசிப்படையாகிய அஞ்சத்தக்க புனல்வெள்ளத்தைக்கொண்டு பகைவரது சினத்தி அவியும்படி நிரப்பினை ஆதலால், யான் நின்னை ஒன்று கேட்கின்றேன். பகைவலியின் கடுமையால் பாசறையில் தங்கி அப்படைச்செல்வத்திலே பழகிய நின்கண்கள் இடையே அழகிய மகளிர் முயக்கத்தும் போதுபோக்கலாகி, அக்களைப்பில் அரிதில் உண்டான சிறுதுயிலையும் போர்க்குரிய வாச்சியஒலிகள் கலைத்து எழுப்பிவிடு கின்றன. பெருமானே! இவ்வாறாக உனக்கு நாள்கள்பலவும் கழிவதேனோ? கூறுவாயாக—என்று சேரனது காமவேட்கையிற் போர்வேட்கையை மிகுத்துக் கூறியவாறு.

## பதிகம்

(50) வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி யீன்றமகன்
கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்
கானவில் கானங் கணையிற் போகி
ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை
இன்ப லருவிக் கங்கை மண்ணி
இனந்தெரி பல்லான் கன்றொடு கொண்டு
மாறா வல்வி லிடும்பிற் புறத்திறுத்து
உறுபுலி யன்ன வயவர் வீழச்
சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி
அக்கரை நண்ணிக் கொடுகூ ரெறிந்து
பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்
முழாரை முழுமுதல் துமியப் பண்ணி
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தல் முரற்சியாற்
குஞ்சர வொழுகை பூட்டி வெந்திறல்
ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து
நிலைச்செருவி னாற்றலை யறுத்துக்
கெடலருந் தானையொடு
கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைக்
கரண மமைந்த காசறு செய்யுட்
பரணர் பாடினார் பத்துப் பாட்டு.

குறிப்பு:— (4) கடவுட்பத்தினி—கண்ணகி. (9) இடும்பில்—இடும்பாதவனம். புறம்—அவ்விடம். (15) வால் இழை கழித்த மகளிர் – அப் பழையன் மகளிர். (16) கூந்தல்முரற்சி—அவர்கூந்தலை அரிந்து திரித்த கயிறு. (17) குஞ்சரவொழுகை பூட்டியது, தான் தறிப்பித்த அப் பழையன்வேம்பினை ஏற்றிக்கொண்டு போதற்கு. (18) குடிக்கு உரியோர்—அரசிற்கு உரியார்.

அவைதாம்: சுடர்வீவேங்கை, தசும்புதுளங்கிருக்கை, ஏருவேணி, நோய்தபுநோன்றொடை, ஊன்றுவையடிசில், கரைவாய்ப்பருதி, நன்னுதல்விறலியர், பேரெழில்வாழ்க்கை, செங்கை மறவர், வெருவருபுனற்றார்—இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்:-உம்பற்காட்டுவாரியையும்* தன் மகன் குட்டுவன்சேரலையும் கொடுத்தான் அக்கோ.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான்.

---

(51) தூவில் நன்பொன் றைஇய பாவை
விண்டவழ் இளவெயிற் கொண்டுநின் றன்ன
மிகுகவின் எய்திய தொகுகுரல் ஐம்பாற்
கிளையரில் நாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்
நயவன் றைவருஞ் செவ்வழி நல்யாழ்
இசையோர்த் தன்ன இன்றீங் கிளவி
அணங்குசால் அரிவையை நசைஇப் பெருங்களிற்று
இனம்படி நீரிற் கலங்கிய பொழுதிற்
பெறலருங் குரையள் என்னாய் வைகலும்
இன்னா அருஞ்சுரம் நீந்தி நீயே
என்னை இன்னற் படுத்தனை மின்னுவசிபு
உரவுக்கார் கடுப்ப மறலி மைந்துற்று

---

*உம்பற்காட்டு வாரி—உம்பற்காட்டு வருவாய்.

(51) அகநானூறு, 212. அல்லகுறிப்பட்டு நீங்குந் தலைமகன் தன் நெஞ்சினை நெருங்கிச்சொல்லியது.

கருத்து:—நெஞ்சமே! அழகிய அணங்கொத்த அரிவையை விரும்பி நீ கலங்கினின்றபோது, பெறுதற்கரியள் அவள் என்று கருதாது கொடிய இச்சுர நெறியை நித்தமும் கடக்கும்படிசெய்து என்னைப் பெருந்துன்பத்துக்கு உள்

விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
படைநிலா விலங்குங் கடல்மருள் தானை
மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஓட்டிய
நீர்மாண் எஃகம் நிறத்துச்சென் றழுந்தக்
கூர்மதன் அழியரோ நெஞ்சே! ஆனாது
எளிய ளல்லோட் கருதி
விளியா எவ்வந் தலைத்தந் தோயே.

பரணர்

---

(52) இருப்புமுகஞ் செறித்த ஏந்தெழில் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் பமைந்த
குருதிப் பலிய முரசுமுழக் காக
அரசராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக

---

ளாக்கினை. எளியள் அல்லாதவளை இவ்வாறு எளியளாக நினைத்து நீங்காத் துன்பம் விளைத்தலால் கடலைப் பிறக்கிடும்படி ஓட்டிய குட்டுவனது வேல் உன் நெஞ்சினும் பாய்ந்து அழுந்த, அதனால் உன் செருக்கு அழிவதாக—என்று தன் நெஞ்சினை நோக்கிக் கடிந்துகூறியவாறு.

குறிப்பு:—(14) கட்டூர்-பாசறை. (16) குட்டுவன்-செங்குட்டுவன்.

(52) புறநானூறு. 369. திணை—வாகை. துறை—மறக்களவழி; ஏர்க்களவுருவகமுமாம். [மறக்களவழியாவது அரசனை உழும் வேளாளனாகச் சிறப்பித்துச்சொல்லுதல். ஏர்க்கள உருவகமாவது—போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகஞ்செய்தல்.]

குறிப்பு:—(1—15) யானை மேகமாகவும், வாள்கள் மின்னாகவும், முரசொலி மேகமுழக்காகவும், புரவிகள் காற்றாகவும், அம்புகள் மழைத்துளியாக

விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
ஈரச் செறுவயிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சாற்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள!
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்திற் போர்வை
அரிக்குரற் றடாரி உருப்ப ஒற்றிப்
பாடி வந்திசிற் பெரும! பாடான்று
எழிலி தோயும் இமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
ஓடை நுதல ஒல்குத லறியாத்
துடியிடைக் குழவிய பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா ஈகைத் தகைவெய் யோயே.

பரணர்

---

வும், போர்க்களம் ஈரமுடைய வயலாகவும், தேர்ப்படை ஏராகவும், சாய்க்கப்பட்ட தலைகள் பைங்கதிராகவும், பிணக்குவியல் நெற்பொலியாகவும்—போர்க்களம் ஏர்க்களமாக உருவகிக்கப்பட்டமை காண்க.

**கருத்து:**—போர்க்களம்பொலிய வீற்றிருந்த பெருவள்ளலான வேந்தே! தடாரிப்பறையை இசைத்துக்கொண்டு உன்னைப் பாடிவந்தேம். கன்றோடு கூடிய பிடிகளுடன் வேழத்தையும் எங்கட்குப் பரிசில் அளிப்பாயாக—என்று ஏர்க்களம்பாடும் பொருநர்கூற்றாகச் செங்குட்டுவனைப் பாடியவாறு.

(53) மாநீர் வேலிக் கடம்பெறிந் திமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல் வாய்வாட் கோதை
விளங்கில வந்தி வெள்ளி மாடத்
திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளித்

---

(53) சிலப்பதிகாரம், வஞ்சிக்காண்டம், காட்சிக்காதை. சேரன் செங்குட்டுவனுடைய இளவலான இளங்கோவடிகள் அருளிச்செய்தது. இக்காதை முதல் வரந்தருகாதைமுடிய உள்ளவை, இப்பெரியார் இயற்றியனவாகும்.

குறிப்பு:—[முன்வரலாறு:—] கண்ணகி, தன் கணவனை கோவலனை ஊழ்வினையும் அறியாமையும் காரணமாகப் பாண்டியன் கொல்வித்தபின், அவள் அப்பாண்டியன்முன் சென்று வழக்காடி அவன்செய்த அநியாயத்தை அவனுக்குத் தெளிவித்தாள். தன் தவற்றை உணர்ந்ததும் பாண்டியனும் அவன்தேவியும் உயிர்நீத்தனர். மதுரைமாநகரும் கண்ணகியின் சீற்றத்தீயால் எரிக்கப்பட்டது. இவை நிகழ்ந்தபின், கண்ணகி கணவனை இழந்த பெருந்துயரோடு வையைக் கரைவழியே மேற்றிசைநோக்கிச் சென்று, நெடுவேள்குன்றத்தின்மேல் ஏறி அங்கிருந்த ஒரு வேங்கைமரத்தின்கீழே நின்றாள். அப்போது மலைவேடுவர் சிலர் அவளை அணுகி 'நீவிர் யாவிர்' என்று உசாவ, 'மணமதுரையோடு அரசு கேடுற வல்வினைவந்து உருத்தகாலைக் கணவனையங்கு இழந்துபோந்த கடுவினையேன் யான்' என்றாள். இதுகேட்ட மலைவாணர் அச்சத்தோடு கண்ணகியை வணங்கிநின்றபோது, தேவர்குழாம் ஆங்குவந்து, அங்கிருந்தவர் கண்முன்பே அவள்கணவனை அவளுக்குக் காட்டி அவளையும் உடனழைத்துக்கொண்டு விண்ணுலகஞ் செல்வாராயினர். இந்த அற்புதநிகழ்ச்சியை நேரிற்கண்டு வியந்த வேடுவர் 'இத்தேவி நம் பெருங்குலதெய்வம் ஆவள். இவள்பொருட்டு குரவைக் கூத்து ஆடிக்கொண்டாடுவோம்' என்று தம்மவரையெல்லாம் ஒருங்கழைத்துக் கூத்தும் பாட்டும் நிகழ்த்தி, 'வைகலும் வாழியர், வில்லெழுதிய இமயத்தொடு, கொல்லி யாண்ட குடவர் கோவே' என்று தம் நாட்டரசனை சேரர்பெருமானை வாழ்த்தினர். இங்கு இவ்வாறாக.

[கண்ணகியின் வரலாறறிந்த செங்குட்டுவன் அப்பத்தினியின் படிவஞ் சமைத்தற்குரிய சிலையை இமயத்தினின்றும் எடுத்துவர எண்ணியது.]

**கருத்து:-** இமயவரம்பன்—நெடுஞ்சேரலாதன் தோன்றலாகிய செங்குட்டுவன் வஞ்சியிலுள்ள இலவந்திகை வெள்ளிமாடம் என்ற மாளிகையில் தன்தேவி இளங்கோவேண்மாளுடன் வசித்துவந்த காலையில்; மலைவளத்தைக்

துஞ்சா முழவின் அருவி ஒலிக்கும்
மஞ்சுசூழ் சோலை மலைகாண் குவமெனப்
பைந்தொடி யாயமொடு பரந்தொருங் கீண்டி
வஞ்சி முற்றம் நீங்கிச் செல்வோன்
வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு
விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன்
பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பும்
இலங்குநீர்த் துருத்தியும் இளமரக் காவும்
அரங்கும் பள்ளியும் ஒருங்குடன் பரப்பி
ஒருநூற்று நாற்பதி யோசனை விரிந்த
பெருமால் களிற்றுப் பெயர்வோன் போன்று
கோங்கம் வேங்கை தூங்கிணர்க் கொன்றை
நாகந் திலகம் நறுங்கா ழாரம்
முதிர்பூம் பரப்பி ஞெழுகுபுன லொளித்து
மதுகர ஞிமிறொடு வண்டினம் பாட
நெடியோன் மார்பில் ஆரம் போன்று
பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை
இடுமண லெக்க ரியைந்தொருங் கிருப்பக்
குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியும்
தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியும்
நறவுக்கண் ணுடைத்த குறவ ரோதையும்

கண்டுகளிப்போம்' என்று கருதியவனாய்—அரமகளிருடன் விளையாடலை விரும்பிய தேவேந்திரன் பூங்காமுதலியவற்றை யானைகள்மேற் புதியவாக நிருமித்து நூற்றுநாற்பதியோசனை தூரம் பரப்பி ஐராவதத்தில் ஆரோகித்துச் செல்பவன் போல—தன் பெரும்பரிவாரங்கள்சூழச் சென்றான். சென்று, திருமாலின் மார்பிடையே விளங்கும் முத்தாரம்போலப் பல்வகைமரங்களால் அழகுமிக்க மலையை ஊடறுத்துக்கொண்டு இழியும் பேரியாறு என்னும் ஆற்றங்கரையின் மணல்மிக்க எக்கரிலே தங்குவானாயினன். அக்காலத்தே, குன்றக்குரவை நிகழ்த்தும் மலைமகளிர் பாடல்களும், அம்மலையில் முருகபூசைசெய்யும் வேலனது பாட்டும், தினைப்புனங்களினின்று எழுகின்ற ஒலியும், தேனெடுக்குங் குறவர்

பறையிசை யருவிப் பயங்கெழு மோதையும்
புலியொடு பொரூஉம் புகர்முக வோதையும்
கலிகெழு மீமிசைச் சேணோ ணோதையும்
பயம்பில்வீழ் யானைப் பாக ரோதையும்
இயங்குபடை யரவமோ டியாங்கணு மொலிப்ப
அளந்துகடை யறியா அருங்கலஞ் சுமந்து
வளந்தலை மயங்கிய வஞ்சி முற்றத்து
இறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறைசுமந்து நிற்கும் தெவ்வர் போல
யானைவெண் கோடும் அகிலின் குப்பையும்
மான்மயிர்க் கவரியும் மதுவின் குடங்களும்
சந்தனக் குறையும் சிந்துரக் கட்டியும்
அஞ்சனத் திரளும் அணியரி தாரமும்
ஏல வல்லியும் இருங்கறி வல்லியும்
கூவை நீறும் கொழுங்கொடிக் கவலையும்
தெங்கின் பழனும் தேமாங் கனியும்
பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களும்
காயமும் கரும்பும் பூமலி கொடியும்
கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையின் இருங்கனித் தாறும்
ஆளியின் அணங்கும் அரியின் குருளையும்
வாள்வரிப் பறழும் மதகரிக் களபமும்
குரங்கின் குட்டியும் குடாவடி உளியமும்
வரையாடு வருடையும் மடமான் மறியும்
காசறைக் கருவும் மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையும் நாவியின் பிள்ளையும்
கானக் கோழியும் தேமொழிக் கிள்ளையும்
மலைமிசை மாக்கள் தலைமிசைக் கொண்டாங்கு

---

நிகழ்த்தும் ஓசையும், பறையோசைபோன்ற அருவியின் ஒலியும், புலியோடு பொருகின்ற யானையின் முழக்கமும், தினைப்புனங் காத்தற்காக மரங்களின் மேலிடத்தமைந்த பரண்மிசை இருப்போருடைய கூப்பீடுகளும், யானைபிடிக்கும் இடங்களிலே குழியில்வீழ்ந்த வேழங்களைப் பாகர் பழக்கும் சத்தமும் ஆங்குச் சென்ற சேனைகளது ஆரவாரத்தோடு கலந்தொலித்தன. அந்நிலையில், மலைவாணராகிய வேடுவர்பலர் ஒருங்குகூடி, கிடைத்தற்கரிய மலைப்பண்டங்களை

ஏழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றம்
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை இழந்து தனித்துய ரெய்தி
வானவர் போற்ற மன்னொடுங் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனள்
எந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
நின்னாட் டியாங்கள் நினைப்பினும் அறியேம்
பன்னூ றாயிரத் தாண்டுவா ழியரென
மண்களி நெடுவேல் மன்னவற் கண்டு
கண்களி மயக்கத்துக் காதலோ டிருந்த
தண்டமி ழாசான் சாத்தனிஃ துரைக்கும்
ஒண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாம்
திண்டிறல் வேந்தே! செப்பக் கேளாய்
தீவினைச் சிலம்பு காரண மாக
ஆய்தொடி யரிவை கணவற் குற்றதும்

---

யெல்லாம் சேகரித்துக்கொண்டு அவற்றைத் தம் தலைமேல் தாங்கியவராய்ச் செங்குட்டுவன் திருமுன்பு வந்துநின்று, 'ஏழ்பிறப்படியேம், வாழ்க நின் கொற்றம்' என்று அவனடிபணிந்து, "வேந்தர்வேந்தே! யாம்வாழும் மலையின் கண்ணே காட்டுவேங்கையின் கீழே மங்கையொருத்தி ஒருமுலை யிழந்தவளாய்ப் பெருந்துயரோடும் வந்துநிற்க, தேவர்கள்பலரும் அவ்விடம்வந்து அம்மங்கைக்கு அவள் காதற்கொழுநனைக் காட்டி, அவளையும் உடனழைத்துக்கொண்டு எங்கள் கண்முன்பே விண்ணுலகஞ்சென்றனள். அவள் எந்நாட்டாள் கொல்லோ, யார் மகளோ, அறியேம். இது பெரியதோர் அதிசயந் தாராநின்றது; தேவரீரது நாட்டில் நிகழ்ந்த இதனை அறிந்தருளல் வேண்டும்" என்று, தாங்கள் நேரிற் கண்ட செய்திகளை அரசனுக்குக் கூறி அவனை வாழ்த்திநின்றனர்.

அப்போது, அரசனது பெருஞ்சிறப்பினையும், மலைவளத்தின் மாட்சியையுங்கண்டு வியப்பும் உவப்பும் அடைந்து, உடனிருந்த தண்டமிழாசானாகிய மதுரைச்சாத்தனார், (கோவலன் கொலையுண்டது முதலாகிய செய்திகள் தம் ஊரில் நிகழ்ந்தவற்றை நேரில் அறிந்தவராதலால்) செங்குட்டுவனை நோக்கி, "வேந்தே! யானறிவேன் அது நிகழ்ந்தவாற்றை" என்றுதொடங்கி, தன்தேவியின் சிலம்பைத்திருடிய கள்வனென்று கண்ணகிகணவனைப் பாண்டியன் கொலைபுரிவித்ததும், அச்செய்தி அறிந்த கண்ணகி பெருஞ்சினங்கொண்டு

வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்கும்
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்
வஞ்சினஞ் சாற்றிய மாபெரும் பத்தினி
அஞ்சி லோதி யறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டதும்
அரிமான் ஏந்திய அமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
தயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தாள் நெடுமொழி தன்செவி கேளாள்
கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவன் உயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்
கொற்ற வேந்தன் கொடுங்கோற் றன்மை
இற்றெனக் காட்டி இறைக்குரைப் பனள்போல்
தன்னாட் டாங்கண் டனிமையிற் செல்லாள்
நின்னாட் டகவையின் அடைந்தனள் நங்கையென்று
ஒழிவின் றுரைத்தீண் டூழி யூழி
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றமெனத்

---

பாண்டியன்முன் சென்று வழக்காடி வென்றதும், அவன்தேவி முன்பு மற்றொரு சிலம்பை வீசியெறிந்துவிட்டுக் கண்ணகி வஞ்சினங்கூறித் தன் ஒருமுலையைத் திருகிவீசி, அதினின்றெழுந்த தீயால் மதுரைமூதூரைச் சுட்டெரித்ததும், சிங்காதனத்திருந்து கண்ணகியின் வழக்கைக்கேட்ட நெடுஞ்செழியன் தான் செய்த கொடுங்கோன்மைக்கு ஆற்றாது மனமுடைந்து தன் ஆசனத்தே வீழ்ந்திறந்ததும், இங்ஙனம் பாண்டியன் இறக்கவும் அவன்கோப்பெருந்தேவி அக்கடுந்துயரம் பொறாளாய்க் கலக்கங்கொள்ளாதே 'மன்னவன் செல்வுழிச் செல்க யான்' என உயிர்விட்டதும் விளங்கக்கூறியதோடு, 'பாண்டியனது கொடுங்கோன்மை இத்தகையதென்பதனைத் தலைமைவேந்தனாகிய உன்னிடத்துக் கூறவந்தவள்போலத் தனக்குரிய சோணாடுசெல்லாது நின்னாடு அடைவாளாயினள் அந்நங்கை' என்று, நடந்தவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் உரைத்து அரசனை வாழ்த்திமுடித்தார்.

தென்னர் கோமான் தீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தின னுரைப்போன்
எம்மோ ரன்ன வேந்தர்க் கிற்றெனச்
செம்மையி னிகந்தசொற் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்ந்தமை யுறுக வீங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது
மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழைஉயிர் எய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்லெனத்
துன்னிய துன்பம் துணிந்துவந் துரைத்த
நன்னாற் புலவற்கு நன்கன முரைத்தாங்
குயிருடன் சென்ற ஒருமக டன்னினும்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினும்
நன்னுதல்! வியக்கும் நலத்தோர் யாரென
மன்னவ னுரைப்ப மாபெருந் தேவி
காதலன் துன்பம் காணாது கழிந்த

இங்ஙனம் பாண்டியனுக்கு நேர்ந்த தீவினைத்திறங்களையெல்லாங் கேட்ட செங்குட்டுவன், வருத்தமிக்கவனாய்ச் சாத்தனாரை நோக்கி — "புலவீர்! தான் செங்கோலினின்று வழுவிய செய்தி எம்மையொத்த அரசர்செவிகளிற் சென்றெட்டுவதற்குமுன்பே பாண்டியன் உயிர்நீங்கியசெயல், அவனது தீவினையால் வளைக்கப்பட்ட கோலை உடனே நிமிரச்செய்து செங்கோலாக்கிவிட்டது. அரசராயுள்ளார்க்கு, நாட்டில் மழை காலத்திற் பெய்யாதாயின் அச்சம்; உயிர்கள் தவறு செய்யுமாயின் அச்சம்; கொடுங்கோற்கஞ்சி மன்னுயிர்களைக் காத்தற்குரிய உயர்குடியிற்பிறத்தலில் துன்பமல்லது நன்மையில்லை" என்று கூறிவிட்டுத் தன் தேவியை நோக்கி "நன்னுதால்! கணவனுடைய பாண்டியனுடன் தன்னுயிரை நீத்த அவன் கோப்பெருந்தேவியும், சினத்துடன் நம் நாடுநோக்கிவந்த கண்ணகியும் ஆகிய இவ்விருபெரும் பத்தினிகளுள்ளே யாவர் வியக்கத்தக்கவர்" என்று உசாவ, அதற்கு வேண்மாள், 'தன் காதற்

மாதரோ பெருந்திரு வுறுக வானகத்து
அத்திற நிற்கநம் அகல்நா டடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென
மாலை வெண்குடை மன்னவன் விரும்பி
நூலறி புலவரை நோக்க ஆங்கவர்
ஒற்கா மரபிற் பொதியி லன்றியும்
விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்துக்
கற்கால் கொள்ளினும் கடவு ளாகும்
கங்கைப்பே ரியாற்றினும் காவிரிப் புனலினும்
தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்தெனப்
பொதியிற் குன்றத்துக் கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தல்
மறத்தகை நெடுவாள் எங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வரூஉஞ் செய்கையோ அன்று
புன்மயிர்ச் சடைமுடிப் புலரா வுடுக்கை
முந்நூல் மார்பின் முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளரொடு பெருமலை யரசன்
மடவதின் மாண்ட மாபெரும் பத்தினிக்
கடவுள் எழுதவோர் கற்றா ரானெனின்
வழிநின்று பயவா மாண்பில் வாழ்க்கை
கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியும்

கணவனது துன்பத்தைக்காணுமல் உயிர்நீத்த பாண்டியன் பெருந்தேவி விண்ணுலகத்தே பெருந்திருவுறக் கடவள். அது நிற்க; நம் நாட்டை நோக்கிவந்த பத்தினியை நாம் வழிபடுதல் இன்றியமையாதது' என்று கூறினள். அது கேட்ட அரசன் அவள்கூறியதை விரும்பியேற்றுத் தன் அமைச்சரை நோக்கவும், அவர்கள், 'நம் நாடு நோக்கிவந்த அப்பத்தினிக்கடவுட்குப் படிவஞ் சமைத்தற்குரிய சிலையைப் பொதியமலையினின்றேனும் இமயத்தினின்றேனும் எடுத்துவருதலே தக்கதாம். ஆயின், பொதியத்தினின்று கொணர்வதைக் காவிரியினும், இமயத்தினின்று கொணர்வதைக் கங்கையினும் நீராட்டித் தூய்மை

முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை
மதிமுடிக் களித்த மகட்பாற் காஞ்சியும்
தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை
நின்றெதி ரூன்றிய நீள்பெருங் காஞ்சியும்
நிலவுக்கதி ரளைந்த நீள்பெருஞ் சென்னி
அலர்மந் தாரமோ டாங்கயல் மலர்ந்த
வேங்கையொடு தொடுத்த விளங்குவிறல் மாலை
மேம்பட மலைதலுங் காண்குவ லீங்கெனக்
குடைநிலை வஞ்சியுங் கொற்ற வஞ்சியும்
நெடுமா ராயம் நிலைஇய வஞ்சியும்
வென்றோர் விளங்கிய வியன்பெரு வஞ்சியும்
பின்றாச் சிறப்பிற் பெருஞ்சோற்று வஞ்சியும்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்
வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன்
புட்கைச் சேனை பொலியச் சூட்டிப்
பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்தென்
வாய்வாள் மலைந்த வஞ்சிசூ டுதுமெனப்
பல்யாண்டு வாழ்கநின் கொற்ற மீங்கென

செய்வித்தல் மிகப் பொருத்தமுடையதாகும்' என்று கூறினர். கூறக்கேட்ட செங்குட்டுவன் 'பொதியமலையிற் கல்லெடுத்துக் காவிரியில் நீராட்டல் பெரு வீரராகிய சேரரின் குடிப்பிறந்த எங்கட்குச் சிறப்பைத்தருஞ் செய்கையன்று; ஆதலால் இமயத்திலிருந்து கல்லெடுப்பித்துக் கங்கையில் நீராட்டி வருதலே நம் பெருமைக்கேற்றதாம். இமவான் நம் விருப்பத்துக் கிணங்கானாயின் இங்குநின்றும் வஞ்சிமாலை சூடிய சேனைகளுடன் சென்று புறத்துறைக்கமைந்த நம் வீரச்செயல்கள் பலவற்றையும் ஆங்கு அவற்குக் காண்பிப்பேன்' என்று வீராவேசத்துடன் கூறினான்.

வில்லவன் கோதை வேந்தற் குரைக்கும்
நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக்
கொங்கர்செங் களத்துக் கொடுவரிக் கயற்கொடி
பகைப்புறத்துத் தந்தன ராயினும் ஆங்கவை
திசைமுக வேழத்தின் செவியகம் புக்கன
கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்
வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்
கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது
கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்
எங்கோ மகளை யாட்டிய அந்நாள்
ஆரிய மன்னர் ஈரைஞ் ஞாற்றுவர்க்
கொருநீ யாகிய செருவெங் கோலம்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்
இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
இதுநீ கருதினை யாயின் ஏற்பவர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை

---

இங்ஙனம் செங்குட்டுவன் கூறிய வீரமொழிகளைக் கேட்ட **வில்லவன் கோதை** என்ற சேனாபதி அரசனை வாழ்த்திக்கொண்டு கூறுவான்:—"வேந்தர் வேந்தே! நும்மையொத்த வேந்தரான சோழபாண்டியர் நும்மோடு பகைத்துக் கொங்கர்செங்களத்தே தம் புலிக்கொடியையும் மீனக்கொடியையும் போரிலிழந்து ஓடினராயினும், அச்செய்தி திக்கயங்களின் செவிவரை சென்று பரவலாயிற்று. கொங்கணர் கலிங்கர் கருநாடர் பங்களர் கங்கர் கட்டியர் வடவாரியர் இவருடன் தமது தமிழ்ப்படை கலந்துபொருத செருக்களத்தில் தாம் யானையைவிட்டுப் பகைவரையழித்த அரியசெய்கை இன்னும் எங்கள் கண்களைவிட்டு நீங்கவில்லை. அன்றியும் எம் கோமகளாய் விளங்கிய தம்தாயைக் கங்கையில் நீர்த்தமாட்டிவந்த அக்காலத்தே, எதிர்த்துவந்த ஆரியவரசர் ஆயிரவர்முன் தாம் ஒருவராகிநின்று பொருதபோர்க்கோலத்தைக் கடுங்கட்கூற்றமும் விழித்தவண்ணமே வியந்து நோக்கியதன்றோ? நீர்சூழ்ந்த இந் நிலவுலகத்தைவென்று தமிழ்நாடாக்க வேண்டித் தாம் வடநாட்டில் யாத்திரைசெய்யக் கருதின், ஆங்கு நும்மை எதிர்ப்பவர் யாருமே இல்லை என்பது உறுதி.

இமய மால்வரைக் கெங்கோன் செல்வது
கடவுள் எழுதவோர் கற்கே யாதலின்
வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாம்
தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் கயற்புலி
மண்டலை யேற்ற வரைக வீங்கென
நாவலந் தண்பொழில் நண்ணார் ஒற்றுநம்
காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா
வம்பணி யானை வேந்த ரொற்றே
தஞ்செவிப் படுக்கும் தகைமைய வன்றோ
அறைபறை யென்றே அழும்பில்வேள் உரைப்ப
நிறையருந் தானை வேந்தனும் நேர்ந்து
கூடார் வஞ்சிக் கூட்டுண்டு சிறந்த
வாடா வஞ்சி மாநகர் புக்கபின்
வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதோ றூழி யுலகங் காக்கென
விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர்
கற்கொண்டு பெயருமெங் காவல னாதலின்

இமயமலைக்கு எங்கோனாகிய நீவிர் செல்லக்கருதியிருப்பது பத்தினிக்கடவுளைச்சமைத்தற்குரிய சிலையின்பொருட்டே யாதலால், ஆங்கு வாழ்கின்ற அரசர்க் கெல்லாம், வில் கயல் புலி இவற்றை இலச்சினையாகக் கொண்டநும் திருமுகத்தை முன்னே விடுத்தருளுதல் வேண்டும்" என்று கூறினன். அது கேட்ட அழும்பில்வேள் என்னும் அமைச்சன் "இந்நாவலந் தீவில் நம் பகைவராயுள்ளாருடைய ஒற்றர்கள் இவ் வஞ்சிமாநகரைவிட்டு நீங்குபவரல்லர். அவ் வொற்றுக்களே பகையரசர்செவிகளில் நம் வடநாட்டு யாத்திரைபற்றிய செய்திகளை அறிவிக்கத்தக்கன. அதனால் நம் செலவை இவ்வூரிற் பறையறைந்து தெரிவித்தலொன்றே போதியது" என்று உரைக்கச் செங்குட்டுவனும் அதற்கு உடம்பட்டனன்.

பின்னர்ப் பேராற்றங்கரையினின்று புறப்பட்டு அரசன் தன்பெரும் பரிவாரங்களுடன் வஞ்சிமாநகரை அடைந்தான். அடைந்ததும், யானைமேல் முரசேற்றப்பெற்றுச் செங்குட்டுவனது வடநாட்டியாத்திரை பற்றியும், அதனிற் பகையரசர் வந்து பணியாவிடில் அவர்க்கு நேருங் கேடுகளைப்பற்றியும் விளக்கி ஊரெங்கும் பறை அறையப்பட்டது.

வடதிசை மருங்கின் மன்ன ரெல்லாம்
இடுதிறை கொடுவந் தெதிரீ ராயிற்
கடற்கடம் பெறிந்த கடும்போர் வார்த்தையும்
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு வார்த்தையும்
கேட்டு வாழுமின் கேளீ ராயின்
தோட்டுணை துறக்கும் துறவொடு வாழுமின்
தாழ்கழல் மன்னன் தன்றிரு மேனி
வாழ்க சேனா முகமென வாழ்த்தி
இறையிகல் யானை யெருத்தத் தேற்றி
அறைபறை யெழுந்ததா லணிநகர் மருங்கென்.

(54) அறைபறை யெழுந்தபின் அரிமான் ஏந்திய
முறைமுதற் கட்டில் இறைமகன் ஏற
ஆசான் பெருங்கணி அருந்திறல் அமைச்சர்
தானைத் தலைவர் தம்மொடு குழீஇ
மன்னர் மன்னன் வாழ்கென் றேத்தி
முன்னிய திசையின் முறைமொழி கேட்ப
வியம்படு தானை விறலோர்க் கெல்லாம்
உயர்ந்தோங்கு வெண்குடை உரவோன் கூறும்

(54) ஷை, ஷை, கால்கோட்காதை.

கருத்து:- வஞ்சிமாநகரிற் பறைசாற்றிய பின் சேரர்பெருமானான செங்குட்டுவன் அன்றுமாலையில், ஆசான் பெருங்கணி அமைச்சர் தானைத்தலைவர்கள் ஒருங்குகூடித் தன்னை வாழ்த்தியவராகி யாத்திரையில்நடத்தற்குரிய ஆணைகளைக் கேட்டுநிற்க, தான் சிங்காதனத்தே வீற்றிருந்து சேனாபதிகளை நோக்கி அடியில்வருமாறு கூறுவானாயினன்:—

இமயத் தாபத ரெமக்கீங் குணர்த்திய
அமையா வாழ்க்கை அரசர் வாய்மொழி
நம்பால் ஒழிகுவ தாயி னங்கஃது
எம்போல் வேந்தர்க் கிகழ்ச்சியுந் தரூஉம்
வடதிசை மருங்கின் மன்னர்தம் முடித்தலைக்
கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வா ளாகிற்
செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்
குடிநடுக் குறூஉங் கோலே னாகென
வார்புனை தெரியலும் மலர்தார் வேம்பும்
சீர்கெழு மணிமுடிக் கணிந்தோர் அல்லால்
அஞ்சினர்க் களிக்கும் அடுபோர் அண்ணல்! நின்
வஞ்சினத் தெதிரும் மன்னரும் உளரோ
இமய வரம்ப! நின் னிகழ்ந்தோ ரல்லர்
அமைகநின் சினமென வாசான் கூற

---

"ஆரியமன்னர்கள் பலரும் தம்நாட்டில் நிகழ்ந்த சுயம்வரமொன்றன் பொருட்டு ஒருங்கு குழுமி மகிழ்ந்திருந்தவிடத்தே — 'தென்றமிழ்நா டாளும் வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து — மின்றதவழு மிமயநெற்றியில் விளங்குவிற்புலி கயல்பொறித்தநாள் — எம்போலும் முடிமன்னர் ஈங்கில்லைப் போலும்' — என்று நகையாடி இகழ்ந்தனர் என்று, தீர்த்தயாத்திரை செய்துகொண்டு இங்குவந்த இமயமலைத் தாபதரால் அறிந்தேன். அவ்வசைமொழி நம்பாலே தங்குவதாயின், அஃது எனக்குமட்டுமன்றி என்போன்ற சோழபாண்டியராகிய தமிழ்வேந்தர்க்கும் இகழ்ச்சிவிளைக்கக் கூடியதன்றோ? ஆதலின், அங்ஙனம் இகழ்ந்த வடதிசைமன்னரது முடித்தலையில் பத்தினிக்கடவுளைச் சமைத்தற்குரிய கல்லை ஏற்றிக்கொண்டு வருவேன். அங்ஙனஞ் செய்யாது என் கைவாள் வறிதேவருமாயின், என்னோடு முரணிய பகையரசரை நடுங்கச்செய்து அடக்காமல், வளந்தங்கிய என்னாட்டுக்குடிகளை வருத்துங் கொடுங்கோலனாகக் கடவேன்" என்று அப்பேரத்தாணியிற் சினத்துடன் வஞ்சினங்கூறினன்.

இங்ஙனம் செங்குட்டுவன் கூறியதைக் கேட்ட ஆசான் (புரோகிதன்) 'இமயவரம்ப! வடநாட்டரசர், (சோழ பாண்டியரையன்றி) நின்னை இகழ்ந்துகூறினவரல்லர்; நீ இங்ஙனம் வஞ்சினங்கூறுவதற்கு நின்னோடு எதிர்க்கும் மன்னரும் உளரோ? ஆதலால் கோபந்தணிக' என்று அவன் சீற்றத்தைத் தணிப்பானாயினன். உடனே, சோதிடம் வல்லானாகிய மௌத்தி

ஆறிரு மதியினுங் காருக வடிப்பயின்று
ஐந்து கேள்வியும் அமைந்தோன் எழுந்து
வெந்திறல் வேந்தே! வாழ்கநின் கொற்றம்
இருநில மருங்கின் மன்னரெல் லாம்நின்
திருமலர்த் தாமரைச் சேவடி பணியும்
முழுத்த மீங்கிது முன்னிய திசைமேல்
எழுச்சிப் பாலை யாகென் றேத்த
மீளா வென்றி வேந்தன் கேட்டு
வாளுங் குடையும் வடதிசைப் பெயர்க்கென
உரவுமண் சுமந்த அரவுத்தலை பனிப்பப்
பொருந ரார்ப்பொடு முரசெழுந் தொலிப்ப
இரவிடங் கெடுத்த நிரைமணி விளக்கின்
விரவுக்கொடி யடுக்கத்து நிரயத் தானையோடு
ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
வெம்பரி யானை வேந்தற் கோங்கிய
கரும வினைஞரும் கணக்கியல் வினைஞரும்
தரும வினைஞருந் தந்திர வினைஞரும்
மண்டிணி ஞால மாள்வோன் வாழ்கெனப்

---

கன் எழுந்து நின்று 'அரசே! நின் வெற்றி வாழ்வதாக; இவ்வுலகிலுள்ள பகையரசரெல்லாம் நின் அடித்தாமரைகளைப் பணியத்தக்க நன்முகூர்த்தம் இதுவே; நீ கருதிய வடதிசையாத்திரைக்கு இப்போதே எழுவாயாக' என்றான். இந்நிமித்திகன் வார்த்தையைக்கேட்ட செங்குட்டுவன் உடம்பட்டு, உடனே தன் வாளையுங் குடையையும் அந்த நன்முகூர்த்தத்தில் வடதிசைப்பெயர்த்து நாட்கொள்ளும்படி ஆணையிட்டனன். அவ்வாணை பிறந்ததும், போர்வீரரது ஆரவாரத்தோடு முரசங்கள் பூமி அதிரும்படி ஒலித்தன. பகைவர்க்கு வேதனை விளைக்குஞ் சேனைகள், மணிவிளக்குக்களுடனும் துவசங்களுடனும் முன் செல்லவும், ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும், அரசாங்கத்தைநடத்தும் கருமவினைஞரும், கணக்கியல்வினைஞரும், தருமவினைஞரும், தந்திரவினைஞரும் தம் அரசனை செங்குட்டுவன் வாழ்க என்று கூறவும், பட்டவர்த்தனமாகிய களிற்

பிண்ட முண்ணும் பெருங்களிற் றெருத்தின்
மறமிகு வாளு மாலைவெண் குடையும்
புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்
புரைதீர் வஞ்சி போந்தையிற் றொடுப்போன்
அரைசுவிளங் கவைய முறையிற் புகுதர
அரும்படைத் தானை அமர்வேட்டுக் கலித்த
பெரும்படைத் தலைவர்க்குப் பெருஞ்சோறு வகுத்துப்
பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி
வாய்வாள் நெடுந்தகை மணிமுடிக் கணிந்து
ஞாலங் காவலர் நாட்டிறை பயிரும்
காலை முரசங் கடைமுகத் தெழுதலும்
நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடுபுனைந்து
இறைஞ்சாச் சென்னி இறைஞ்சிவலங் கொண்டு
மறையோர் ஆக்கிய ஆவுதி நறும்புகை
நறைகெழு மாலையின் நல்லகம் வருத்தக்
கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்

---

றின் பிடர்மேல் ஏற்றப்பட்ட அரசவாளும் வெண்கொற்றக்குடையும் வஞ்சிப் புறத்துள்ள கோட்டையிற் புகும்படிசெய்து செங்குட்டுவன் தன் அத்தாணி மண்டபத்தை அடைந்தான். அன்றிரவில், போர் விருப்பத்தாற் களிப்புற்றுத் தன்னுடன் வருதற்கிருக்கும் தானைகளுக்கும் தானைத்தலைவர்க்கும் பெருஞ் சோறளித்து உபசரித்து உற்சாகப்படுத்தி, மற்றொரு வேந்தனைக் கொற்றங் கொள்ளுதற்கும் தன்கொள்கைக்கேற்ப வஞ்சிமாலையை மணிமுடியிலணிந்து, மறுநாட்காலையில் யாத்திரைக்குச் சித்தமாயிருந்தனன் செங்குட்டுவன். அன்றிரவு இங்ஙனம் கழிந்தது.

பொழுதுவிடிந்ததும், அரண்மனையிலே அரசரிடுதற்குரிய திறைகொணர அழைக்கும் காலைமுரசம் முழங்கியது. அதுவே யாத்திராகாலமாதலால், காலைக் கடன்களையெல்லாம் முடித்துச் சித்தனாயிருந்த செங்குட்டுவன், தான் வழிபடும் சந்திரசடாதரனான சிவபிரானது திருவடிநிலைகளை வலங்கொண்டுவணங்கி யாவரையும் வணங்காததும் வஞ்சிமாலை சூடியதுமான தன்சென்னியில் தரித்துக்கொண்டு, அந்தணர்கள் வளர்க்கின்ற வேதாக்கினியையும் தொழுத பின், தன் பட்டவர்த்தனக் களிற்றின்மேல் உரிய நன்முகூர்த்தத்திலே ஆரோகித்தனன். அப்போது, 'குடவர் கோமானாகிய செங்குட்டுவன் கொற்

குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
ஆடக மாடத் தறிதுயில் அமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி
நாடக மடந்தையர் ஆடரங் கியாங்கணும்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே!
வாகை தும்பை மணித்தோட்டுப் போந்தையோடு
ஓடை யானையி னுயர்முகத் தோங்க
வெண்குடை நீழலெம் வெள்வளை கவர்ந்து
கண்களி கொள்ளும் காட்சியை யாகென
மாகதப் புலவரும் வைதா ளிகரும்
சூதரும் நல்வலந் தோன்ற வாழ்த்த
யானை வீரரும் இவுளித் தலைவரும்
வாய்வாள் மறவரும் வாள்வலன் ஏத்தத்

---

றங்கொள்வானாக' என்று வாழ்த்தினவராய், ஆடகமாட மென்னுங் கோயிலில் அறிதுயிலமர்ந்தருளுந் திருமாலின் பிரசாதத்துடன்வந்து சிலர் அரசன் முன் நிற்க, தான் சிவபிரான் பாதுகைகளைச் சென்னியில் தாங்கியிருந்தமையால், அத்திருமால் பிரசாதத்தை வாங்கித் தன் மணிப்புயத் தேந்தியவனாய் அங்கிருந்தும் பெருஞ்சிறப்புடன் பிரயாணிப்பானாயினன். அவன் செல்லும் போது, நாடகமடந்தையர்கள் ஆடரங்குகடோறும் நெருங்கிக் கூடிநின்று இருகையும் கூப்பிக்கொண்டு, 'வெற்றி வேந்தே! போர்க்களிற்றின்மேல் வெண்கொற்றக்குடைநீழலில் கண்கள் களிகொள்ளத்தோன்றும் நின்காட்சி எங்கட்கு என்றும் இன்பம்பயந்து விளங்குவதாக' என்று துதித்தனர். சூதரும் மாகதரும் வைதாளிகரும் செங்குட்டுவனது வெற்றிப்புகழ் தோன்றும்படி வாழ்த்திக்கொண்டு உடன்சென்றனர். யானைவீரரும் குதிரைவீரரும் வாட்படை தாங்கிய மறவர்களும் தங்கள் வேந்தனது வாள்வலியை ஏத்தி ஆர்ப்பரித்தனர்.

தானவர் தம்மேற் றம்பதி நீங்கும்
வானவன் போல வஞ்சி நீங்கித்
தண்டத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட
உலக மன்னவ னொருங்குடன் சென்றாங்கு
ஆலும் புரவி அணித்தேர்த் தானையொடு
நீல கிரியின் நெடும்புறத் திறுத்தாங்கு
ஆடியல் யானையும் தேரும் மாவும்
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற்
பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்றன்
இருநில மடந்தைக்குத் திருவடி யளித்தாங்கு
அருந்திறன் மாக்கள் அடியீ டேத்தப்
பெரும்பே றமளி யேறிய பின்னர்
இயங்குபடை யரவத் தீண்டொலி யிசைப்ப
விசும்பியங்கு முனிவர் வியனில மாளும்
இந்திர திருவனைக் காண்குது மென்றே
அந்தரத் திழிந்தாங் கரசுவிளங் கவையத்து
மின்னொளி மயக்கும் மேனியொடு தோன்ற
மன்னவ னெழுந்து வணங்கிநின் றோனைச்

இங்ஙனமாக, அசுரர்மேற் போர்குறித்து அமராவதியினின்று நீங்கும் இந்திரனைபோல, உலகமன்னவனாகிய செங்குட்டுவனும் வஞ்சிமாநகரினின்றும் புறப்பட்டு, தூசிப்படையானது கடற்கரையைத் தொடும்படி பரவிய தன் சேனைகளால் மலைகளின்முதுகு நெளியவும், நாட்டில் நிலைத்த வழியுண்டாகவுஞ்சென்று, இறுதியில் நீலகிரி என்ற மலையின் நெடும்புறத்தில் அமைக்கப்பட்ட பாடியைப் பெரும்பரிவாரங்களுடன் அடைந்து, தன் பட்டவர்த்தனக் களிற்றினின்றும் இழிந்து, வீரரெல்லாம் ஆர்ப்பரித்தேத்தக் காவல்மிக்க தன் இருக்கையிற் புகுந்து அமளிமிசைத்தங்கி இளைப்பாறலாயினன்.

இங்ஙனம், அரசன் இளைப்பாறிய சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தரசாரிகளாகிய முனிவரர் சிலர், ஆங்குவந்த வேந்தர்பெருமானைக் காண்போமென்று கீழேயிறங்கி அரசிருக்கையை நோக்கி ஒளிமிக்கமேனியுடன் வரவும், அவரைக் கண்டதும் உண்டான சேனைகளின் ஆரவாரத்தாற் செங்குட்டுவன் முனிவர் வருகையை அறிந்து, அமளியினின்றெழுந்து வந்து அவரடி வணங்கினின்றான்.

செஞ்சடை வானவ னருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ! கேளாய்
மலையத் தேகுதும் வான்பே ரிமய
நிலையத் தேகுதல் நின்கருத் தாதலின்
அருமறை யந்தணர் ஆங்குளர் வாழ்வோர்
பெருநில மன்ன! காத்தல்நின் கடனென்
றுங்கவர் வாழ்த்திப் போந்ததற் பின்னர்
வீங்குநீர் ஞால மாள்வோன் வாழ்கெனக்
கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடரும்
தங்குலக் கோதிய தகைசா லணியினர்
இருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி
மருள்படப் பரப்பிய ஒலியன் மாலையர்
வடஞ்சுமந் தோங்கிய வளரிள வனமுலைக்
கருங்கய னெடுங்கட் காரிகை யாரொடு
இருங்குயி லால இனவண் டியாழ்செய
அரும்பவிழ் வேனில் வந்தது வாரார்
காதல ரென்னும் மேதகு சிறப்பின்
மாதர்ப் பாணி வரியொடு தோன்றக்
கோல்வளை மாதே! கோலங் கொள்ளாய்
காலங் காணாய் கடிதிடித் துரறிக்

நின்ற அரசனைநோக்கி அம்முனிவர்கள் "சிவபெருமான் திருவருளால் வஞ்சிமாநகரில் தோன்றிய அரசே! யாங்கள் பொதியமலைக்குச் செல்கின்றோம். இமயகிரிவரை செல்வது நின் கருத்தாதலால், ஆங்குவாழும் அருமறையந்தணர்களைத் துன்பமின்றிக் காப்பது நின் கடமையாகும்" என்று கூறிச் செங்குட்டுவனை வாழ்த்திச் சென்றனர். சென்றபின்னர், கொங்கணநாட்டுக் கூத்தர்களும், கொடுங்கருநாடர்களும் தத்தம் குலத்திற்கேற்ற கோலமுடையவராய், குஞ்சியில் தழைத்த மாலையணிந்து அழகுவாய்ந்த தம் மகளிருடன் வசந்தகாலத்துக்குரிய வரிப்பாட்டுக்களைப் பாடிக்கொண்டும், குடகுநாட்டவர் தம் மகளி

காரோ வந்தது காதலர் ஏறிய
தேரோ வந்தது செய்வினை முடித்தெனக்
காஅர்க் குரவையொடு கருங்கய னெடுங்கட்
கோற்றொடி மாதரொடு குடகர் தோன்றத்
தாழ்தரு கோலத்துத் தமரொடு சிறந்து
வாள்வினை முடித்து மறவாள் வேந்தன்
ஊழி வாழியென் றோவர் தோன்றக்
கூத்துள் படுவோன் காட்டிய முறைமையின்
ஏத்தின ரறியா இருங்கலன் நல்கி
வேத்தினம் நடுக்கும் வேலோன் இருந்துழி
நாடக மகளி ரைம்பத் திருவரும்
கூடிசைக் குயிலுவ ரிருநூற் றெண்மரும்
தொண்ணூற் றறுவகைப் பாசண் டத்துறை
நண்ணிய நூற்றுவர் நகைவே ழம்பரும்
கொடுஞ்சி நெடுந்தேர் ஐம்பதிற் றிரட்டியும்
கடுங்களி யானை யோரைஞ் ஞூறும்
ஐயீ ராயிரம் கொய்யுளைப் புரவியும்

ருடன் கார்காலத்தைப்பற்றிய குரவைப்பாடல்களைப் பாடிக்கொண்டும், ஓவர்கள் தங்கள் சுற்றத்தோடு அலங்காரமாக அரசனை வாழ்த்திக்கொண்டும் சேரனவை முன்னே தோன்றினர். இவர்களது ஆடல் பாடல்களையெல்லாங் கண்டு உவந்து, தன் தலைமையாடலாசிரியன் தெரிவித்த முறைப்படியே, அன்னோர்க்கெல்லாம் அவர்கள் எதிர்பாராத சிறந்த அணிகலங்களைப் பரிசாகவழங்கிச் சேரர்பெருமாண் வீற்றிருந்தான்.

இந்நிலையில் வாயில்காவலன் செங்குட்டுவன் திருமுன்பு வந்துநின்று, “அரசே! நாடகமகளிர் நூற்றிருவரும், குயிலுவர் (வாத்தியக்காரர்) இருநூற்றெண்மரும், தொண்ணூற்றறுவகைப் பாசண்டத்துறைகளிலும் வல்லவரும் நகைவிளைத்து மகிழச்செய்பவருமான வேழம்பர் நூற்றுவரும், நூறு கொடுஞ்சி நெடுந்தேர்களும், ஐந்நூறு களிறுகளும், பதினாயிரம் குதிரைகளும், இன்ன

எய்யா வடவளத் திருபதி னாயிரம்
கண்ணெழுத்துப் படுத்தன கைபுனை சகடமும்
சஞ்சயன் முதலாத் தலைக்கீடு பெற்ற
கஞ்சுக முதல்வரீ ரைஞ்ஞூற் றுவரும்
சேயுயர் விற்கொடிச் செங்கோல் வேந்தே!
வாயி லோரென வாயில்வந் திசைப்ப
நாடக மகளிரும் நலத்தகு மாக்களும்
கூடிசைக் குயிலுவக் கருவி யாளரும்
சஞ்சயன் றன்னொடு வருக ஈங்கெனச்
செங்கோல் வேந்தன் திருவிளங் கவையத்துச்
சஞ்சயன் புகுந்து தாழ்ந்துபல வேத்தி
ஆணையிற் புகுந்தவீ ரைம்பத் திருவரொடு
மாண்வினை யாளரை வகைபெறக் காட்டி
வேற்றுமை யின்றி நின்னொடு கலந்த
நூற்றுவர் கன்னரும் கோற்றொழில் வேந்தே!
வடதிசை மருங்கின் வானவன் பெயர்வது
கடவுள் எழுதவோர் கற்கே யாயின்
ஓங்கிய இமயத்துக் கற்கால் கொண்டு
வீங்குநீர்க் கங்கை நீர்ப்படை செய்தாங்
கியாந்தரு மாற்றல மென்றன ரென்று

இன்ன சரக்கென்று எழுதப்பட்டு யாத்திரைக்குவேண்டிய வடநாட்டுப்பண்டங்கள் ஏற்றப்பட்ட சகடங்கள் இருபதினாயிரமும், தலைப்பாகையுடையவர்களும் சஞ்சயன் என்பவனைத் தலைமையாகக் கொண்டவர்களுமான சட்டையிட்ட பிரதானர் ஆயிரவரும் நின் வாயிற்கண்ணே வந்து காத்திருக்கின்றனர், அறிந்தருள்க" என்றான். எனலும், "அவர்களுள்ளே, சஞ்சயனுடன் நாடக மகளிரும் கஞ்சுகமுதல்வரும் (பிரதானரும்), குயிலுவரும் இங்கு வரக்கடவர்" என்று அரசன் ஆணையிட, அன்னோருடன அத்தூதர்தலைவன் அரசவைபுகுந்து செங்குட்டுவனை வணங்கி வாழ்த்தியவனாய் உடன்வந்தவரையெல்லாம் அரசனுக்கு முறைப்படி காட்டிப் பின்னர், "தேவரீர் வடநாடுசெல்வது பத்தினிக் கடவுளைச் சமைத்தற்குரிய சிலையொன்றன் பொருட்டேயாயின், 'இமயமலையிற் கல்லெடுப்பித்துக் கங்கையாற்றில் அதனை நீர்ப்படை செய்துதர யாங்களே வல்லோம்' என்று, தேவரீருடன் வேற்றுமையின்றிக் கலந்த நட்பரச

வீங்குநீர் ஞாலம் ஆள்வோய் ! வாழ்கென
அடல்வேல் மன்னர் ஆருயிர் உண்ணும்
கடலந் தானைக் காவல னுரைக்கும்
பால குமரன் மக்கள் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தில் மன்னர் தம்மொடுங் கூடி
அருந்தமிழ் ஆற்றல் அறிந்தில ராங்கெனச்
சீற்றங் கொண்டிச் சேனை செல்வது
நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக்
கங்கைப் பேர்யாறு கடத்தற் காவன
வங்கப் பெருநிரை செய்க தாமெனச்
சஞ்சயன் போனபின் கஞ்சுக மாக்கள்
எஞ்சா நாவினர் ஈரைஞ் ஞாற்றுவர்
சந்தின் குப்பையுந் தாழ்நீர் முத்தும்
தென்ன ரிட்ட திறையொடு கொணர்ந்து

ராகிய நூற்றுவர் கன்னரும் தெரிவித்திருக்கின்றனர்" என்றறிவித்து வாழ்த்தி னின்றனன். அதுகேட்ட செங்குட்டுவன் 'நன்று, வடநாட்டரசனான பால குமரன்மக்களாகிய கனகன் விசயனென்ற இருவரும் தம் நாக்களைக் காவாத வராய், விருந்தொன்றிலே வடவரசர் பலருடன்கூடித் தமிழ்வேந்தரான எம் முடைய ஆற்றலறியாது இகழ்ந்துரையாடினராம்; அதனால் பத்தினிக்குக் கல் லெடுப்பித்தலோடு அவரிடம் நம்மாற்றலைக் காண்பித்தற்காகவும், இச்சேனை சீற்றத்தைத் தன்னுடன் கொண்டு செல்லாநின்றது; இச்செய்தியை நம் நட்பின ராகிய அக்கன்னர்க்குத் தெரிவித்து, ஆங்குக் கங்கைப்பேரியாற்றை நம் சேனை கள் கடத்தற்குவேண்டிய மரக்கலங்களை அவருதவியால் ஆயத்தஞ்செய்வதற்கு நீவிர் முன்பு செல்லக்கடவீர்" என்று கற்பனைசெய்ய, சஞ்சயனும் (அவ்வாணை யைச் சிரமேற்கொண்டு தன்துணைவருடன் முற்படப்) போயினன். அவன் போ னதும், நாவன்மைபடைத்த தூதுவரான கஞ்சுகமுதல்வர் ஆயிரவரும் பாண் டியர்முதலிய அரசரிட்ட சந்தனம் முத்து முதலிய திறைகளைக்கொண்டுவந்து நின்றனர். அவர்க்குச் சேரன் தன் இலச்சினையிட்ட திருமுகங்களைக் கண்

கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
மண்ணுடை முடங்கலம் மன்னவர்க் களித்தாங்கு
ஆங்கவ ரேகிய பின்னர் மன்னிய
வீங்குநீர் ஞாலம் ஆள்வோன் ஓங்கிய
நாடாள் செல்வர் நல்வல னேத்தப்
பாடி யிருக்கை நீங்கிப் பெயர்ந்து
கங்கைப் பேரியாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங் கெய்தி
ஆங்கவ ரெதிர்கொள அந்நாடு கழிந்தாங்கு
ஓங்குநீர் வேலி உத்தர மரீஇப்
பகைப்புலம் புக்குப் பாசறை யிருந்த
தகைப்பெருந் தானை மறவோன் றன்முன்

ணெழுத்தாளரான திருமுகமெழுதுவாரைக்கொண்டு எழுதுவித்து அத்தூதர் கையிற்கொடுத்து அரசரிடம் அதனைச் சேர்ப்பிக்குமாறு ஆணையிட்டு அவரையும் அனுப்பினன். அவர்களெல்லாம் போயினபின்னர், சேரர்பெருமான், மற்றைய மன்னர் தன் வெற்றிச்சிறப்பை ஏத்தும்படி பெரும்பரிவாரங்களுடன் நீலகிரிப் பாடியினின்றும் நீங்கி வடநாடுநோக்கிப் பிரயாணஞ்செய்யலானான்.

இங்ஙனம், தன் பெருஞ்சேனைகளுடன் சென்ற செங்குட்டுவன் முடிவில் கங்கைப்பேரியாற்றை நெருங்கினன். ஆங்கு, முன்னரே சென்றிருந்த சஞ்சயனால் நூற்றுவர்கன்னர் உதவிகொண்டு கங்கையைச் சேனைகள் கடத்தற்குவேண்டிய மரக்கலங்கள் சித்தஞ்செய்யப்பட்டிருந்தன. அப்பேரியாற்றை அடைந்த சேரர்பெருந்தகை தன் முழுப்பரிவாரங்களுடனும் இனிதுகடந்து அவ்வாற்றின் வடகரையை அடைந்தான். அப்போது தம் நட்பாளனாகிய செங்குட்டுவனை அந்நாடாளும் நூற்றுவர்கன்னர் எதிர்கொண்டு உபசரித்தனர். அவருபசாரத்தைப்பெற்றுச் செங்குட்டுவன் அங்குநின்றும் புறப்பட்டுத் தன் பகைவரதுநாடாகிய நீர்வளமிக்க உத்தரதேசத்தை அடைந்து பாசறையில் தங்கலாயினன். இங்ஙனம் சேரவரசன் பெரும்படையுடன் தம் தேசத்தில் பாடி

உத்தரன் விசித்திரன் உருத்திரன் பைரவன்
சித்திரன் சிங்கன் தனுத்தரன் சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவ ரெல்லாம்
தென்றமிழ் ஆற்றல் காண்குவம் யாமெனக்
கலந்த கேண்மையிற் கனக விசயர்
நிலந்திரைத் தானையொடு நிகர்த்து மேல்வர
இரைதேர் வேட்டத் தெழுந்த அரிமா
கரிமாப் பெருநிரை கண்டுளஞ் சிறந்து
பாய்ந்த பண்பிற் பல்வேல் மன்னர்
காஞ்சித் தானையொடு காவலன் மலைப்ப
வெயிற்கதிர் விழுங்கிய துகிற்கொடிப் பந்தர்
வடித்தோற் கொடும்பறை வால்வளை நெடுவயிர்
இடிக்குரல் முரசம் இழுமென் பாண்டில்
உயிர்ப்பலி யுண்ணும் உருமுக்குரல் முழக்கத்து
மயிர்க்கண் முரசமொடு மாதிர மதிரச்

---

பிறங்கிய செய்தி தெரிந்ததும், அந்நாட்டரசர்களான உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன் என்ற எல்லா வடவேந்தரையும் துணைக்கொண்டு கனகவிசயரென்ற ஆரியவரசர், தமிழராற்றலைக் காண்போமென்று செருக்கிப் பெருத்தசேனையுடன் போர்க் கோலங்கொண்டு எதிர்ந்தனர். இங்ஙனம் வடவரசரெல்லாம் திரண்டுவருதலும், இரையைத்தேடி வேட்டைக்குச்சென்ற சிங்கமொன்று யானைப் பெருங்கூட்டத்தைக் கண்டு உள்ளம்பூரித்துப் பாய்ந்தவாறுபோல, தன்னை எதிர்த்துவந்த வடவேந்தரது சேனைகண்டு களித்து, அவற்றின்மேல்விழுந்து செங்குட்டுவன் பொருவானாயினன்.

வடவரும் தமிழரும் பொருதுநின்ற அப் பெரும்போரிலே, துகிற்கொடிகளின் பந்தர்களாற் சூரியகிரணங்கள் மறைப்புண்டன. கொடும்பறைகளும் சங்கங்களும் நீண்ட கொம்புகளும் பேரிகைகளும் கஞ்சதாளங்களும் மயிர்க்கண் முரசங்களும் திக்குகளினின்று எதிரொலியுண்டாகும்படி ஒலித்தன.

சிலைத்தோள் ஆடவர் செருவேற் றடக்கையர்
கறைத்தோன் மறவர் கடுந்தேர் ஊருநர்
வெண்கோட் டியானையர் விரைபரிக் குதிரையர்
மண்கண் கெடுத்தவிம் மாநிலப் பெருந்துகள்
களங்கொள் யானைக் கவிழ்மணி நாவும்
விளங்குகொடி நந்தின் வீங்கிசை நாவும்
நடுங்குதொழில் ஒழிந்தாங் கொடுங்கியுள் செறியத்
தாரும் தாரும் தாமிடை மயங்கத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாகிய
சிலைத்தோள் மறவர் உடற்பொறை யடுக்கத்து
எறிபிண மிடறிய குறையுடற் கவந்தம்
பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்
பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற்
கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட
அடுந்தேர்த் தானை ஆரிய வரசர்
கடும்படை மாக்களைக் கொன்றுகளங் குவித்து
நெடுந்தேர்க் கொடுஞ்சியும் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் வெரிநும் பாழ்பட

---

**வில்வேல்** கேடயம் இவற்றைக்கொண்ட மறவர்களும், தேர்வீரர் யானைவீரர் குதிரைவீரர்களும் கலந்தெதிர்த்த அப்போர்க்களத்தில் பூமிதெரியாமலெழுந்த புழுதியானது யானைக்கழுத்திற்கட்டிய மணிகளின் நாக்களிலும் கொடிகளிற் கட்டிய சங்குகளின் நாக்களிலும் புகுந்து அவற்றை ஒலிக்காவண்ணஞ் செய்து விட்டன. தூசிப்படைகள் தம்மிற்கலந்து புரிந்த அப்போரிலே தோளுந் தலையுந் துணிபட்டு வேறாகிய வீரரது உடற்கும்பலில் துள்ளியெழுந்த குறையுடலாகிய கவந்தங்கள், பேயினது தாளத்துக்கொப்பக் கூத்தாடின அப் பிணக்குவியலினின்று வழிந்தோடும் ஊன்கலந்த குருதியிலே, கூட்டங் கொண்ட பேய்மகளிரின் நாக்கனெல்லாம் ஆடலாயின. இங்ஙனம் ஆரிய வரசரது சேனாவீரரை அக்களத்தே கொன்றுகுவித்து அவரது தேர் யானை குதிரைகளில் ஆட்களில்லையாகச்செய்து நூழிலாட்டிய சேரன் செங்குட்டு

எருமைக் கடும்பரி ஊர்வோன் உயிர்த்தொகை
ஒருபகல் எல்லையின் உண்ணு மென்பது
ஆரிய வரசர் அமர்க்களத் தறிய
நூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்
போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை
ஓங்கிருஞ் சென்னி மேம்பட மலைய
வாய்வாள் ஆண்மையின் வண்டமிழ் இகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனும் விசயனும்
ஐம்பத் திருவர் கடுந்தே ராளரொடு
செங்குட் டுவன்றன் சினவலைப் படுதலும்
சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர்
பிடிகைப் பீலிப் பெருநோன் பாளர்
பாடு பாணியர் பல்லியத் தோளினர்
ஆடு கூத்தர் ஆகி எங்கணும்
ஏந்துவாள் ஒழியத் தாந்துறை போகிய
விச்சைக் கோலத்து வேண்டுவயிற் படர்தரக்
கச்சை யானைக் காவலர் நடுங்கக்

---

வன், எருமையூர்தியுடைய கூற்றுவன் உயிர்த்தொகுதியை ஒரேபொழுதினுள் உண்ணவல்லவன் என்பதனைப் பகைவர்க்கு அறிவித்துத் தும்பைசூடி விளங்கினான். இவனது சினவலையின்கண்ணே, தம் நாவைக்காவாது தமிழரசரை இகழ்ந்த கனகவிசயர் தம் தேர்வீரர்கள் ஐம்பத்திருவருடன் அகப்பட்டுக்கொண்டனர். மற்றப்பகைவர்களோ தத்தம் ஆயுதங்களை எறிந்துவிட்டுச் சடை காஷாயவுடை சாம்பல் இவற்றைத்தரித்த துறவிகளாகவும், பீலிகைக்கொண்ட சைனமுனிவராகவும், பாடகராகவும், பற்பல வாத்தியகாரராகவும், ஆடுவோராகவும் தாந்தாம்வல்ல துறைக்கேற்ற வேடம்பூண்டு வேண்டுமிடங்களிலே பதுங்கியொளித்தனர். இவ்வாறு வடவரசர்கள் நடுநடுங்கும்படி, களிறுகளை எரு

கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக
ஆளழி வாங்கி அதரி திரித்த
வாளேர் உழவன் மறக்களம் வாழ்த்தித்
தொடியுடை நெடுங்கை தூங்கத் தூக்கி
முடியுடைக் கருந்தலை முந்துற ஏந்திக்
கடல்வயிறு கலக்கிய ஞாட்பும் கடலகழ்
இலங்கையி லெழுந்த சமரமும் கடல்வணன்
தேரூர் செருவும் பாடிப் பேரிசை
முன்றேர்க் குரவை முதல்வனை வாழ்த்திப்
பின்றேர்க் குரவைப் பேயாடு பறந்தலை
முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித்
தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய ஊன்சோறு
மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்டச்
சிறப்பூண் கடியினம் செங்கோற் கொற்றத்து
அறக்களஞ் செய்தோன் ஊழி வாழ்கென

தாகவும், வாளே பிடிக்குங் கோலாகவும், பகைவீரர்களே சூட்டடிக்கதிர்களாக வுங்கொண்டு வாளையுடைய தான் உழவனாகநின்று அப்போரிலே அதரிதிரித் துக்கலக்கினன் செங்குட்டுவன். இவ்வரசனது மறக்களத்தைப் புகழ்ந்து, பேய்களெல்லாம் நெடியகைகளைக் கரியதலைமிசை உயர்த்தி அசைத்தனவாய், திருமால் பாற்கடல் கடைந்தபோது நிகழ்த்திய தேவாசுரயுத்தத்தையும், அவன் இலங்கையில் நடத்தியபோரையும், தேரூர்ந்து நிகழ்த்திய அவனது பாரதச் செருவையும் இதனோடு ஒருசேரவைத்துப் பாடி வாழ்த்திக் குரவைக்கூத்தா டின. இப்போர்க்களத்தே பகைவரது தலைமுடிகளையே அடுப்பாகவும், பிடர்த் தலைகளையே தாழியாகவும், வலயமணிந்த தோள்களையே துடுப்பாகவுங்கொண்டு துழாவிச்சமைத்த ஊன்சோற்றைப் பேய்மடையன் அவ்வப்பேயின் தகுதி யறிந்து பரிமாற வயிறார உண்டு களித்துத் தருமயுத்தத்தால் தமக்கு இத் தகைய பெருவிருந்து செய்த செங்குட்டுவனை 'ஊழியளவும் வாழ்க' என்று வாயார வாழ்த்துவனவும் ஆயின.

மறக்களம் முடித்த வாய்வாட் குட்டுவன்
வடதிசை மருங்கின் மறைகாத் தோம்பினர்
தடவுத்தீ யவியாத் தண்பெரு வாழ்க்கைக்
காற்றா தாளரைப் போற்றிக் காமினென
வில்லவன் கோதையொடு வென்றுவினை முடித்த
பல்வேற் றானைப் படைபல ஏவிப்
பொற்கோட் டிமயத்துப் பொதுவறு பத்தினிக்
கற்கால் கொண்டனன் காவல னுங்கென்.

---

(55) வடபே ரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்
சினவேல் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடி யேற்றிச்

இங்ஙனமாக, ஆரியப்படையைவென்று தானினைத்த காரியங்களுளொன்றை முடித்துக்கொண்ட செங்குட்டுவன் தன் தானைத்தலைவனாகிய வில்லவன் கோதையை நோக்கி, 'வடதிசையுள் வேதநெறியை வளர்ப்பவரும் வீத்தியாக்கினி பேணுதலையே பெருவாழ்வாக உடையவருமாகிய அந்தணப்பெரியோரைச் செல்லுமிடங்களிலெல்லாம் போற்றிக் காக்கக்கடவீர்' என்றுகூறி வெற்றி பெற்ற வேற்படையுடன் அவனை யேவி, பத்தினிக்கடவுளைப் பொறித்தற்குரிய சிலையை இமயமலையினின்று கொணரச்செய்து தான் மேற்கொண்ட அவ்வினையையும் முடித்துக்கொண்டனன்.

55. ஷை, ஷை, நீர்ப்படைக்காதை.

**கருத்து:-** மேற்கூறியவாறு, கூற்றுவனது தொழில்பெருகும்படி உயிர்த்தொகைகள் கொல்லப்படுதற்குக் காரணமாயிருந்த தேவாசுரயுத்தம் பதினெட்

செறிகழல் வேந்தன் தென்றமிழ் ஆற்றல்
அறியாது மலைந்த ஆரிய மன்னரைச்
செயிர்த்தொழில் முதியோன் செய்தொழில் பெருக
உயிர்த்தொகை யுண்ட ஒன்பதிற் றிரட்டியென்
றியாண்டு மதியும் நாளுங் கடிகையும்
ஈண்டுநீர் ஞாலங் கூட்டி எண்கொள
வருபெருந் தானை மறக்கள மருங்கின்
ஒருபகல் எல்லை உயிர்த்தொகை யுண்ட
செங்குட் டுவன்றன் சினவேற் றானையொடு
கங்கைப் பேரியாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
நூற்றிறன் மாக்களின் நீர்ப்படை செய்து
மன்பெருங் கோயிலும் மணிமண் டபங்களும்
பொன்புனை யரங்கமும் புனைபூம் பந்தரும்

---

டாண்டிலும், இராமராவணயுத்தம் பதினெட்டுமாதத்தும், பாரதயுத்தம் பதினெட்டுநாளிலும், செங்குட்டுவனும் கனகவிசயரும் புரிந்தபோர் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தனவென்று உலகோர் இப்போரையும் கூட்டி எண்ணிக் கொள்ளும்படி, தமிழரது ஆற்றலையறியாது தன்னுடன் மலைந்த ஆரியப் படைகளைப் போரில் ஒருபகற்குள்ளே அழித்துவிளங்கிய செங்குட்டுவன், சினமிக்க தன் சேனைகளால் பத்தினிக்கடவுட்குரிய சிலையை இமயத்தினின்று மெடுப்பித்தபின்னர், போர்க்கோலங்கொண்டெழுந்த கனகவிசயரது கதிர்முடி மேல் அச்சிலையையேற்றிக்கொண்டு அதனை நீராட்டித் தூய்மைசெய்தற்பொருட்டுக் கங்கைப்பேரியாற்றின் வடகரைவந்து சேர்ந்தான். அவன் அங்கு வந்ததும், அப்பத்தினிச்சிலை, அரசனாணையின்வண்ணம் ஆகமம்வல்லோரால் கங்காநதியில் முறைப்படி நீராட்டப்பட்டது. அம்மகாநதியின் தென்கரை

உரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையும்
திருமலர்ப் பொய்கையும் வரிகாண் அரங்கமும்
பேரிசை மன்னர்க் கேற்பவை பிறவும்
ஆரிய மன்னர் அழகுற அமைத்த
தெள்ளுநீர்க் கங்கைத் தென்கரை யாங்கண்
வெள்ளிடைப் பாடி வேந்தன் புக்கு
நீணில மன்னர் நெஞ்சுபுக லழித்து
வானவ மகளிரின் வதுவைசூட் டயர்ந்தோர்
உலையா வெஞ்சமம் ஊர்ந்தமர் உழக்கித்
தலையும் தோளும் விலைபெறக் கிடந்தோர்
நாள்விலைக் கிளையு ணல்லம ரழுவத்து
வாள்வினை முடித்து மறத்தொடு முடிந்தோர்
குழிகட் பேய்மகள் குரவையிற் றொடுத்து
வழிமருங் கேத்த வாளொடு மடிந்தோர்
கிளைகள் தம்மொடு கிளர்பூ ணாகத்து

---

வெளிப்பரப்பிலே, ஆரியமன்னரும் நட்பாளருமாகிய கன்னரால் செயசீலனாக வருஞ் சேரர்பெருந்தகை படைகளுடன்வந்து தங்குதற்கென்று — அரசர்க்குரிய கோயிலும் அழகிய மண்டபங்களும் அத்தாணியும் பூம்பந்தரும் உரிமைப்பள்ளியும் பூஞ்சோலையும் தாமரைப்பொய்கையும் ஆடரங்குகளும் மற்றும் பெருவேந்தர்க்கு வேண்டியன யாவும் மிகவும் அழகுபெற அமைக்கப்பட்டிருந்தன. செங்குட்டுவன் தென்கரை புக்கபின், அவ்வழகியபாடியில் தன்பரிவாரங்களோடு சென்று தங்கினான்.

இங்ஙனம் பாடியிற்றங்கியபின் சேரர்பெருமான், எதிர்த்த மாற்றரசரது மனவூக்கம் கெடும்படி போரில் தம் அரிய வீரச்செயல்களைக் காட்டி வீரசுவர்க்கமடைந்தவர்களும், அப்போரிலே அடர்ந்துழக்கித் தலையுந்தோளும் விலைபெற அறுபட்டுக்கிடந்தவர்களும், வாளாற்செய்யும் வினைகளெல்லாஞ்

வளையோர் மடிய மடிந்தோர் மைந்தர்
மலைத்துத்தலை வந்தோர் வாளொடு மடியத்
தலைத்தார் வாகை தம்முடிக் கணிந்தோர்
திண்டேர்க் கொடுஞ்சியொடு தேரோர் வீழப்
புண்டோய் குருதியிற் பொலிந்த மைந்தர்
மாற்றருஞ் சிறப்பின் மணிமுடிக் கருந்தலைக்
கூற்றுக் கண்ணோட அரிந்துகளங் கொண்டோர்
நிறஞ்சிதை கவயமொடு நிறப்புண் கூர்ந்து
புறம்பெற வந்த போர்வாள் மறவர்
வருக தாமென வாகைப் பொலந்தோடு
பெருநா ளமயம் பிறக்கிடக் கொடுத்துத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்துப்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தன்

---

செய்து பகைவரை அழித்துமுடிந்தவர்களும், உறவினரோடு தம்மகளிரும் உடன்மடியும்படி வீழ்ந்தவர்களுமாகிய இறந்துபட்ட வீரர்களுடைய மைந்தரையும், தூசிப்படையில் நின்று மாற்றாரையழித்து வாகைமாலைசூடியவர்களும், பகைவரின் தேர்வீரரைக்கொன்று அவர்களுடைய குருதியோடு பொலிந்து நின்றவர்களும், பகைவரது கருந்தலைகளைக் கூற்றுவனுங் கண்டிரங்கும்படி ஒருசேர அறுத்து வெற்றிபெற்றவர்களும், கவசஞ்சிதைய மார்பில் விழுப்புண் பட்டு மாற்றாரைப் புறங்கண்டு மீண்டவர்களும் ஆகிய (இறவாத) எல்லாவீரர்களையும் தன்னிடத்து வருக என்றழைத்து, அவர்களடைந்த வெற்றிக்கு அறிகுறியாக அவர்கட்கெல்லாம் பொன்னாலாகிய வாகைப்பூக்களை, தான் பிறந்தநாளிற் செய்யும் பெருங்கொடையினும் மிகுதியாக நெடும்போதிருந்து கொடுத்து வெகுமானித்தான்.

இங்ஙனம் பனம்பூவைத் தும்பைமாலையுடன் சூடிப் புலவர்பாடுதற்குரிய புறத்துறைகளெல்லாம் முடித்துச் செயசீலனாகச் சேரன் செங்குட்டுவன்

ஆடுகொண் மார்போ டரசுவிளங் கிருக்கையின்
மாடல மறையோன் வந்து தோன்றி
வாழ்க எங்கோ! மாதவி மடந்தை
கானற் பாணி கனக விசயர்தம்
முடித்தலை நெரித்தது முதுநீர் ஞாலம்
அடிப்படுத் தாண்ட அரசே! வாழ்கெனப்
பகைப்புலத் தரசர் பலரீங் கறியா
நகைத்திறங் கூறினை நான்மறை யாளா!
யாதுநீ கூறிய உரைப்பொரு ளீங்கென
மாடல மறையோன் மன்னவற் குரைக்கும்
கானலந் தண்டுறைக் கடல்விளை யாட்டினுள்
மாதவி மடந்தை வரிநவில் பாணியோடு
ஊடற் காலத் தூழ்வினை யுருத்தெழக்
கூடாது பிரிந்து குலக்கொடி தன்னுடன்
மாட மூதூர் மதுரை புக்காங்கு

---

தன்னரசிருக்கையில் வீற்றிருக்கும்போது, மாடலன் என்னும் மறையவன் ஆங்கு எதிர்பாராதே வந்துநின்று அரசனை ஆசிகூறி வாழ்த்தியதோடு 'எங்கோவே! மாதவியென்னும் நாடகக்கணிகையின் கடற்கரைப்பாடலானது, கனகவிசயரது முடித்தலைகளை இங்ஙனம் நெரித்துவிட்டது; இது வியக்கத்தக்கதாம்' என்று ஒரு விநோத வார்த்தையையும் கூறினன். இதனைக் கேட்ட செங்குட்டுவன் அவன் கருத்தை அறியாதவனாய், 'நான்மறையாளனே! பகைப்புலத்தவரும் அறிந்திராத நகைச்சொல்லொன்றை இங்குவந்து என்முன் கூறினை; நீ சொன்ன உரைப்பொருள் யாது? விளங்கச்சொல்லுக' என்றான். எனலும் அம்மறையவன் சொல்லலுற்றான்.

" குடவர்கோவே! காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழ்ந்த கடல்விளையாட்டிற்குத் தன் காதலனாகிய கோவலனுடன் சென்றிருந்த மாதவியென்னும் நாடகக் கணிகை கருத்து வேறுபடப் பாடிய கானல்வரிப்பாட்டுடன் ஊழ்வினையும் உடன்சேர்ந் திருந்தமையால், கோவலன் அக்கணிகையை வெறுத்துப்பிரிந்து தன்மனைவி கண்ணகியை உடனழைத்துக்கொண்டு மதுரைமாநகரம் புக்கான்;

இலைத்தார் வேந்தன் எழில்வான் எய்தக்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
குடவர் கோவே! நின்னாடு புகுந்து
வடதிசை மன்னர் மணிமுடி யேறினள்
இன்னுங் கேட்டருள் இகல்வேற் றடக்கை
மன்னர் கோவே! யான்வருங் காரணம்
மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வேன்
ஊழ்வினைப் பயன்கொல் உரைசால் சிறப்பின்
வாய்வாட் டென்னவன் மதுரையிற் சென்றேன்
வலம்படு தானை மன்னவன் தன்னைச்
சிலம்பின் வென்றனள் சேயிழை என்றலும்
தாதெரு மன்றத்து மாதரி எழுந்து
கோவலன் தீதிலன் கோமகன் பிழைத்தான்

---

புக்கவன், அந்நகரத்தரசனை பாண்டியன் உயிர்நீத்து விண்ணுலகடையும்படி கொலையுண்டன னன்றோ? அங்ஙனங் கொலையுண்ட கோவலனின் கற்புடை மனைவியானவள் உன் நாட்டை அடைந்தமையாலன்றோ; அப்பத்தினி இப்போது வடதிசையரசருடைய மணிமுடியிலேறி விளங்குவாளாயினள்" என்று, முன் நிகழ்ந்த கோவலன்சரிதத்தைச் சுருங்கக் கூறினான்.

பின்னர், செங்குட்டுவனை நோக்கி, 'வேந்தர்வேந்தே! யான் ஈண்டு வருதற்கு அமைந்த காரணத்தையும் கேட்பாயாக; அகத்தியமுனிவருடைய பொதியமலையை வலஞ்செய்துகொண்டு கன்னியாகுமரித்துறையில் தீர்த்தமாடி மீண்டுவருகின்ற யான், என் ஊழ்வினைப்பயன் போலும், பாண்டியனது சிறப்பமைந்த மதுரைமாநகரம் சென்றேன். அங்கே நான் தங்கியிருந்தபோது, பாண்டியன் தன் கணவனை அநியாயமாகக் கொல்வித்த கொடுங்கோன்மையைத் தன் சிலம்பைக்கொண்டு அவ்வரசனுக்கு விளக்கி வழக்கில்வென்றாள் கண்ணகி என்றசெய்தி ஊர்முழுதும் பரவியது. இக்கொலைச்செய்தி கேட்ட ஆய்ச்சியர் தலைவியாகிய மாதரி, இடைத்தெருவிலுள்ள தாதெருமன்றத்தினின்றும்

அடைக்கலம் இழந்தேன் இடைக்குல மாக்காள்!
குடையுங் கோலும் பிழைத்த வோவென
இடையிருள் யாமத்து எரியகம் புக்கதும்
தவந்தரு சிறப்பிற் கவுந்தி சீற்றம்
நிவந்தோங்கு செங்கோல் நீணில வேந்தன்
போகுயிர் தாங்கப் பொறைசா லாட்டி
என்னோ டிவர்வினை யுருத்த தோவென
உண்ணா நோன்போ டுயர்பதிப் பெயர்ந்ததும்
பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்க்கு
உற்றதும் எல்லாம் ஒழிவின் றுணர்ந்தாங்கு
என்பதிப் பெயர்ந்தேன் என்துயர் போற்றிச்
செம்பியன் மூதூர்ச் சிறந்தோர்க் குரைக்க
மைந்தற் குற்றதும் மடந்தைக் குற்றதும்

எழுந்துசென்று, 'இடைக்குலமக்காள்! அந்தோ, அடைக்கலப்பொருளை இழந்து கெட்டேன்; கோவலன் குற்றமுடையவனல்லன்; அரசனே தவறினன்; செங்கோலும் வெண்குடையும் இங்ஙனம் பிழைபடவும் நேர்ந்தனவோ!' என்றலறி இரவின் நடுச்சாமத்தே எரியிற்புகுந்து மாய்ந்தனள்.

கோவலன் கண்ணகி இருவரையும் தம்முடனழைத்துக்கொண்டு மதுரை வந்த கவுந்தியடிகள், கோவலனை அரசன் கொலைசெய்தது கேட்டதும் உண்டாகிய பெருஞ்சீற்றமானது அவ்வரசனது மரணத்தால் தணிந்ததாயினும், 'என்தொடர்பால் இவர்கட்கு இக்கொடுவினை வந்ததுபோலும்' என்றிரங்கி உண்ணா நோன்புகொண்டு உயிரைவிட்டனள். அன்றியும், கண்ணகியின் சீற்றத்தால் மதுரைமாநகரம் எரிக்கப்பட்டது. இவற்றையெல்லாம் மதுரையில் நேரிலுணர்ந்த யான், பின்பு என் ஊராகிய காவிரிப்பூம்பட்டினம் சென்று, என்னண்பனை கோவலன் கொலைமுதலியவற்றால் யானடைந்த துயரங்களை ஆங்குள்ள பெரியோர்கட்கு உரைக்கலானேன்.

அவ்வாறு உரைத்த செய்தி சிறிதுசிறிதாக ஊரெங்கும்பரவி முடிவில் கோவலன்தந்தை மாசாத்துவானுக்கு எட்ட, அவ்வணிகர்தலைவன், தன்மைந்

செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக்
கோவலன் தாதை கொடுந்துயர் எய்தி
மாபெருந் தானம் வான்பொருள் ஈத்தாங்கு
இந்திர விகாரம் ஏழுடன் புக்காங்கு
அந்தர சாரிகள் ஆறைம் பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் துறவி எய்தவும்
துறந்தோன் மனைவி மகன்துயர் பொறாஅள்
இறந்ததுயர் எய்தி இரங்கிமெய் விடவும்
கண்ணகி தாதை கடவுளர் கோலத்து
அண்ணலம் பெருந்தவத் தாசீ வகர்முன்
புண்ணிய தானம் புரிந்தறங் கொள்ளவும்
தானம் புரிந்தோன் தன்மனைக் கிழத்தி
நாள்விடூஉ நல்லுயிர் நீத்துமெய் விடவும்
மற்றது கேட்டு மாதவி மடந்தை

---

தனுக்கும் மருகிக்கும் பாண்டியனுக்கும் நேர்ந்த கொடுந்துன்பங்களைச் சகியாதவனாய், இல்லறத்தைவெறுத்துத் தான்படைத்த பெரும்பொருளனைத்தையும் உத்தமதானங்களிற் செலவிட்டுப், பௌத்தசங்கத்தார் இருக்கையாகிய இந்திர விகாரத்தைச் சார்ந்து, அங்கே பிறப்பறத் தவஞ்செய்துகொண்டிருக்கும் முனிவர் முந்நூற்றுவரைச் சரணமடைந்து துறவியாயினன்.

அம் மாசாத்துவான் மனைவியாகிய கோவலன்தாயோ, தன் செல்வப்புதல்வனுக்கு நேர்ந்த விபத்தைப் பொறாதவளாய் அளவிறந்த துயரால் நொந்து உயிர்விட்டனள். இனிக் கண்ணகியின் தாதையான மாநாய்கன், தவமுனிவராகிய ஆசீவகரையடைந்து தன் பெரும்பொருள்களாற் புண்ணியதானங்களைப் புரிந்து துறவுபூண்டனன். அவன் மனைவியாகிய கண்ணகியின்தாய் சிலநாள்களுள்ளே உயிர் நீத்தனள். இச்செய்தியெல்லாங்கேட்ட கோவலன் கணிகையாகிய மாதவி பெரிதுந் துக்கித்து, தன்பம்விளைவிக்கும் பரத்தை

நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்
மணிமே கலையை வான்றுயர் உறுக்கும்
கணிகையர் கோலங் காணா தொழிகெனக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்
என்வாய்க் கேட்டோர் இறந்தோ ருண்மையின்
நன்னீர்க் கங்கை யாடப் போந்தேன்
மன்னர் கோவே! வாழ்க ஈங்கெனத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்த
வாடா வஞ்சி வானவர் பெருந்தகை
மன்னவன் இறந்தபின் வளங்கெழு சிறப்பின்
தென்னவன் நாடு செய்ததீங் குரையென
நீடுவா ழியரோ நீணில வேந்தென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குமின்

யர்கோலத்திலே தன்மகள் மணிமேகலையைப் புகவிடாதபடி தன் தாயான சித்திராபதிக்குக் கூறிவிட்டு, மாலையுடன் தன் கூந்தலையுங்களைந்து பிக்குணியாகிப் பௌத்தவிகாரமடைந்து தருமோபதேசம் பெற்றனள்.

இங்ஙனமாக, யான் மதுரையிலிருந்து கொணர்ந்த கொடுஞ்செய்தி கேட்டவர்களுள் இறந்தவர்சிலரும் உண்மையால் அப்பாவவிமோசனத்தின் பொருட்டுக் கங்கையாடவெண்ணி இங்குவரலாயினேன்; இதுவே என் வருகையின் காரணம்; வேந்தே! நீ வாழ்க' என்று அம்மாடலமறையோன் முன்னிகழ்ந்தவையெல்லாம் விளங்கச் செங்குட்டுவனுக்குக் கூறினன்.

இவையாவுங் கேட்டிருந்த அவ்வஞ்சிவேந்தன் 'நான்மறையாள! பாண்டியன் தான்புரிந்த கொடுங்கோன்மையை நினைந்து உயிர்நீத்தபின்னர் அப்பாண்டிநாட்டில் நிகழ்ந்த விசேடம் என்னை?' என்று உசாவினன். மாடலனும் அரசனைநோக்கி, 'சோழர்குடிக்குரிய தாயத்தாரொன்பதின்மர் தம்மி

மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
ஒத்த பண்பினர் ஒன்பது மன்னர்
இளவரசு பொறாஅர் ஏவல் கேளார்
வளநா டழிக்கும் மாண்பினர் ஆதலின்
ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்தவன்
பொன்புனை திகிரி ஒருவழிப் படுத்தோய்!
பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு
வேம்புமுதல் தடிந்த ஏந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிப் பொறைய! கேட்டருள்
கொற்கையி லிருந்த வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்லர் ஈரைஞ் ஞூற்றுவர்
ஒருமுலை குறைத்த திருமா பத்தினிக்கு
ஒருபகல் எல்லை உயிர்ப்பலி யூட்டி
உரைசெல வெறுத்த மதுரை மூதூர்
அரசுகெடுத் தலம்வரும் அல்லற் காலைத்
தென்புல மருங்கின் தீதுதீர் சிறப்பின்

---

லொன்றுகூடி நின் மைத்துனச்சோழனாகிய கிள்ளியோடு பகைத்து அவனது இளவரசியலையேற்று ஏவல்கேளாமல் சோணாட்டைப் பெரிதும் அலைத்து வந்தகாலையில், அவ்வொன்பதின் மருடனும் பொருது ஒரு பகலில் அவர்களை யழித்து மைத்துனனது ஆஞ்ஞாசக்கரத்தை ஒருவழிப்படுத்து நிறுவியவனும், பழையன் என்பானது காவன்மரமாகிய வேம்பினை அடியோடு வெட்டியழித்த வாள்வலமுடையவனும் ஆகிய போந்தைக்கண்ணிப் பொறையனே! கேட்டருள்க; கொற்கைநகரத்தே இளவரசாய் விளங்கிய வெற்றிவேற்செழியன் என்பவன் (தன்னாட்டுக்கு நேர்ந்த தீங்கினையறிந்து பெருஞ்சினங்கொண்டு) ஒருமுலைகுறைத்த திருமாபத்தினியாகிய கண்ணகிக்குப் பொற்கொல்லர் ஆயிரவரை ஒருபகலிற் பலியிடுவித்து, பின், தன்னரசனையிழந்துவருந்தும் புகழ்பெற்ற மதுரைமூதூரில் தென்னாட்சிக்குரியதாய்த் தொன்றுதொட்டு

மன்பதை காக்கும் முறைமுதற் கட்டிலின்
நிரைமணிப் புரவி ஓரேழ் பூண்ட
ஒருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுளே றினனென
மாலைத் திங்கள் வழியோ னேறினன்
ஊழிதொ றூழி உலகங் காத்து
வாழ்க எங்கோ வாழிய பெரிதென
மறையோன் கூறிய மாற்ற மெல்லாம்
இறையோன் கேட்டாங் கிருந்த எல்லையுள்
அகல்வாய் ஞாலம் ஆரிருள் விழுங்கப்
பகல்செல முதிர்ந்த படர்கூர் மாலைச்
செந்தீப் பரந்த திசைமுகம் விளங்க
அந்திச் செக்கர் வெண்பிறை தோன்றப்
பிறையேர் வண்ணம் பெருந்தகை நோக்க
இறையோன் செவ்வியிற் கணியெழுந் துரைப்போன்
எண்ணான்கு மதியம் வஞ்சிநீங் கியது
மண்ணாள் வேந்தே! வாழ்கென் றேத்த

வருஞ் சிங்காதனத்தே — தெய்வத்தன்மைவாய்ந்த ஒற்றையாழியந்தேர்மேற் காலைச் செங்கதிர்க்கடவுள் ஏறி விளங்கியவாறுபோல — சந்திரவமிசத்தோனாகிய அவ் விளஞ்செழியன் ஏறி விளங்குவானாயினன்; அரசே! நீடு வாழ்க' என்று கூறி முடித்தான்.

கங்கைக்கரைப்பாடியிலே செங்குட்டுவன் இவற்றையெல்லாம் (நெடுநாட்களுக்குப்பின் மாடலன் வாயினின்றும்) கேட்டறிந்து வியப்புற்றிருந்த காலையில் விரிந்த ஞாலத்தைப் பேரிருள் விழுங்கும்படி வந்த மாலைக்காலத்தே, செந்தீப் பரந்ததுபோன்ற மேலைத்திசை விளக்கமெய்த அந்திவெண்பிறை தோன்றியது. அங்ஙனம் பிறையெழுந்தபடியைப் பெருந்தகையான செங்குட்டுவன் நோக்கினான். அப்போது பக்கத்திருந்த நிமித்திகர்தலைவன் 'வேந்தர்வேந்தே!

நெடுங்காழ்க் கண்டம் நிரல்பட நிரைத்த
கொடும்பட நெடுமதிற் கொடித்தேர் வீதியுட்
குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன
உறையுள் முடுக்கர் ஒருதிறம் போகி
வித்தகர் கைவினை விளங்கிய கொள்கைச்
சித்திர விதானத்துச் செம்பொற் பீடிகைக்
கோயி லிருக்கைக் கோமக னேறி
வாயி லாளரின் மாடலற் கூஉய்
இளங்கோ வேந்தர் இறந்ததற் பின்னர்
வளங்கெழு நன்னாட்டு மன்னவன் கொற்றமொடு
செங்கோற் றன்மை தீதின் றோவென
எங்கோ வேந்தே! வாழ்கென் றேத்தி
மங்கல மறையோன் மாடலன் உரைக்கும்
வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப
எயில்மூன் றெறிந்த இகல்வேற் கொற்றமும்

---

வஞ்சியினின்றும் தேவரீர் புறப்பட்டு இன்றோடு முப்பத்திரண்டு மாதங்களாகின்றன’ என்று, சமயோசிதமாகக் கூறி வாழ்த்தினன்.

அவன் கூறியதைக்கேட்ட செங்குட்டுவன், அக்கங்கைப்பாடியில், குத்துக்கோலுடன் கூடிய பல்வண்ணத்திரைகளால் ஒழுங்காக நிரைக்கப்பட்டுப் படங்குகளையே மதிலாகவுடைய தேர்வீதியுள்ளே, சிறிதும் பெரிதுமாய்க் குன்றுகளைக் கண்டாற்போல்விளங்கும் உறையுள்களமைந்த முடுக்கின் ஒருபக்கமாகச் சென்று, சிற்பவேலைப்பாடு மிக்கதும் சித்திரவிதானமமைந்ததுமான அத்தாணி மண்டபத்தை அடைந்து, ஆங்குள்ள பொற்சிங்காதனத்தே வீற்றிருந்து வாயில் காவலரால் மாடலமறையோனை அழைக்கச்செய்தனன்.

அவன்வந்ததும், செங்குட்டுவன் அவ்வந்தணனைநோக்கி ‘என் மைத்துனனாகிய சோழனுடன் பகைத்த இளங்கோவேந்தர் போரில் இறந்தபின்னர், அச்சோணாட்டரசனது கொற்றமும் செங்கோலும் கேடின்றியுள்ளனவோ’ என்று உசாவ, மாடலனும் அரசனைவாழ்த்தி ‘வேந்தே! தேவரும் வியப்பத் தூங்கெ

குறுநடைப் புறவின் நெடுந்துயர் தீர
எறிதரு பருந்தின் இடும்பை நீங்க
அரிந்துடம் பிட்டோன் அறந்தரு கோலும்
திரிந்துவே றுகுங் காலமு முண்டோ
ஈதோ இல்லைச் செல்லற் காலையும்
காவிரி புரக்கு நாடுகிழ வோற்கென்று
அருமறை முதல்வன் சொல்லக் கேட்டே
பெருமகன் மறையோற் பேணி ஆங்கவற்கு
ஆடகப் பெருநிறை ஐயைந் திரட்டி
தோடார் போந்தை வேலோன் தன்னிறை
மாடல மறையோன் கொள்கென் றளித்தாங்கு
ஆரிய மன்னர் ஐயிரு பதின்மரைச்
சீர்கெழு நன்னாட்டுச் செல்கவென் றேவித்
தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த
மாபெருந் தானை மன்ன குமரர்
சுருளிடு தாடி மருள்படு பூங்குழல்
அரிபரந் தொழுகிய செழுங்கயல் நெடுங்கண்

யில் மூன்றையும் எறிந்தவனது வேல்வெற்றியும், குறுநடையுடைய புறவின் பெருந்துயரமும் அதனைத்துரத்திவந்த பருந்தினிடும்பையும் ஒருங்கு நீங்கத் தன் உடம்பையே அரிந்து துலையிற்புகுந்தோனது செங்கோலும் மாறுபடுங் காலமும் உண்டாமோ? காவிரியாற் புரக்கப்படும் சோணாட்டுவேந்தற்குத் துன்பக்காலத்தினுங் கேடில்லை' என்று கூறினன்.

இவ்வாறு மாடலன் சொல்லக்கேட்டுச் செங்குட்டுவன் மகிழ்வுற்று அவனைப் பெரிதும் உபசரித்துத் தன்நிறையளவாக ஐம்பது துலாம்பாரம் பொன்னை அம்மறையவற்குத் தானஞ்செய்து வெகுமானித்தனன். அது முடிந்ததும், சேரர்பெருமான் தன் யாத்திரைக்கு உதவிபுரிந்த ஆரியவரசராகிய கன்னர் நூற்றுவரையும் அவருடைய சிறப்புமிக்க நாட்டுக்குச் செல்லுமாறு விடுத்துப் பின் தன் தூதுவராயிரவரை அழைப்பித்து, தமிழரது பேராற்றலை யறியாது போர்க்கோலங்கொண்டுவந்து தோற்றுத் தாபதவேடம் பூண்டு

விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச்
சூடக வரிவளை ஆடமைப் பணைத்தோள்
வளரிள வனமுலைத் தளிரியன் மின்னிடைப்
பாடகச் சீறடி ஆரியப் பேடியொடு
எஞ்சா மன்னர் இறைமொழி மறுக்கும்
கஞ்சுக முதல்வர் ஈரைஞ் ஞாற்றுவர்
அரியிற் போந்தை அருந்தமிழ் ஆற்றல்
தெரியாது மலைந்த கனக விசயரை
இருபெரு வேந்தர்க்குக் காட்டிட ஏவித்
திருந்துதுயில் கொள்ளா அளவை யாங்கணும்
பரம்புநீர்க் கங்கைப் பழனப் பாசடைப்
பயிலிளந் தாமரைப் பல்வண் டியாழ்செய
வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக்
குணதிசைக் குன்றத் துயர்மிசைத் தோன்றக்
குடதிசை யாளும் கொற்ற வேந்தன்
வடதிசைத் தும்பை வாகையொடு முடித்துத்
தென்றிசைப் பெயர்ந்த வென்றித் தானையொடு
நிதிதுஞ்சு வியனகர் நீடுநிலை நிவந்து
கதிர்செல வொழித்த கனக மாளிகை
முத்துநிரைக் கொடித்தொடர் முழுவதும் வளைஇய
சித்திர விதானத்துச் செய்பூங் கைவினை

ஒளித்த இராசகுமாரரைத் தமிழரசரான சோழபாண்டியர்க்குக் காட்டிவருமாறு ஆணையிட்டு அவர்களை முற்படவே பயணப்படுத்திவிட்டுப் பின் தன் இளைப்பு நீங்கப் பள்ளிமேவித் துயில்கொள்வானாயினன். இங்கு இவ்வாறாக—

சேரராசதானியாகிய வஞ்சிமாநகரிலே செல்வமிகுந்த அரண்மனையுள், யானையளாவிப் பொன்மயமாக விளங்கும் அந்தப்புரத்தே, முத்துக்களாலாகிய சல்லியும் தூக்குமிவைகளால் முழுதும் வளைக்கப்பட்டதும், விசித்திரவிதானம்

இலங்கொளி மணிநிரை இடையிடை வகுத்த
விலங்கொளி வயிரமொடு பொலந்தகடு போகிய
மடையமை செறுவின் வான்பொற் றகட்டிற்
புடைதிர டமளியப் பொற்கா லமளிமிசை
இணைபுணர் எகினத் திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளித் துயிலொற்றுப் படுத்தாங்கு
எறிந்துகளங் கொண்ட இயறேர்க் கொற்றம்
அறிந்துரை பயின்ற ஆயச் செவிலியர்
தோட்டுணை துறந்த துயரீங் கொழிகெனப்
பாட்டொடு தொடுத்துப் பல்யாண்டு வாழ்த்தச்
சிறுகுறுங் கூனுங் குறளுஞ் சென்று
பெறுகநின் செவ்வி பெருமகன் வந்தான்
நறுமலர்க் கூந்தல்! நாளணி பெறுகென

அமைந்ததும், மணிநிரைகளை இடையிடையே வகுத்து வயிரமழுத்தப்பெற்ற பொற்றகட்டிடுைளி ஒழுகப்பெற்றதும், இறுகக்கட்டப்பெற்றுப் புடைதிரண்ட பொற்கால்களையுடையதுமான அழகுவாய்ந்த பெரிய அமளிக்கட்டிலின்மேலே புணர்ச்சியுற்ற அன்னங்களின் புனிப்பால் வீழ்ந்த இளமையான இறகுகளைச் செறித்து இரட்டையாக விரிக்கப்பெற்ற பள்ளியிடையே, கோப்பெருந்தேவி யாகிய இளங்கோவேண்மாள் நெடுநாட்பிரிவால் துக்கமென்பதின்றித் துன்புற்றிருந்தனள்.

அந்நிலையில் செங்குட்டுவனது வடநாட்டு வெற்றியை அறிந்தவராகிய செவிலிமார்கள் ‘ அன்னாய் ! காதற்கொழுநனைப் பிரிந்திருந்ததனால் உண்டான நின் மனக்கவலையை இனி யொழியக்கடவாய்’ என்று கூறிப் பாசுரங்களோடு தொடுத்துப் பல்லாண்டு பாடுவாராயினர். அவ்வாறே, அரசிக்கு ஊழியஞ்செய்யும் கூனருங் குறளருஞ் சென்று அடிவணங்கித் ‘தேவீ ! எம் பெருமான் வந்துவிட்டனன்; இனி நீ முகமலர்ச்சியுடன் கூந்தலில் நாளொப் பனைபெற்று நலம்பெற விளங்குக’ என்றார்.

அமைவிளை தேறல் மாந்திய கானவன்
கவண்விடு புடையூஉக் காவல் கைவிட
வீங்குபுனம் உணீஇய வேண்டி வந்த
ஓங்கியல் யானை தூங்குதுயி லெய்த
வாகை தும்பை வடதிசைச் சூடிய
வேக யானையின் வழியோ நீங்கெனத்
திறத்திறம் பகர்ந்து சேணோங் கிதணத்துக்
குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்
வடதிசை மன்னர் மன்னெயில் முருக்கிக்
கவடி வித்திய கழுதையே ருழவன்
குடவர் கோமான் வந்தான் நாளைப்
படுநுகம் பூணாய் பகடே! மன்னர்
அடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனுந்
தொடுப்பே ருழவ ரோதைப் பாணியும்

இங்ஙனம் ஆயத்தார் பெருந்தேவியின் பிரிவாற்றாமையை ஒருசார் ஆற்றினின்றனர். இவ்வாறாக, மலைகளிற் புனங்காவல்செய்யுங் கானவன் ஆங்கு மூங்கிலிற்கட்டப்பட்ட தேனையுண்டு களித்து அக்களிப்பால் கவண்விட்டுக் காவல் புரிதலை நெகிழ்ந்தமையின், அச்சமயமறிந்து செழித்த புனக்கதிர்களை உண்ணுதற்குவந்த பெரிய யானைகள் நல்ல துயிலடையும்படி மலைமகளிர் புனப்பரண் மேலிருந்துகொண்டு 'வடதிசைச்சென்று வாகையுந்தும்பையுஞ் சூடிய போர்க்களிறுகள் திரும்பும்வழி சுருங்கக்கடவது' என்று பல பண்களிற் குறிஞ்சிப் பாட்டுக்களைப் பாடினர்.

'வடவரசரது கோட்டைகளைத் தகர்த்துக் கழுதைகளை ஏரிலே பூட்டி உழுது வெள்வரகினை விதைத்த உழவனாகிய குடவர்கோமான் நாளை வந்துவிடுவான்; ஆதலாற் பகடுகளே! நுகம்பூண்டு உழுவீராக; பகைமன்னரைச் சிறை நீக்கும் அவன் பிறந்தநாளொப்பனையும் வருகின்றது' என்று பாடும் உழவரது ஒலியமைந்த பாடல்கள் எழுந்தன.

தண்ணான் பொருநை யாடுநர் இட்ட
வண்ணமும் சுண்ணமும் மலரும் பரந்து
விண்ணுறை விற்போல் விளங்கிய பெருந்துறை
வண்டுணா மலர்ந்த மணித்தோட்டுக் குவளை
முண்டகக் கோதையொடு முடித்த குஞ்சியின்
முருகுவிரி தாமரை முழுமலர் தோயக்
குருகலர் தாழைக் கோட்டுமிசை யிருந்து
வில்லவன் வந்தான் வியன்பே ரிமயத்துப்
பல்லா னிரையொடு படர்குவிர் நீரெனக்
காவலன் ஆனிரை நீர்த்துறை படீஇக்
கோவல ரூதுங் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலைவா லுகத்துக்
குண்டுநீ ரடைகரைக் குவையிரும் புன்னை
வலம்புரி யீன்ற நலம்புரி முத்தம்
கழங்காடு மகளி ரோதை யாயத்து
வழங்குதொடி முன்கை மலர வேந்தி
வானவன் வந்தான் வளரிள வனமுலை

இவ்வாறே, அரசனது ஆனிரைகளைக் காக்கும் கோவலர்கள், குளிர்ந்த ஆன்பொருநையாற்றில் நீராடுமகளிரால் விடப்பட்ட வண்ணமுஞ்சுண்ணமும் மலரும் பரந்து இந்திரவிற்போல் விளங்குகின்ற பெரிய துறையருகிலுள்ள தாழைக்கோடுகளின்மேல் இருந்துகொண்டு, தம் பசுக்களை அப்பெருந்துறையிற் படியவிட்டுத் தாமரை குவளைப் பூக்களைத் தலையிற்சூடியவராய் 'ஆனிரைகாள்! வில்லவனாகிய நம் வேந்தன் வந்தனன்; அவன் இமயப்பக்கத்தினின்று கொணர்ந்த பெருத்த பசுநிரைகளோடு நீரும் காளைக் கூடிமகிழக்கடவீர்' என்னுங் கருத்துப்பட ஊதும் ஆயரது வேய்ங்குழல்கள் ஒலித்தன.

இனி, வெண்டிரைகளால் மோதப்பட்ட கடற்கரை மணற்பரப்பிலுள்ள புன்னைமரத்தின்கீழ் வலம்புரிச்சங்கமீன்ற நன்முத்துக்களையே கழங்காகக்கொண்டு ஆடும் இளமகளிர், அவற்றைத் தங் கைகளில் ஏந்தியவராய், 'நெடு நாட்பிரிந்த நம் அரசியோடுகூடி மகிழும்படி வானவனாகிய வேந்தன் மீண்டனன். அவன் சூடிய தும்பையையும் பனம்பூவையும் வஞ்சிமாநகரையும்,

தோணல முணீஇய தும்பை போந்தையொடு
வஞ்சி பாடுது மடவீர் யாமெனும்
அஞ்சொற் கிளவியர் அந்தீம் பாணியும்
ஓர்த்துட னிருந்த கோப்பெருந் தேவி
வால்வளை செறிய வலம்புரி வலனெழ
மாலைவெண் குடைக்கீழ் வாகைச் சென்னியன்
வேக யானையின் மீமிசைப் பொலிந்து
குஞ்சர வொழுகையிற் கோநகர் எதிர்கொள
வஞ்சியுட் புகுந்தனன் செங்குட் டுவனென்.

---

(56) தண்மதி யன்ன தமனிய நெடுங்குடை
மண்ணகம் நிழற்செய மறவாள் ஏந்திய
நிலந்தரு திருவின் நெடியோன் தனாது

---

நங்கைமீர்! நாம் பாடுவோமாக' என்று இன்சொல்லினராய் அழகிய பாடல்களைப் பாடினர். இவ்விதம், நால்வகை நிலங்களினின்றும் எழுந்த இன்னிசைகளைக் கூர்ந்து கவனித்துக்கொண்டு உறங்காதிருந்த கோப்பெருந்தேவியானவள், தன் கைவளைகளைச் செறித்தணிந்துகொள்ளவும், நகரில் வலம்புரிச்சங்கங்கள் வலமாகவெழுந்து முழங்கவும், முத்துமாலைகளமைந்த வெண்கொற்றக்குடையின் கீழ் வாகையணிந்த சென்னியோடும் சேரன்செங்குட்டுவன் தன் பட்டவர்த்தனக்களிற்றின்மேல் விளங்கியவனாய், குஞ்சரங்கள் பூட்டிய இரதங்களுடன் கோநகர்முழுதும் வந்தெதிர்கொள்ள வெற்றித்தானையுடன் வஞ்சிமூதூரிற் பிரவேசஞ்செய்யலாயினன்.

56. ஷை, ஷை, நடுகற்காதை.

தண்மதிபோன்றதும் பொன்னாலியன்றதுமான வெண்கொற்றக் குடையால் மண்ணகத்தைக் குளிர்வித்த நிலந்தருதிருவி னெடியோனாகிய செங்குட்டுவன்,

வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூர்
ஒண்டொடித் தடக்கையின் ஒண்மலர்ப் பலிதூஉய்
வெண்டிரி விளக்கம் ஏந்திய மகளிர் ,
உலக மன்னவன் வாழ்கென் றேத்திப்
பலர்தொழ வந்த மலரவிழ் மாலை
போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
வேந்துவினை முடித்த ஏந்துவாள் வலத்தர்
யானை வெண்கோ டழுத்திய மார்பும்
நீள்வேல் கிழித்த நெடும்புண் ஆகமும்
எய்கணை கிழித்த பகட்டெழி லகலமும்
வைவாள் கிழித்த மணிப்பூண் மார்பமும்
மைம்மல ருண்கண் மடந்தைய ரடங்காக்
கொம்மை வரிமுலை வெம்மை வேதுறீஇ
அகிலுண விரித்த அம்மென் கூந்தல்
முகில்நுழை மதியத்து முரிகருஞ் சிலைக்கீழ்
மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து
சிதரரி பரந்த செழுங்கடைத் தூது
மருந்து மாயதிம் மாலையென் றேத்த

விசயம் விளங்கும் அவ்வஞ்சிமாநகரிற் புக்கபின்னர், மகளிரெல்லாங்கூடித் திருவிளக்குகளைக் கொணர்ந்துவின்று மலர்களைப் பலியாகத் தூவி 'உலக மன்னனாகிய நம்மரசன் நீடுவாழ்க' என்றேத்தும்படி மாலைக்காலமும் வந்தது. பலரும் தொழத்தக்கதும் மலர்கள் விரிதற்குக் காரணமாகியதுமான அவ்வழகிய காலத்தே, பனம்பூங்கண்ணியைப் பூமாலையோடணிந்தவர்களும் தம் அரசனது போர்வினையை முடித்தவர்களுமான வாள்வீரரது யானைக்கோடழுத்தினவும் வேல்கணைவாள்களாற் கிழிப்புண்டு புண்பட்டனவுமான மார்புகளை, அவர்கள் வீரபத்தினியர் தம் அழகிய தனவெம்மையால் வேதுகொண்டு ஆற்றுவித்தனர். இங்ஙனம் ஆற்றுவிக்க அவ்வீரர்கள் மன்மதபாணம் பாய்ந்தவர்களாய், 'இம் மகளிருடைய கடைக்கண்களாகிய தூது முன்பு நமக்குப் பாசறைக்கண்ணே

இருங்களித் துவர்வாய் இளநிலா விரிப்பக்
கருங்கயல் பிறழும் காமர் செவ்வியின்
திருந்தெயி றரும்பிய விருந்தின் மூரலும்
மாந்தளிர் மேனி மடவோர் தம்மால்
ஏந்துபூண் மார்பின் இளையோர்க் களித்துக்
காசறைத் திலகக் கருங்கறை கிடந்த
மாசில்வாண் முகத்து வண்டொடு சுருண்ட
குழலும் கோதையும் கோலமும் காண்மார்
நிழல்கால் மண்டிலம் தம்மெதிர் நிறுத்தி
வணர்கோட்டுச் சீறியாழ் வாங்குபு தழீஇப்
புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்
குரல்குர லாக வருமுறைப் பாலையில்
துத்தம் குரலாத் தொன்முறை யியற்கையின்
அந்திக் குறிஞ்சி அகவன் மகளிரின்
மைந்தர்க் கோங்கிய வருவிருந் தயர்ந்து
முடிபுற முரிஞ்சும் கழற்காற் குட்டுவன்
குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல

---

வருத்தஞ்செய்ததாயினும், இம்மாலைக்காலத்தே அதற்குமருந்துமாகியது' என்று புகழ்ந்தேத்த, அதுகேட்டு அம்மகளிர் தம் பவளவாயினின்று நிலவெழக் கடைக்கண்ணோக்குடன் புன்சிரிப்பாகிய விருந்தூட்டி மகிழ்வித்தனர்.

மற்றுமுள்ள இளைஞரான வீரர்கள், இசைவல்ல மகளிரது இன்பக்கடலி லாடத் தம் குலைந்தகோலத்தைக் கண்ணாடியால் திருத்திக்கொண்டு, யாழ்தழுவிக் குறிஞ்சிப்பண்ணை இனிதுபாடிய அந்நங்கையரால் கானவிருந்து செய்யப் பெற்றனர்

இங்ஙனம், அவ்வழகிய மாலைக்காலமானது வீரர்க்கெல்லாம் இன்பவிருந் தயர்வித்துப் பின், சேரன்-செங்குட்டுவன் குடிகளது குறைதீர்த்தல்வேண்டி வெளிப்போதருங்காலத்து விளங்கும் அவனது திருமுகம்போல, உலகந்

உலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்
பலர்புகழ் மூதூர்க்குக் காட்டி நீங்க
மைந்தரும் மகளிரும் வழிமொழி கேட்ப
ஐங்கணை நெடுவேள் அரசுவீற் றிருந்த
வெண்ணிலா முன்றிலும் வீழ்பூஞ் சேக்கையும்
மண்ணீட் டரங்கமும் மலர்ப்பூம் பந்தரும்
வெண்கால் அமளியும் விதானவே திகைகளும்
தண்கதிர் மதியந் தான்கடி கொள்ளப்
படுதிரை சூழ்ந்த பயங்கெழு மாநிலத்
திடைநின் றோங்கிய நெடுநிலை மேருவிற்
கொடிமதில் மூதூர் நடுநின் றோங்கிய
தமனிய மாளிகைப் புனைமணி யரங்கின்
வதுவை வேண்மாள் மங்கல மடந்தை
மதியேர் வண்ணங் காணிய வருவழி
எல்வளை மகளிர் ஏந்திய விளக்கம்
பல்லாண் டேத்தப் பரந்தன ஒருசார்
மண்கணை முழவும் வணர்கோட் டியாழும்
பண்கனி பாடலும் பரந்தன ஒருசார்

---

தொழும்படி தோன்றிய பூர்ணசந்திரனை அவ்வஞ்சிமூதூர்க்குக் காட்டித் தான் நீங்கியது. அப்போது மைந்தரும் மகளிருந் தன்னாணைப்படியே நடக்குமாறு ஐங்கணைக்கிழவனான மன்மதன் அரசுவீற்றிருந்த நிலாமுற்றங்களும் பூம்பள்ளிகளும், ஆடரங்குகளும், மலர்ப்பந்தர்களும், மஞ்சங்களும், விதானமமைந்த வேதிகைகளும் அத் தண்கதிரால் விளக்கமுறுவனவாயின.

கடல்சூழ்ந்த இவ்வுலகிற்கு இடைநின்று விளங்கும் மேருப்போல, அவ் வஞ்சிமாநகரின் நடுவில் நின்றோங்கும் பொன்மயமான அரண்மனையுள், நிலா முற்றமாகிய மணியரங்கிலே அப் பூர்ணசந்திரனது காட்சியைக்காணவேண்டி, மகளிர் தம் வளைக்கைகளில் விளக்குகளை ஏந்திப் பல்லாண்டுபாடி ஏத்திக் கொண்டு ஒருபுடைவரவும், மத்தளம் யாழ்களுடன் பண்கனிந்த பாடலிசைகள் ஒருசார் பரவவும்; கூனருங் குறளருங் கஸ்தூரி வெண்கலவைச் சாந்தங்களை

மான்மதச் சாந்தும் வரிவெண் சாந்தும்
கூனுங் குறளும் கொண்டன ஒருசார்
வண்ணமுஞ் சுண்ணமும் மலர்ப்பூம் பிணையலும்
பெண்ணணிப் பேடியர் ஏந்தினர் ஒருசார்
பூவும் புகையும் மேவிய விரையும்
தூவியஞ் சேக்கை சூழ்ந்தன ஒருசார்
ஆடியும் ஆடையும் அணிதரு கலன்களும்
சேடியர் செவ்வியின் ஏந்தினர் ஒருசார்
ஆங்கவள் தன்னுட னணிமணி யரங்கம்
வீங்குநீர் ஞாலம் ஆள்வோ னேறித்
திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவும்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவும்
செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை ஒலியாது மென்முலை அசையாது
வார்குழை ஆடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒருதிற னாக ஓங்கிய

---

ஏந்தினவராய் ஒருபுடை செல்லவும், பெண்கோலம்பூண்ட பேடியர் வண்ணஞ் சுண்ணம் மாலையிவற்றைத் தாங்கிவரவும், பூவும் நறும்புகைகளும் வாசனைப்பண்டங்களும் பரவவும், ஆடை கண்ணாடி அணிகலன்களைக் கையிற் கொண்டு சேடியர் சூழவும் இவ்வாறாக எழுந்தருளிய தன் தன்மபத்தினியாகிய இளங்கோவேண்மாளோடுங் கூடி, வேந்தர்பெருமானான செங்குட்டுவன் அம் மணியரங்கினை அடைந்து அதனில் வீற்றிருப்பானாயினன்.

அப்போது, மறையவர்நிறைந்த பறையூர்வாசியும், கூத்தில் வல்லவனுமாகிய சாக்கையன் ஒருவன் அரசன்முன் வந்துநின்று, சிவபிரான் திரிபுரங்களை எரித்தவிடத்தே உமையவளை ஒரு பாகத்துக்கொண்டு ஆடிய கொட்டிச்

இமையவ னாடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கைய னாடலின் மகிழ்ந்தவன்
ஏத்தி நீங்க இருநிலம் ஆள்வோன்
வேத்தியன் மண்டப மேவிய பின்னர்
நீலன் முதலிய கஞ்சுக மாக்கள்
மாடல மறையோன் றன்னொடுந் தோன்றி
வாயி லாளரின் மன்னவற் கிசைத்தபின்
கோயில் மாக்களிற் கொற்றவற் றொழுது
தும்பை வெம்போர்ச் சூழ்கழல் வேந்தே!
செம்பியன் மூதூர்ச் சென்றுபுக் காங்கு
வச்சிரம் அவந்தி மகதமொடு குழீஇய
சித்திர மண்டபத் திருப்ப வேந்தன்
அமரகத் துடைந்த ஆரிய மன்னரொடு
தமரிற் சென்று தகையடி வணங்க

சேதம் என்னும் கூத்தினை அப்பெருமான் ஆடியமுறையே நடித்துக்காட்டக் குடவர்கோமானும் கோப்பெருந்தேவியும் அதனைக்கண்டு மகிழ்ந்தனர். இங்ஙனம் இவ்விருவராலு நன்கு மதிப்புப்பெற்று அக்கூத்தச்சாக்கையன் விடைபெற்று நீங்கியபின்னர்ச் செங்குட்டுவன் தேவியுடன் அந்நிலாமுற்றத்தைவிட்டுப் புறப்பட்டு அரசிருப்பாகிய பேரோலக்க மண்டபத்தை அடைந்தான்.

அடைந்தபின்னர், நீலன் முதலாய கஞ்சுகமாக்கள் மறையோனான மாடலனுடன் அவ்விடம் வந்து, வாயில்காவலரால் தம்வரவை மன்னனுக்கறிவித்து அவனாணைபெற்று உட்சென்று அரசனை வணங்கிச் சொல்லுகின்றார்:— "வெற்றி வேந்தே! தேவரீர் எங்களுக்கிட்ட கட்டளைப்படியே, சோழர்களின் பழமை தங்கிய தலைநகரத்துச்சென்று, அங்கே வச்சிரம் அவந்தி மகதநாட்டரசரால் அளிக்கப்பெற்ற பந்தருந் தோரணவாயிலுங் கொண்ட சித்திரமண்டபத்தில் வீற்றிருந்த செம்பியர்பெருமானைக் கண்டு, வடநாட்டுப்போரில் அகப்பட்ட ஆரியமன்னரை அவ்வேந்தனுக்குக்காட்டி அவனடிகளை வணங்கினேம்.

நீளமர் அழுவத்து நெடும்பே ராண்மையொடு
வாளுங் குடையும் மறக்களத் தொழித்துக்
கொல்லாக் கோலத் துயிருய்ந் தோரை
வெல்போர்க் கோடல் வெற்ற மன்றெனத்
தலைத்தேர்த் தானைத் தலைவற் குரைத்தனன்
சிலைத்தா ரகலத்துச் செம்பியர் பெருந்தகை
ஆங்குநின் றகன்றபின் அறக்கோல் வேந்தே!
ஓங்குசீர் மதுரை மன்னவற் காண
ஆரிய மன்னர் அமர்க்களத் தெடுத்த
சீரியல் வெண்குடைக் காம்புநனி சிறந்த
சயந்தன் வடிவிற் றலைக்கோ லாங்குக்
கயந்தலை யானையிற் கவிகையிற் காட்டி
இமயச் சிமயத் திருங்குயி லாலுவத்து
உமையொரு பாகத் தொருவனை வணங்கி
அமர்க்களம் அரசன தாகத் துறந்து
தவப்பெருங் கோலங் கொண்டோர் தம்மேற்
கொதியழற் சீற்றங் கொண்டோன் கொற்றம்
புதுவ தென்றனன் போர்வேற் செழியனென்று
ஏனை மன்னர் இருவருங் கூறிய

அஃதறிந்த அவ்வரசன், 'போர்க்களத்தே பேராண்மை காட்டிப்பொருது தம் வாளையும் குடையையும் அக்களத்தே இட்டு உயிர்தப்பியோடிய வேந்தரைப் போரிற்பிடித்துக் கொண்டுவருதல் ஒரு வெற்றியாகாது' என்று தன் தேர்ப்படைத்தலைவனை நோக்கிக் கூறினான். பின்னர், அரசே! அவன்தலை நகரைவிட்டு நீங்கி மதுரைசென்று பாண்டியனைக் கண்டோம். "அமர்க்களத்தே தங்கள் குடைக்காம்பை நட்டுவத்தலைவர்போலக் கையிலே பிடித்துக்கொண்டு இமயப்பக்கத்துள்ள குயிலாலுவம் என்னும் போர்க்களத்தைத் துறந்து புறங் கொடுத்து, ஆங்குள்ள சிவபிரானை வணங்கியவராய்த் தவக்கோலங்கொண் டோடின ஆரியமன்னர்கள்மேல் இவ்வாறு மிக்க சீற்றங்கொண்ட அரசனது வெற்றி இதுவரையில்லாத புதுமையாகும் என்றான், அப்பாண்டியன்"

நீண்மொழி யெல்லாம் நீலன் கூறத்
தாமரைச் செங்கண் தழல்நிறங் கொள்ளக்
கோமகன் நகுதலுங் குறையாக் கேள்வி
மாடலன் எழுந்து மன்னவர் மன்னே!
வாழ்கநின் கொற்றம் வாழ்கவென் றேத்திக்
கறிவளர் சிலம்பிற் றுஞ்சும் யானையிற்
சிறுகுரல் நெய்தல் வியலூர் எறிந்தபின்
ஆர்புனை தெரியல் ஒன்பது மன்னரை
நேரி வாயில் நிலைச்செரு வென்று
நெடுந்தேர்த் தானையொடு இடும்பிற்புறத் திறுத்துக்
கொடும்போர் கடந்து நெடுங்கட லோட்டி
உடன்றுமேல் வந்த ஆரிய மன்னரைக்
கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்!
நெடுந்தார் வேய்ந்த பெரும்படை வேந்தே!
புரையோர் தம்மொடு பொருந்த உணர்ந்த

எனச் சேரர்பிரானுக்குத் தூதர்தலைவனான நீலன் அவ்வேந்தர்கூறிய வார்த்தைகளைச்சொல்ல, இவற்றைச்செவியுற்ற செங்குட்டுவன், தன்வெற்றியை அவ்வரசர்கள் இகழ்ந்ததனாற் கோபம் பெருகித் தாமரைபோன்ற கண்கள் தழனிறங்கொள்ள நகைசெய்தனன். இங்ஙனம் அரசனுக்குச் சோழபாண்டியர்மேற் சீற்றம் பெருகுதலை மறையவனாகிய மாடலன் கண்டு, அச்சபையிலெழுந்து நின்று 'வேந்தர்வேந்தே! நின்வெற்றி விளங்குவதாக' என்றேத்திப் பின்வருமாறு கூறுகின்றான்.

"மிளகுக்கொடி வளர்கின்ற மலைப்பக்கத்துறங்கும் யானைக்கூட்டங்களையுடைய பகைவரது வியலூரையழித்தும், ஆத்திமாலையுடையவரும் சோழர் குடியினருமாகிய ஒன்பதின்மருங் கூடிவிளைத்த பெரும்போரை நேரிவாயில் என்ற ஊரில் வென்றும், பெரிய தேர்ச்சேனைகளுடன் இடும்பாதவனத்துத்தங்கி ஆங்குவிளைந்த போரைக் கடந்தும், நெடுங்கடலில் மரக்கலங்களைச் செலுத்தியும், சினத்துடன் தன்மேல் எதிர்த்துவந்த ஆரியமன்னரைக் கங்கைக்கரையிற் செயித்தும் இங்ஙனம் வெற்றிமாலைசூடி, உயர்ந்தோர் பலருடன் பழகி அறிய

அரைச ரேறே! அமைகநின் சீற்றம்
மண்ணாள் வேந்தே! நின்வா ணாட்கள்
தண்ணான் பொருநை மணலினும் சிறக்க
அகழ்கடல் ஞாலம் ஆள்வோய்! வாழி
இகழாது என்சொற் கேட்டல் வேண்டும்
வையங் காவல் பூண்டநின் நல்யாண்டு
ஐயைந் திரட்டி சென்றதற் பின்னும்
அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோய் ஆயினை
வேந்துவினை முடித்த ஏந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிநின் ஊங்கணோர் மருங்கில்
கடற்கடம் பெறிந்த காவல னாயினும்
விடர்ச்சிலை பொறித்த விறலோ னாயினும்
நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் விடுத்தோ னாயினும்
போற்றி மன்னுயிர் முறையிற் கொள்கெனக்
கூற்றுவரை நிறுத்த கொற்றவ னாயினும்
வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினும்
இகற்பெருந் தானையோ டிருஞ்செரு ஓட்டி
அகப்பா எறிந்த அருந்திற லாயினும்

---

வேண்டுவனவற்றை அறிந்த அரசரேறே! நீ வாழ்க; நின் சீற்றம் அடங்குவதாக; நின்வாழ்நாட்கள் ஆன்பொருநையாற்றுமணலினும் அதிகமாக விளங்குக; யான் கூறுஞ் சொற்களை இகழாது கேட்டருளவேண்டும்; உலகங்காத்தலை மேற்கொண்டுவிளங்கும் உனது சிறந்த ஆயுட்காலத்தே ஐம்பதியாண்டுகள்வரை கழிந்தும், நீ அறக்களவேள்வியைச் செய்யாது எப்போதும் மறக்களவேள்வியே செய்துவருகின்றாய்; வீரவேந்தர் செய்தற்குரிய வினைகளையெல்லாம் முற்றச்செய்து கொற்றவாளை வலத்தேந்திநிற்கும் உன்னுடைய தலைநகரத்தில் முன்னிருந்த புகழ்மிக்க உன் முன்னோரிலே, 'கடற்கடம்பெறிந்த காவலன்

உருகெழு மரபின் அயிரை மண்ணி
இருகடல் நீரும் ஆடினோன் ஆயினும்
சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினும்
மீக்கூற் றாளர் யாவரு மின்மையின்
யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்!
மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் மருங்கிற்
செல்வம் நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரிற்
கண்டனை யல்லையோ காவல் வேந்தே!
இளமை நில்லா தென்பதை யெடுத்தீங்கு
உணர்வுடை மாக்கள் உரைக்கல் வேண்டா
திருஞெமர் அகலத்துச் செங்கோல் வேந்தே!
நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய்! விலங்கின் எய்தினும் எய்தும்
விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்

---

முதல் சதுக்கப்பூதரை வஞ்சியுட்டந்து மதுக்கொள்வேள்வி வேட்டவனீறாக வுள்ள அரசர்களுள் ஒருவரும் இப்போது இல்லாமையின், இந்தயாக்கை நிலையற்றதென்பதை நீயே உணர்வாய்; இவ்வுலகிற் பெருவாழ்வுடையராகிய செல்வரிடத்தே அச்செல்வந்தானும் நிலையாதென்பதை, வெற்றியாளரான தமிழரசரையிகழ்ந்த இவ்வாரியமன்னரிடத்தில் நீயே கண்டனையன்றோ? இனி இளமைநிலையாதென்பதை அறிஞர் உனக்கு உரைக்கவேண்டுவதேயில்லை. என்னெனின், செங்கோல் மன்னனாகிய நீயும், உனது நரைமுதிர்ந்த யாக்கையைக் காண்கின்றாய். தேவயோனியிற் பிறந்த ஒரு நல்லுயிர் அதனிலும் தாழ்ந்த மக்கட்பிறவிக்குத் திரும்பக்கூடும்; மக்கள் யாக்கையிற் பொருந்திய ஆன்மா அவ்வாறே விலங்குடலையெடுத்தலும், அவ்விலங்குடலையெடுத்தது துக்கமிக்க

கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்
ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத்து ஒருங்குநின் றியலாது
செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்
எழுமுடி மார்ப! நீ யேந்திய திகிரி
வழிவழிச் சிறக்க வயவாள் வேந்தே!
அரும்பொருட் பரிசிலே னல்லேன் யானும்
பெரும்பே ரியாக்கை பெற்ற நல்லுயிர்
மலர்தலை யுலகத் துயிர்போகு பொதுநெறி
புலவரை யிறந்தோய்! போகுதல் பொறேஎன்
வானவர் போற்றும் வழிநினக் களிக்கும்
நான்மறை மருங்கின் வேள்விப் பார்ப்பான்
அருமறை மருங்கின் அரசர்க் கோங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டும்
நாளைச் செய்குவம் அறமெனின் இன்றே

நரககதியை அடைதலும் உண்டாம். ஆதலால், இவ்வுயிர்கள் ஆடுகின்ற கூத்தரைப்போல ஓரிடத்தே ஒருகோலங்கொண்டு நிலைத்தல் ஒருபொழுதுமில்லை. தாம் செய்கின்ற கருமங்கட்கேற்ப உயிர்கள் அவ்வக்கதியை அடையுமென்பது குற்றமற்ற அறிஞரது மெய்யுரையாகும்; ஆதலால் இவற்றை நன்குணர்ந்து எழுமுடியாரந் தாங்கிய வேந்தே! வழிவழியாக நின்னாணை வாழ்வதாக; யான் இவற்றைப் பிறர்போலப் பொருட்பரிசில் காரணமாக உன்பாற் சொல்லவந்தவனல்லேன். மற்று, நல்வினைப்பயனால் உத்தமசரீரம்பெற்ற ஒரு நல்லுயிர், செய்யவேண்டிய கருமங்களைச் செய்தலின்றி, இவ்வுலகத்துப் பிறந்திறப்போரெல்லாரும் போம்வழியிலேபோய் வீணேகழிதலைப் பொறாதவனாக யான் இவைகூறினேன். ஆதலின், அறிவுமுதிர்ந்த அரசே! வீட்டுநெறி அளிக்கும் யாகவேதியர்கள் காட்டுகின்ற வேதவழிப்படியே, அரசர்க்கோதப்பட்ட பெருவேள்விகளை நீ செய்தல் தகும். அவ்வறங்களை நாளைச்செய்வோம் என்று தாழ்ப்

கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்
இதுவென வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகில் முழுவதும் இல்லை
வேள்விக் கிழத்தி இவளொடுங் கூடித்
தாழ்கழல் மன்னர் நின்னடி போற்ற
ஊழியோ டூழி யுலகங் காத்து
நீடுவா ழியரோ நெடுந்தகை! என்று
மறையோன் மறைநா உழுது வான்பொருள்
இறையோன் செவிசெறு வாக வித்தலின்
வித்திய பெரும்பதம் விளைந்துபத மிகுத்துத்
துய்த்தல் வேட்கையிற் சூழ்கழல் வேந்தன்
நான்மறை மரபின் நயந்தெரி நாவிற்
கேள்வி முடித்த வேள்வி மாக்களை
மாடல மறையோன் சொல்லிய முறைமையின்
வேள்விச் சாந்தியின் விழாக்கொள ஏவி

போமாயின், கேள்வியளவேயான இவ்வான்மா நீங்கிவிடுதலுங் கூடுமன்றோ? தம் வாணாளை இவ்வளவென்று வரையறுத்துணர்ந்தோர் கடல்சூழ்ந்த இவ்வுலகில் ஓரிடத்தினும் இலர். ஆதலால் யாகபத்தினியாகிய இவ்வேண்மாளுடன் கூடி, அரசரெல்லாம் நின்னடிபோற்ற அவ்வேள்வியை உடனே தொடங்கி ஊழியளவாக உலகங்காவல்புரிந்து, நெடுந்தகாய்! நீ வாழ்வாயாக" என்று அம்மறையவன் உபதேசித்தனன்.

இவ்வாறு, மாடலன், செங்குட்டுவனது செவியே வயலாக வேதம்வல்ல தன்நாவைக்கொண்டுழுது உத்தமதர்மங்களாகிய வித்துக்களை விதைத்தமையின் அவ்விதைகள் அப்போதே விளைந்து பக்குவம்பெற்ற உணவாய்ப் பெருகின. அதனுல் அவற்றை விரைந்துண்ணும் வேட்கை அவ்வரசனுக்கு உண்டாகியது. ஆகவே, சேரர்பெருமான், வேதவழிப்பட்ட தர்மங்களை நன்கறிந்த சிரௌதியராகிய வேள்வியாசிரியர்களுக்கு, மாடலமறையோன் கூறியமுறையே, யாக சாந்திக்குரிய விழாவைத் தொடங்கும்படி ஆணையிட்டனன். பின்னர்த் தன்

ஆரிய வாசரை யருஞ்சிறை நீக்கிப்
பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்
தாழ்நீர் வேலித் தண்மலர்ப் பூம்பொழில்
வேளா விக்கோ மாளிகை காட்டி
நன்பெரு வேள்வி முடித்ததற் பின்னாள்
தம்பெரு நெடுநகர்ச் சார்வதுஞ் சொல்லியம்
மன்னவர்க் கேற்பன செய்க நீயென
வில்லவன் கோதையை விருப்புடன் ஏவிச்
சிறையோர் கோட்டம் சீமின் யாங்கணும்
கறைகெழு நல்லூர்க் கறைவீடு செய்ம்மென
அழும்பில் வேளோடு ஆயக் கணக்கரை
முழுங்குநீர் வேலி மூதூர் ஏவி
அருந்திறல் அரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச்சிற வாதெனப்
பண்டையோர் உரைத்த தண்டமிழ் நல்லுரை
பார்தொழு தேத்தும் பத்தினி யாதலின்

---

னாற் சிறைப்படுத்தப்பட்ட ஆரியமன்னராகிய கனகவிசயரைச் சிறையினின்று விடுவித்து, பொய்கை சூழ்ந்ததும் குளிர்ச்சிதங்கிய மலர்ச்சோலைகளுடையது மாகிய வேளாவிக்கோமந்திரம் என்னும் மாளிகையில் அவர்களை வசிக்கும்படி செய்வித்து, தான் நிகழ்த்தும் யாகமுடிந்ததும் அவரை அவரது நாட்டுக்கனுப்புவதாக அறிவித்ததுடன் அதுவரை அவ்வாரியவரசர்க்கு வேண்டிய உபசாரங்களைச் செய்துவருமாறு வில்லவன்கோதை என்னும் சேனாபதிக்கு மகிழ்ச்சியுடன் கட்டளையுமிட்டான். அவ்வாறே, அழும்பில்வேள் என்னும் அமைச்சனோடு ஆயக்கணக்கர்களை யேவி, நீர்வளமிக்க மூதூர்களிலே சிறைப்பட்டவரை விடுவித்துச் சிறைச்சாலைகளைத் தூய்மை செய்யவும், அரசிறை செலுத்தாது கடன்சுமந்த நாடுகளில் அக்கடமைகளைத் தவிர்க்கவும் ஆணையிட்டனன்.

இங்ஙனம் சேரர்பெருமான் ஆணையிட்டபின், உலகமுற்றுந் தொழுகின்ற பத்தினியாகத் தான் (கண்ணகி) விளங்குதலால், 'அரசர் முறைசெய்து ஒழுக்

ஆர்புனை சென்னி அரசற் களித்துச்
செங்கோல் வளைய உயிர்வா ழாமைத்
தென்புலங் காவல் மன்னவற் களித்து
வஞ்சினம் வாய்த்தபி னல்லதை யாவதும்
வெஞ்சினம் விளியார் வேந்தர் என்பதை
வடதிசை மருங்கின் மன்னவர் அறியக்
குடதிசை வாழுங் கொற்றவற் களித்து
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் விளைத்து
நன்னா டணைந்து நளிர்சினை வேங்கைப்
பொன்னணி புதுநிழற் பொருந்திய நங்கையை
அறக்களத் தந்தண ராசான் பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
மேலோர் விழையும் நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்து
இமையவ ருறையும் இமையச் செவ்வரைச்
சிமயச் சென்னித் தெய்வம் பரசிக்

---

கங்களைப் பேணினாலல்லது, உயர்ந்த பெண்டிரின் கற்புநிலை சிறப்படை யாது' என்ற முன்னோர்மொழியி னுண்மையை ஆத்திமாலைசூடிய சோழனைக் கொண்டு விளக்கியும், செங்கோல் வளையுமாயின் அரசர் உயிர்வாழார் என்ற உண்மையைத் தென்னாடாளும் பாண்டியனைக்கொண்டு விளக்கியும், தாங்கொண்ட சபதம் நிறைவேறினாலல்லது தம் கொடுஞ்சினந் தணியார் அரசரென்பதை, ஆரியவரசர் அறியும்படி குடதிசையாளுஞ் சேரனைக்கொண்டு விளக்கியும், மதுரைமாநகரம் எரிந்து கேடடையும்படி கொடிய அழலைக் கொங்கையினின்று விளைவித்தும்—இங்ஙனம் அருஞ்செயல்களைப் புரிந்து சேரநாட்டை அடைந்து வேங்கைமரநீழலில்தங்கிய பத்தினிநங்கையின் பொருட்டு, அந்தணர் புரோகிதன் நிமித்திகர்தலைவன் தபதிகள் இவர்களுடன் சென்று பத்தினிக்கோட்டமொன்று அழகுபெற வகுத்தனன். பின் இமயத்தினின்று கொணர்ந்த சிலையிலே கைத்தொழிற்றிறமையால் முற்றுவிக்கப்பெற்ற பத்தினி-

கைவினை முற்றிய தெய்வப் படிமத்து
வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை நன்கலம் முழுவதும் பூட்டிப்
பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி
வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்துக்
கடவுண் மங்கலம் செய்கென ஏவினன்
வடதிசை வணக்கிய மன்னவ ரேறென்.

## (57) உரைப்பாட்டு மடை

(1) குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்குத்திகழொளிஞாயிற்றுச்சோழன்மகளீன்றமைந்தன் கொங்கர்செங்களம்வேட்டுக் கங்கைப்பேர்யாற்றுக்கரைபோகிய செங்குட்டுவன் சினஞ்செருக்கி வஞ்சியுள்வந் திருந்தகாலை வடவாரிய மன்னராங்கோர் மடவரலை மாலைசூட்டி

---

தேவியின் பிரதிமைக்கு, வேலைப்பாடுமிக்க அணிகலன்களெல்லாம் பூட்டி யலங்கரித்துப் பூப்பலியாகிய அருச்சனைகள் புரிந்து திக்குத்தேவதைகளையும் கடைவாயிலிலே தாபித்து, வேள்வியோமங்களும் உற்சவங்களும் நிகழுமாறு கடவுண்மங்கலமாகிய பிரதிஷ்டை நிகழ்த்தும்படி ஆகமம்வல்ல அறிஞர்க்குச் சேரன்—செங்குட்டுவன் கற்பனைசெய்தனன்.

(57) ஷை, ஷை, வாழ்த்துக்காதை

மேலே கூறியவாறு, குமரிமுதல் இமயம்வரை தன் ஆணைநடாத்தி உலகாண்ட சேரலாதனுக்குச் சூரியவமிசத்துச் சோழன்மகள் பெற்ற மைந்தனும் முன்னொருகாற் கொங்கருடன் போர்புரியவிரும்பிக் கங்கையாற்றுக் கரைவரை படையெடுத்துச் சென்றவனுமாகிய சேரன்—செங்குட்டுவன், ஆரியரிடத்தே கொண்ட சினத்தோடுந் திரும்பித் தன் தலைநகரான வஞ்சியுள்வந்து தங்கி யிருந்தகாலத்தே, வடநாட்டு ஆரியவரசர்பலர் அப்பக்கத்துநடந்த திருமண மொன்றன் பொருட்டுக் கூடியிருந்தவிடத்தில், 'தமிழ்நாடாளும் வேந்தர்

உடனுறைந்த இருக்கைதன்னில் ஒன்றுமொழி நகையினராய்த்
தென்றமிழ்நா டாளும்வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து
மின்றவழு மிமயநெற்றியில் விளங்குவிற்புலி கயல்பொறித்தநாள்
எம்போலும் முடிமன்னரீங் கில்லைபோலும் என்றவார்த்தை
அங்குவாழு மாதவர்வந்து அறிவுறுத்த விடத்தாங்கண்
உருள்கின்ற மணிவட்டைக் குணில்கொண்டு துரந்ததுபோல்
'இமயமால்வரைக் கல்கடவுளாம்' என்றவார்த்தை இடந்துரப்ப
ஆரியநாட் டரசோட்டி அவர்முடித்தலை அணங்காகிய
பேரிமயக் கற்சுமத்திப் பெயர்ந்துபோந்து நயந்தகொள்கையிற்
கங்கைப்பேர் யாற்றிருந்து நங்கைதன்னை நீர்ப்படுத்தி
வெஞ்சினந்தரு வெம்மைநீங்கி வஞ்சிமா நகரம்புகுந்து
நிலவரசர் நீண்முடியால் பலர்தொழு படிமங்காட்டித்
தடமுலைப் பூசலாட்டியைக் கடவுண்மங்கலஞ் செய்தபின்னாட்
கண்ணகிதன் கோட்டகத்து மண்ணரசர் திறைகேட்புழி

போர்விரும்பிப் படையெடுத்துவந்து இங்குள்ள ஆரியவரசர்களை வென்று இமயவரைமேல் தங்கள் இலச்சினைகளாகிய வில் புலி மீன்களைப் பொறித்துச் சென்றகாலங்களில், எங்களைப்போலும் பெருவேந்தர்கள் இப்பிரதேசத்தில் இருந்திலர் போலும்' என்று தம்மில் ஒத்துப்பேசித் தமிழரசரை இகழ்ந்து நகையாடிய செய்தியை ஆங்கிருந்துவந்த மாதவர் சிலர் சொல்லக்கேட்டு— இயற்கையிலுருள்கின்ற உருளையொன்றைக் குணிலைக்கொண்டு செலுத்தியது போல—பத்தினிப் படிமத்தின்பொருட்டு இமயக்கற்கொணரவேண்டும் என்ற எண்ணம் அவ்வரசனுள்ளத்தைக் கிளரச்செய்தமையால், உடனே தன் படைகளைத் திரட்டிச்சென்று ஆரியநாட்டரசரைப் போரில்வென்று அவர்முடித் தலையில் அப் படிமத்துக்குரிய இமயக்கல்லைச் சுமத்திக்கொண்டு அங்கிருந்து திரும்பி, வெற்றிமகிழ்ச்சியுடன் கங்கையாற்றிலே தங்கி அக்கல்லைக் கங்கை நீராட்டித் தூய்மைசெய்து தன் சினம்நீங்கி வஞ்சிமாநகரமடைந்து வேந்தர் பலருந்தொழத்தக்க படிமஞ்செய்வித்துப் பத்தினிக்கடவுட்குக் கடவுண்மங்கலமாகிய பிரதிஷ்டைபுரிந்த பின்பு, அக்கோயில் அரசரெல்லாம் தத்தம் திறைகளைக் கொண்டுவந்து வணங்கும்படியும் செய்வித்தனன்.

அலம்வந்த மதிமுகத்திற் சிலசெங்கயல் நீருமிழப்
பொடியாடிய கருமுகில்தன் புறம்புதைப்ப அறம்பழித்துக்
கோவலன்றன் வினையுருத்துக் குறுமகனாற் கொலையுண்ணக்
காவலன்ற னிடஞ்சென்ற கண்ணகிதன் கண்ணீர்கண்டு
மண்ணரசர் பெருந்தோன்றல் உண்ணீரற் றுயிரிழந்தமை
மாமறையோன் வாய்க்கேட்டு மாசாத்துவான் தான்றுறப்பவும்
மனைக்கிழத்தி உயிரிழப்பவும் எனைப்பெருந் துன்பம்எய்திக்
காவற்பெண்டும் அடித்தோழியும் கடவுட்சாத்த னுடனுறைந்த
தேவந்தியு முடன்கூடிச் சேயிழையைக் காண்டுமென்று
மதுரைமா நகர்புகுந்து முதிராமுலைப் பூசல்கேட்டாங்கு
அடைக்கலமிழந் துயிரிழந்த இடைக்குலமக ளிடமெய்தி
ஐயையவள் மகளோடும் வையையொரு வழிக்கொண்டு
மாமலைமீ மிசையேறிக் கோமகடன் கோயில்புக்கு
நங்கைக்குச் சிறப்பயர்ந்த செங்குட்டுவற்குத் திறமுரைப்பார்மன்.

இஃது இங்ஙனம் நிகழ, மதுரைமாநகரில் முன்னைவினையாற் கோவலன் பொற்கொல்லனாற் கொலையுண்ண அதுகேட்ட அவன் மனைவி கண்ணகி, துன்பமிக்குக் கண்ணீர் பெருக்கிப் புழுதியிற்புரண்ட கூந்தலைவிரித்துத் தருமதேவதையைப் பழித்துக்கொண்டு பாண்டியன் முன்சென்று வழக்காட, அவனது துக்கத்தைக்கண்டு பொருத அவ்வரசன் தன் செங்கோல் கோடியதுபற்றி உயிர்நீத்ததை மாடலன் என்னும் மறையவன்மூலங் கேள்வியுற்று, அத்துயர்க்காற்ருது கோவலன் தந்தை துறவுபூண்டமையும் அவன் தாய் இறந்தமையும் அறிந்து மிகவும் துக்கித்து, கண்ணகியின் செவிலித்தாயும், தலைமைத்தோழியும், சாத்தன்கோயிலில் வாழும் தேவந்தியென்னும் பார்ப்பனத்தோழியும் ஆகிய மூவருஞ் சேர்ந்து கண்ணகியைக் காணவேண்டி மதுரைக்கு வரலாயினர். வந்தபோது அப்பத்தினியின் சிற்றத்தால் அந்நகரம் வெந்தசெய்தியை அறிந்து, தான் அடைக்கலமாகப்பெற்ற கோவலனை இழந்து அத்துன்பம் பொருமல் உயிர்விட்ட மாதரியின் மகள் ஐயை என்னும் இடைக்குலமகளை அடைந்தனர். பின் அவளுடன் சேர்ந்து மதுரை நீங்கி வையைக் கரைவழியே சென்று மலைமீதேறிக் கடந்து, செங்குட்டுவனால் பிரதிஷ்டிக்கப் பெற்ற கண்ணகிகோட்டத்தை அடைந்து, அப்பிரதிஷ்டையைச்செய்து சிறப்

(தேவந்தி சொல்)

(2) முடிமன்னர் மூவருங் காத்தோம்புந் தெய்வ
வடபே ரிமய மலையிற் பிறந்து
கடுவரற் கங்கைப் புனலாடிப் போந்த
தொடிவளைத் தோளிக்குத் தோழிநான் கண்டீர்
சோணாட்டார் பாவைக்குத் தோழிநான் கண்டீர்.

(காவற்பெண்டு சொல்)

(3) மடம்படு சாயலாள் மாதவி தன்னைக்
கடம்படாள் காதற் கணவன்கைப் பற்றிக்
குடம்புகாக் கூவற் கொடுங்கானம் போந்த
தடம்பெருங் கண்ணிக்குத் தாயர்நான் கண்டீர்
தண்புகார்ப் பாவைக்குத் தாயர்நான் கண்டீர்.

(அடித்தோழி சொல்)

(4) தற்பயந்தாட் கில்லைத் தன்னைப் புறங்காத்த
எற்பயந் தாட்கும் எனக்குமோர் சொல்லில்லைக்
கற்புக் கடம்பூண்டு காதலன் பின்போந்த
பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்
பூம்புகார்ப் பாவைக்குத் தோழிநான் கண்டீர்.

---

பித்துநின்ற அச்சேரனை ஆங்குக்கண்டு அவனுக்குப் பத்தினியோடு தமக்குள்ள தொடர்புகளை முறையே உரைத்தனர்.

(2) உரைத்தபின், அம்மங்கையர் மூவரும், கண்ணகியின் துயர்பொறாது அவள் நற்றாயும் தம்மாமியும் உயிர்நீத்ததும், மாமனாகிய மாசாத்துவானும், தந்தை மாநாய்கனும், கோவலன் காதற்கணிகையான மாதவியும், அவள் மகள் மணிமேகலையும் துறவுபூண்டதுமாகிய செய்திகளை அப்பத்தினிக்கடவுள்முன் சொல்லியதோடு, தம்முடன்வந்த ஐயையை அக்கடவுட்குக்காட்டி 'நின்னை அடைக்கலமாகப் பெற்று அவ்வடைக்கலப்பொருளைக் காத்தோம்பமுடியாமல் உயிர்துறந்த மாதரி என்னும் இடைக்குலமுதியாளின் மகளையும், தோழீ ! நீ காண்பாயாக' என்று கூறியழுது அரற்றிநின்றார்கள்.

(தேவந்தியரற்று)

(5) செய்தவ மில்லாதேன் றீக்கனாக் கேட்டநாள்
எய்த வுணரா திருந்தேன்மற் றென்செய்தேன்
மொய்குழல் மங்கை முலைப்பூசல் கேட்டநாள்
அவ்வை உயிர்வீவும் கேட்டாயோ தோழீ!
அம்மாமி தன்வீவும் கேட்டாயோ தோழீ!

(காவற்பெண்டரற்று)

(6) கோவலன் றன்னைக் குறுமகன் கோளிழைப்பக்
காவலன் றன்னுயிர் நீத்ததுதான் கேட்டேங்கிச்
சாவதுதான் வாழ்வென்று தானம் பலசெய்த
மாசாத்து வான்றுறவும் கேட்டாயோ அன்னை!
மாநாய்கன் றன்றுறவும் கேட்டாயோ அன்னை!

(அடித்தோழியரற்று)

(7) காதலன் றன்வீவும் காதலிநீ பட்டதூஉம்
ஏதிலார் தாங்கூறும் ஏச்சுரையுங் கேட்டேங்கிப்
போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியதா னம்புரிந்த
மாதவி தன்துறவுங் கேட்டாயோ தோழீ!
மணிமே கலைதுறவுங் கேட்டாயோ தோழீ!

(தேவந்தி ஐயையைக்காட்டி அரற்றியது)

(8) ஐயந்தீர் காட்சி அடைக்கலங் காத்தோம்ப
வல்லாதேன் பெற்றேன் மயலென் றுயிர்நீத்த
அவ்வை மகளிவள்தான் அம்மணம் பட்டிலா
வையெயிற் றையையைக் கண்டாயோ தோழீ!
மாமி மடமகளைக் கண்டாயோ தோழீ!

(செங்குட்டுவன் கூற்று)

(9) என்னேயிஃ தென்னேயிஃ தென்னேயிஃ தென்னேகொல்
பொன்னஞ் சிலம்பிற் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றோட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பிற் றோன்றுமால்.

---

செங்குட்டுவற்குக்
கண்ணகியார் கடவுண்ல்லணி காட்டியது

(10) தென்னவன் தீதிலன் தேவர்கோன் தன்கோயில்
நல்விருந் தாயினான் நானவன் றன்மகள்
வென்வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன்
என்னோடுந் தோழிமீர்! எல்லீரும் வம்மெல்லாம்.

---

(வஞ்சிமகளிர் சொல்)

(11) வஞ்சியீர்! வஞ்சி யிடையீர்! மறவேலான்
பஞ்சடி ஆயத்தீர்! எல்லீரும் வம்மெல்லாம்

---

இங்ஙனம் இவர்கள் அரற்றிநின்றபோது, பொற்சிலம்பும் மேகலாபரணமும் கைவளைகளும் வயிரத்தோடுகளும் மற்றும்பல அணிகளும் அணிந்துகொண்டு மின்னற்கொடிபோன்ற உருவமொன்று மீவிசும்பிற் றோன்றியது. அதனைக்கண்ட செங்குட்டுவன், 'இஃது என்னே!' என்று பெரிதும் அதிசயமடைந்தான். அப்போது அவ்வரசனுக்குக் கண்ணகி தன் கடவுணல்லணி காட்டியதோடு, தன்னைக்காணவந்த மகளிரைநோக்கித் 'தோழிகாள்! தென்னவனாகிய பாண்டியன் குற்றமுடையவனல்லன். அவன் தேவேந்திரன் கோயிலில் நல்விருந்தாய் விளங்குகின்றான். நான், அவ்வரசன் மகள் என்றறியுங்கள். முருகன்வரைப்பாகிய குன்றிலே விளையாடல் புரிதலினின்றும் யான் நீங்கேன். என்னோடு என் தோழிகளாகிய நீவிரெல்லீரும் சேர்ந்து விளையாட வருதிர்' என்று தன் பழமைகொண்டாடிக் கூறினள்.

கொங்கையாற் கூடற் பதிசிதைத்துக் கோவேந்தைச்
செஞ்சிலம்பால் வென்றாளைப் பாடுதும் வம்மெல்லாம்
தென்னவன் தன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம்.

(12) செங்கோல் வளைய உயிர்வாழார் பாண்டியரென்
றெங்கோ முறைநா வியம்பவிந் நாடடைந்த
பைந்தொடிப் பாவையைப் பாடுதும் வம்மெல்லாம்
பாண்டியன் றன்மகளைப் பாடுதும் வம்மெல்லாம்.

---

(ஆயத்தார் சொல்)

(13) வானவ னெங்கோ மகளென்றாம் வையையார்
கோனவன்றான் பெற்ற கொடியென்றாள்—வானவனை
வாழ்த்துவோ நாமாக வையையார் கோமானை
வாழ்த்துவாள் தேவ மகள்.

---

(வாழ்த்து)

(14) தொல்லை வினையாற் றுயருழந்தாள் கண்ணினீர்
கொல்ல உயிர்கொடுத்த கோவேந்தன் வாழியரோ
வாழியரோ வாழி வருபுன னீர்வையை
சூழு மதுரையார் கோமான்றன் றொல்குலமே.

---

இங்ஙனம் பத்தினித்தெய்வம் நேர்நின்றுகூற அவற்றைக் கேட்டிருந்தவராகிய வஞ்சிமகளிரும், செங்குட்டுவன் ஆயத்தாரான மகளிரும் வியப்புற்றுத் தங்களிற்கூடி, அத் தெய்வத்தையும் அத்தெய்வஞ் சஞ்சரித்த தமிழ்நாட்டினை ஆளும் அரசர் மூவரையும் அம்மானை கந்துகம் ஊசல்வரிகளாலும் வள்ளை (உலக்கை)ப் பாட்டாலும் பலவாறு வாழ்த்திக்கொண்டு பாடினர். முடிவில் 'சேரன்-செங்குட்டுவன் நீடூழி வாழ்க' என்று அத் தெய்வவுருவமும் அரசனை வாழ்த்தியது.

(15) மலையரையன் பெற்ற மடப்பாவை தன்னை
நிலவரசர் நீண்முடிமேல் ஏற்றினான் வாழியரோ
வாழியரோ வாழி வருபுனனீர் ஆன்பொருநை
சூழ்தரும் வஞ்சியார் கோமான்றன் தொல்குலமே.

(16) எல்லாநாம்
காவிரி நாடனைப் பாடுதும் பாடுதும்
பூவிரி கூந்தல் புகார்.

---

(அம்மானை வரி)

(17) வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணங் காத்த உரவோன்யார் அம்மானை
ஓங்கரணங் காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண் அம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை.

(18) புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்யார் அம்மானை
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்முன் வந்த
கறவை முறைசெய்த காவலன்காண் அம்மானை
காவலன் பூம்புகார் பாடேலோர் அம்மானை.

(19) கடவரைக ளோரெட்டும் கண்ணிமையார் காண
வடவரைமேல் வாள்வேங்கை ஏற்றினன்யார் அம்மானை
வடவரைமேல் வாள்வேங்கை ஏற்றினன் திக்கெட்டும்
குடைநிழலிற் கொண்டளித்த கொற்றவன்காண் அம்மானை
கொற்றவன்றன் பூம்புகார் பாடேலோர் அம்மானை.

(20) அம்மனை தங்கையிற் கொண்டங் கணியிழையார்
தம்மனையிற் பாடுந் தகையேலோர் அம்மானை
தம்மனையிற் பாடுந் தகையெலாந் தார்வேந்தன்

கொம்மை வரிமுலைமேற் கூடவே அம்மானை
கொம்மை வரிமுலைமேற் கூடிற் குலவேந்தன்
அம்மென் புகார்நகரம் பாடேலோர் அம்மானை.

---

(கந்துகவரி)

(21) பொன்னிலங்கு பூங்கொடி பொலஞ்செய்கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைகள் ஆர்ப்பஆர்ப்ப எங்கணும்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந் தடித்துமே
தேவரார மார்பன்வாழ்க என்றுபந் தடித்துமே.

(22) பின்னுமுன்னும் எங்கணும் பெயர்ந்துவந் தெழுந்துலாய்
மின்னுமின் னிளங்கொடி வியனிலத் திழிந்தெனத்
தென்னன்வாழ்க வாழ்கஎன்று சென்றுபந் தடித்துமே
தேவரார மார்பன்வாழ்க என்றுபந் தடித்துமே.

(23) துன்னிவந்து கைத்தலத் திருந்ததில்லை நீணிலந்
தன்னினின்றும் அந்தரத் தெழுந்ததில்லை தானெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந் தடித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந் தடித்துமே.

---

(ஊசல்வரி)

(24) வடங்கொள் மணியூசல் மேலிரீஇ யையை
யுடங்கொருவர் கைநிமிர்த்தாங் கொற்றைமே லூக்கக்
கடம்பு முதல்தடிந்த காவலனைப் பாடிக்
குடங்கைநெடுங் கண்பிறழ ஆடோமோ வூசல்
கொடுவிற் பொறிபாடி ஆடோமோ வூசல்.

(25) ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த

சேரன் பொறையன் மலையன் திறம்பாடிக்
கார்செய் குழலாட ஆடாமோ வூசல்
கடம்பெறிந்த வாபாடி ஆடாமோ வூசல்.

(26) வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்
தென்குமரி யாண்ட செருவிற் கயற்புலியான்
மன்பதைகாக் குங்கோமான் மன்னன் றிறம்பாடி
மின்செய் யிடைநுடங்க ஆடாமோ வூசல்
விறல்விற் பொறிபாடி ஆடாமோ வூசல்.

---

(வள்ளைப்பாட்டு)

(27) தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நீழல் அவைப்பார் புகார்மகளிர்
ஆழிக் கொடித்திண்டேர்ச் செம்பியன் வம்பலர்தார்ப்
பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல்
பாவைமார் ஆரிரக்கும் பாடலே பாடல்.

(28) பாடல்சால் முத்தம் பவள உலக்கையான்
மாட மதுரை மகளிர் குறுவரே
வானவர்கோ னாரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்
மீனக் கொடிபாடும் பாடலே பாடல்
வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்.

(29) சந்துரற் பெய்து தகைசால் அணிமுத்தம்
வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டால்
கடந்தடுதார்ச் சேரன் கடம்பெறிந்த வார்த்தை
படர்ந்த நிலம்போர்த்த பாடலே பாடல்
பனந்தோ டுளங்கவரும் பாடலே பாடல்.

(30) ஆங்கு, நீணில மன்னர் நெடுவிற் பொறையனற்
றுடொழார் வாழ்த்தல் தமக்கரிது சூழொளிய
எங்கோ மடந்தையும் ஏத்தினாள் நீடூழி
செங்குட் டுவன்வாழ்க வென்று.

---

(58) வடதிசை வணக்கிய வானவர் பெருந்தகை
கடவுட் கோலங் கட்புலம் புக்கபின்
தேவந் திகையைச் செவ்விதி னோக்கி
வாயெடுத் தரற்றிய மணிமே கலையார்
யாதவள் துறத்தற் கேதுவீங் குரையெனக்
கோமகன் கொற்றங் குறைவின் றோங்கி
நாடு பெருவளஞ் சுரக்கென் றேத்தி
அணிமே கலையார் ஆயத் தோங்கிய
மணிமே கலைதன் வான்துற வுரைக்கும்
மையீ ரோதி வகைபெறு வனப்பின்
ஐவகை வகுக்கும் பருவங் கொண்டது
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்

---

(58) ஷை, ஷை, 7-வது வரந்தருகாதை.

வடதிசையை வென்றுவணக்கிய சேரலர்பெருமான் செங்குட்டுவன், பத்தினிக்கடவுளது தெய்வவுருவை மேற்கூறியவாறு தரிசித்தபின்னர், தேவந்திகையென்னும் பார்ப்பனியைநோக்கிச் 'சிறிதுமுன்னர் நீங்கள் அழுதரற்றிக்கொண்டு பத்தினிமுன்பு கூறிய மணிமேகலையென்பவள் யார்? அவள் இளமையிலே துறவுபூண்டதற்குக் காரணம் யாது? சொல்லுக' என்று கேட்டனன். தேவந்தியும், கணிகையர்குலத்துள் உயர்ந்தவளான மணிமேகலையின் துறவைக் கூறத்தொடங்கி—"அரசே! நின்வெற்றி பெருகுக: நின் நாடு பெருவளஞ்சுரப்பதாக; கோவலனுக்கு மாதவிவயிற்றுதித்த மணிமேகலை என்பவள், கன்னிப்பருவம் அடைந்ததற்கேற்ற அறிகுறிகளெல்லாம் நிரம்பி

அவ்வியம் அறிந்தன அதுதா னறிந்திலள்
ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
நித்தில இளநகை நிரம்பா அளவின
புணர்முலை விழுந்தன புல்லக மகன்றது
தளரிடை நுணுகலுந் தகையல்குல் பரந்தது
குறங்கிணை திரண்டன கோலம் பொருஅ
நிறங்கிளர் சீறடி செய்தோய் தளிரின
தலைக்கோ லாசான் பின்னுள ளாகக்
குலத்தலை மாக்கள் கொள்கையிற் கொள்ளார்
யாது நின்கருத் தென்செய் கோவென
மாதவி நற்றாய் மாதவிக் குரைப்ப
வருகவென் மடமகள் மணிமே கலையென்று
உருவி லாளன் ஒருபெருஞ் சிலையொடு
விரைமலர் வாளி வெறுநிலத் தெறியக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறம் படுத்தனள்
ஆங்கது கேட்ட அரசனும் நகரமும்
ஓங்கிய நன்மணி உறுகடல் வீழ்த்தோர்

னளாயினும், காமக்குறிப்புச் சிறிதேனும் இல்லாதவளானாள். அதனால், நட்டுவனார், கூத்துமுதலியன பயில்வியாமையின், குலத்தலைவர்களாகிய செல்வர்கள் அவளைக் கொள்வதற்கு வினைந்திலர். இங்ஙனமாதலறிந்து, மணிமேகலையின் பாட்டி சித்திராபதி, தன்மகள் மாதவிக்கு அவள் நிலைமைகூறி மனவருத்தமடைய, தாயின் கருத்துக்கிணங்காத அம்மாதவி மணிமேகலையை உடனழைத்துக்கொண்டு அவளைக் கணிகையர்தொழிலிற் புகவிடாது, மன்மதன் தானினைத்த எண்ணம் பழுதாகித் தன் கருப்புவில்லையும் மலர்வாளிகளையும் வெறுநிலத்தெறியும்படி, மணிமேகலையின் கூந்தல் மாலையுடன் களைவித்து, இந்திரவிகாரமடைந்து பௌத்ததருமத்தே சேர்த்தாள். இச்செய்தி கேட்ட அரசனும் நகரத்தாரும், கிடைத்தற்கரிய நன்மணியைக் கடலில் வீழ்த்

தம்மிற் றுன்பம் தாம்நனி எய்தச்
செம்மொழி மாதவர் சேயிழை நங்கை
தன்துற வெமக்குச் சாற்றின ளென்றே
அன்புறு நன்மொழி அருளொடுங் கூறினர்
பருவ மன்றியும் பைந்தொடி நங்கை
திருவிழை கோலம் நீங்கின ளாதலின்
அரற்றினன் என்றுங் கரசற் குரைத்தபிற்
குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழத்
துடித்தனள் புருவந் துவரிதழ்ச் செவ்வாய்
மடித்தெயி றரும்பினள் வருமொழி மயங்கினள்
திருமுகம் வியர்த்தனள் செங்கண் சிவந்தனள்
கைவிட் டோச்சினள் கால்பெயர்த் தெழுந்தனள்
பலரறி வாராத் தெருட்சியள் மருட்சியள்
உலறிய நாவினள் உயர்மொழி கூறித்
தெய்வமுற் றெழுந்த தேவந் திகைதான்
கொய்தளிர்க் குறிஞ்சிக் கோமான் றன்முன்

தவர்போற் பெருந்துன்பமடைந்தனர். மணிமேகலை தன் வைராக்கியத்தைச் சங்கத்தாரான அறவணவடிகளிடம் சென்றுகூறிப் பிக்குணியாயமர்ந்த செய்தியை அவ்வடிகளே அன்போடும் எமக்குக் கூறியருளினர். இவ்வாறு இளம்பருவத்தே மணிமேகலை தன் அழகியகோலத்தை அழித்துத் துறவு பூண்டனளாதலின், நான் கதறி அழலாயினேன்" என்று முன்னடந்த வரலாறுகளை அரசற்குக் கூறிமுடித்தாள்.

பின்னர்ச் சாத்தனென்னுந் தெய்வம் திடுக்கென்றேறியதனால் ஆவேசங் கொண்டு, அத்தேவந்தி, மலரணிந்த கூந்தல் குலைந்து பின்வீழவும், புருவந் துடிக்கவும், செவ்வாய்மடிப்போடு சிரிப்புத்தோன்றவும், மொழிதடுமாறவும் முகம் வியர்க்கவும், செங்கண் சிவக்கவும், கைகளை வீசியோச்சிக் கால்பெயர்த்தெழுந்து, பலரும் இன்னதென்று தெரியவாராத அறிவுமயக்கமுடையவளாய் நாவுலர்ந்து தெய்வம்பேசும் பேச்சுக்களைக் கூறிக்கொண்டு செங்குட்டுவன்

கடவுண் மங்கலங் காணிய வந்த
மடமொழி நல்லார் மாணிழை யோருள்
அரட்டன் செட்டிதன் ஆயிழை ஈன்ற
இரட்டையம் பெண்கள் இருவரு மன்றியும்
ஆடக மாடத் தரவணைக் கிடந்தோன்
சேடக் குடும்பியின் சிறுமக ளீங்குளள்
மங்கல மடந்தை கோட்டத் தாங்கண்
செங்கோட் டுயர்வரைச் சேணுயர் சிலம்பிற்
பிணிமுக நெடுங்கற் பிடர்த்தலை நிரம்பிய
அணிகயம் பலவுள ஆங்கவை யிடையது
கடிப்பகை நுண்கலுங் கவிரிதழ்க் குறுங்கலும்
இடிக்கலப் பன்ன இழைந்துகு நீரும்
உண்டோர் சுனையத னுள்புக் காடினர்
பண்டைப் பிறவியர் ஆகுவர் ஆதலின்
ஆங்கது கொணர்ந்தாங் காயிழை கோட்டத்
தோங்கிருங் கோட்டி யிருந்தோய்! உன்கைக்
குறிக்கோட் டகையது கொள்கெனத் தந்தேன்

---

திருமுன்பு இருந்த மாடலனைநோக்கி "மாடல! யான் பாசண்டச்சாத்தன். இப்போது இத்தேவந்தியின்மேல் ஆவேசித்துள்ளேன். பத்தினிக்கடவுளின் பிரதிஷ்டையைத் தரிசித்தற்கு இங்குவந்துள்ள இளமகளிருள்ளே அரட்டன் செட்டியின் இரட்டைப்பெண்களும், ஆடகமாடத்தில் அரவணைக்கிடந்த திருமாலைப் பூசிக்கும் சேடக்குடும்பியின் இளம்பெண்ணும் ஈங்கிருக்கின்றனர். மங்கலாதேவியின் கோயிற்பக்கத்துள்ள மலையிடத்தே, மயிற்கல்லின் பிடர்த்தலையினின்று இழிகின்ற நீரால் நிரம்பும் சுனைகள் பலவற்றுள் இடையிலிருப்பதும், வெண்கடுகும் முருக்கம்பூவும்போன்ற நுண்ணிய கற்களோடு மாவைக் கரைத்ததுபோல விழும் நீருடையதுமாகிய சுனையிற்புகுந்து நீராடுவோர் பண்டைப்பிறப்பின் செய்திகளை அறிந்தோராவர் என்பதுபற்றி, அம் மங்கலாதேவி கோயிலின் வாயிலிலே நீ இருந்தபோது, அந்நீருள்ள கரகத்தை 'இது நீ கொள்ளத்தக்கது' என்று நான் உன்பாற் கொடுத்தேனன்றோ?

உறித்தாழ் கரகமும் உன்கைய தன்றே
கதிரொழி காறும் கடவுட் டன்மை
முதிராது அந்நீர் முத்திற மகளிரைத்
தெளித்தனை யாட்டினிச் சிறுகுறு மகளிர்
ஒளித்த பிறப்பினர் ஆகுவர் காணாய்
பாசண் டன்யான் பார்ப்பனி தன்மேல்
மாடல மறையோய்! வந்தேன் என்றலும்
மன்னவன் விம்மிதம் எய்தியம் மாடலன்
தன்முகம் நோக்கலும் தானனி மகிழ்ந்து
கேளிது மன்னா! கெடுகநின் தீயது
மாலதி யென்பாள் மாற்றாள் குழவியைப்
பால்சுரந் தூட்டப் பழவினை யுருத்துக்
கூற்றுயிர் கொள்ளக் குழவிக் கிரங்கி
ஆற்றாத் தன்மையள் ஆரஞர் எய்திப்
பாசண் டன்பாற் பாடு கிடந்தாட்கு

---

உறியிலமைந்த அந்நீர்க்கரகமும் இப்போது உன் கையின்கண் உள்ளதுகாண். சந்திராதித்தர் உள்ளவளவும் அந்நீரின் கடவுட்டன்மை ஒழியாது. இக்கரகத்து நீரை ஈங்குள்ள இவ்விளம்பெண்கள் மூவர்மீதும் தெளிப்பாயாயின், இன்னோர் முற்பிறப்பினை அறிந்தோர் ஆவர்; இதன் உண்மையை நீயே சோதித்துப் பார்" என்று கூறினள்.

இங்ஙனம், சாத்தனாவேசிக்கப்பெற்ற தேவந்தியின் வார்த்தைகளைக் கேட்டலும், செங்குட்டுவன் மிகவும் விம்மிதமுற்றுப் பக்கத்திருந்த மாடலன்முகத்தை நோக்கினன். அப்போது அவ்வந்தணன் மகிழ்ச்சியுற்றவனாகிச் செங்குட்டுவனை வாழ்த்தி—"அரசே! இது கேட்பாயாக; மாலதி என்னும் பார்ப்பனமாது தன் மாற்றாள்குழந்தையை எடுத்துப் பால்கொடுக்கும்போது பழவினைவயத்தால் பால்விக்கி அக்குழந்தை இறக்கவும், அதன்பொருட்டு ஆற்றாளாய்ப் பெருந்துன்பமடைந்து, பாசண்டச்சாத்தன்கோயிலில் சென்று அத்தேவன்பால்

ஆசில் குழவி யதன்வடி வாகி
வந்தன னன்னை நீ வான்றுய ரொழிகெனச்
செந்திறம் புரிந்தோன் செல்லல் நீக்கிப்
பார்ப்பனி தன்னெடு பண்டைத் தாய்பாற்
காப்பியத் தொல்குடி கவின்பெற வளர்ந்து
தேவந் திகையைத் தீவலஞ் செய்து
நாலீ ராண்டு நடந்ததற் பின்னர்
மூவா விளநலங் காட்டியென் கோட்டத்து
நீவா வென்றே நீங்கிய சாத்தன்
மங்கல மடந்தை கோட்டத் தாங்கண்
அங்குறை மறையோ னுகத் தோன்றி
உறித்தாழ் கரகமும் என்கைத் தந்து
குறிக்கோள் கூறிப் போயினன் வாரான்
ஆங்கது கொண்டு போந்தே னுதலின்
ஈங்கிம் மறையோள் தன்மேற் ருேன்றி

வரங்கிடந்தாள். அவளது பெருந்துயர்க்கிரங்கி அத்தெய்வம் இறந்த குழந்தை யுருக்கொண்டு வந்து 'அன்னுய்! யான் வந்தேன்; இனி உன் துயரொழிக' என்று கூறியது. கூறவும் அம்மாலதியும் உரிமைத்தாயும் தம் கணவன் மகிழ்ச்சி யுறும்படி அதனை வளர்க்கக் காப்பியம் என்னும் பழையகுடி பொலிவடைய வளர்ந்து, பக்குவம் வந்ததும் அம்மகன் இத்தேவந்திகையை மணந்து இவ ளோடு எட்டியாண்டு இல்லறம் நடத்திவந்தான். இவ்வாறு நிகழுங்கால், ஒரு நாள், தன் மனைவியாகிய இவட்கு அச்சாத்தன் மூவாத தன் தெய்வவுருவை வெளிப்படக்காட்டித் தன் கோட்டத்திற்கு வரும்படி இவளுக்குக் கட்டளை யிட்டு மறைந்தனன். மறைந்தவன், நான் மங்கலாதேவியின் கோட்டத்தில் இருந்தபோது அந்தணனுருக்கொண்டு வந்துதோன்றி, உறியிலமைந்த இக்கர கத்தை என்கைக்கொடுத்து இதனைச் சேமமாக வைத்திருக்கும்படி எனக்குக் கூறிச்சென்ருன். அங்ஙனஞ் சென்றதுமுதல், இதுவரை அவன் திரும்ப என்பால் வந்திலன்; அதனுல் இக்கரகத்தைத் தவறவிடாது என்னுடனே கொண்டுவந்தேன். இவ்வாருதலால், அச் சாத்தனென்னுந் தெய்வமே தன்

அந்நீர் தெளியென் றறிந்தோன் கூறினன்
மன்னவர் கோவே! மடந்தையர் தம்மேல்
தெளித்தீங் கறிகுவ மென்றவன் றெளிப்ப
ஒளித்த பிறப்புவந் துற்றதை யாதலிற்
புகழ்ந்த காதலன் போற்றா ஒழுக்கின்
இகழ்ந்ததற் கிரங்கு மென்னையும் நோக்காய்
ஏதில் நன்னாட் டியாருமி லொருதனிக்
காதலன் றன்னொடு கடுந்துய ருழந்தாய்
யான்பெறு மகளே! என்றுணைத் தோழீ!
வான்றுயர் நீக்கு மாதே! வாராய்
என்னோ டிருந்த இலங்கிழை நங்கை
தன்னோ டிடையிருட் டனித்துய ருழந்து

---

பார்ப்பனியாகிய இத்தேவந்தியின்மேல் இப்போது ஆவேசித்து இக்கமண்டல நீரைத் தெளிக்கும்படி கூறினன். வேந்தர்வேந்தே! இங்குள்ள இச்சிறுமியர் மேல் இதனீரைத் தெளித்துச் சாத்தன்கூறிய அவ்வுண்மைகளை நாம் இனி அறிவோம்" என்று அம்மாடலமறையோன் நிகழ்ந்தவரலாறுகளைக் கூறித் தான் கொணர்ந்த கமண்டலநீரை அங்கிருந்த பெண்கள் மூவர்மேலும் புரோக்ஷித்தனன். உடனே, அச்சிறுமிகட்குத் தங்கள் பழம்பிறப்புணர்ச்சி வந்தடையவும், அம்மூவருந் தனித்தனியாக அடியில்வருமாறு புலம்பலானார்கள்:—

(முதற் சிறுமி) "யான்பெற்ற மகளே! யாவரும் புகழத்தக்க உன் கணவன் கூடாவொழுக்கத்தனாய் உன்னை இகழ்ந்துநின்ற நிலைமைக்காக வருந்திநின்ற உன்தாயாகிய யானும் அறியாமலே அந்நியநாடுசென்று, மற்றொருவரும் இல்லாவிடத்தில் தன்னந்தனியையாய்க் காதற்கணவனுடன் கடுந்துயர் அடைந்தனையே" (என்றரற்றினள்)

(இரண்டாஞ்சிறுமி) "யான் பெற்ற மகளாகவும், என் துணைத்தோழியாகவும் என் துயர்நீக்கவந்த பெண்ணே! என்பால் வாராயோ? என்னுடன் கூடவே யிருந்துவந்த கண்ணகியை அழைத்துக்கொண்டு, நடுநிசியில் பெருந்

போனதற் கிரங்கிப் புலம்புறு நெஞ்சம்
யானது பொறேஎ னென்மகன்! வாராய்
வருபுனல் வையை வான்றுறைப் பெயர்ந்தேன்
உருகெழு மூதூர் ஊர்க்குறு மாக்களின்
வந்தேன் கேட்டேன் மனையிற் காணேன்
எந்தாய்! இளையாய்! எங்கொளித் தாயோ?
என்றாங் கரற்றி இனைந்தினைந் தேங்கிப்
பொன்றாழ் அகலத்துப் போர்வெய் யோன்முன்
குதலைச் செவ்வாய்க் குறுந்தொடி மகளிர்
முதியோர் மொழியின் முன்றி னின்றழக்
தோடலர் போந்தைத் தொடுகழல் வேந்தன்
மாடல மறையோன் றன்முகம் நோக்க
மன்னர் கோவே! வாழ்கென் றேத்தி
முந்நூல் மார்பன் முன்னிய துரைப்போன்
மறையோன் உற்ற வான்றுயர் நீங்க

---

துயரத்தோடு சென்றனையே; இதனை நினைக்குந்தோறும் என்னெஞ்சம் வருத்த மிக்குப் புலம்பாநின்றது; இத்துயரம் என்னாற் பொறுக்கக்கூடவில்லையே; என் அருமை மகனே! என்பால் ஒருகால் வாராயோ" (என்று கதறினன்)

(மூன்றாஞ் சிறுமி) "இளையோனே! நீ என்மனையில் தங்கியிருந்த காலத்தே வையையாற்றில் நீராடச்சென்றிருந்த நான் திரும்பிவந்தபோது ஊர்ச்சிறுவரால், ஐயோ! உன் துக்கசம்பவத்தைக் கேட்டேன். கேட்டதற்கேற்ப, மனையில்வந்து நான் பார்த்தபோது நின்னைக் கண்டிலேன். எந்தாய்! என்னையறியாது எங்கு ஒளித்தனையோ!" (என்றழுதாள்)

இவ்வாறாகக் குதலைமொழி கூறும் சிறுமியர் மூவரும் முதியோர் பேசும் பேச்சால் செங்குட்டுவன் திருமுன்பே அக்கோட்டத்தின் முன்றிலிலிருந்து அரற்றியழவும், போந்தைமாலையணிந்த அவ்வேந்தர்பெருமான் வியப்புற்று மாடலன்முகத்தை மறுமுறையும் நோக்க, அரசனது குறிப்பறிந்து அவனை ஆசீர்வதித்தவனாய் அம்மறையவன் கூறுவான்:—"அரசே! (ஒருகாலத்தில் மதயானை கைக்கொண்டதனால், உயிர்போகும் நிலைமையிலிருந்த அந்தணனொருவ

உறைகவுள் வேழக் கையகம் புக்கு
வானோர் வடிவம் பெற்றவன் பெற்ற
காதலி தன்மேற் காதல ராதலின்
மேனிலை யுலகத் தவருடன் போகுந்
தாவா நல்லறஞ் செய்தில ரதனால்
அஞ்செஞ் சாயல் அஞ்சா தணுகும்
வஞ்சி மூதூர் மாநகர் மருங்கிற்
பொற்கொடி தன்மேற் பொருந்திய காதலின்
அற்புளஞ் சிறந்தாங் கரட்டன் செட்டி
மடமொழி நல்லாள் மனமகிழ் சிறப்பின்
உடன்வயிற் றோராய் ஒருங்குடன் தோன்றினர்
ஆயர் முதுமகள் ஆயிழை தன்மேற்
போய பிறப்பிற் பொருந்திய காதலின்
ஆடிய குரவையின் அரவணைக் கிடந்தோன்
சேடக் குடும்பியின் சிறுமக ளாயினள்
நற்றிறம் புரிந்தோர் பொற்படி யெய்தலும்

னது பெருந்துயரம் ஒழியும்படி அவனை அந்த யானையின் கையிலிருந்து தப்பவைத்துத் தானே அதன் கையினுட் புகுந்து, கொம்புகளின் வழியாக அதன் பிடர்த்தலையிலேறி வித்தியாதரன்போல விளங்கித் தன்னருஞ்செயலைக் காட்டிய கோவலனது அன்புடை மனைவிமேல், இம்மூவர்மகளிரும் பெருங்காதல் வைத்தவராதலால், விண்ணூடுசென்ற அவரோடு தாமுஞ் செல்லத்தக்க நல்லறத்தை இன்னோர் செய்யாது போயினர். அதனால், இவர்களுள் முதலிருவர் கண்ணகியின்பாற் பேரன்புடையராய் அரட்டன்செட்டி மனைவியின் வயிற்றில் இரட்டைகளாகச் சேர்ந்து, அப்பத்தினி அஞ்சாதணுகிய வஞ்சிமூதூரிற் பிறந்தனர்; ஆயர்முதுமகளாகிய மாதரி முற்பிறப்பிற் கண்ணகிபால் வைத்த காதன்மிகுதியாலும் திருமால்பொருட்டுக் குரவையாடிய விசேடத்தாலும், ஆடகமாடத்திற் கோயில்கொண்ட சேஷசாயியாகிய அப்பெருமானது திருவடி பிடிப்பான்குலத்திற் சிறுமகளாகத் தோன்றினள். இதனால் நல்லறஞ்செய்த

அற்புளம் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்
அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்
பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
புதுவ தன்றே தொன்றியல் வாழ்க்கை
ஆனே றூர்ந்தோன் அருளிற் றோன்றி
மாநிலம் விளக்கிய மன்னவ னாதலிற்
செய்தவப் பயன்களும் சிறந்தோர் படிவமுங்
கையகத் தனபோற் கண்டனை யன்றே
ஊழிதோ றூழி யுலகங் காத்து
நீடுவா ழியரோ நெடுந்தகை! என்ற
மாடல மறையோன் தன்னொடு மகிழ்ந்து
பாடல்சால் சிறப்பிற் பாண்டிநன் னாட்டுக்
கலிகெழு கூடல் கதழெரி மண்ட
முலைமுகந் திருகிய மூவா மேனிப்
பத்தினிக் கோட்டப் படிப்புறம் வகுத்து

---

வர் பொன்னுலகடைதலும், ஒன்றிற் பற்றுவைத்தோர் பூமியில் அப்பற்றுள்ள இடத்தே பிறத்தலும், அறம்பாவங்களின் பயன்கள் அடுத்து விளைதலும், பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும் புதியனவன்றித் தொன்மைப்பட்டன என்பது நன்கு விளங்கும். இடபாரூடனாகிய சிவபிரான் திருவருளாலுதித்துப் புகழ்மிகுந்த மன்னவனாக நீ விளங்குதலால், அரசே! முற்பிறவியிற் செய்த தவப்பயன்களையும், பெரியோர் தரிசனங்களையும் கையகத்துப் பொருள் போலக் கண்டுமகிழப்பெற்றாய்; ஊழியூழியாக இவ்வுலகங்காத்து வேந்தே! நீ வாழ்வாயாக" என்று கூறி, தம்முன்பு அழுதுபுலம்பிய அவ் விளம்பெண்கள் மூவரும் முற்பிறப்பில் முறையே கண்ணகியின்தாயும் கோவலன்தாயும் ஆய்ச்சியாகிய மாதரியுமாயிருந்த செய்திகளைச் செங்குட்டுவனுக்குத் தெளிய மாடலன் விளக்கினான்.

இவற்றைக்கேட்டுப் பெரிதும் மகிழ்வுற்ற சேரர்பெருமான், பாண்டிநாட்டுத் தலைநகரான கூடன்மாநகரம் எரியுண்ணும்படி தன் தனமுகத்தைத் திருகியெறிந்த அப்பத்தினியின் கோயிற்படித்தரங்களுக்கு வேண்டிய பூமி

நித்தல் விழாவணி நிகழ்கென் றேவிப்
பூவும் புகையும் மேவிய விரையும்
தேவந் திகையைச் செய்கென் றருளி
வலமுறை மும்முறை வந்தனன் வணங்கி
உலக மன்னவன் நின்றோன் முன்னர்
அருஞ்சிறை நீங்கிய ஆரிய மன்னரும்
பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரும்
குடகக் கொங்கரும் மாளுவ வேந்தரும்
கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்
எந்நாட் டாங்கண் இமைய வரம்பனின்
நன்னாட் செய்த நாளணி வேள்வியுள்
வந்தீ கென்றே வணங்கினர் வேண்டத்
தந்தேன் வரமென் றெழுந்த தோர்குரல்
ஆங்கது கேட்ட அரசனும் அரசரும்
ஓங்கிருந் தானையும் உரையோ டேத்த
வீடுகண் டவர்போல் மெய்ந்நெறி விரும்பிய

யளித்து நித்தியாராதனை நிகழ்ந்துவருமாறுசெய்தும், பூவும் புகையும் சந்தவர்க்கங்களுமாகிய திருப்பணிநடத்திவரும்படி தேவந்தியை நியமித்தும், அப்பத்தினிக்கடவுளை மும்முறைவலஞ்செய்து வணங்கிநின்றான். இங்ஙனம் இவனிற்க, சிறைநீங்கி உபசரிக்கப் பெற்ற கனகவிசயரென்னும் ஆரியவேந்தரும், பண்டே வஞ்சியிற்சிறைப்பட்டு இப்போது விடுபட்ட மன்னரும், குடகநாடாளும் கொங்கிளங்கோசரும், மாளுவவேந்தரும், கடல்சூழ்ந்த இலங்கைக்கு அதிபனான கயவாகுவேந்தனும் அப்பத்தினிதேவியை வணங்கியவர்களாய்—"தேவீ! எங்கள் நாட்டிற்கும் எழுந்தருளிவந்து, சேரர்பெருமான் செய்த பிரதிஷ்டையிற்போல நாங்கள் செய்யும் பிரதிஷ்டைகளிலும் தோன்றியருளி எங்கட்கு அருள்புரியவேண்டும்" என்று வேண்டிநின்றனர். இங்ஙனம் அவர்கள் வேண்டிநின்றபோது, 'தந்தேன் வரம்' என்று ஒரு தெய்வவாக்கு ஆங்கு யாவருங் கேட்ப எழுந்தது. அதுகேட்டுச் செங்குட்டுவனும் ஏனையரசர்களும் சேனைகளும் வியப்புற்று, வீட்டுலகத்தையே நேரிற்கண்டவர்போல ஆரவாரித்துத் துதித்தனர். பின்னர், அரசரெல்லாம் தன் அடிவணங்கியேத்த

மாடல மறையோன் தன்னொடுங் கூடித்
தாழ்கழல் மன்னர் தன்னடி போற்ற
வேள்விச் சாலையின் வேந்தன் பெயர்ந்தபின்
யானுஞ் சென்றேன் என்னெதிர் எழுந்து
தேவந் திகைமேற் றிகழ்ந்து தோன்றி
வஞ்சி மூதூர் மணிமண் டபத்திடை
நுந்தை தாள்நிழல் இருந்தோய்! நின்னை
அரைசுவீற் றிருக்கும் திருப்பொறி யுண்டென்
றுரைசெய் தவன்மேல் உருத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட் டுவன்றன் செல்லல் நீங்கப்
பகல்செல் வாயிற் படியோர் தம்முன்
அகலிடப் பாரம் அகல நீக்கிச்
சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து
அந்தமில் இன்பத் தரசாள் வேந்தென்று
என்திறம் உரைத்த இமையோர் இளங்கொடி

தத்துவஞானியாகிய மாடலனுடன் சேர்ந்து, அப்பத்தினிக் கோட்டத்து யாகசாலையினுள்ளே சேரன்—செங்குட்டுவன் புகுந்தனன்.

இங்ஙனம் அவன் புக்கபின், யானும் ஆங்குச் செல்லலானேன்; அப் பத்தினிக்கடவுள் தேவந்திகைமேல் ஆவேசித்தவளாகி என்முன்னர் எழுந்துநின்று, "மூதூராகிய வஞ்சிமாநகரத்தே அத்தாணிமண்டபத்தில் உன்தந்தையாகிய சேரலாதனோடு நீ சேர்ந்திருந்தகாலையில், நிமித்திகனொருவன் வந்து நின்னைப் பார்த்து, அரசுவீற்றிருத்தற்குரிய இலக்கணம் நினக்கே உண்டென்றுகூற, 'என் தமையனை செங்குட்டுவனிருப்ப நீ முறைமைகெடச் சொன்னாய்' என்று அந்நிமித்திகனை வெகுண்டுநோக்கி, தமையனை செங்குட்டுவனுக்கு மனத்துன்பம் நேராதவாறு, குணவாயிலிடத்துள்ள முனிவர்முன் வந்து துறவு பூண்டு, அந்தமிலின்பமாகிய மோக்ஷஸாம்ராஜ்யத்தை ஆளநிற்கும் வேந்தனல்லையோ, நீ" என்று, முன்னிகழ்ந்ததும் இனி நிகழ்வதுமாகிய என்னுடைய வரலாறுகளையும் உரைத்தருளினாள். இங்ஙனமுரைத்த இமையோரிளங்

தன்திறம் உரைத்த தகைசால் நன்மொழி
தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்!
பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்
அறவோ ரவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை அஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லல்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்.

(கட்டுரை)

(59) முடியுடை வேந்தர் மூவ ருள்ளும்
குடதிசை யாளுங் கொற்றங் குன்றா
ஆர மார்பிற் சேரர்குலத் துதித்தோர்

கொடியாகிய பத்தினிதேவியின் பெருமைதங்கிய இச்சரிதத்தை விளங்கக்கேட்ட திருத்தகு நல்லீர்! தீக்குணங்களையும் தீநெறிகளையும் அறவே ஒழித்து, நற்குண நற்செயல்களுடையராய் நற்கதியடைதற்கு உரியவற்றைச் செய்து இந் நிலவுலகில் வாழ்வீராக.

அறனும் மறனும் ஆற்றலும் அவர்தம்
பழவிறல் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவும்
ஓடியா இன்பத் தவருறை நாட்டுக்
குடியின் செல்வமுங் கூழின் பெருக்கமும்
வரியுங் குரவையும் விரவிய கொள்கையிற்
புறத்துறை மருங்கின் அறத்தொடு பொருந்திய
மறத்துறை முடித்த வாய்வாட் டானையொடு
பொங்கிரும் பரப்பிற் கடல்பிறக் கோட்டிக்
கங்கைப் பேர்யாற் றுக்கரை போகிய
செங்குட் டுவனோ டொருபரிசு நோக்கிக்
கிடந்த வஞ்சிக் காண்டமுற் றிற்று.

இளங்கோவடிகள்.

---

(60) நறைகமழ் கூந்தல் நங்கை! நீயும்
முறைமையி னிந்த மூதூ ரகத்தே
அவ்வவர் சமயத் தறிபொருள் கேட்டு
மெய்வகை யின்மை நினக்கே விளங்கிய
பின்னர்ப் பெரியோன் பிடகநெறி கடவாய்

---

(60) மணிமேகலை, 26. வஞ்சிமாநகர் புக்ககாதை; 62 முதல் 94 வரையுள்ள அடிகள். மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் பாடியது.

[முன்வரலாறு]—மணிபல்லவத்துள்ள தருமபீடிகையைத் தரிசித்தபின், மணிமேகலை ஆகாயவழியே வஞ்சிமாநகரஞ்சென்று, அந்நகர்ப்புறத்து அமைக்கப்பட்ட கண்ணகிகோட்டத்திற்புகுந்து பத்தினிதேவியை வணங்கிநின்றாள். அப்போது அத்தெய்வம் மணிமேகலையின் விருப்பிற்கிணங்கித் தன்வரலாறு களைக்கூறியதும், அவள் இனிச் செய்தற்குரியவற்றைச் சொல்லியருளியதும், செங்குட்டுவனது வடயாத்திரைபற்றிய வரலாற்றுச்சுருக்கமும் இக்காதையில் குறிக்கப்படுவன.

இன்னதிவ் வியல்பெனத் தாயெடுத் துரைத்தலும்
இளையள் வளையோள் என்றுனக் கியாவரும்
விளைபொருள் உரையார் வேற்றுருக் கொள்கென
மையறு சிறப்பிற் றெய்வதந் தந்த
மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்த்
தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
நற்றவ முனிவருங் கற்றடங் கினரும்
நன்னெறி காணிய தொன்னூற் புலவரும்
எங்கணும் விளங்கிய எயிற்புற விருக்கையிற்
செங்குட் டுவனெனுஞ் செங்கோல் வேந்தன்
பூத்த வஞ்சி பூவா வஞ்சியிற்
போர்த்தொழிற் றானை குஞ்சியிற் புனைய
நிலநா டெல்லைதன் மலைநா டென்னக்
கைம்மலைக் களிற்றினந் தம்முண் மயங்கத்
தேரும் மாவும் செறிகழல் மறவரும்
கார்மயங்கு கடலிற் கலிகொளக் கடைஇக்
கங்கையம் பேர்யாற் றடைகரைத் தங்கி
வங்க நாவியின் அதன்வடக் கிழிந்து
கனக விசயர் முதற்பல வேந்தர்
அனைவரை வென்றவர் அம்பொன் முடிமிசைச்
சிமைய மோங்கிய இமைய மால்வரைத்
தெய்வக் கல்லுந் தன்றிரு முடிமிசைச்
செய்பொன் வாகையுஞ் சேர்த்திய சேரன்
விற்றிறல் வெய்யோன் தன்புகழ் விளங்கப்
பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்ப் பொலிந்
திருந்துநல் லேது முதிர்ந்துள தாதலிற் [தனன்
பொருந்துநால் வாய்மையும் புலப்படுத் தற்கென்.

மதுரைக் கூலவாணிகன் சாத்தனார்.

## ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

(61) துளங்குநீர் வியலகம் கலங்கக் கால்பொர
விளங்கிரும் புணரி உருமென முழங்கும்
கடல்சேர் கானற் குடபுல முன்னிக்
கூவற் றுழந்த தடந்தாள் நாரை
குவியிணர் ஞாழல் மாச்சினைச் சேக்கும்
வண்டிறை கொண்ட தண்கடற் பரப்பின்
அடும்பமல் அடைகரை அலவ னாடிய
வடுவடு நுண்ணயிர் ஊதை உஞற்றும்
தூவிரும் போந்தைப் பொழிலணிப் பொலிதந்து
இயலினள் ஒல்கின ளாடு மடமகள்
வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்
பெருமலை வயின்வயின் விலங்கும் அருமணி
அரவழுங்கும் பெருந்தெய்வத்து
வளைஞரலும் பனிப்பௌவத்துக்
குணகுட கடலோ டாயிடை மணந்த
பந்த ரந்தரம் வேய்ந்து
வண்பிணி யவிழ்ந்த கண்போல் நெய்தல்
நனையுறு நறவின் நாடுடன் கமழச்
சுடர்நுதல் மடநோக்கின்
வாணகை இலங்கெயிற்று

---

(61) பதிற்றுப்பத்து, ஆறாம்பத்து, முதற்பாட்டு; துறை—வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர் வண்ணமும். தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—வடுவடு நுண்ணயிர் (8)

இதுமுதற் பத்துப்பாட்டும் பாடியவர் காக்கைபாடினியார் நச்செள்ளையார்.

கருத்து :—நீ, கடல்சேர்ந்த கானலையுடைய குடபுலஞ் செல்லக்கருதி அங்கேயுள்ள பனஞ்சோலையிற் பொலிந்துவிளங்கி, நெய்தலும் நறவும் நறுமணங்கமழ அழகுவாய்ந்த விறலியரது பாடலில் மூழ்கி வேறுவினையின்றி

அமிழ்துபொதி துவர்வாய் அசைநடை விறலியர்
பாடல் சான்று நீடினை யுறைதலின்
வென்வேல் அண்ணல் மெல்லியன் போன்மென
உள்ளுவர் கொல்லோநின் னுணரா தோரே
மழைதவழும் பெருங்குன்றத்துச்
செயிருடைய அரவெறிந்து
கடுஞ்சினத்த மிடல்தபுக்கும்
பெருஞ்சினப்புய லேறனையை
தாங்குநர், தடக்கை யானைத் தொடிக்கோடு துமிக்கும்
எஃகுடை வலத்தர்நின் படைவழி வாழ்நர்
மறங்கெழு போந்தை வெண்டோடு புனைந்து
நிறம்பெயர் கண்ணிப் பருந்தூ றளப்பத்
தூக்கணை கிழித்த மாக்கட் டண்ணுமை
கைவ லிளையர் கையலை யழுங்க
மாற்றருஞ் சீற்றத்து மாயிருங் கூற்றம்
வலைவிரித் தன்ன நோக்கலை
கடியையால் நெடுந்தகை! செருவத் தானே.

வினோதத்திலே நெடும்போது தங்குதலால், அவ்வாறு நீட்டிப்பதின் உண்மை யறியாதார் "வெல்வேல் அண்ணல் மெல்லியன்போலும்' என்று தாழ நினைப்பர்கொல்லோ? ஆனால் நீயோ, கொடிய பாம்பையொக்கும் பகைவரை விரைந்தழிக்கும் இடியேற்றை ஒப்பாய். அவ்வாறு விரைந்தழிக்கும்போது நின் செயலுக்கேற்ப, நின் படையாளர் காலாட்படைகளைப் பொருட்படுத்தாமல் பகைவரது யானைக்கோடுகளை வெட்டும் வாள்வலம் உடையராவர். அப்போரில் நின் முடிமாலை, பகைவருதிரம் தெறித்து நிறம் மாறியிருத்தலால் பருந்துகள் ஊன் என மயங்கி அதனை அணுகும். அம்புபட்ட முழவுகள் ஒலியடங்கும்படி, போர்க்களத்தில் கூற்றம் வலைவிரித்தாற்போலப் பகைப்படையை ஒருங்கழிக்க நோக்கின பார்வையை உடையாய் நீ. இவ்வாறு செருக்களத்தே கடுமையுடையனாக இராநின்றாய்—என்று சேரனது வினோதத்து மென்மையும், போர்க்களத்துக் கடுமையும் உடன்கூறியவாறு.

(62) கொடிநுடங்கு நிலைய கொல்களிறு மிடைந்து
வடிமணி நெடுந்தேர் வேறுபுலம் பரப்பி
அருங்கலந் தரீஇயர் நீர்மிசை நிவக்கும்
பெருங்கலி வங்கம் திசைதிரிந் தாங்கு
மையணிந் தெழுதரு மாயிரும் பஃறோல்
மெய்புதை யரண மெண்ணு தெஃகுசுமந்து
முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்
தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க
உயர்நிலை யுலகம் எய்தினர் பலர்பட
நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை
இரப்போர்க்குக் கவித லல்லதை இரைஇய
மலர்பறி யாவெனக் கேட்டிகும் இனியே
சுடரும் பாண்டிற் றிருநாறு விளக்கத்து
முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை யாகச்
சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ
களிந்தனை வருத லுடன்றன ளாகி
உயவுங் கோதை யூரலந் தித்தி

---

(62) ௸, ௸, இரண்டாம் பாட்டு. துறை—குரவைநிலை. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—சிறுசெங்குவளை (22)

*கருத்து:—* பெரும்போர்களை வென்ற நின் தடக்கைகள், இரப்போர் வேண்டியவற்றைக் கொடுத்தற்பொருட்டுக் கவிதலல்லாமல், பிறரிடம் சென்று இரப்பதற்கு விரிதலை அறியா என்று சொல்லக்கேட்டிருக்கிறோம். மகளிர் ஆடும் துணங்கைக்கூத்தில், அவர்க்கு நின் முதற்கையைக் கொடுத்து அவருடன் நீ செறிந்துவருதலை அறிந்து சினங்கொண்டவளாய் நின் பெருந்தேவி உன்மீது எறிதற்பொருட்டு ஓச்சிய சிறுசெங்குவளைமலர், 'எனக்கு ஈக' என்று இழிந்தோன்கூற்றால் நீ கேட்பவும் அதற்கு இசையாளாய், 'எனக்கு நீ என்ன உறவுடையையோ' என்று முனிந்துபெயர்வோளது கையதாகவே இருந்தது. இவ்வாறு இரந்துபெறாமலே அவளிடஞ் சினந்த பார்வை

ஈரிதழ் மழைக்கட் பேரிய லரிவை
ஒள்ளித ழவிழகம் கடுக்குஞ் சீறடிப்
பல்சில கிண்கிணி சிறுபர டலைப்பக்
கொல்புனற் றளிரின் நடுங்குவனள் நின்றுநின்
எறியர் ஓக்கிய சிறுசெங் குவளை
ஈயென இரப்பவும் ஒல்லாள் நீயெமக்கு
யாரை யோவெனப் பெயர்வோள் கையதை
கதுமென உருத்த நோக்கமொ டதுநீ
பாஅல் வல்லா யாயினை பாஅல்
யாங்குவல் லுநையோ வாழ்கநின் கண்ணி
அகலிரு விசும்பிற் பகலிடந் தரீஇயர்
தெறுகதிர் திகழ்தரு முருகெழு ஞாயிற்று
உருபுகிளர் வண்ணங் கொண்ட
வான்றோய் வெண்குடை வேந்தர்தம் எயிலே.

---

(63) வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்தவர்
வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப

---

யோடு அப்பூவைக் கைப்பற்றிக்கொள்ளமாட்டாய் ஆயினை. அங்ஙனம் மாட்டாத நீ, கொடிய பகைவேந்தரின் பேரெயில்களைக் கைப்பற்றுவதில் வல்லவனாகியது எங்ஙனமோ? நின்கண்ணி வாழ்க—எனச் சேரனது கைவண்மையோடும் வென்றியோடும் கூட்டி அவன் காமவின்பச்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு:— பிறர்பால் ஒன்றை இரக்கும் இயல்பினனாகாத சேரன், ஊடிய தன் தேவியிடம், அவளடித்தற்கு ஓச்சியமலரைப் பெறுதற்கு இரப்பவனானான். பகைவரின் பேரரண்களைக் கைப்பற்றவல்ல அவன் இவ்வாறு தன் தேவியிடமிருந்து அம்மலரைக் கைப்பற்றும் வலியிலனானது வியப்பாம் என்பது கருத்து.

(63) ஷை, ஷை, மூன்றும்பாட்டு. துறை—செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—குண்டுகண்ணகழி (8)

நல்கினை யாகுமதி எம்மென் றருளிக்
கல்பிறங்கு வைப்பிற் கடறரை யாத்தநின்
தொல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயிற்
செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கும்
எந்திரத் தகைப்பின் அம்புடை வாயிற்
கோள்வல் முதலைய குண்டுகண் ணகழி
வானுற ஓங்கிய வளைந்துசெய் புரிசை
ஒன்னாத் தெவ்வர் முனைகெட விலங்கி
நின்னிற் றந்த மன்னெயி லல்லது
முன்னும் பின்னுநின் முன்னோ ரோம்பிய
எயில்முகப் படுத்தல் யாவது வளையினும்
பிறிதாறு சென்மதி சினங்கெழு குரிசில்!
எழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக்
குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணின்
தேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி
வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல்
ஏந்துகை சுருட்டித் தோட்டி நீவி
மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா ஆங்குநின் களிறே.

---

கருத்து:— நீ, வேண்டிய பகைப்புலங்களில் தங்கி அப்பகைவர் பணிந்து திறையாகக் கொடுத்தநாட்டை அவர்க்கே அருள்செய்து, பின் நின் பழைமையான தலைநகர்க்குச் செல்வையாயின், குரிசிலே! வளைந்து செல்லவேண்டினும் வேறுவழியே செல்வாயாக. அதற்குக் காரணம் யாதெனின், நின் முன்னோரால் கைக்கொள்ளப்பட்டுக் காக்கப்படும் மதிலரணின் வாயிற்கதவைக் காணுமாயின், நின் மதக்களிறுகள், பழம்பகைவரின் அரண்கள் என்று அவற்றைக்கருதி மனந் தாங்கா. தாங்கவேண்டின், நின்னாற் கைப்பற்றப்பட்ட எயில்களில் அவற்றைச் சேரும்படி செய்க. இவ்வாறன்றி, நின் முன்னோர் கைக்கொண்டு ஓம்பிய எயிலிடங்களிற் சேர்த்துதல் என்ன காரியம்? அது நினக்குத் தகுவதுமன்று—என்று அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(64) வள்ளியை யென்றலிற் காண்குவந் திசினே
உள்ளியது முடித்தி வாழ்கநின் கண்ணி
வீங்கிறைத் தடைஇய அமைமருள் பணைத்தோள்
ஏந்தெழில் மழைக்கண் வனைந்துவர விளமுலைப்
பூந்துகில் அல்குற் றேம்பாய் கூந்தல்
மின்னிழை விறலியர் நின்மறம் பாட
இரவலர் புன்கண் தீர நாடொறும்
உரைசால் நன்கலம் வரைவில வீசி
அனையை யாகன் மாறே யெனையதூஉம்
உயர்நிலை யுலகத்துச் செல்லா திவணின்று
இருநில மருங்கி னெடிதுமன் னியரோ
நிலந்தப விடூஉம் ஏணிப் புலம்படர்ந்து
படுகண் முரசம் நடுவட் சிலைப்பத்
தோமர வலத்தர் நாமஞ் செய்ம்மார்
ஏவல் வியங்கொண் டிளையரொ டெழுதரும்
ஒல்லார் யானை காணின்
நில்லாத் தானை யிறைகிழ வோயே!

---

(64) ஷை, ஷை, நான்காம்பாட்டு. துறை—காட்சிவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—நில்லாத்தானை (17)

**கருத்து:—** இறைமைக் குணங்களுடையோய்! மக்களெல்லாம் 'வள்ளன்மையுடையை' என்று கூறுதலால், நின்னைக் காணவேண்டி வந்தேன். யான் நினைத்துவந்த காரியத்தை நிறைவேற்றிவைப்பாயாக. அழகுவாய்ந்த விறலியர் நின் வீரத்திறனைப் பாட, இரவலருடைய துன்பந்தீரும்படி நாளும் நல்ல அணிகலன்களை அவர்க்கு அளவில்லாமல் வீசி இத்தன்மையனாகவே இருத்தலால், என்போலியரது ஆக்கத்தின்பொருட்டு, நீ உயர்நிலையுலகத்திற் சிறிதுகாலவளவும் செல்லாது, இவ்விருநிலத்தே நெடுங்காலம் நிலைபெற்று வாழ்வாயாக—என்று சேரனது கொடைச்சிறப்பும் தன்குறையும் கூறி வாழ்த்தியவாறு.

(65) ஆன்றோள் கணவ! சான்றோர் புரவல!
நின்னயந்து வந்தனென் அடுபோர்க் கொற்றவ!
இன்னிசைப் புணரி யிரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்
கமழுந் தாழைக் கானலம் பெருந்துறைத்
தண்கடற் படப்பை நன்னாட்டுப் பொருந!
செவ்வூன் தோன்றா வெண்துவை முதிரை
வாலூன் வல்சி மழவர் மெய்ம்மறை!
குடவர் கோவே! கொடித்தே ரண்ணல்!
வாரா ராயினு மிரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்
நசைசால் வாய்மொழி யிசைசால் தோன்றல்!
வேண்டுவ வளவையுள் யாண்டுபல கழியப்
பெய்துபுறந் தந்து பொங்க லாடி
விண்டுச் சேர்ந்த வெண்மழை போலச்

(65) ஷை, ஷை, ஐந்தாம்பாட்டு. துறை—செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—துஞ்சும்பந்தர் (4)

கருத்து:— கற்பிற் சிறந்தாட்குக் கணவனே! சான்றோர் புரவல! அடுபோர்க் கொற்றவ! நின்னைக் காணவிரும்பி வந்தேன். மழையைப் பெய்து உலகைக் காப்பாற்றிப் பின்பு பன்னின பஞ்சுபோல் எழுந்து மலையையடைந்த வெண்மேகம்போல நின் வாழ்நாள் செல்லாதொழிவதாக — என்று சேரன் உலகுபுரத்தலும் தன்குறையும் கூறி வாழ்த்தியவாறு.

குறிப்பு:— (3–6) இன்னோசையுள்ள அலைகள் ஒலிக்கும் கடலின் வழியாக வந்த அணிகலச்செல்வந் தங்கும் பண்டசாலைகளையும், மணம்வீசும் தாழைகளையுடைய கானலம் பெருந்துறைகளையுங்கொண்ட குளிர்ந்த கடற்பக்கத்ததாகிய நன்னாட்டுக்குத் தலைவனே! (6–16) ‘வெண்மழைபோலச் சென்றாலியர்’ என்றது, அம்மழை பெய்து உலகைப் புரக்குந்தன்மையை ஒத்தும், பெய்தபின் வெண்மழையாகக் கழியுந்தன்மையை ஒவ்வாமலும் இவ்வாறு நின்நாள்கள் செல்லுக என்றவாறு.

சென்று வியரோ பெரும! அல்கலும்
நனந்தலை வேந்தர் தாரழிந் தலற
நீடுவரை யடுக்கத்த நாடுகைக் கொண்டு
பொருதுசினந் தணிந்த செருப்புக லாண்மைத்
தாங்குநர்த் தகைத்த ஒள்வாள்
ஓங்க லுள்ளத்துக் குருசில்! நின் னாளே.

(66) விழவுவீற் றிருந்த வியலு ளாங்கண்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கஅவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்து
இலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
மடம்பெரு மையின் உடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே.

(66) ஷை, ஷை, ஆறாம்பாட்டு. துறை—ஒள்வாளமலை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—வேந்துமெய்ம்மறந்தவாழ்ச்சி (7)

கருத்து:—தன் வெற்றிமுரசம் ஒலிப்ப வாளை உயர்த்திக்கொண்டு அணிகலன்களை அணிந்து உழிஞைப்பூவைச் சூடியவனாய், எதிர்ந்த பகைவரது வீரச்செல்வம் அழிந்துகெட்ட போர்க்களத்தில் ஆடுகின்ற அரசன், விழாப் பெருமை மிக்க தன் தலைநகரில் கூத்தரது முழவின்முன் ஆடுதலை வல்லவனல்லன். அவன் கண்ணி வாழ்வதாக—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு:—போர்க்களத்தில் பகைவென்ற சேரன் அவ்வெற்றிக்களிப்பாலே தேர்த்தட்டிலே நின்று போர்த்தலைவரோடு கைபிணைந்தாடும் குரவைக்கூத்து இப்பாட்டிற் கூறப்படுகின்றது. போர்க்களத்து ஆடும் வெற்றிக்கூத்தன்றி, விநோதக்கூத்தை அறியாதவன் என்பது கருத்து.

(67) ஓடாப் பூட்கை மறவர் மிடல்தப
இரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்பக்
குருதி பனிற்றும் புலவுக்களத் தோனே
துணங்கை யாடிய வலம்படு கோமான்
மெல்லிய வகுந்திற் சீறடி யொதுங்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி!
பாணர் கையது பணிதொடை நரம்பின்
விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணிக்
குரல்புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி
இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
ஆன்ற வறிவிற் றோன்றிய நல்லிசை
ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்
இரவலர் புன்க ணஞ்சும்
புரவெதிர் கொள்வனைக் கண்டனம் வரற்கே.

(67) ஷ, ஷ, ஏழாம்பாட்டு. துறை—விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—சில்வளைவிறலி (6)

கருத்து:— சில்வளையல்கள் அணிந்த விறலீ! நம்குடியைப் புரந்துவரும் அரசனைக் கண்டுவருதற்காக, யாழிற் பாலைப்பண்ணை அமைத்துத் தழிஞ்சித் துறைப்பொருள் அமைந்த பாடலைப்பாடிக்கொண்டு, மெல்லிய நிலவழியே நாம் செல்வோமா? அவ்வாறு நம்மைப் புரக்கும் வெற்றிவேந்தன், இதுபொழுது நம்மை எதிர்கொண்டு அளிப்பதற்கேற்ப வெற்றியாற்பெற்ற வருவாயுள்ள போர்க்களத்தே பாசறையில் உள்ளான்—எனச் சேரனது வென்றிச் சிறப்போடு கொடைச்சிறப்பும் கூறியவாறு.

குறிப்பு:— (9) தழிஞ்சித்துறையாவது, போர்க்களத்தில் பகைவர் விடுத்த கணைவேல்முதலிய படைகளை ஏற்றுப் புண்பட்டு வருந்தும் வீரர்களை, அரசன் தானேசென்று பொருள்கொடுத்தும் இன்முகங்காட்டி உசாவி

(68) ஆடுக விறலியர்! பாடுக பரிசிலர்!
வெண்தோட் டசைத்த ஒண்பூங் குவளையர்
வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்
செல்லுறழ் மறவர்தங் கொல்படைத் தரீஇயர்
இன்றினிது நுகர்ந்தன மாயின் நாளை
மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்லது
உண்குவம் அல்லேம் புகாவெனக் கூறிக்
கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்
பொய்படு பறியா வயங்குசெந் நாவின்
எயிலெறி வல்வில் ஏவிளங்கு தடக்கை
ஏந்தெழி லாகத்துச் சான்றோர் மெய்ம்மறை
வான வரம்ப னென்ப கானத்துக்
கறங்கிசைச் சிதடி பொரியரைப் பொருந்திய
சிறியிலை வேலம் பெரிய தோன்றும்
புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்
சீருடைப் பல்பக டொலிப்பப் பூட்டி

---

யும் தழுவிக்கோடல். (10) இச்சேரன் தன் தேவியரிடமாகப் புதல்வரிருவரைப் பெற்றவன் என்பது இவ்வடியால் அறியப்படும்.

(68) ஷை, ஷை, எட்டாம்பாட்டு. துறை—செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—ஏவிளங்குதடக்கை (10)

கருத்து:— வீரர்பெருமானும், அவர்க்குக் கவசம்போன்றவனுமான வானவரம்பனை, புன்செய்களில் உழவர் உழுகின்ற கொழுவழியே திருமணிகளைப் பெறும் நாட்டுக்கு உரியவன் என்று சொல்லுவார்கள். இவ்வாறு அவன் செல்வக்குறைவிலன் ஆதலால், அத்தரத்திற்கேற்ப நமக்கு வேண்டுவன தருதலிற் குறைவுடையவனல்லன். விறலியராயுள்ளீர்! இங்கு வந்தமைக்கு ஏற்ப ஆடுதலைக் குறைவற நடத்துமின்; பரிசிலராயுள்ளீர்! நீவிரும் நும் கவிகளைப் பாடிக் கைவரச்செய்மின்—என்று சேரனது நாட்டுச்செல்வமும் அதற்கேற்ற அவன் கொடையும் கூறியவாறு.

நாஞ்சி லாடிய கொழுவழி மருங்கின்
அலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடுகிழ வோனே.

---

(69) பகல்நீ டாகா திரவுப்பொழுது பெருகி
மாசி நின்ற மாகூர் திங்கட்
பனிச்சுரம் படரும் பாண்மகன் உவப்பப்
புல்லிருள் விடியப் புலம்புசே ணகலப்
பாயிருள் நீங்கப் பல்கதிர் பரப்பி
ஞாயிறு குணமுதற் றோன்றி யாஅங்கு
இரவல் மாக்கள் சிறுகுடி பெருக
உலகந் தாங்கிய மேம்படு கற்பின்
வில்லோர் மெய்ம்மறை! வீற்றிருங் கொற்றத்துச்
செல்வர் செல்வ! சேர்ந்தோர்க் கரணம்!
அறியா தெதிர்ந்து துப்பிற் குறையுற்றுப்
பணிந்துதிறை தருபநின் பகைவ ராயிற்
சினஞ்செலத் தணியுமோ வாழ்கநின் கண்ணி
பல்வேறு வகைய நனந்தலை யீண்டிய
மலையவும் கடலவும் பண்ணியம் பகுக்கும்

---

குறிப்பு:— (2) வெண்தோடு—பனந்தோடு; (௨) கண்ணிகண்ணுதல்—தாங்கள் சூடிய போர்க்கண்ணிக்கு ஏற்ப வினைசெய்யக் கருதுதல். (4—7) பகைவரரண்களை அற்றைப்பகலே கைப்பற்றுதலாகிய 'தொல்லெயிற்கிவர்தல்' என்னும் புறத்துறை.

(69) ௬௯, ௬௯, ஒன்பதாம்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—மாகூர்திங்கள் (2)

கருத்து:— வில்வீரர்க்குக் கவசம் போன்றவனும், செல்வர்க்குச் செல்வனும், அடைந்தோர்க்கு அரணுமாகிய அரசே! நன்கலன்களைத் திறையாகத் தரும் நாடுகளைக் காத்தளித்தல் நின் கடனாயிருக்கும். ஆதலால், நின் பகை

ஆறுமுட் டுறாஅ தறம்புரிந் தொழுகும்
நாடல் சான்ற துப்பிற் பணைத்தோட்
பாடுசால் நன்கலந் தரூஉம்
நாடுபுறந் தருதல் நினக்குமார் கடனே.

---

(70) கொலைவினை மேவற்றுத் தானை தானே
இகல்வினை மேவலன் தண்டாது வீசுஞ்
செல்லா மோதில் பாண்மகள்! காணியர்
மிஞிறுபுற மூசவுந் தீஞ்சுவை திரியாது
அரம்போழ் கல்லா மரம்படு தீங்கனி
அஞ்சே றமைந்த முண்டை விளைபழம்
ஆறுசெல் மாக்கட் கோய்தகை தடுக்கு
மறாஅ விளையுள் அறாஅ யாணர்த்
தொடைமடி களைந்த சிலையுடை மறவர்
பொங்குபிசிர்ப் புணரி மங்குலொடு மயங்கி
வருங்கட லூதையிற் பனிக்கும்
துவ்வா நறவின் சாயினத் தானே.

---

வர் அறியாது நின்னை எதிர்த்து, வலிமைக்குறைவாற் பின்புபணிந்து திறை தருவராயின், நின்னிடத்தினின்றும் நீங்கும்படி நின் சினம் தணியுமோ? நின் முடிமாலை வாழ்க'— எனச் சேரன்வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(70) ஷை, ஷை, பத்தாம்பாட்டு. துறை—விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—மரம்படுதீங்கனி (ய்)

கருத்து:—சேரன்தான் கடலின் ஊதையானது வில்லாளரான மறவரையும் உடல்நடுங்கும்படி செய்யும் வளமிக்க நறவு என்னும் ஊரின்கண், மெல்லியன் மகளிரினத்திடையே உள்ளான். அவனதுசேனை கொலைத்தொழிலை விரும்பாநின்றது. அவன்றான் இன்னபொழுது இன்னவிடத்து எழுவான் என்பது தெரியாது. பாண்மகளே! நாம் அவனை இப்போதே காணும்பொருட்டுச் செல்லலாமோ? செல்லின், வேண்டியவற்றைத் தடையின்றிக் கொடுப்பான்— எனச் சேரன்செல்வச்சிறப்போடு வென்றிச்சிறப்பும் கூறியவாறு.

## பதிகம்

(71) குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு வேள
ளாவிக் கோமான் தேவி ஈன்றமகன்
தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுட் டந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட் டோரூ ரீத்து
வான வரம்பனெனப் பேரினிது விளக்கி
ஏனை மழவரைச் செருவிற் சுருக்கி
மன்னரை யோட்டிக்
குழவிகொள் வாரிற் குடிபுறந் தந்து
நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்
ஆடுகோட் பாட்டுச் சேர லாதனை
யாத்த செய்யு ளடங்கிய கொள்கைக்
காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடினார்
பத்துப்பாட்டு.

அவைதாம்; வடுவடுநுண்ணயிர், சிறுசெங்குவளை, குண்டுகண்ணகழி, நில்லாத்தானை, துஞ்சும்பந்தர், வேந்துமெய்ம்மறந்தவாழ்ச்சி, சில்வளைவிறலி, ஏவிளங்குதடக்கை, மாகூர்திங்கள், மரம்படுதீங்கனி. இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: 'கலனணிக' என்று அவர்க்கு ஒன்பது கா*ப்பொன்னும் நூறாயிரங்காணமும்† கொடுத்துத் தன் பக்கத்துக் கொண்டான் அக்கோ.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் முப்பத்தெட்டியாண்டு வீற்றிருந்தான்.

---

குறிப்பு:— (3) தண்டாரணியம்—ஆரியநாட்டில் உள்ளதோர் நாடு. (9) குழந்தையைப் பாதுகாப்பாரைப்போலக் குடிகளைக் காப்பாற்றி. *கா—ஒருநிறை. †காணம்—பொற்காசு.

### சேரமான் கருவூரேறிய
### ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை

(72) எருமை யன்ன கருங்கல் லிடைதோறு
ஆனிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும!
நீயோ ராகலின் நின்னொன்று மொழிவல்
அருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே.

நரிவெரூஉத்தலையார்.

---

### சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை

(73) இவனியா ரென்குவை யாயி னிவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய

(72) புறநானூறு, 5. திணை—பாடாண்டிணை. துறை—செவியறிவுறூஉ; பொருண்மொழிக் காஞ்சியுமாம்.

"சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறையைக் கண்டஞான்று நின் உடம்பு பெறுவாயாக என, அவனைச்சென்று கண்டு தம் உடம்பு பெற்றுநின்ற நரிவெரூஉத்தலையார் பாடியது."

கருத்து:— ஆனிரைகள்போல யானைக்கூட்டங்களையுடைய காடுசூழ்ந்த நாட்டுக்குரிய பெருமானே! பெருஞ்செல்வனுமுள்ள உனக்கு ஒரு காரியஞ் சொல்வேன், கேட்பாயாக; அருளையும் அன்பையும் நீக்கி நரகத்தைத் தமக்கு இடமாகக் கொள்வாரோடு சேராமல், உன்னாற் காக்கப்படுந் தேயத்தைக் குழவியை வளர்ப்பாரைப்போல நீ பாதுகாப்பாயாக. அக்காவல் பேணத் தக்கது; பெறுதற்கு அரியது—எ-று.

(73) புறநானூறு, 13. திணை—பாடாண்டிணை. துறை—வாழ்த்தியல்.

"சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி கருவூரிடம் செல்வானைக்

எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலி யன்ன களிற்றுமிசை யோனே
களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே
நோயில னாகிப் பெயர்கதி லம்ம
பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

## மாந்தரம் பொறையன் கடுங்கோ

(74) இலமல ரன்ன அஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோ ரேத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்

---

கண்டு, சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறையொடு வேண்மாடத்து மேலிருந்து உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது."

கருத்து:—களிற்றின்மேல் உள்ளவனாகிய இவன் யாவன் என்று வினவுவாயாயின், இவன் வளம்பொருந்திய சோணாட்டுக்குரியோன். இவனுடைய களிறு மதம்பட்டது. நோயின்றி இவன் பெயர்வானாக—என்று, பெருநற்கிள்ளியின் களிறு கட்டுக்கடங்காமல் பகையகத்துப் புகுந்தமையால் அவற்குத் தீங்குறும் என்று அஞ்சி வாழ்த்தியவாறு.

(74) அகநானூறு, 142. திணை—குறிஞ்சி. இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

கருத்து:— இலவமலர் போன்ற அழகிய செந்நாவினால் புலமைமிக்க மேலோர் புகழும்படி, கொடையால் மேம்பட்ட வள்ளலும் பெரும்படையாற்

இறையருந் தானை வெல்போர் மாந்தரம்
பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே! காதலி
முறையின் வழாஅ தாற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி
புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை அதிகற் கொன்றுவந்து
ஒள்வா ளமலை யாடிய ஞாட்பிற்
பலரறி வுறுத லஞ்சிப் பைப்பைய
நீர்த்திரள் கடுக்கு மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்
குறையற லன்ன இரும்பல் கூந்தல்
இடனில் சிறுபுறத் திழையொடு துயல்வரக்
கடல்மீன் துஞ்சு நள்ளென் யாமத்து
உருவுகிள ரேர்வினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து
பெயலலைக் கலங்கிய மலைப்பூங் கோதை

---

போர்வெற்றிபெற்றவனுமான மாந்தரம்பொறையன் கடுங்கோ என்ற சேரவேந்தனைப் பாடிச்சென்ற இரவலரின் கைக்கலம்போல, மனம்நிறைவுற்று மகிழ்வாயாக—என்று, தன் நெஞ்சைநோக்கித் தலைவன் கூறினான். இதனால், இச்சேரன் அக்காலத்தில் வெற்றிவீரமும் வள்ளன்மையும் உடையவனாக விளங்கியவன் என்பது விளங்கும்.

**குறிப்பு:—** பூழிநாட்டுப் பாழி என்னும் நகரிலிருந்தாண்ட நன்னனது சேனாபதி மிஞிலி என்பான், அதிகன் என்பவனைப் போரிற்கொன்ற சரிதம் 9—14 அடிகளிற் கூறப்படுகின்றது. இந்த நன்னனே ஏளங்காய்க்கண்ணி

இயலெறி பொன்னிற் கொங்குசேர் புறைப்பத்
தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே.

பரணர்.

---

### சேரமான் கடுங்கோ வாழியாதன்

(75) வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
ஓடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்!
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே.

கபிலர்.

---

நார்முடிச்சேரலால் போரில் கொல்லப்பட்டவன். மிஞிலியாற் கொலையுண்ட அதிகனை, ஆய் எயினன் என்று கருத இடமுண்டு.

(75) புறநானூறு, 8, திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி; பூவைநிலையுமாம்.

கருத்து:— ஊக்கமும் படைவன்மையும் வள்ளன்மையும் உடைய சேரலாதனை, வேகமிக்க செலவையுடைய ஆதித்தமண்டலமே! நீ எவ்வாறு ஒப்பாவாய்? நீ பகற்பொழுதை தினக்கென வகுத்துக்கொள்வை; திங்கள்மண்டிலத்துக்கு முதுகிட்டுப்போவாய். தெற்கும் வடக்குமாகிய இடங்களில் மாறிமாறி வருவை. மலையின்கண்ணே வெளிப்படாது ஒளிப்பாய். அகன்ற பெரிய ஆகாயத்திலும் பகற்பொழுதுதான் விளங்குவை. சேரன்பாலில்லாத இக்குறைபாடுகள் உனக்கு உள்ளனவன்றோ என்று.

(76) கடுங்கண்ண கொல்களிற்ருற்
காப்புடைய வெழூமுருக்கிப்
பொன்னியற் புனைதோட்டியான்
முன்புதுரந்து சமந்தாங்கவும்
பாருடைத்த குண்டகழி
நீரழுவ நிவப்புக்குறித்து
நிமிர்பரிய மாதாங்கவும்
ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாவ நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்!
வலிய வாகுநின் ருடோய் தடக்கை
புலவுநாற்றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ யூன்றுவை
கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது
பிறிதுதொழி லறியா வாகலி னன்று
மெல்லிய பெரும! தாமே நல்லவர்க்

---

(76) புறநானூறு, 14. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி. "சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் கபிலர் கைப்பற்றி 'மெல்லியவா மால் நுங் கை' எனக் கபிலர் பாடியது."

**கருத்து:—** பெருமானே! போரில், கொலையானையைக்கொண்டு பகை யரண்களைத் தகர்த்தற்குத் தக்கபடி செலுத்தவும், குதிரையைக் குசைதாங்கி வேண்டுமளவிலே பிடிக்கவும், தேர்மேலேநின்று வில்வடுப்படும்படி அம்பைச் செலுத்தவும், பரிசிலர்க்கு வேண்டிய அணிகலங்களை அளிக்கவும் வலிய வாகும், முழந்தாளைப் பொருந்திய நின் பெருங்கைகள். ஊனையும் துவை யையும் கறியையும் சோற்றையும் அளைந்து உண்டுவருந்துஞ் செயலல்லது வேறு செயலறியா, நின்னைப்பாடுவார் கைகள்; ஆதலால் போர்த்திறமிக்க சேயை ஒத்த குருசிலே! அவை பெரிதும் மென்மையுடையவாயின என்று.

காரணங் காகிய மார்பிற் பொருநர்க்
கிருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்!நிற் பாடுநர் கையே.

**கபிலர்.**

---

**சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய**
**செல்வக்கடுங்கோ வாழியாதன்**

(77) வள்ளுகிர வயலாமை
வெள்ளகடு கண்டன்ன
வீங்குவிசிப் புதுப்போர்வைத்
தெண்கண் மாக்கிணை யியக்கி யென்றும்
மாறுகொண்டோர் மதிலிடறி
நீருடிய நறுங்கவுள
பூம்பொறிப் பணையெருத்தின
வேறுவேறு பரந்தியங்கி
வேந்துடைமிளை யயல்பரக்கும்
ஏந்துகோட் டிரும்பிணர்த்தடக்கைத்
திருந்துதொழிற் பலபகடு
பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
நகைப்புல வாணர் நல்குர வகற்றி
மிகப்பொலியர்தன் சேவடியத்தையென்று
யானிசைப்பி னனிநன்றெனப்
பலபிற வாழ்த்த விருந்தோ ரென்கோ...

(77) புறநானூறு, 387, திணை—பாடாண்டிணை. துறை—வாழ்த்தியல்.

**கருத்து:—** தன் அருமைபெருமைகளைக் கூறி வாழ்த்தும் கிணைப்பொருநர்க்கும் புலவர்க்கும் பகைவர் திறையாகத்தந்த யானைகளைப் பரிசாக அளிக்கும் தன் வள்ளன்மையை நாளும் வாழ்த்திநின்றவளவிலே, என்னைத் தன்னிடம்

மருவவி னகரகன்
திருந்துகழற் சேவடி குறுகல் வேண்டி
வென்றிரங்கும் விறன்முரசினோன்
என்சிறுமையி னிழித்துநோக்கான்
தன்பெருமையின் தகவுநோக்கிக்
குன்றுறழ்ந்த களிறென்கோ
கொய்யுளைய மாவென்கோ
மன்றுநிறையு நிரையென்கோ
மனைக்களமரொடு களமென்கோ
ஆங்கவை, கனவென மருள வல்லே நனவின்
நல்கி யோனே நகைசா றோன்றல்
ஊழி வாழி பூழியர் பெருமகன்
பிணர்மருப் பியானைச் செருமிகு நோன்றாட்
செல்வக் கடுங்கோ வாழி யாதன்
ஒன்னாத் தெவ்வ ருயர்குடை பணித்திவண்
விடுவர் மாதோ நெடிதே நி.........
புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்கும்
கல்லென் பொருநை மணலினு மாக்கட்
பல்லூர் சுற்றிய கழனி
எல்லாம் விளையும் நெல்லினும் பலவே.

குண்டுகட்பாலியாதன்.

அழைத்தருளி, என் சிறுமைகண்டு இழித்துநோக்காமல், தன் பெருமைக்குத் தக்கபடி உயர்ந்த களிறு குதிரை ஆனிரை களமரோடு வயற்களம் முதலியவற்றை, கனவென்று மருளாது நனவுதான் என்று கருதும்படி கொடுத்தருளினான், பூழியர் பெருமானான செல்வக்கடுங்கோவாழியாதன். அவனது வஞ்சி மாநகரிற் புறமதிலைத் தன் நீரால் தாக்கும் ஆன்பொருநையாற்று மணலினும், அவ்விடத்துள்ள பல ஊர்களைச் சுற்றியமைந்த கழனிகளெல்லாம் விளையும் நெற்களினும் பல ஊழிகாலம் அவன் வாழ்வானாக என்று.

### செல்வக்கடுங்கோ வாழியாதன்

(78) பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்
வாடை துரக்கு நாடுகெழு பெருவிறல்
ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன நல்லோள் கணவன்
பொன்னி னன்ன பூவிற் சிறியிலைப்
புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ
புலர்ந்த சாந்திற் புலரா வீகை
மலர்ந்த மார்பின் மாவண் பாரி
முழவுமண் புலர விரவல ரினைய
வாராச் சேட்புலம் படர்ந்தோ னளிக்கென
இரக்கு வாரே னெஞ்சிக் கூறேன்
ஈத்த திரங்கா னீத்தொறு மகிழான்
ஈத்தொறு மாவள் ளியனென நுவலுநின்
நல்லிசை தரவந் திசினே யொள்வாள்

(78) பதிற்றுப்பத்து ஏழாம்பத்து, முதற்பாட்டு. துறை—காட்சிவாழ்த்து. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—புலாஅம்பாசறை(15) இப்பத்து முழுதும் பாடினார் கபிலர்.

கருத்து:— 'பெருவீரனும் மாவள்ளலுமான பாரி மீளாவுலகத்துச் சென்றான்; நீ அளிப்பாயாக' எனச்சொல்லி இரப்பவனாய் வந்து நின்பாற் சில சொல்லவந்தவனும் அல்லேன். அஃதன்றி உண்மையொழியப் புகழ்ந்து சொல்வேனு மல்லேன். ஈந்ததற்குச் சழிவிரக்கங் கொள்ளாமையும் ஈயுந்தொறும் மகிழாமையும் முதலாகிய அப்பாரியின் குணங்கள் நின்பாலும் உள்ளனவாக உலகஞ்சொல்லும் நின்புகழை நின்னிடம் தருதற்பொருட்டே வந்தேன், விழாவைப் போன்ற ஆரவாரமிக்க நின் பாசறைக்கண்—என்று சேரனது வெற்றிச்சிறப்போடு சேரவைத்து அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு:— இதனால், தம்மை அபிமானித்த பெருவள்ளலான வேள்பாரி இறந்தபின், அவனையொத்த குணங்கொடைகள் உடையவன் செல்வக்கடுங்கோ என்பதறிந்து அவனைக் காணச்சென்றவர், கபிலர் என்பது விளங்கும்.

உரவுக் களிற்றுப் புலாஅம் பாசறை
நிலவி னன்ன வெள்வேல் பாடினி
முழவிற் போக்கிய வெண்கை
விழவி னன்னநின் கலியகி ழானே.

கபிலர்.

(79) இழையணிந் தெழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு
மழையென மருளும் மாயிரும் பஃறோல்
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவியொடு
மைந்துடை யாரெயில் புடைபட வளைஇ
வந்துபுறத் திறுக்கும் பசும்பிசி ரொள்ளழல்
ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ்பு
ஒல்லா மயலொடு பாடிமிழ் புழிதரு
மடங்கல் வண்ணங் கொண்ட கடுந்திறல்
துப்புத்துறை போகிய கொற்ற வேந்தே!
புனல்பொரு கிடங்கின் வரைபோ லிஞ்சி
அணங்குடைத் தடக்கையர் தோட்டி செப்பிப்
பணிந்துதிறை தருபநின் பகைவ ராயிற்
புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பி
வளனுடைச் செறுவின் விளைந்தவை யுதிர்ந்த
களனறு குப்பை காஞ்சிச் சேர்த்தி

(79) ஷை, ஷை, இரண்டாம்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—வரைபோலிஞ்சி (10)

**கருத்து:**- கொற்றவேந்தே! தோள்வலியும் அரண்வலியுமுடைய பகையரசர் வணக்கத்தைச் சொல்லி நினக்குப்பணிந்து திறை தருவராயின், உழவால் வளம்படைத்த அவர்நாடுகள் புலவர் பாடற்மிக்குச் சிறப்பனவாகும்—எனச் சேரன் வெற்றிச்சிறப்புக் கூறியவாறு.

அரிய லார்கை வன்கை வினைநர்
அருவி யாம்பல் மலைந்த சென்னியர்
ஆடுசிறை வரிவண் டோப்பும்
பாடல் சான்றவவ ரகன்றலை நாடே.

---

(80) பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகலம்
மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினும்
கிளந்த சொல்நீ பொய்ப்பறி யலையே
சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்றுநிலை தளர்க்கு முருமிற் சீறி
ஒருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே!
ஆடுபெற் றழிந்த மள்ளர் மாறி

(80) ஷை, ஷை, மூன்றாம்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—அருவியாம்பல் (19)

**கருத்து:**—செல்வக்கடுங்கோவே! நீ பார்ப்பார்க்கல்லாமல் பிறர்க்குப் பணிதலை அறியாய். நட்டோர்க்கல்லாமல் கண்ணோடி அஞ்சமாட்டாய். வீரமும் மணமும் பொருந்திய நின் மார்பினை, நின் மகளிர்பொருட்டல்லது, பகைவர்க்கு மலர்த்தலை அறியாய். உலகம் அழியும் ஊழிகாலமாயினும் சொன்ன சொற் பொய்த்தல் செய்யாய். இவை நின் இயல்புகள். ஒரே வளைப்பினால் சோழ பாண்டியரை வென்ற போர்வல்லாய்! முன் பிறர்பால் வெற்றிபெற்று நினக்குத்தோற்ற வீரர், தம் பகைமை நீங்கி நீ ஏவினபணி செய்யக்கடவேம் என்று பணிந்துகூறவும், அதற்கேற்ப நீயும் பெருமையும் கண்ணோட்டமு

நீகண் டனையே மென்றனர் நீயும்
நுந்நுகம் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே! சேரலர் மருக!
கால்திரை யெடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனின்
அடையடுப் பறியா அருவி யாம்பல்
ஆயிர வெள்ள வூழி
வாழி யாத! வாழிய பலவே.

---

(81) வலம்படு முரசின் வாய்வாட் கொற்றத்துப்
பொலம்பூண் வேந்தர் பலர்தில் லம்ம
அறங்கரைந்து வயங்கிய நாவிற் பிறங்கிய
உரைசால் வேள்வி முடித்த கேள்வி
அந்தணர் அருங்கல மேற்ப நீர்பட்டு
இருஞ்சே றாடிய மணல்மலி முற்றத்துக்
களிறுநிலை முணைஇய தாரருந் தகைப்பிற்
புறஞ்சிறை வயிரியர்க் காணின் வல்லே
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவி

---

மாகிய நின் அரசியல் வலிமைகொண்டு மேலும் அவர்மேல் வெற்றிபெற்ற வனுயினை. சேரலர் மருக! உலகில் நன்மக்கள் செய்த புண்ணியச்செயல் உண்டாயின், பல்லாயிரவூழிகள் நீ வாழ்வாயாக—எனச் சேரனது பல குணங்களையும் ஒருங்குகூறி வாழ்த்தியவாறு.

(81) ஷை, ஷை, நான்காம்பாட்டு. துறை—காட்சிவாழ்த்து. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—உரைசால்வேள்வி (4).

கருத்து:— உலகத்து வெற்றிவேந்தர் பலர் உளர். அவராற் பெறும்பயன் என்? வேள்வியந்தணர்க்கு அருங்கலங்களை அவர் ஏற்கும்படி நீர்வார்த்துக் கொடுத்தலின் அந்நீராற் சேறுபட்ட மணல்பரந்த முற்றத்தினையுடையதும் பிறர் புகுதற்கரியதுமான நினது மாளிகைக்கட்டணத்தின் மதிற்புறத்தே கூத்தரைக் கண்டால் அவர்க்குக் குதிரைகளையும் தேர்க்குரிய எருதுகளையும்

அலங்கும் பாண்டி லிழையணிந் தீமென
ஆனாக் கொள்கையை யாதலின் அவ்வயின்
மாயிரு விசும்பிற் பன்மீன் ஒளிகெட
ஞாயிறு தோன்றி யாங்கு மாற்றார்
உறுமுரண் சிதைத்தநின் னோன்றாள் வாழ்த்திக்
காண்கு வந்திசிற் கழல்தொடி யண்ணல்!
மைபடு மலர்க்கழி மலர்ந்த நெய்தல்
இதழ்வனப் புற்ற தோற்றமொ டுயர்ந்த
மழையினும் பெரும்பயம் பொழிதி யதனாற்
பசியுடை யொக்கலை யொரீஇய
இசைமேந் தோன்றல்! நின் பாசறை யானே

(82) எறிபிண மிடறிய செம்மறுக் குளம்பிற்
பரியுடை நன்மா விரியுளை சூட்டி
மலைத்த தெவ்வர் மறந்தபக் கடந்த
காஞ்சி சான்ற வயவர் பெரும!
வில்லோர் மெய்ம்மறை! சேர்ந்தோர் செல்வ!
பூணணிந் தெழிலிய வணைந்துவர விளமுலை

---

இழையணிந்து நீவிரே கொடுமின் என்று உரியாரை ஏவி ஈதல்நீங்காத விரதத்தை உடையை; ஆதலால், மழையினும்பெரிய பயனைப் பாசறையினும் நீ பொழிதி. அதனால், அண்ணல்! பகைவென்ற நின் வலிமிக்க தாளை வாழ்த்தி நின்னைக் காணும்பொருட்டு இங்குவந்தேன் — என்று சேரன் கொடைச்சிறப்பினை அவன் வென்றிச்சிறப்பொடுபடுத்துக் கூறியவாறு.

(82) ஷை, ஷை, ஐந்தாம்பாட்டு. துறை — பரிசிற்றுறைப் பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர் — நாண்மகிழிருக்கை (13)

**கருத்து:** — குதிரைவீரர்க்குத் தலைவனே! விற்படையாளர்க்குக் கவசம்போல்வாய்! சேர்ந்தோர் செல்வ! கற்புடையாட்டியான அழகிய சேயிழையின் கணவ! பாணர்புரவலனே! பரிசிலர்க்கு நிதியன்னாய்! எழுமுடி முதலிய

மாண்வரி யல்குன் மலர்ந்த நோக்கின்
வேய்புரை பெழிலிய விளங்கிறைப் பணைத்தோட்
காமர் கடவுளு மாளுங் கற்பிற்
சேணாறு நறுநுதற் சேயிழை கணவ!
பாணர் புரவல! பரிசிலர் வெறுக்கை!
பூணணிந்து விளங்கிய புகழ்சால் மார்ப! நின்
நாண்மகி ழிருக்கை இனிதுகண் டிகுமே
தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையு ளுறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்
சேறுசெய் மாரியின் அளிக்குநின்
சாறுபடு திருவி னனைமகி ழானே.

(83) வாங்கிரு மருப்பிற் றீந்தொடை பழுனிய
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணிப்
படர்ந்தனை செல்லு முதுவா யிரவல!
இடியிசை முரசமொ டொன்றுமொழிந் தொன்னார்
வேலுடைக் குழூஉச்சமந் ததைய நூறிக்

---

பூண்களணிந்த மார்ப! யாழிலே வாசித்தற்கரிய பாலைப்பண்களை மாறிமாறி வாசித்தாற்போல, வெவ்வேறு சுவையுடைய மதுக்களை நீ அளிக்க அதனால் மகிழ்ச்சிமிக்க நின் நாளோலக்கத்தின் சிறப்பெல்லாம் யான் இனிது கண்டு மகிழ்ந்தேன்—என்று சேரனது ஓலக்கவினோதத்துடன் சேர்த்து அவன் செல்வச்சிறப்புக் கூறியவாறு.

(83) ஷை, ஷை, ஆறாம்பாட்டு. துறை—செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமுந் தூக்கும் அவை. பெயர்— புதல்சூழ்பறவை (16)

கருத்து:—பேரியாழில் பாலைப்பண்ணையமைத்துச் சேரனை விரைந்து செல்கின்ற முதுவாயிரவலனே! வீரரைக் கொன்றுகுவித்த போர்க்களப் பரப்பிலே, பகைவர் முன்பு திறையாகத்தந்த ஆண்யானைகளோடு மரக்காலளவை

கொன்றுபுறம் பெற்ற பிணம்பயில் அழுவத்துத்
தொன்றுதிறை தந்த களிற்றொடு நெல்லின்
அம்பண வளவை விரிந்துறை போகிய
ஆர்பத நல்கு மென்ப கறுத்தோர்
உறுமுரண் தாங்கிய தாரருந் தகைப்பின்
நாண்மழைக் குழூஉச்சிமை கடுக்குந் தோன்றற்
றோன்மிசைத் தெழுதரும் விரிந்திலங் கெஃகிற்
றார்புரிந் தன்ன வாளுடை விழவிற்
போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த
கடவுள் வாகைத் துய்வீ யேய்ப்பப்
பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை
கடத்திடைப் பிடவின் தொடைக்குலைச் சேக்கும்
வான்பளிங்கு விரைஇய செம்பரன் முரம்பின்
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடுகிழ வோனே.

---

(84) கொடுமணம் பட்ட நெடுமொழி யொக்கலொடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்

---

யால் அளந்து உறையிடமுடியாதபடி தன்னாட்டு விளைந்த நெல்லாகிய உணவினையும் அளிப்பவன், செல்வமிக்க நாட்டுக்குரியவனான அவ்வேந்தன் என்று எல்லாரும் சொல்லுவார்கள். போரின்மையால் புதிதாக வென்று கொடுக்க வேண்டும் என்பது அவனுக்கில்லை. ஆதலால், நின் வினைவிற்கேற்றபடி பெறலாம்; அவன்பால் ஏகுக—என அவன் வென்றிச்சிறப்புடன்படுத்துக் கொடைச் சிறப்புக் கூறியவாறு.

(84) ஷை, ஷை, ஏழாம்பாட்டு. துறை—பாணாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—வெண்போழ்க்கண்ணி (13).

உரை:—யாழ்வாசிக்கும் முறையிற் கைதேர்ந்த பாணனே! போர்வெற்றி பெற்ற பெருவீரர்க்குத் தலைவனும் நேரிமலைத்தலைவனுமான செல்வக்கடுங்

கடனறி மரபிற் கைவல் பாண!
தெண்கடல் முத்தமொடு நன்கலம் பெறுகுவை
கொல்படை தெரிய வெல்கொடி நுடங்க
வயங்குகதிர் வயிரொடு வலம்புரி யார்ப்பப்
பல்களிற் றினநிரை புலம்பெயர்ந் தியல்வர
அமர்க்க ணமைந்த அவிர்நிணப் பரப்பிற்
குழூஉச்சிறை யெருவை குருதி யாரத்
தலைதுமிந் தெஞ்சிய வாண்மலி யூபமொடு
உருவில் பேய்மகள் கவலை கவற்ற
நாடுடன் நடுங்கப் பல்செருக் கொன்று
நாறிணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணியர்
வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்
நெறிபடு மருப்பின் இருங்கண் மூரியொடு
வளைதலை மாத்த தாழ்கரும் பாசவர்
எஃகா டூனங் கடுப்ப மெய்சிதைந்து
சாந்தெழில் மறைத்த சான்றோர் பெருமகன்
மலர்ந்த காந்தள் மாறா தூதிய
கடும்பறைத் தும்பி சூர்நசைத் தாஅய்ப்
பறைபண் ணழியும் பாடுசால் நெடுவரைக்
கல்லுயர் நேரிப் பொருநன்
செல்வக் கோமாற் பாடினை செலினே.

---

கோவைப் பாடிச் செல்குவையாயின், கொடுமணம் என்ற ஊரில் உண்டான நல்ல அணிகலங்களோடு, பந்தர் என்ற மூதூரில் உள்ள கடன்முத்துக்களையும் பரிசிலாகப் பெறுவாய்—என்று சேரனது கொடைச்சிறப்புக் கூறியவாறு.

**குறிப்பு:—(1-4)** எதிர்நிரனிறை; 'கொடுமணம் பட்ட வினைமாணருங் கலம், பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்' என, 8-ம் பத்திற்கூறப்படுதல் காண்க (74-5,6).

(85) கால்கடிப் பாகக் கடலொலித் தாங்கு
வேறுபுலத் திறுத்த கட்டூர் நாப்பண்
கடுஞ்சிலை கடவுந் தழங்குகுரல் முரசம்
அகலிரு விசும்பி னதிர
வெவ்வரி நிலைஇய எயிலெறிந் தல்லது
உண்ணா தடுக்கிய பொழுதுபல கழிய
நெஞ்சுபுக லூக்கத்தர் மெய்தயங் குயக்கத்து
இன்னா ருறையுட் டாம்பெறி னல்லது
வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு
கட்கொடி நுடங்கு மாவணம் புக்குடன்
அருங்கள் நொடைமை தீர்ந்தபின் மகிழ்சிறந்து
நாம மறியா ஏம வாழ்க்கை
வடபுல வாழ்நரிற் பெரிதமர்ந் தல்கலும்
இன்னகை மேய பல்லுறை பெறுபகொல்
பாய லின்மையிற் பாசிழை நெகிழ
நெடும ணிஞ்சி நீணகர் வரைப்பின்
ஓவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச்
செவ்விரல் சிவந்த அவ்வரிக் குடைச்சூல்

(85) ஷை, ஷை, எட்டாம்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண்பாட்டு. வண்ணமுந் தூக்கும் அவை. பெயர்—ஏமவாழ்க்கை (12).

கருத்து:—மகளிரைப் பிணிக்கும் மணங்கமழ்மார்பனே! நின் தாணிழலில் வாழ்வோரான பெருவீரர்கள், பகைவரெயிலை அழித்தல்லது உண்ணுதலைச் செய்யாராகப் பலபொழுதுகள் கழியலாயின. அத்தகையோர், ஊக்கமிக்கு அப்பகைவர் உறைவிடத்தைக் கைப்பற்றித் தாம் பெற்றாலல்லாமல் வீரபானமான மதுவையுண்டு போகபூமியின்பம் பெறுவரோ? அவ்வாறு வெற்றியும் இன்பமும் பெற்றாலன்றி நின் அழகிய அரிவையரும் நின்னுடன் பலநாள் உறைந்துமகிழ்வது எது?—என்று காமவேட்கையின் ஓடாத சேரனது வென்றி வேட்கைச் சிறப்புக் கூறியவாறு.

அணங்கெழி லரிவையர்ப் பிணிக்கும்
மணங்கமழ் மார்ப!நின் தாணிழ லோரே.

---

(86) மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி
வரைமிசை யருவியின் வயின்வயின் நுடங்கக்
கடல்போற் றானைக் கடுங்குரல் முரசங்
காலுறு கடலிற் கடிய வுரற
எறிந்துசிதைந்த வாள்
இலைதெரிந்த வேல்
பாய்ந்தாய்ந்த மா
ஆய்ந்துதெரிந்த புகல்மறவரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்
கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே!
நின்போல், அசைவில் கொள்கைய ராகலி னசையாது
ஆண்டோர் மன்றவிம் மண்கெழு ஞாலம்
நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப்
பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப

---

(86) ஷை, ஷை, ஒன்பதாம்பாட்டு. துறை—வஞ்சித்துறைப் பாடாண் பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—மண்கெழுஞாலம் (12).

கருத்து:—பகைவரைப் போரில் அழித்து, அவர் நாட்டுக்குடிகளை நல்லாணையிற் செல்ல நிறுவிய கொற்றவேந்தே! சீரிய ஆஞ்ஞாசக்கரத்தையுடைய நின் முன்னோர், நிச்சயமாக நின்னைப்போல மாறுதலில்லாத சங்கற்பமுடையராகையாலே, நிலம் பயன்பெருகவும், காலமழை தவறாமற் பெய்தலால் சூரியவெப்பந் தணிந்து விளங்கவும், சுக்கிரன் என்ற கோள் நல்ல நாட்களிலே நிற்கவும், உலகம்புரத்தலைத் தானே மேற்கொண்டு மழைபொழியவும் சலனமின்றி இவ்வுலகை ஆண்டோராவர். அவரல்லாதார், இஞ்ஞாலத்தின்

விசும்புமெய் யகலப் பெயல்புர வெதிர
நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த
இலங்குகதிர்த் திகிரி முந்திசி னோரே.

---

(87) களிறுகடை இய தாள்
மாவுடற் றிய வடிம்பு
சமந்ததைந்த வேல்
கல்லலைத்த தோள்
வில்லலைத்த நல்வலத்து
வண்டிசை கடவாத் தண்பனம் போந்தைக்
குவிமுகி ழூசி வெண்டோடு கொண்டு
தீஞ்சுனை நீர்மலர் மலைந்து மதஞ்செருக்கி
உடைநிலை நல்லமர் கடந்து மறங்கெடுத்துக்
கடுஞ்சின வேந்தர் செம்மல் தொலைத்த
வலம்படு வான்கழல் வயவர் பெரும!
நகையினும் பொய்யா வாய்மைப் பகைவர்

---

ஒரோவிடங்களை ஆளுதலல்லது முழுவதும் ஆளுதல் கூடாதன்றே—என்று சேரனது ஆள்வினைச்சிறப்பை அவனது குடிவரலாற்றொடு சேரவைத்துக் கூறியவாறு.

(87) ஷை, ஷை, பத்தாம்பாட்டு. துறை—செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—பறைக்குரலருவி (24).

**கருத்து:**—பலபோர்களையும் கடந்து பகைமன்னரை வென்ற வீரர்பெருமானே! விளையாட்டினும் பொய்கூறலறியாத வாய்மொழியினையும், பகைவரது புறச்சொற்களைக் கேளாத சீரிய அறிவினையுமுடையாய்! அழகினும் கற்பினும் மேம்பட்ட உயர்ந்தோள் கணவ! சுற்றத்தார்சூழ வேள்விகளைச் செய்ததனால் தேவர்களை உண்பித்தனை. வேதாதிகளை ஓதினமையால் விண்ணுலகத்துத் தேவவிருடிகளை இன்புறச் செய்தனை. பெரியோர்க்கு வணக்கமும்

புறஞ்சொற் கேளாப் புரைதீர் ஒண்மைப்
பெண்மை சான்று பெருமடம் நிலைஇக்
கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதற்
புரையோள் கணவ! பூண்கிளர் மார்ப!
தொலையாக் கொள்கைச் சுற்றம் சுற்ற
வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி
உயர்நிலை யுலகத் தையரின் புறுத்தினை
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கட னிறுத்த வெல்போர் அண்ணல்!
மாடோ ருறையு முலகமுங் கேட்ப
இழுமென விழிதரும் பறைக்குர லருவி
முழுமுதல் மிசைய கோடுதொறுந் துவன்றும்
அயிரை நெடுவரை போலத்
தொலையா தாகநீ வாழும் நாளே.

---

பதிகம்

(88) மடியா வுள்ளமொடு மாற்றோர்ப் பிணித்த
நெடுநுண் கேள்வி அந்துவற் கொருதந்தை
ஈன்றமகள் பொறையன் பெருந்தேவி யீன்றமகன்

---

பகைவர்க்கு வணங்காமையுமுடைய இளந்துணைப் புதல்வர்களைப் பெற்றதனால் பிதிரர்களைப் பேணி இல்லறக்கடமைகளைச் செய்துமுடித்தனை. இவ்வாறு யாவும் நிறைவேற்றிய அண்ணால்! தேவலோகமும் கேட்கும்படி, பறையோசைபோன்று இழுமென முழங்கியிழியும் அருவிகளுடைய அயிரை மலைபோல நீ வாழுநாள் அழிவில்லாதாகுக—என்று சேரனது வென்றிகூறிய திறத்தானே, அவற்குள்ள சிறப்புக்களைக் கூறி வாழ்த்தியவாறு.

(88) **குறிப்பு:— (2)** ஒருதந்தை—பொறையன்பெருந்தேவியின் பிதாவி

நாடுபதி படுத்து நண்ணு ரோட்டி
வெருவெரு தானைகொடு செருப்பல கடந்து
ஏத்தல் சான்ற விடனுடை வேள்வி
ஆக்கிய பொழுதி னறத்துறை போகி
மாய வண்ணனை மனனுறப் பெற்றவற்கு
ஓத்திர நெல்லி னொகந்தூ ரீத்துப்
புரோசு மயக்கி
மல்ல லுள்ளமொடு மாசற விளங்கிய
செல்வக் கடுங்கோ வாழி யாதனைக்
கபிலர் பாடினார் பத்துப்பாட்டு.

அவைதாம்:- புலாஅம்பாசறை, வரைபோலிஞ்சி, அருவியாம்பல், உரைசால்வேள்வி, நாண்மகிழிருக்கை, புதல்சூழ் பறவை, வெண்போழ்க்கண்ணி, ஏமவாழ்க்கை, மண்கெழு ஞாலம், பறைக்குரலருவி; இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: சிறுபுறம்* என நூறாயிரங்காணங் கொடுத்து, நன்று என்னுங் குன்றேறிநின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாங் காட்டிக் கொடுத்தான் அக்கோ.

செல்வக்கடுங்கோ வாழியாதன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

னுடைய பெயர். (4) நாடுகளில் ஊர்களை உண்டாக்கி. (6-7) வேள்விகளைப் புரியும்போதே பல அறச்செயல்களையும் செய்துமுடித்து. (9) ஓத்திரநெல்—அக்கினிகோத்திரத்துக்குரிய இராசான்னம் என்னும் நெல். (10) புரோசு மயக்கி—தன் புரோகிதனைக் காட்டிலும் தான் அறநெறியிலே மேம்பட்டு.

* சிறுபுறம்—சிறுகொடை.

(89) அருஅ யாண ரகன்கட் செறுவின்
அருவி யாம்பல் நெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்
அம்பண வளவை உறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்
செழுங்கூடு கிளைத்த இளந்துணை மகாரின்
அலந்தனர் பெரும நின் னுடற்றி யோரே
ஊரெரி கவர உருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த் தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்
குண்டுக ணகழிய குறுந்தாண் ஞாயில்
ஆரெயிற் றோட்டி வௌவினை ஏறொடு
கன்றுடை யாயந் தரீஇப் புகல்சிறந்து
புலவுவில் இளையர் அங்கை விடுப்ப
மத்துக்கயி றாடா வைகற்பொழுது நினையூஉ

---

(89) ஷ, எட்டாம்பத்து, முதற்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண் பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு—செந் தூக்கு. பெயர்—குறுந்தாண்ஞாயில் (12).

இப்பத்துமுழுதும் பாடினோர் அரிசில்கிழார்.

கருத்து:—கழுவுள் என்னும் இடையர்தலைவனுடைய எயிலரணைக் கவர்ந்து அவன் தலைவணங்குகையாலே பின் நீ வேறுபகைப்புலஞ்செல்ல, அதுகண்டு முன் திறையிடமறுத்த அப்பகைவர் நின்னை அணங்கெனக்கருதிப் பலவாறு பரவுதலால், பேய், தான்பற்றினோர் தனக்குப் பலியிட்டபோது அவருயிரை வௌவாது அப்பலியைக் கொண்டு பெயருமாறு போல, நீயும் அப்பகைவர துயிரைக் கொள்ளாமல் திறைகொண்டு பெயராநின்றாய். இதுவன்றோ இப் பொழுது நீ செய்துவருவது. நின்னுடன் மாறுபட்ட பகைவர், கடுமையாகக் கொட்டுதலையுடைய குளவிகள்தங்குங் கூட்டைக் கலைத்த சிறுமகாரைப்

ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு வற்றென
அருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பெருங்களிற் றியானையொ டருங்கலந் தராஅர்
மெய்பனி கூரா அணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறைகொண்டு பெயர்தி வாழ்கநின் னூழி
உரவரு மடவரு மறிவுதெரிந் தெண்ணி
அறிந்தனை யருளா யாயின்
யாரிவ ணெடுந்தகை! வாழு மோரே.

அரிசில்கிழார்.

---

(90) இகல்பெரு மையிற் படைகோ ளஞ்சார்
சூழாது துணித லல்லது வறிதுடன்
காவல் எதிரார் கறுத்தோர் நாடுநின்
முன்றிணை முதல்வர்க் கோம்பின ருறைந்து
மன்பதை காப்ப அறிவுவலி யுறுத்து
நன்றறி யுள்ளத்துச் சான்றோ ரன்னநின்

---

போலப் பெருமானே! துன்புறுவாராயினர். அறிவுடையோரையும் அஃதில்லாதோரையும் அவரவர் அறிவை ஆராய்ந்து அருள்செய்யாதொழிவையாயின் நெடுந்தகாய்! இவ்வுலகில் வாழ்வார் யாவர்! நினக்கு வகுக்கப்பட்ட ஊழி காலம் நீ வாழ்வாயாக—என்று சேரனது வென்றிச்சிறப்புக்கூறி அவற்குப் பகைவர்மேல் அருள் பிறப்பித்தவாறு.

(90) ஷை, ஷை. இரண்டாம்பாட்டு. துறை—அது. வண்ணம்—ஒழுகு வண்ணம். தூக்கு—அது. பெயர்—உருத்தெழுவெள்ளம் (10)

கருத்து:—நின் குலமுன்னோர்க்கு அறிவு வலியுறுத்துவந்த சான்றோரைப்போலும் நினது சூழ்ச்சித்திறனைத் தம் அறியாமையின் மிகுதியாலே

பண்புநன் கறியார் மடம்பெரு மையின்
துஞ்ச லுறூஉம் பகல்புகு மாலை
நிலம்பொறை யொராஅநீர் ஞெமரவந் தீண்டி
உரவுத்திரை கடுகிய உருத்தெழு வெள்ளம்
வரையா மாதிரத் திருள்சேர்பு பரந்து
ஞாயிறு பட்ட அகன்றுவரு கூட்டத்து
அஞ்சாறு புரையு நின்றொழி லொழித்துப்
பொங்குபிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின்
மடங்கற் றீயி னனையை
சினங்கெழு குருசில்! நின் னுடற்றிசி னோர்க்கே.

---

(91) உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும்
பிறர்க்குநீ வாயின் அல்லது நினக்குப்
பிறருவம மாகா ஒருபெரு வேந்தே!
[ஒலிந்த] கூந்த லொண்ணுதல் பொலிந்த
நிறந்திகழ் பாசிழை யுயர்திணை மகளிரும்

---

நின்னொடுபகைத்தவர் அறிகின்றிலர். நீதான், சூழ்ச்சியுடைமையேயன்றிப் போர்செய்யுமிடத்து நின்பகைவர்க்கு ஊழித்தீ ஒப்பாவாய். குரிசில்! அதனையும் அன்னோர் அறிகின்றிலர். அவர் தம் பகையின் பெருமையால், அச்சமின்றிப் படைதிரட்டிக் கொள்ளுங் காரியமல்லது தம் நாடுகாவல்புரியும் தொழிலைச் சிறிதும் மேற்கொள்ளாதவராயினர்—எனச் சேரனது சூழ்ச்சியுடைமையும் வென்றிச்சிறப்பும் உடன்கூறியவாறு.

(91) ஷை, ஷை, மூன்றாம்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—நிறந்திகழ்பாசிழை (5).

**கருத்து:**—ஒப்பற்ற பெருவேந்தே! காவிரிவளத்தால் அழகுமிக்க புகாரின் செல்வ! பூழிநாட்டார்க்குக் கவசமன்னாய்! கொல்லிமலைத் தலைவ! கொடித் தேர்ப் பொறைய! நின் வளனும் ஆண்மையும் கைவண்மையும் உலகத்துள்ள

தெய்வந் தரூஉ நெஞ்சத் தான்றோர்
..............................................
மருதஞ் சான்ற மலர்தலை விளைவயற்
செய்யுள் நாரை ஒய்யு மகளிர்
இரவும் பகலும் பாசிழை களையார்
குறும்பல் யாணர்க் குரவை அயருங்
காவிரி மண்டிய சேய்விரி வனப்பிற்
புகாஅர்ச் செல்வ! பூழியர் மெய்ம்மறை!
கழைவிரிந் தெழுதரு மழைதவழ் நெடுங்கோட்டுக்
கொல்லிப் பொருந! கொடித்தேர்ப் பொறைய! நின்
வளனு மாண்மையுங் கைவண் மையும்
மாந்த ரளவிறந் தனவெனப் பன்னாள்
யான்சென் றுரைப்பவுந் தேறார் பிறருஞ்
சான்றோர் உரைப்பத் தெளிகுவர் கொல்லென
ஆங்குமதி மருளக் காண்குவல்
யாங்குரைப் பேனென வருந்துவல் யானே.

மக்களின் அளவைக் கடந்தன; நின்னொடு மாறுபடுவது உறுதியன்று என்று நின்பகைவர்க்குப் பல நாட் சொல்லியும் அவர் தெளிந்தனரில்லை. தெளியாராயினும், உலகத்து மதிப்புடைய சான்றோர் சொல்வதையறிந்து தாம் தேறுவரோ எனின், அவர்சொன்னவிடத்தும் அவர்களிடை மதிமருட்சியையே காணுகின்றேன். ஆதலால் நின்பெருமையை அவர்கட்கு எவ்வாறு உரைப்பேன் என வருந்துகின்றேன்; இஃது யானுற்ற குறை. இதனையறிந்து நீ அவர்பால் அருளவேண்டுவல்—எனச் சேரனது வென்றிக்கு மூலமான செல்வம் ஆண்மை கொடைகளை உடன்கூறியவாற்றான் அவனது வெற்றிச்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு:— இச்செய்யுளின் நான்குமுதல் ஆறுமுடிய உள்ள அடிகள், சங்கவிலக்கியப்பதிப்பிற் கண்ட பாடம்.

(92) கேள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை உயர்ந்தோ ருவப்பச்
சாயறல் கடுக்கும் தாழிருங் கூந்தல்
வேறுபடு திருவின் நின்வழி வாழியர்
கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்
வரையக நண்ணிக் குறும்பொறை நாடித்
தெரியுநர் கொண்ட சிரறுடைப் பைம்பொறிக்
கவைமரங் கடுக்கும் கவலைய மருப்பிற்
புள்ளி யிரலைத் தோலூன் உதிர்த்துத்
தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி
எஃகுடை யிரும்பின் உள்ளமைத்து வல்லோன்
சூடுநிலை யுற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப
நலம்பெறு திருமணி கூட்டு நற்றோள்
ஒடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவில்
எண்ணியல் முற்றி யீரறிவு புரிந்து
சால்புஞ் செம்மையும் உளப்படப் பிறவும்
காவற் கமைந்த அரசுதுறை போகிய

(92) ஷை, ஷை, நான்காம்பாட்டு துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—நலம்பெறு திருமணி (16)

கருத்து:—போர்வல்ல வீரனே! யாகவிதிகளைக் கேட்டறிந்து அதற்கு முன்னாகச்செய்தற்குரிய விரதங்களை உயர்ந்தோர் உவப்ப அநுட்டித்து வேள்விகளைப் புரிந்தனை. கொடுமணத்து அருங்கலங்களையும் பந்தரின் நன்முத்தங்களையும் விளிம்பில்வைத்து அலங்காரமாகத் தைத்த மான்தோல்வட்டத்தினை நின் பெருந்தேவி வேள்வியாசானாற் சூடப்பட்டமையான், அவள்கருவிலே இம்மை மறுமையறிவுகளும் சால்புசெம்மை முதலிய உயர்குணங்களும் பொருந்தி,

வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க்கு
அருங்கடன் இறுத்த செருப்புகல் முன்ப!
அன்னவை மருண்டனெ னல்லேன் நின்வயின்
முழுதுணர்ந் தொழுக்கு நரைமூ தாளனை
வண்மையும் மாண்பும் வளனு மெச்சமும்
தெய்வமும் யாவதும் தவமுடை யோர்க்கென
வேறுபடு நனந்தலைப் பெயரக்
கூறினை பெரும! நின் படிமை யானே.

(93) இரும்புலி கொன்று பெருங்களி றடூஉம்
அரும்பொறி வயமான் அனையை பல்வேற்
பொலந்தார் யானை யியறேர்ப் பொறைய!
வேந்தரும் வேளிரும் பிறருங் கீழ்ப்பணிந்து
நின்வழிப் படாஅ ராயின் நெல்மிக்கு
அறையுறு கரும்பின் தீஞ்சேற் றியாணர்

அரசியற்றுறையினும் வல்ல வீரமகனைப் பெற்றாய். இவ்வரிய செயல்களுக் கெல்லாம் நான் வியப்படைந்தவன் அல்லேன். மற்று, நின்னை நல்வழியிலே ஒழுகுவித்த நரைமூதாளனாகிய நின் புரோகிதனை, வண்மை மாண்பு வளம் முதலியவையெல்லாம் தவமுடையார்க்கேயாம் என்ற உண்மையைச் சொல்லி, இல்லறநிலையை ஒழித்துத் துறவறத்திலே செல்லும்படி செய்தனை. அவ்வாறு செய்வித்த நின் பேரொழுக்கத்தினையும் பேரறிவினையும் தெரிந்து மதிமருண் டேன்—என்று சேரனது நன்னெறி நல்லறிவுடைமைகளைக்கூறிப் புகழ்ந்தவாறு.

(93) ஷை, ஷை, ஐந்தாம்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—தீஞ்சேற்றியாணர் (6).

**கருத்து:**—பொறைய! நீ, புலியைக்கொன்று பின் களிறுகளை அடுகின்ற சிங்கவேற்றை ஒப்பாவாய். அதனால், வேந்தரும் வேளிரும் பிறரும் நின் அடிக்கீழ்ப்பணிந்து, வளமிக்க தம் மருதவைப்பில் இருந்துகொண்டு நின்வழி

வருநர் வரையா வளம்வீங் கிருக்கை
வன்புலந் தழீஇ மென்பால் தோறும்
அரும்பறை வினைஞர் புல்லிகல் படுத்துக்
கள்ளுடை நியமத் தொள்விலை கொடுக்கும்
வெள்வர குழுத கொள்ளுடைக் கரம்பைச்
செந்நெல் வல்சி யறியார் தத்தம்
பாடல் சான்ற வைப்பின்
நாடுட னாடல் யாவண தவர்க்கே.

---

(94) களிறுடைப் பெருஞ்சமந் ததைய எஃகுயர்த்து
ஒளிறுவாள் மன்னர் ததைநிலை கொன்று
முரசுகடிப் படைய வருந்துறை போகிப்
பெருங்கடல் நீந்திய மரம்வலி யுறுக்கும்
பண்ணிய விலைஞர் போலப் புண்ணொரீஇப்
பெருங்கைத் தொழுதியின் வன்றுயர் கழிப்பி

ஒழுகாராயின், அவர்கள் வன்பாலிலே விளைந்த கெட்டுப்போன வெள்வரகை உண்பதன்றித் தாம் பண்டுண்ட நெல்லரிசியுணவு கிடையாதபடி வறுமையுறுவாராவர். அன்னவர் தத்தம் நாட்டினை ஒருங்கு ஆளுதல் எவ்வாறு?—எனச் சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(94) ஷை, ஷை, ஆறும்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—மாசிதறிருக்கை (3).

**கருத்து:—** ஏரால் உழுவோர், அவ்வுழவின் பயன்கொள்வதேயன்றி உழுதவிடந்தோறும் ஒளியுள்ள மணிகளை எடுத்துக்கொள்ளும் திருநாட்டுக்கு உரியோய்! மன்னர் விளைத்த போரில் வேற்படையாளரைக்கொண்டு அவரது செறிந்த நிலையைக் குலைத்துப் போர்த்துறையை முடித்தும், கடலைநீந்தின மரக்கலத்தினை அழிவுபடாமற் செப்பனிட்டுப் பாதுகாக்கும் பண்டவாணிகர் போல, போர்கடந்த யானைகளுக்குண்டான புண்களை ஆற்றி அவற்றின்

இரந்தோர் வாழ நல்கி இரப்போர்க்கு
ஈதல் தண்டா மாசித றிருக்கை
கண்டனென் செல்கு வந்தனென் கால்கொண்டு
கருவி வானந் தண்டளி சொரிந்தெனப்
பல்விதை யுழவிற் சில்லே ராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குலைத் தெரியல்
கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி
இலங்குகதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடுகிழ வோயே!

---

(95) எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறையன்
என்றனி ராயின் ஆறுசெல் வம்பலிர்!
மன்பதை பெயர அரசுகளத் தொழியக்
கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை
மீபிணத் துருண்ட தேயா வாழியிற்
பண்ணமை தேரும் மாவும் மாக்களும்
எண்ணற் கருமையின் எண்ணின்றோ விலனே

---

துயரைப்போக்கியும் இவ்வாறு போர்வினையைப் புரிதலே விநோதமாகக் கொண்டு, இரந்தோர் வாழும்படி மாவினைவழங்கிப் பின்னும் இரப்போர்க்கு ஈதலொழியாத நின் ஓலக்கத்தைக் கண்டு போவேனாய் வந்தேன்—என்று சேரனது வென்றிச்சிறப்பும் கொடைச்சிறப்பும் கூறியவாறு.

(95) ஷை, ஷை, எழாம்பாட்டு. துறை—உழிஞையரவம். வண்ணமுந் தூக்கும் அவை. பெயர்—வென்றாடு துணங்கை (4)

**கருத்து:—** வழிச்செல்லும் புதியோர்களே! பொறையன் எவ்வளவான பெரும்படையுடையவன் என்று கேட்கின்றீராயின், அவன் தானையிடத்துத் தேரும் பரியும் காலாட்களும் எண்ணுதற்கு அருமையா யிருந்தமையால் எண்ணினேனில்லை. ஆயின், அவன் தானைகளில் உள்ள யானைகளைத்தாம்

கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி
உகக்கும் பருந்தின் நிலத்துநிழல் சாடிச்
சேண்பரன் முரம்பின் ஈர்ம்படைக் கொங்கர்
ஆபரந் தன்ன செலவிற்பல்
யானை காண்பலவன் றானை யானே.

---

(96) வலம்படு முரசி னிலங்குவன விழூஉம்
அவ்வெள் ளருவி யுவ்வரை யதுவே
சில்வளை விறலி! செல்குவை யாயின்
வள்ளிதழ்த் தாமரை நெய்தலொ டரிந்து
மெல்லியல் மகளி ரொல்குவன ரியலிக்
கிளிகடி மேவலர் புறவுதொறு நுவலப்
பல்பய னிலைஇய கடறுடை வைப்பின்
வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயி லிறும்பிற் றகடூர் நூறி
பேஎ மன்ற பிறழுநோக் கியவர்

---

எண்ணினையோ எனின், அவையும் என்னால் எண்ணப்பட்டன வல்ல. ஆயி னும், கொங்குநாட்டாரது ஆனிரையின் பரப்புக் கண்ணுக்கு வரையறைப் பட்டதுபோல் செல்லுமாறு, பல யானைக்கூட்டங்களின் செலவை அவன் தானையிடம் காண்பேன்—என்று சேரனது படைப்பெருமையின் சிறப்புக் கூறியவாறு.

(96) ஷை, ஷை, எட்டாம்பாட்டு. துறை—விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—பிறழுநோக்கியவர் (10)

**கருத்து:**—சில்வளைகளை அணிந்த விறலி! நீ செல்வதாயின், பேரரனுள்ள தகடூரை யழித்துப் பகைக்களத்தைச் சிதைத்த காலத்திலே, தன் நாட்டின்கண் யாடுகள் பரந்தாற்போலக் குதிரைகளையும், ஆனிரைகள் பரந்

ஓடுறு கடுமுரண் டுமியச் சென்று
வெம்முனை தபுத்த காலைத் தந்நாட்டு
யாடு பரந்தன்ன மாவின்
ஆபரந் தன்ன யானையோன் குன்றே.

---

(97) உயிர்போற் றலையே செருவத் தானே
கொடைபோற் றலையே இரவலர் நடுவண்
பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி
நின்வயிற் பிரிந்த நல்லிசை கனவினும்
பிறர்நசை யறியா வயங்குசெந் நாவிற்
படியோர்த் தேய்த்த ஆண்மைத் தொடியோர்
தோளிடைக் குழைந்த கோதை மார்ப!
அனைய வளப்பருங் குரையை யதனால்
நின்னொடு வாரார் தந்நிலத் தொழிந்து
கொல்களிற் றியானை யெருத்தம் புல்லென
வில்குலை யறுத்துக் கோலின் வாரா
வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவர்

தாற்போல யானைகளையுமுடைய சேரவேந்தனது குன்றம், அழகிய அருவிகளைக்கொண்டு இதன் எல்லைப்புறமாக அதோவிளங்குகின்ற அதுவாகும்—எனச் சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(97) ஷை, ஷை, ஒன்பதாம்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—சிறம்படுகுருதி (16)

**கருத்து:**—கோதைமார்ப! போர்க்களத்தே உயிரைப் போற்றுவாயல்லை. இரவலர் நடுவணிருந்து கொடுத்தலை ஒழியாய். பெரியோரைப்பேணிச் சிறியோரை அளித்தல் செய்வாய். அத்தகைய பெருங்குணங்கள் அளத்தற்கரியன உடையை நீ. இவ்வாறு ஒழுகுதலால், திக்குவிதிக்குகளினும் பரவிச்

அரசுவா அழைப்பக் கோடறுத் தியற்றிய
அணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து
தும்பை சான்ற மெய்தயங் குயக்கத்து
நிறம்படு குருதி புறம்படி னல்லது
மடையெதிர் கொள்ளா அஞ்சுவரு மரபிற்
கடவு ளயிரையின் நிலைஇக்
கேடில வாக பெரும! நின் புகழே.

---

(98) வான்மருப்பிற் களிற்றியானை
மாமலையிற் கணங்கொண்டவர்
எடுத்தெறிந்த விறல்முரசங்
கார்மழையிற் கடிதுமுழங்கச்
சாந்துபுலர்ந்த வியன்மார்பின்
தொடிசுடர்வரும் வலிமுன்கைப்
புண்ணுடை யெறுழ்த்தோட் புடையலங் கழற்காற்
பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வாள்
ஒடிவில் தெவ்வர் எதிர்நின் றுரைஇ
இடுக திறையே புரவெதிர்ந் தோற்கென

---

சென்ற நினது நல்லிசை பிறர் அறியாததாகும். அத்தகைய நின்புகழ் நின்பால் நிலைத்துக் கேடிலதாக விளங்குக—என்று சேரனது பல குணங்களையும் ஒருங்குபுகழ்ந்து வாழ்த்தியவாறு.

(98) ஷை, ஷை, பத்தாம்பாட்டு. துறை—வஞ்சித்துறைப் பாடாண் பாட்டு. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கும் வஞ்சித்தூக்கும். பெயர்—புண்ணுடையெறுழ்த்தோள் (7)

**கருத்து:—** கெடாத கல்வியாளனே! நின் பகைவருடைய களிற்றியானைகள் மலைகள்போலக் கூடிநிற்கவும், முரசம் கடுமையாக முழங்காநிற்கவும் அவற்றை ஒன்றும் மதியாதே, உயர்ந்தோரான நின் போர்வீரர் அப்பகைவரின்

அம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ
அனையை யாகன் மாறே பகைவர்
கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்
கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி
புலவரைத் தோன்றல் யாவது சினப்போர்
நிலவரை நிறீஇய நல்லிசைத்
தொலையாக் கற்ப!நின் றெம்முனை யானே.

---

பதிகம்.

(99) பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு
வேளாவிக்கோமான் பதுமன்றேவியீன்றமகன்
கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்
பல்வேற் றானை அதிக மாறேடு
இருபெரு வேந்தரையும் உடனிலை வென்று
முரசும் குடையும் கலனுங் கொண்டு
உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்
துகடீர் மகளிர் இரங்கத் துப்பறுத்துத்
தகடூர் எறிந்து நொச்சிதந் தெய்திய

---

எதிர்நின்று 'உலகங்காவலை மேற்கொண்ட சேரனுக்குத் திறையை இடுவீராக' என்றுகூறி அவர்முன்னே புகழும்படி நின் பெருமைக்குணங்கள் அமைந்துள்ளன. அதனால், நினது போர்முனையின் எல்லையிலே அப்பகைவரது தேர்மிசைக் கொடிகள் போர்குறித்துத் தோற்றுதல் யாங்ஙனம்—என்று சேரனது கொடைச் சிறப்பொடுகூட்டி அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(99) குறிப்பு:-(3) கொல்லிக்கூற்றம் என்றது, கொல்லிமலையைச் சூழ்ந்த மலைகளையுடையநாட்டினை. நீர்கூர்மீமிசை—அந்நாட்டில் நீர்மிக்கமலையின் உச்சியில். (9) நொச்சி தந்து—தகடூர்மதிலைக் கைக்கொண்டு.

அருந்திறல் ஒள்ளிசைப் பெருஞ்சேர லிரும்பொறையை
மறுவில்வாய்மொழி அரிசில்கிழார் பாடினார்பத்துப்பாட்டு.

அவைதாம்:- குறுந்தாண்ஞாயில், உருத்தெழுவெள்ளம், நிறந்திகழ்பாசிழை, நலம்பெறுதிருமணி, நீஞ்சேற்றியாணர், மாசிதறிருக்கை, வென்றாடுதுணங்கை, பிறழநோக்கியவர், நிறம்படுகுருதி, புண்ணுடை யெறுழ்த்தோள். இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்:-- தானும் கோயிலாளும் * புறம் போந்துநின்று, கோயிலுள்ளவெல்லாம் கொண்மின் என்று காணம் ஒன்பது நூறாயிரத்தோடு † அரசுகட்டிற் கொடுப்ப, அவர் 'யானிரப்ப இதனை ஆள்க' என்று அமைச்சுப் பூண்டார்.

தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை பதினேழி யாண்டு வீற்றிருந்தான்.

---

(100) மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்

---

* கோயிலாள்-பெருந்தேவி. † அரசுகட்டில்—சிங்காதனம்.

(100) புறநானூறு, 50. திணை-பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

"சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, முரசுகட்டில் அறியாதேறிய மோசிகீரனைத் தவறுசெய்யாது அவன் துயிலெழுந்துணையுங் கவரிகொண்டு வீசியானை மோசிகீரனார் பாடியது."

கருத்து:— குருதிப்பலிகொள்ளுவதும் உழிஞைமாலை சூடப்பட்டதுமான நின் வீரமுரசம் நீராடிவருவதன்முன்னே, 'இது முரசுகட்டில்' என்பதறி

குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்
அதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
இவணிசை யுடையோர்க் கல்ல தவணது
உயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குரிசில்! நீ யீங்கிது செயலே.

மோசிகீரனர்.

---

## இளஞ்சேர லிரும்பொறை

(101) உலகம் புரக்கும் உருகெழு சிறப்பின்
வண்ணக் கருவிய வளங்கெழு கமஞ்சூல்

---

யாமல் ஏறிப் படுத்துறங்கிய என்னை இருகூறுக்கும் நின்வாளை அவ்வாறு செய்யாது அதன் கூர்வாயை மாற்றிய இத்தன்மை, தமிழ் முழுதும் அறிந்த நின்பெருமைக்குத் தகும். அதுமட்டுமன்றி, என்னை அணுகிநின்று நினது வலியதோளைக்கொண்டு சாமரத்தாலும் குளிரவீசினுய். இவ்வுலகத்துப் பரந்த புகழுடையோர்க்கல்லது மேலுலக நல்வாழ்க்கை இல்லை என்பதைத் தெளியக் கேட்டறிந்ததுபற்றிப் போலும், வெற்றிவேந்தே! நீ இவ்வாறு வீசியது? இதன் காரணம் சொல்லுக—என்று சேரனது பெருந் தமிழன்பினையும் அருளையும் கூறி வியந்தவாறு.

(101) பதிற்றுப்பத்து, ஒன்பதாம்பத்து, முதற்பாட்டு. துறை—முல்லை. வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—நிழல்விடுகட்டி (16)

இதுமுதற் பத்துப்பாட்டும் பாடியவர் பெருங்குன்றூர்கிழார்.

அகலிரு விசும்பின் அதிர்சினம் சிறந்து
கடுஞ்சிலை கழறி விசும்படையூ நிவந்து
காலை யிசைக்கும் பொழுதொடு புலம்புகொளக்
களிறுபாய்ந் தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
அரசுபுறத் திறுப்பினும் அதிர்விலர் திரிந்து
வாயில் கொள்ளா மைந்தினர் வயவர்
மாயிருங் கங்குலும் விழுத்தொடி சுடர்வரத்
தோள்பிணி மீகையர் புகல்சிறந்து நாளும்
முடிதல் வேட்கையர் நெடிய மொழியூஉக்
கெடாஅ நல்லிசைத் தங்குடி நிறுமார்
இடாஅ ஏணி வியலறைக் கொட்ப
நாடடிப் படுத்தலிற் கொள்ளை மாற்றி
அழல்வினை யமைந்த நிழல்விடு கட்டி
கட்டளை வலிப்பநின் தானை யுதவி
வேறுபுலத் திறுத்த வெல்போர் அண்ணல்!
முழவின் அமைந்த பெரும்பழ மிசைந்து
சாறயர்ந் தன்ன காரணி யாணர்த்
தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்திக்
காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்
கலிமகிழ் மேவலர் இரவலர்க் கீயும்
சுரும்பார் சோலைப் பெரும்பெயற் கொல்லிப்
பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து
மின்னுமிழ்ந் தன்ன சுடரிழை யாயத்துத்
தன்னிறங் கரந்த வண்டுபடு கதுப்பின்

கருத்து:— நாடு அடிப்படுத்தும் வினையால் வேறு பகைப்புலங்களில் தங்கிய வெல்போரண்ணலே! நின் கோப்பெருந்தேவி கொல்லிமலையின் மலர்களைச் சூடியவளாய் நின்னைக்கண்டு மகிழும்படி ஒருநாளேனும் நின்நெடுந்தேர் புரவி

ஒடுங்கீ ரோதி யொண்ணுதல் அணிகொளக்
கொடுங்குழைக் கமர்த்த நோக்கி னயவரப்
பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவை காணிய ஒருநாட்
பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்
முனைகை விட்டு முன்னிலைச் செல்லாது
தூவெதிர்ந்து பெறூஉத் தாவில் மள்ளரொடு
தொன்மருங் கறுத்த லஞ்சி யரண்கொண்டு
துஞ்சா வேந்தருந் துஞ்சுக
விருந்து மாக நின்பெருந் தோட்கே.

பெருங்குன்றூர்கிழார்

(102) பகைபெரு மையிற் றெய்வஞ் செப்ப
ஆரிறை யஞ்சா வெருவரு கட்டூர்ப்
பல்கொடி நுடங்கும் முன்பிற் செறுநர்
செல்சமந் தொலைத்த வினைநவில் யானை
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி

பூண்பதாக வேண்டும். அதுதான், நின் தேவிக்கு மட்டும் அநுகூலமாவதன்று; அதனானே, நினக்கஞ்சி உறக்கங்கொள்ளாத வேந்தரும் உறங்குவார்களாக; நின் பெருந்தோட்கு விருந்தும் ஆகுக. இவ்வாறு இரண்டு ஒருகாரியமாகும்படி இதனைச்செய்தருள வேண்டும்—எனக் காமவேட்கையிற் செல்லாத சேரனது வென்றிவேட்கைச்சிறப்புக் கூறியவாறு.

(102) ஷை, ஷை, இரண்டாம்பாட்டு. துறை—காட்சிவாழ்த்து. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு—செந்தூக்கு, பெயர்—வினைநவில்யானை (4)

**கருத்து:—** நிலந்தரு திருவினெடியோய்! பெருமானே! பாசறையிடத்தே போர்க்குரிய செயல்களோடு கூடி நீ தங்கிய நாட்கள் பலவானபடியாலே,

வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல
மறவர் மறல மாப்படை யுறுப்பத்
தேர்கொடி நுடங்கத் தோல்புடை யார்ப்பக்
காடுகை காய்த்திய நீடுநா ளிருக்கை
இன்ன வைகல் பன்னா ளாகப்
பாடிக் காண்கு வந்திசிற் பெரும! [றோர்
பாடுநர், கொளக்கொளக் குறையாச் செல்வத்துச் செற்
கொலக்கொலக் குறையாத் தானைச் சான்றோர்
வண்மையுஞ் செம்மையுஞ் சால்பு மறனும்
புகன்றுபுகழ்ந் தசையா நல்லிசை
நிலந்தரு திருவின் நெடியோய்! நின்னே.

---

(103) கார்மழை முன்பிற் கைபரிந் தெழுதரும்
வான்பறைக் குருகின் நெடுவரி பொற்பக்
கொல்களிறு மிடைந்த பஃறோற் றொழுதியொடு
நெடுந்தேர் நுடங்குகொடி யவிர்வரப் பொலிந்து
செலவுபெரி தினிதுநிற் காணு மோர்க்கே
இன்னா தம்மவது தானே பன்மா

---

நின்னைப்பாடிக் காணும்பொருட்டு இங்கு வந்தேன்—எனச் சேரனது வென்றிச் சிறப்புக் கூறியவாறு.

(103) ஷை, ஷை, மூன்றாம்பாட்டு. துறை—தும்பையரவம். வண்ணம்—ஒழுகுவண்ணம். தூக்கு—செந்தூக்கு. பெயர்—பஃறோற்றொழுதி (3)

கருத்து:— கார்காலத்து மேகக்கூட்டத்தின்முன்பே விரைந்து எழுந்து செல்லும் கொக்குக்கூட்டத்தின் நீண்ட ஒழுங்குபோல, போர்க்களிறுகளில் நெருங்கிய கேடகங்களோடு உயர்ந்த தேர்களில் அசைகின்ற கொடிகள் விளங்காநிற்க, நின்னைக்காண்பார்க்கு நினது சேனைகள் செல்லும் செலவு பொலிவுபெற்று மிக இனிதாகாநின்றது. அவ்வாறு அன்புறுவார்க்கு இனிய

நாடுகெட எருக்கி நன்கலந் தரூஉநின்
போரருங் கடுஞ்சின மெதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே.

---

(104) எடுத்தே றேய கடிப்புடை யதிரும்
போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்குக்
கார்மழை முழக்கினும் வெளில்பிணி நீவி
நுதலணந் தெழுதருந் தொழினவில் யானைப்
பார்வற் பாசறைத் தரூஉம் பல்வேற்
பூழியர் கோவே! பொலந்தேர்ப் பொறைய!
மன்பதை சவட்டுங் கூற்ற முன்ப!
கொடிநுடங் காரெயில் எண்ணுவரம் பறியா
பன்மா பரந்தபுல மொன்றென் றெண்ணாது
வலியை யாதல்நற் கறிந்தன ராயினும்
வார்முகில் முழக்கின் மழகளிறு மிகீஇத்தன்
கான்முளை மூங்கிற் கவர்கிளை போல
உய்தல் யாவதுநின் உடற்றி யோரே

---

அதுதானே இன்னாதாகவும் அமைந்தது; யார்க்கெனின், மாறுபட்ட அரசரது பாசறைவீரர்க்கு—என்று சேரனது படைச்சிறப்புக் கூறியவாறு.

(104) ஷை, ஷை, நான்காம்பாட்டு. துறை—வாகை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—தொழினவில்யானை (4)

**கருத்து:—** பூழியர்கோவே! பொலந்தேர்ப் பொறைய! பகைப்புலத்து மதிலரண்கள் அளவற்றன; ஆண்டு யானைப்படைகள் பரந்துள்ளன; நமக்கு வெல்லற்கரிது—என்றெண்ணாமல் நீ அவ்விடங்களை வெல்லவல்லவனாயினை. அவ்வல்லமையை முன்பு அறியாது இன்று போர்செய்து நன்குணர்ந்தன ராயினும், பின்னும் மாறுபடுதலையன்றி நின்னை வணங்குதலை அறியாராயினர்;

வணங்க லறியார் உடன்றெழுந் துரைஇப்
போர்ப்புறு தண்ணுமை ஆர்ப்பெழுந்து நுவல
நோய்த்தொழில் மலைந்த வேலீண் டுழுவத்து
முனைபுகல் புகல்வின் மாறா மைந்தரொடு
உருமெறி வரையிற் களிறுநிலஞ் சேரக்
காஞ்சி சான்ற செருப்பல செய்துநின்
குவவுக்குரை யிருக்கை யினிதுகண் டிகுமே
காலை மாரி பெய்தொழி லாற்றி
விண்டு முன்னிய புயனெடுங் காலைக்
கல்சேர்பு மாமழை தலைஇப்
பல்குரற் புள்ளின் ஒலியெழுந் தாங்கே.

---

(105) நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇப்
பொன்னவிர் புனைசெய லிலங்கும் பெரும்பூண்
ஒன்னுப் பூட்கைச் சென்னியர் பெருமான்
இட்ட வெள்வேல் முத்தைத் தம்மென

---

நின்பகைவர். களிறு காலால் அகப்படுத்திய முளைமூங்கிலின் கிளை தப்பாது அழிந்தாற்போல நின்னைச்சினப்பித்தவர் இனி உய்தல் எங்ஙனம்? நெடுங்காலம் பெய்யாதமழை பெய்தவிடத்து, பலகுரல்களையுடைய புள்ளின் ஒலி எழுந்தாற் போல, பகைப்படை கண்டு செருப்பலசெய்து நின் படைக்குழாம் ஆர வாரிக்கின்ற இருப்பினை யாங்கள் இனிது கண்டேம்—என்று சேரனது வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

(105) ஷை., ஷை, ஐந்தாம்பாட்டு. துறை—செந்துறைப்பாடாண்பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—நாடுகாணவேரை (7)

**கருத்து:—** 'சோழவேந்தனது நாடுகள் பலவற்றையும் எமக்கு உரிய வாக்கி அவ்வேந்தனையும் பிடித்துக் கொண்டுவந்து எம்முன்னே தருவீராக' என்று இளஞ்சேர லிரும்பொறை தன் படையாளரை ஏவ, அவ்வேவற்படி

முன்றிணை முதல்வர் போல நின்று
தீஞ்சுனை நிலைஇய திருமா மருங்கிற்
கோடுபல விரிந்த நாடுகா ணெடுவரைச்
சூடா நறவின் நாண்மகிழ் இருக்கை
அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய
மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையி னெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற ஊரினும் பலவே.

---

**(106)** உறலுறு குருதிச் செருக்களம் புலவக்
கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை

---

சென்ற படைவீரர்கள்முன் சோழன்படையாளர் தோற்றுப் போகட்ட வெள்ளிய வேல்கள், செல்வக்கடுங்கோ வாழியாதனது நாடுகாண் நெடுவரைக் கண் மகிழ்ச்சிமிக்க நாளோலக்கத்தே, அவனது அறநெறிபிறழாத வீரச்செயன் முறையைப் பாடிக் கபிலன் பெற்ற ஊர்களினும் பலவாகும்—என்று முன்னோரது கொடைச்சிறப்போடு . அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறு.

குறிப்பு:—(7) நாடுகாண் நெடுவரை—தன்மேலேறி நாட்டைக் காண்டற்கு ஏதுவாகிய ஓக்கமுடைய மலை. (9—10) அறம்புரிந்து வயங்கிய கொள்கை என்றது 'மறம்புரி' என்றது, அறத்திற்கு இடையீடுபட வருவதாயின் அதனைக் காப்பதற்கு அவ்வறக்கொள்கை மறத்தோடு பொருந்தும் எ—று. (12) நனவிற் பாடிய—மெய்ம்மையாற் பாடிய. (13) 'நன்றா என்னுங் குன்றேறி நின்று தன் கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிக்கொடுத்தான்' செல்வக் கடுங்கோ என்று ஏழாம்பத்துப் பதிகம் கூறுவது இங்கு நோக்கத்தகும்.

(106) ஷை, ஷை ஆரும்பாட்டு. துறையும் வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—வெந்திறற் றடக்கை (2).

கருத்து:—இளஞ்சேரல் இரும்பொறையை, எல்லாரும் வெருவச் செருக்

வென்வேற் பொறையன் என்றலின் வெருவர
வெப்புடை யாடூஉச் செத்தனென் மன்யான்
நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து
இல்லோர் புன்கண் தீர நல்கும்
நாடல் சான்ற நயனுடை நெஞ்சிற்
பாடுநர் புரவலன் ஆடுநடை யண்ணல்
கழைநிலை பெறாஅக் குட்டத் தாயினும்
புனல்பாய் மகளி ராட வொழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்
சாந்துவரு வானி நீரினும்
தீந்தண் சாயலன் மன்ற தானே.

---

(107) சென்மோ பாடினி! நன்கலம் பெறுகுவை
சந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து
தெண்கடல் முன்னிய வெண்டலைச் செம்புனல்

---

களம் புலால்நாறும்படி. கொன்று அமர்கடந்த சேரன் என்று சொல்லுகை யாலே, யான் அவனைக் கொடியவனை ஒருமகன் என்று முன்பு கருதலா னேன். அக்கருத்து இப்போது கழிந்தது. பாடுவார் புரவலனை அப்பொறை யனொடு யான் கலந்துவந்த பொழுது, தன்னாட்டு வானி என்னும் யாற்று நீரினும் மென்மையனாயிருந்தான் என்று—சேரனது வன்மை மென்மைச் சிறப் புக்களைக் கூறியவாறு.

குறிப்பு:—(12) வானி — ஒரு யாறு.

(107) ஷை, ஷை, ஏழாம்பாட்டு. துறை—விறலியாற்றுப்படை. வண் ணமும் தூக்கும் அவை. பெயர்—வெண்டலைச்செம்புனல் (3).

கருத்து:— பல்வேற் பொறையன், நுரைமிக்க செம்புனலையுடைய யாற்றிற் செலுத்தும் கருப்பந் தெப்பத்தினும் மேலாக அளித்தல் வல்லவன்.

ஒய்யும் நீர்வழிக் கரும்பினும்
பல்வேற் பொறையன் வல்லனா ளளியே.

---

(108) வையகம் மலர்ந்த தொழின்முறை யொழியாது
கடவுட் பெயரிய கானமொடு கல்லுயர்ந்து
தெண்கடல் வளைஇய மலர்தலை யுலகத்துத்
தம்பெயர் போகிய ஒன்னார் தேயத்
துளங்கிரும் குட்டந் தொலைய வேலிட்டு
அணங்குடைக் கடம்பின் முழுமுதல் தடிந்து
பொருமுரண் எய்திய கழுவுள் புறம்பெற்று
நாம மன்னர் துணிய நூறிக்
கால்வல் புரவி யண்டர் ஓட்டிச்
சுடர்வீ வாகை நன்னற் றேய்த்துக்
குருதி விதிர்த்த குவவுச்சோற்றுக் குன்றோடு
உருகெழு மரபின் அயிரை பரைஇ
வேந்தரும் வேளிரும் பின்வந்து பணியக்
கொற்ற மெய்திய பெரியோர் மருக!
வியலுளை யரிமான் மறங்கெழு குருசில்!
விரவுப்பணை முழங்கு நிரைதோல் வரைப்பின்

---

ஆதலால், விறலி! அவன்பாற் செல்க. செல்லுமிடத்து நல்ல அணிகலங்களைப் பெறுவாய் என்று—சேரனது அருட்சிறப்புக் கூறியவாறு.

(108) ஷை, ஷை, எட்டாம்பாட்டு. துறை—செந்துறைப் பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—கல்கால்கவணை (18).

**கருத்து:—** பெருங்கடலில் வேலிட்டுக் கடம்பின் முழுமுதலைத் தடிந்தும் இடைக்குலத் தலைவனான கழுவுள் என்பானை வென்று இடையரை ஓட்டியும், நன்னனைப் போரிற் கொன்றும், அயிரைமலைக் கொற்றவையைக் குருதிப்பலி கொடுத்துப் பரவியும் வேந்தரும் வேளிரும் பணிந்தொழுகக் கொற்றமெ

உரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும் பாசறை
ஆரெயி லலைத்த கல்கால் கவணை
நாரரி நறவிற் கொங்கர் கோவே!
உடலுநர்த் தபுத்த பொலந்தேர்க் குருசில்!
வளைகடல் முழவிற் றொண்டியோர் பொருந!
நீநீடு வாழிய பெரும! நின்வயின்
துவைத்த தும்பை நனவுற்று வினவு
மாற்றருந் தெய்வத்துக் கூட்ட முன்னிய
புனல்மலி பேரியா றிழிதந் தாங்கு
வருநர் வரையாச் செழும்பல் தாரம்
கொளக்கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப
ஓவத் தன்ன உருகெழு நெடுநகர்ப்
பாவை யன்ன மகளிர் நாப்பண்
புகன்ற மாண்பொறிப் பொலிந்த சாந்தமொடு
தண்கமழ் கோதை சூடிப் பூண்சுமந்து
திருவிற் குலைஇத் திருமணி புரையும்
உருகெழு கருவிய பெருமழை சேர்ந்து
வேங்கை விரிந்து விசும்புறு சேட்சிமை
அருவி யருவரை யன்ன மார்பிற்
சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ!
மாகஞ் சுடர மாவிசும் புகக்கும்
ஞாயிறு போல விளங்குதி பன்னாள்
ஈங்குக் காண்கு வந்தனென் யானே

---

திய சேரவேந்தரின் வழியில் வந்தோய்! வீரர் தலைவ! கொங்குநாட்டார்க்கு அரசே! தொண்டியோர் பொருந! நல்லிசைவாய்ந்த சேயிழையின் கணவ! கடற்பக்கத்து நாட்டுக்குரிய பெருமானே! ஈங்கு நின்னைக் காணவேண்டி வந்தேன். நீ பலகாலம் வாழ்வாயாக. பலநிலத்துப் பண்டங்களும் கொளக் கொளக் குறையாது மிக்குப்பொலிய, அழகிய மகளிர்நாப்பண், விண்ணிடம்

உறுகா லெடுத்த ஓங்குவரற் புணரி
நுண்மணல் அடைகரை உடைதரும்
தண்கடற் படப்பை நாடுகிழ வோயே!

(109) வானம் பொழுதொடு சுரப்பக் கானம்
தோடுறு மடமான் ஏறுபுணர்ந் தியலப்
புள்ளும் மிஞிறும் மாச்சினை யார்ப்பப்
பழனுங் கிழங்கும் மிசையற வறியாது
பல்லான் நன்னிரை புல்லருந் துகளப்
பயங்கடை யறியா வளங்கெழு சிறப்பிற்
பெரும்பல் யாணர்க் கூலங் கெழும
நன்பல் லூழி நடுவுநின் றொழுகப்
பல்வே லிரும்பொறை! நின்கோல் செம்மையின்
நாளின் நாளின் நாடுதொழு தேத்த

திகழும் ஞாயிறுபோல விளங்குவாயாக என்று சேரன் கொடைச்சிறப்பும் காமவின்பச் சிறப்பும் உடன்கூறி வாழ்த்தியவாறு.

**குறிப்பு:—** (24—25) தெய்வத்துக்கூட்டம் முன்னிய பேரியாறு என்றது கொற்றவை கூடியுறைமலையுடைய அயிரைமலையைத் தலையாகக்கொண்டு ஒழுகும் பேரியாறு என்றும். இது பொன்னானி என்ற நதமாகும்.

(109) ஷை, ஷை, ஒன்பதாம் பாட்டு, துறை—காவன்முல்லை. வண்ணமும் தூக்கும் அவை. பெயர்—துவராக்கூந்தல் (16)

**கருத்து:—** பல்வேல் இரும்பொறை! நின் கோலின் செம்மையாலே மேகம் உரியகாலத்தில் சுரப்பவும், கானங்களில் பெண்மான்களோடு ஆண் மான்கள் இனமாகக்கூடிச் செல்லவும், பழங்களும் கிழங்குகளும் இடையறுது உண்டற்குரியனவாய்க் கிடைக்கவும், ஆனிரைகள் புற்களை மேய்ந்து களிப்பால் துள்ளவும், புதுவருவாயாகப் பலதானியங்கள் செறியவும், பல ஊழிகளும் நடுவுநிலைமையால் நிலைபெற்று நடப்பவும், நாடு தொழுதேத்தவும்

உயர்நிலை யுலகத் துயர்ந்தோர் பரவ
அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே நின்மாட்டு
அடங்கிய நெஞ்சம் புகர்படு பறியாது
கனவிலும் பிரியா வுறையுளொடு தண்ணெனத்
தகரம் நீவிய துவராக் கூந்தல்
வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நாள் அறியும் வயங்குசுடர் நோக்கத்து
மீனொடு புரையுங் கற்பின்
வாணுத லரிவையொடு காண்வரப் பொலிந்தே.

---

(110) மீன்வயின் நிற்ப வானம் வாய்ப்ப
அச்சற் றேம மாகி யிருள்தீர்ந்து
இன்பம் பெருகத் தோன்றித் தந்துணைத்
துறையின் எஞ்சாமை நிறையக் கற்றுக்
கழிந்தோர் உடற்றும் கடுந்தூ வஞ்சா
ஒளிறுவாள் வயவேந்தர்
களிறொடு கலந்தந்து

---

தேவர்களும் புகழும்படியாக அரசியல் பிழையாது அமரிடை மேம்பட்டு விளங்கி, பேரழகும் அருந்ததிபோலும் கற்புமுடைய நின் அரிவையோடு காட்சி திகழ நோயிலையாய் வாழ்வாயாக—எனச் சேரனது நாடுகாவற்சிறப்புக் கூறி வாழ்த்தியவாறு.

(110) ஷை, ஷை, பத்தாம்பாட்டு. துறை—காட்சிவாழ்த்து. வண்ணம்—ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும். தூக்கு—செந்தூக்கும் வஞ்சித் தூக்கும். பெயர்—வலிகெழுதடக்கை (33)

**கருத்து:**—அறிவும் திருவும் ஆற்றலும் படைத்த விண்ணுலகு புகழவும் அறக்கடவுள் வாழ்த்தவும் உலகையாண்ட மாந்தரன் என்ற சேரனது

தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
அகல்வையத்துப் பகலாற்றி
மாயாப் பல்புகழ் வியல்விசும் பூர்தர
வாள்வலி யுறுத்துச் செம்மை பூண்டு
அறன்வாழ்த்த நற்காண்ட
விறல்மாந்தரன் விறல்மருக!
ஈர முடைமையின் நீரோ ரனையை
அளப்பரு மையின் இருவிசும் பனையை
கொளக்குறை படாமையின் முந்நீ ரனையை
பன்மீ னாப்பண் திங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை
உருகெழு மரபின் அயிரை பரவியும்
கடலிகுப்ப வேலிட்டும்
உடலுநர் மிடல்சாய்த்தும்
மலையவும் நிலத்தவும் அருப்பம் வெளவிப்
பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய
கொற்றத் திருவின் உரவோ ரும்பல்!
கட்டிப் புழுக்கிற் கொங்கர் கோவே!
மட்டப் புகாவிற் குட்டுவ ரேறே!
எழாஅத் துணைத்தோட் பூழியர் மெய்ம்மறை!
இலங்குநீர்ப் பரப்பின் மரந்தையோர் பொருந!
வெண்பூ வேளையொடு சுரைதலை மயக்கிய
விரவுமொழிக் கட்டூர் வயவர் வேந்தே!
உரவுக்கட லன்ன தாங்கருந் தானையொடு

---

வழித்தோன்றல்! அயிரைக் கொற்றவையைப் பரவியும், கடலிடையே வேலிட்டும், பகைவரது விறலழிய அவர்நாடுகளைக் கைக்கொண்டும் போந்த வலியோரது மரபில் வந்தோய்! கொங்கர் கோவே! குட்டுவரேறே! வீரரான பூழியர்க்குக் கவசம் போல்வாய்! மரந்தைநகரின் தலைவ! வீரர்க்கு அரசே!

மாண்வினைச் சாபம் மார்புற வாங்கி
ஞாண்பொர விளங்கிய வலிகெழு தடக்கை
வார்ந்துபுனைந் தன்ன ஏந்துகுவவு மொய்ம்பின்
மீன்பூத் தன்ன விளங்குமணிப் பாண்டில்
ஆய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு
காழெஃகம் பிடித்தெறிந்து
விழுமத்திற் புகலும் பெயரா ஆண்மைக்
காஞ்சி சான்ற வயவர் பெரும!
வீங்குபெருஞ் சிறப்பின் ஓங்குபுக ழோயே!
கழனி யுழவர் தண்ணுமை யிசைப்பிற்
பழன மஞ்ஞை மழைசெத் தாலும்
தண்புன லாடுநர் ஆர்ப்பொடு மயங்கி
வெம்போர் மள்ளர் தெண்கிணை கறங்கக்
கூழுடை நல்லில் ஏறுமாறு சிலைப்பச்
செழும்பல விருந்த கொழும்பல் தண்பணைக்
காவிரிப் படப்பை நன்னா டன்ன
வளங்கெழு குடைச்சூல் அடங்கிய கொள்கை
ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை
வண்டார் கூந்த லொண்டொடி கணவ!
நின்னாள், திங்க ளனைய வாக திங்கள்
யாண்டோ ரனைய வாக யாண்டே
ஊழி யனைய வாக வூழி
வெள்ள வரம்பின வாகென வுள்ளிக்

ஒண்டொடிகணவ! ஒளியுடைமையின் நீரோடு ஒப்பாய். கொள்ளக் குறையாமையின் கடலையொப்பாய். பூத்த சுற்றமோடு பொலிந்து தோன்றுதலுடையை. ஆதலால், நினக்கு அடைந்த வாணாட்கள் உலகத்தில் திங்களளவாகவும், நின்னுடைய திங்கள் யாண்டளவாகவும், நின்யாண்டு ஊழியளவாகவும், அவ்வூழி பலவாய் வெள்ளவரம்பினவாகவும் நீ நீடுவாழவேண்டும் என்று நினைந்து

காண்கு வந்திசின் யானே செருமிக்கு
உருமென முழங்கு முரசிற்
பெருநல் யானை யிறைகிழ வோயே!

---

பதிகம்.

(111) குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழாஅன்
வேண்மாள் அந்துவஞ் செள்ளை யீன்றமகன்
வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்று
இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ
அருமிளைக் கல்லகத் தைந்தெயி லெறிந்து
பொத்தி யாண்ட பெருஞ்சோ ழனையும்
வித்தை யாண்டவிளம் பழையன் மாறனையும்
வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று
வஞ்சி மூதூர்த் தந்துபிறர்க் குதவி
மந்திர மரபிற் றெய்வம் பேணி
மெய்யூர் அமைச்சியல் மையூர் கிழானைப்
புரையறு கேள்விப் புரோசு மயக்கி
அருந்திறல் மரபிற் பெருஞ்சதுக் கமர்ந்த
வெந்திறற் பூதரைத் தந்திவண் நிறீஇ
ஆய்ந்த மரபிற் சாந்தி வேட்டு
மன்னுயிர் காத்த மறுவில் செங்கோல்
இன்னிசை முரசின் இளஞ்சேர லிரும்பொறையைப்
பெருங்குன்றூர்கிழார் பாடினார் பத்துப்பாட்டு.

---

நின்னைக்காண்பேனாக வந்தேன்—என்று சேரனது தண்ணளியும் பெருமை யும் கொடையும் சுற்றந்தழாலும் உடன்கூறி வாழ்த்தியவாறு.

குறிப்பு:-(111) (4) விச்சி—ஒரு குறுநிலமன்னன். (11-12) அமைச்சியல் மையூர்கிழானைப் புரோசுமயக்கி என்றது, தன் மந்திரியாகிய மையூர்கிழானைப் புரோகிதனிலும் அறநெறியறிவானாகப்பண்ணி எ-று.

அவைதாம்:- நிழல்விடுகட்டி, வினைநவில்யானை, பஃறோற் றொழுதி, தொழினவில்யானை, நாடுகாணெடுவரை, வெந்திறற் றடக்கை, வெண்டலைச் செம்புனல், கல்கால்கவணை, துவராக் கூந்தல், வலிகெழுதடக்கை. இவை பாட்டின் பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: 'மருளில்லார்க்கு மருளக்கொடுக்க' என்று உவகையின் முப்பத்திராயிரங் காணங் கொடுத்து, அவர் அறியாமை மனையும் ஊரும் வளமிகப்படைத்து, ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி, எண்ணற்காகா அருங்கல வெறுக்கையொடு, பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் காப்புமறங்*தான் விட்டான் அக்கோ.

குடக்கோ இளஞ்சேர லிரும்பொறை பதினாறுயாண்டு வீற்றிருந்தான்.

---

சேரமான் குடக்கோச்சேர லிரும்பொறை

(112) மன்பதை காக்குநின் புரைமை நோக்காது
அன்புகண் மாறிய அறனில் காட்சியொடு
நும்ம னோருமற் றினைய ராயின்
எம்ம னோரிவட் பிறவலர் மாதோ
செயிர்தீர் கொள்கை யெம்வெங் காதலி
உயிர்சிறி துடைய ளாயின்' எம்வயின்

காப்புமறம்—காவல்வீரர்.

(112) புறநானூறு, 210. திணை—பாடாண்டிணை. துறை—பரிசில் கடாநிலை.

"சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறை பரிசில் நீட்டித்தானைப் பெருங்குன்றூர் கிழார் பாடியது"

கருத்து:— பல்லுயிர்களையும் பாதுகாக்கும் நின் உயர்ச்சியைப் பாராது அறமற்ற பார்வையுடனே நும்போல்வாரும் இவ்வாறு அருள்மாறுவராயின்,

உள்ளா திருத்தலோ அரிதே அதனால்
அறனில் கூற்றம் திறனின்று துணியப்
பிறனா யினன்கொல் இறீஇயரென் னுயிரென
நுவல்வுறு சிறுமையள் பலபுலந் துறையும்
இடுக்கண் மனையோள் தீரிய இந்நிலை
விடுத்தேன் வாழியர் குருசில்! உதுக்காண்
அவல நெஞ்சமொடு செல்வல்நிற் கறுத்தோர்
அருங்கடி முனையரண் போலப்
பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்தே.

பெருங்குன்றூர்கிழார்.

---

(113) அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலேறு
அணங்குடை யரவின் அருந்தலை துமிய
நின்றுகாண் பன்ன நீண்மலை மிளிரக்
குன்றுதூ வெறியும் அரவம் போல
முரசெழுந் திரங்குந் தானையொடு தலைச்சென்று

எம்போலும் புலவர் இவ்விடத்துப் பிறவாதொழியக்கடவர். என் மனைவி இறவாது உயிர்வாழ்வாளாயின் என்னை நினையாதிருத்த லரிது. அதனால், அவளது இடுக்கண் தீர்க்கவேண்டி இப்பொழுதே விடைகொண்டேன். நின் பகைவர் போர்முனையரண்போலச் செயலற்ற என் தனிமையை முன் போகவிட்டு, குருசிலே! இன்னாத நெஞ்சத்துடன் ஈதோ போகின்றேன்; நீ வாழ்க—என்று பரிசில்நீட்டித்த சேரனை நோக்கி நொந்துகூறியவாறு.

(113) ஷை, 211. திணையும் துறையும் அவை.

**கருத்து:**—வீரப்புகழ் அமைந்த வேந்தே! நீ வள்ளியை யாதலால், எமக்கும் பரிசில் நல்கத் தவறாய் என்று நினைந்துவந்த உயர்ந்த பரிசிலனாகிய நான், எம்மை எதிரேற்காது புறக்கணித்த மாந்தரது கொடுமையை உனக்குச் சொல்லிவந்தும் நின் நினைவின்படியே செய்துவிட்டனை. முன்னைநாள்

அரைசுபடக் கடக்கும் உரைசால் தோன்றல்! நின்
உள்ளி வந்த ஓங்குநிலைப் பரிசிலென்
வள்ளியை யாதலின் வணங்குவன் இவனெனக்
கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
உள்ளியது முடித்தோய்! மன்ற முன்னாட்
கையுள் ளதுபோற் காட்டி வழிநாட்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்
நாணு யாயினும் நாணக் கூறியென்
நுணங்கு செந்நா அணங்க ஏத்திப்
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
ஆடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வல் அத்தை யானே வைகலும்
வல்சி யின்மையின் வயின்வயின் மாறி
இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்
பாஅ லின்மையிற் பல்பாடு சுவைத்து
முலைக்கோள் மறந்த புதல்வனொடு
மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற் படர்ந்தே.

**பெருங்குன்றூர்கிழார்.**

பரிசில் கையிலே புகுந்ததுபோலக் காட்டிப் பின்னை நான் அதனைப் பொய்யாக்கிநின்ற உன் நிலைமையின்பொருட்டு நான் வருந்தியதற்கு நீதான் நாணாய்; ஆயினும், நீ நாணும்படி கூறி எனது செவ்விய நா வருந்தப் புகழ்ந்து நாடோறும் பாடலானேன். அவ்வாறு பாடப்பாடப் பின்னரும் பாடவேண்டும் புகழை ஏற்றுக்கொண்டாய். இடிந்துவரும் சுவருள்ள மனையிலே தனக்கு உணவின்றியும், அதனால் தாய்ப்பாலின்றி வருந்திய பிள்ளையுடன் வறுமையுற்றும் இருக்கும் என் அழகிய மனையாளை நினைந்து, நினது வென்றியுள்ள அகன்ற மார்பை வணங்கி வாழ்த்திக்கொண்டு செல்கின்றேன்—என்று பரிசில் நீடித்த சேரனை நோக்கி நொந்துகூறியவாறு.

## ஆதன் அவினி

**(114)** வாழி யாதன் வாழி யவினி
நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க வெனவேட் டேமே (1)

**(115)** வாழி யாதன் வாழி யவினி
விளைக வயலே வருக விரவலர்

**(114)** ஐங்குறுநூறு, மருதம், வேட்கைப்பத்து, (1) "புறத்தொழுக்கத்திலே நெடுநாளொழுகி 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியொடு கூடி ஒழுகாநின்ற தலைமகன், தோழியோடு சொல்லாடி 'யான் அவ்வாறொழுக நீயிர் நினைந்ததிறம் யாது' என்றாற்கு அவள் சொல்லியது."

பழையவுரை:— காவற்பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற் பொருட்டு நெற்பல பொலிக; இரவலர்க்கு ஈதற்பொருட்டுப் பொன் உண்டாகுக' என யாய் இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது பிறிது நினைந்திலள்; அவள் இத்தன்மையளாக, நீ ஒழுகிய ஒழுக்கத்தால் நினக்கும் நின்னொழுக்கத்திற்குத் துணையாகிய பாணனுக்கும் தீங்குவரும் என்றஞ்சி, 'யாணரூரன் வாழ்க, பாணனும் வாழ்க' என விரும்பினேம் யாங்கள் என்றவாறு. தலைவியை யாய் என்றது, புலத்தற்குக் காரணமாயின உளவாகவும் அவை மனங்கொள்ளாச் சிறப்பை நோக்கி. தோழி யாங்களென உளப்படுத்தது, ஆயத்தாரை நோக்கி எனக்கொள்க. பூவும் புலாலும் ஒக்க விளையும் ஊரன் என்றது, குலமகளிரைப் போலப் பொதுமகளிரையும் கொண்டொழுகுவான் என்பதாம். ஆதனவினி என்பான் சேரமான்களிற் பாட்டுடைத் தலைமகன்.

**(115)** இதுவுமது. (பழை—ரை:—) தலைவி இல்லறமே நினைந்து ஒழுகினான்; யாங்கள் நின்காதல் அவன்மேற் சுருங்குகின்ற திறநோக்கி, நினது கேண்மை

எனவேட் டோளே யாயே யாமே
பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்கும்
தண்டுறை யூரன் கேண்மை
வழிவழிச் சிறக்க வெனவேட் டேமே. (2)

(116) வாழி யாதன் வாழி யவினி
பால்பல வூறுக பகடுபல சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
வித்திய வுழவர் நெல்லொடு பெயரும்
பூக்கஞ லூரன் றன்மனை
வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே. (3)

(117) வாழி யாதன் வாழி யவினி
பகைவர்புல் லார்க பார்ப்பா ரோதுக
எனவேட் டோளே யாயே யாமே
பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்

---

வழிவழிச்சிறக்க என விரும்பினேம் எ—று. சிறப்புடைய கருங்குவளையுடனே சிறப்பில்லாத நெய்தனிகர்க்கும் ஊரன் என்றது, குலமகளிருடனே பொதுமகளிர் இகலும் ஊரன் எ—று.

(116) இதுவுமது. (பழை—ரை :—) தலைவி இல்லறத்திலே விழைந்தொழுகினாள்; அவன் பொதுமனையில் வாழ்க்கையொழிந்து தன் மனையிலே வாழ்வானாக என வேட்டேம் யாங்கள் எ—று. மேல் விளைதற்கு வித்திய உழவர் முன்பு விளைந்த செறுவின் நெல்லோடு பெயரும் என்றது, பின் வரும் பரத்தையர்க்கு வருவாய்பண்ணி அக்காலத்து உளராகிய பரத்தையரோடு இன்பநுகர்வான் என்பதாம்.

(117) இதுவுமது. (பழை—ரை:—) இவள் இல்லறமே விரும்பியொழுகினாள்; அவன் மார்பு ஊரவர்க்கெல்லாம் பொதுவாகிய பழனம்போலாது இவட்கே உரித்தாக என விரும்பினேம் யாங்கள் எ—று. பூத்துப் பயன்படாக் கரும்பினையும் காய்த்துப் பயன்படும் நெல்லினையுமுடைய ஊரன் என்றது,

கழனி யூரன் மார்பு
பழனமா கற்க வெனவேட் டேமே. (4)

---

(118) வாழி யாதன் வாழி யவினி
பசியில் லாகுக பிணிசே ணீங்குக
எனவேட் டோளே யாயே யாமே
முதலைப் போத்து முழுமீ னாரும்
தண்டுறை யூரன் றேரெம்
முன்கடை நிற்க வெனவேட் டேமே. (5)

---

(119) வாழி யாதன் வாழி யவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
எனவேட் டோளே யாயே யாமே

---

பொதுமகளிரையும் மகப்பயந்து பயன்படும் குலமகளிரையும் ஒப்ப நினைப்பான் எ-று.

(118) இதுவுமது. (பழை.உரை.—) இவன் இல்லறமே விரும்பியொழுகினான். யாங்கள் 'அவன் தேர் பிறமகளிர் முன்கடை நிற்றலொழிந்து எம் முன்கடை நிற்க' என விரும்பினேம் எ-று. 'முதலை......ஊரன்' எ-து, ஒருங்கு வாழ்வாரைப் பழைமை நோக்காது உயிர் கவர்வான் என்பதாம்.

(119) எ—து— களவினிற் பலநாளொழுகி வந்து வரைந்து கொண்ட தலைமகன் தோழியோடு சொல்லாடி, 'யான் வரையாது ஒழுகுகின்ற நாள், நீயிர் இங்கு இழைத்திருந்த திறம் யாது? என்றாற்கு அவள் சொல்லியது.

பழை—உரை.—இன்னே எதிர்ப்பட்டவன்றே நீ வரைந்தாய் எனக்கொண்டு இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது தலைவி பிறிதொன்றும் நினைத்திலள். யாங்கள் 'அகன்ற பொய்கைக்கு அணியாகத் தாமரையை

மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுறை யூரன் வரைக
எந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே. (6)

---

(120) வாழி யாதன் வாழி யவினி
அறநனி சிறக்க வல்லது கெடுக
எனவேட் டோளே யாயே யாமே
உளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்கும்
தண்டுறை யூரன் றன்னூர்க்
கொண்டனன் செல்க வெனவேட் டேமே. (7)

---

(121) வாழி யாதன் வாழி யவினி
அரசுமுறை செய்க களவில் லாகுக
எனவேட் டோளே யாயே யாமே
அலங்குசினை மாஅத் தணிமயி லிருக்கும்
பூக்கஞ லூரன் சூளிவண்
வாய்ப்ப தாக வெனவேட் டேமே. (8)

---

(122) வாழி யாதன் வாழி யவினி
நன்றுபெரிது சிறக்க தீதில் லாகுக
எனவேட் டோளே யாயே யாமே

---

யுடைய ஊரனாதலால், அத் தண்டுறையூரன் மனைக்கு அணியாம்வண்ணம் இவளை வரைவானாக; எந்தையும் கொடுப்பானாக' என விரும்பினேம் எ-று. ஈண்டுத் தலைவியை யாய் என்றது, எதிர்ப்பட்டஞான்றே கற்புப் பூண்டொழுகு கின்ற சிறப்பைநோக்கி.

(120) இதுவுமது.

(121) இதுவுமது.

(122) இதுவுமது. (பழை-ரை:—) 'இன்பநுகர்ந்தவன் செல்வமனைக்

கயலார் நாரை போர்விற் சேக்கும்
தண்டுறை யூரன் கேண்மை
அம்பலா கற்க வெனவேட் டேமே. (9)

(123) வாழி யாதன் வாழி யவினி
மாரி வாய்க்க வளநனி சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
பூத்த மாஅத்துப் புலாலஞ் சிறுமீன்
தண்டுறை யூரன் றன்னொடு
கொண்டனன் செல்க வெனவேட் டேமே. (10)

ஓரம்போகியார்.*

சேரமான்

பாலைபாடிய பெருங்கடுங்கோ

(124) அரிமயிர்த் திரண்முன்கை
வாலிழை மடமங்கையர்
வரிமணற் புனைபாவைக்குக்
குலவுச்சினைப் பூக்கொய்து
தண்பொருநைப் புனற்பாயும்

---

கண்ணே வைகும்வண்ணம் வரையுந்துணையும் அவன்கேண்மை அம்பலாகா தொழிக' என விரும்பினேம் யாங்கள் எ-று.

(123) இதுவுமது. (பழை-ரை:—) இவள் நின்னை எதிர்ப்பட்டவன்றே வரைந்தாயெனக் கொண்டு இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகினாள்; யாங்கள் 'அவன் வரைந்துகொள்ள வினையானாயின், பூத்த மாவினையும், புலாலஞ் சிறுமீனையுமுடைய ஊரனாதலால், அதற்கேற்ப, எம்மூர்க்கண் அறத்தொடுநிலை வகையாற் கற்புடைமையும் எதிர்ப்பாட்டினால் அலரும் விளைப்பவாயினும் உடன்கொண்டு செல்வானாக' என விரும்பினேம் எ-று.

*இவ் வேட்கைப் பத்தினைப் பாடியவர் இப் புலவரே.

(124) புறநானூறு, 11. திணை—பாடாண்டிணை. துறை—பரிசில்கடாநிலை.

விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்
பாடல்சான்ற விறல்வேந்தனும்மே
வெப்புடைய வரண்கடந்து
துப்புறுவர் புறம்பெற்றிசினே
புறம்பெற்ற வயவேந்தன்
மறம்பாடிய பாடினியும்மே
ஏருடைய விழுக்கழஞ்சிற்
சீருடைய இழைபெற்றிசினே
இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்மே
எனவாங்கு
ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே.

பேய்மகள் இளவெயினி.

**கருத்து:—** அழகிய பேதைப்பருவத்து மகளிர் சிற்றிலிழைத்துச் செய்த வண்டற்பாவைக்குக் கோட்டுப் பூவைப்பறித்துக் குளிர்ந்த ஆன்பொருந்தத்து நீரிடைப் பாய்ந்து விளையாடும் புகழ்பெற்ற வஞ்சிமாநகரில் உள்ள வேந்தனும் பகையரணையழித்து எதிர்ந்தவருடைய புறக்கொடையைப் பெற்றான். அப் புறக்கொடையைப் பெற்ற அரசனது வீரத்தைப் பாடிய பாடினியும் சிறந்த பொற்கழஞ்சாற் செய்யப்பட்ட அணிகலத்தைப் பெற்றாள். அவ் வணிகலத்தைப்பெற்ற விறலிக்கேற்பப் பாடிய பாணனும் வெள்ளிநாரால் தொடுத்த பொன்னாலாகிய தாமரைப் பூவைப் பெற்றான் எ—று.

**குறிப்பு:—** நீ பகைவர் புறக்கொடையைப் (பின்காட்டி யோடுதலைப்) பெற்றாய், அதுபாடிய பாடினி இழைபெற்றாள், அவளுக்கேற்பப் பாடிய பாணனும் பூப்பெற்றான். யான் ஒன்றும் பெற்றிலேன் என்று பரிசில் கடாநிலையாயிற்று. (14–15) பாடினிக்கு......பாண்மகனும்—விறலிக்கு முதற்றானமாகிய குரலிலே வந்துபொருந்தும் பாட்டை வல்ல பாணனும்.

யானைக்கட்சேய்
மாந்தரஞ்சேர லிரும்பொறை

(125) தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லை
குன்றுமலை காடுநா
டொன்றுபட்டு வழிமொழியக்
கொடிதுகடிந்து கோறிருத்திப்
படுவதுண்டு பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல!
குலையிறைஞ்சிய கோட்டாழை
அகல்வயன் மலைவேலி
நிலவுமணல் வியன்கானற்
றெண்கழிமிசைச் சுடர்ப்பூவிற்
றண்டொண்டியோ ரடுபொருந!
மாப்பயம்பின் பொறைபோற்றாது
நீடுகுழி யகப்பட்ட
பீடுடைய வெறுழ்முன்பிற்
கோடுமுற்றிய கொல்களிறு
நிலைகலங்கக் குழிகொன்று
கிளைபுகலத் தலைக்கூடியாங்கு

---

(125) புறநானூறு, 17. திணை—வாகை, துறை—அரசவாகை; இயன்மொழியுமாம்.

"பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் பிணியிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை வலிதிற்போய்க் கட்டிலெய்தினனைக் குறுங்கோழியூர்கிழார் பாடியது."

கருத்து:— இமயமுதற் குமரிவரையுள்ள இத்தேயத்து மக்களெல்லாம் ஒருபெற்றியாக வழிபாடுகூறச் செங்கோலோச்சி இந் நிலமுழுதும் ஆண்ட சேரர்மரபைக் காத்தவனே! தெங்கின்சோலையாலும் கழனிகளாலும் மலையாகிய

நீபட்ட வருமுன்பிற்
பெருந்தளர்ச்சி பலருவப்பப்
பிறிதுசென்று மலர்தாயத்துப்
பலர்நாப்பண் மீக்கூறலின்
உண்டாகிய வுயர்மண்ணும்
சென்றுபட்ட விழுக்கலனும்
பெறல்கூடும் இவனெஞ் சுறப்பெறி னெனவும்
ஏந்துகொடி யிறைப்புரிசை
வீங்குசிறை வியலருப்பம்
இழந்துவைகுது மினிநாமிவன்
உடன்றுநோக்கினன் பெரிதெனவும்
வேற்றரசு பணிதொடங்குநின்
னாற்றலொடு புகழேத்திக்
காண்கு வந்திசிற் பெரும! ஈண்டிய
மழையென மருளும் பஃறோன் மலையெனத்
தேனிறை கொள்ளு மிரும்பல் யானை
உடலுந ருட்க வீங்கிக் கடலென
வானீர்க் கூக்குந் தானை யானாது
கடுவொடுங் கெயிற்ற அரவுத்தலை பனிப்ப

வேலியாலும் மணல்பரந்த கடற்கரையாலும் கழிப்பூக்களாலும் குளிர்ந்துள்ள தொண்டியோரது தலைவா! யானை அகப்படுத்தும் குழிமேல் அக்குழி தெரியாமல் பொய்யாகப் பரப்பிவைத்த மேற்றளத்தை தன் மதத்தால் அறியாமல் கால்வைத்து வீழ்ந்து அகப்பட்ட மதக்களிறு அக்குழியின் கிலைசரியக்குத்தித் தூர்த்து அதனைக் கடந்து தன்னினம் மகிழச் சென்றடைந்தாற்போல, வலிய பகையை மதியாது நீ உற்ற பெரிய தளர்ச்சி நீங்கப் பிறிதொரு சூழ்ச்சியாற் போய்ப் பலரும்மகிழ நின் தாயத்தையடைந்து சுற்றத்திடையே நீ விளங்குகின்றாய். அதனால், நீ செழியனால் பிணிப்புண்பதற்கு முன்பு, நின்னால் வெல்லப்பட்டுத் தம்நாடுசெல்வங்களை இழந்து நின் வரவு பார்த்திருந்த அரசர், இவன் நம்பால் திருவுள்ளம் வைக்கப்பெற்றால் இவனால்

இடியென முழங்கு முரசின்
வரையா வீகைக் குடவர் கோவே.

குறுங்கோழியூர்கிழார்.

---

(126) இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும், என்றாங்கு
அவையளந் தறியினு மளத்தற் கரியை
அறிவு மீரமும் பெருங்க ணோட்டமும்
சோறுபடுக்குந் தீயொடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்

இழந்தவற்றை நாம் திரும்பப் பெறுதல் கூடும் என்றும், நின் வரவு பார்த்திராத அரசர், இவன் வெகுண்டமையால் நாம் இனி அரணிழந்து தங்குவேம் என்றும் நினைந்து பகைவேந்தரெல்லாம் ஏவல் செய்தற்குக் காரணமாகிய நின் வீரப்புகழை வாழ்த்திக்கொண்டு நின்னைக்காண இங்கு வந்தேன் பெருமானே! நால்வகைப் பெரும்படையினையும் வீரமுரசினையும் வேண்டியவர்க்கு வரையாது கொடுக்கும் வள்ளண்மையுமுடைய குடவர் கோவே!—என்றவாறு,

(126) ஷை, 20. திணை—வாகை. துறை—அரசவாகை.

"சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறையைக் குறுங்கோழியூர்கிழார் பாடியது."

**கருத்து:**—கடலினது ஆழமும் உலகின்பரப்பும் திசைளும் ஆகாயமுமாகிய இவற்றை அளந்தாலும் அளக்கமுடியாத அறிவும் அன்பும் கண்ணோட்டமும் உடையாய். ஆதலால் நின் குடைநிழலில்வாழ்வோர், சோறடும் நெருப்பின் வெம்மையும் சூரியவெப்பமும் அல்லது வேறுவெம்மை அறியார். இந்திரவில்.

திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே
அம்புதுஞ்சுங் கடியரணால்
அறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை
அனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே.

**குறுங்கோழியூர்கிழார்.**

(127) தூங்குகையா னோங்குநடைய
உறழ்மணியா னுயர்மருப்பின

அல்லது பகைவரது கொலைவில்லை அறியார். கலப்பையல்லது வேறுபடைக் கலமும் அறியார். மாற்றாரது மண்ணை உண்ணுந்தலைவ! வயா நோயுற்ற மகளிர் உண்டாலல்லது பகைவருண்ணாத மண்ணையுடையை. தீயநிமித்தமாகப் புதுப்புள் வரினும் பழம்புள் போகினும் அவற்றால் நடுக்கமுறாத காவலையும் செங்கோலையுமுடையாய். இத்தன்மைகளை உடையையாதலால், மன்னுயி ரெல்லாம் தத்தம் காதலால் நினக்கு ஏதம்வருங்கொல் என்று அஞ்சா நின்றது என்றவாறு.

**குறிப்பு:—** (13) பிறர்மண் உண்பவன் அரசன் என்பது. 'பூபுக்' என்னும் வடநூல் வழக்கானும் அறியலாம்." (18) "புதுப்புள்வருதலும் பழம்புள் போதலும் கூகை குழறலும் போல்வன புள்ளின்கட் டோன்றிய நிமித்தம் என்பர். (தொல். புறத்திணை. சூ. 36, நச்.) புள் நிமித்தத்தால் பாடாண்தலைவற்குத் தோன்றிய தீங்குகண்டு அஞ்சி ஓம்படை கூறியதற்கு இப்பாட்டை மேற்கோள் காட்டினர், நச்சினார்க்கினியர் (ஷை, ஷை, 36, உரை).

(127) ஷை, 22, திணையும் துறையும் அவை. துறை இயன்மொழியுமாம்.

பிறைநுதலாற் செறனோக்கின
பாவடியாற் பணையெருத்தின
தேன்சிதைந்த வரைபோல
மிஞிறார்க்குங் கமழ்கடாத்
தயறுசோரு மிருஞ்சென்னிய
மைந்துமலிந்த மழகளிறு
கந்துசேர்பு நிலைஇவழங்கப்
பாஅனின்று கதிர்சோரும்
வானுறையு மதிபோலும்
மாலைவெண் குடைநிழலான்
வாண்மருங்கிலோர் காப்புறங்க
அலங்குசெந்நெற் கதிர்வேய்ந்த
ஆய்கரும்பின் கொடிக்கூரை
சாறுகொண்ட களம்போல
வேறுவேறு பொலிவுதோன்றக்
குற்றானா உலக்கையாற்
கலிச்சும்மை வியலாங்கட்
பொலந்தோட்டுப் பைந்தும்பை
மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇச்
சினமாந்தர் வெறிக்குரவை
ஓத நீரிற் பெயர்பு பொங்க
வாய்காவாது பரந்துபட்ட
வியன்பாசறைக் காப்பாள!

---

**கருத்து:—** களிறுகளாலும் வீரர்களாலும் பெருமைபெற்ற பாசறையின் காவலாள! கொல்லிமலையோர்தம் வீரனே! யானையின் நோக்குப்போலும் பார்வையுடைய சேயே! நின்னைப்பாடிய செந்நாப் பின்பு பிறருடைய புகழைச் சொல்லாவண்ணம் கொடுக்கும் எங்கோவே! நினது எல்லையற்ற செல்வம் வாழ்வதாக, பெருமானே! முயற்சியில் வெறுப்பின்றி வேற்றுநாட்டிற் சென்று விடும் படையுடனே, உணவுப்பண்டம் பெருக மடியின்றி ஒழுகுகின்றாய்;

வேந்துதந்த பணிதிறையாற்
சேர்ந்தவர் கடும்பார்த்தும்
ஓங்குகொல்லியோ ரடுபொருந!
வேழ நோக்கின் விறல்வெஞ் சேஎய்!
வாழிய பெரும! நின் வரம்பில் படைப்பே
நிற்பாடிய வலங்குசெந்நாப்
பிறரிசை நுவலாமை
ஓம்பா தீயு மாற்ற லெங்கோ
**மாந்தரஞ்சேர லிரும்பொறை** ஓம்பிய நாடே
புத்தே ளுலகத் தற்றெனக் கேட்டுவந்
தினிது கண்டிசிற் பெரும! முனிவிலை
வேறுபுலத் திறுக்குந் தானையொடு
சோறுபட நடத்திநீ துஞ்சாய் மாறே.

**குறுங்கோழியூர்கிழார்.**

---

(128) முதிர்வா ரிப்பி முத்த வார்மணற்
கதிர்விடு மணியிற் கண்பொரு மாடத்
திலங்குவளை மகளிர் தெற்றி யாடும்
விளங்குசீர் விளங்கில் விழுமங் கொன்ற
களங்கொள் யானைக் கடுமான் பொறைய!
விரிப்பி னகலுந் தொகுப்பி னெஞ்சும்

---

ஆதலால், மாந்தரஞ்சேர லிரும்பொறை பாதுகாக்கும் நாடு தேவருலகை ஒக்கும் என்று பிறர்சொல்லக் கேட்டுவந்து அதனைக் கண்ணுக்கினிதாகக் கண்டேன் எ—று.

(128) ஷை, 53. திணை—வாகை. துறை—அரசவாகை.

**கருத்து:—** புகழ்மிக்க விளங்கில் என்னும் நகர்க்குப் பகைவரால்வந்த இடும்பையைத் தீர்த்த 'பொறைய!' பொருள்பொதிந்த செய்யுளியற்றும் செந்நாவினையும் மிக்க கேள்வியினையும் பெரும்புகழினையுமுடைய கபிலன்

மம்மர் நெஞ்சத் தெம்மனோர்க் கொருதலை
கைம்முற் றலநின் புகழே யென்றும்
ஒளியோர் பிறந்தவிம் மலர்தலை யுலகத்து
வாழே மென்றலு மரிதே தாழாது
செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்றுள னாயி னன்றும னென்றநின்
ஆடுகொள் வரிசைக் கொப்பப்
பாடுவன் மன்னாற் பகைவரைக் கடப்பே.

பொருந்தில் இளங்கீரனார்

---

(129) ஆடிய லழற்குட்டத்
தாரிரு ளரையிரவில்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்

---

இன்றுளனாயின் நன்றும்: அது பெற்றிலேன் ' என்று சொல்லிய நின் சிறப்பிற்குப் பொருந்த நீ பகைவரை வென்ற வெற்றியைப் பாடுவேன். விரித்துச் சொல்லிற் பரந்துபடும்; சுருக்கிச்சொல்லின் ஒழிவுபடும். ஆதலால், மயக்க நெஞ்சுள்ள எம்போலியரால் நின்புகழ் எந்நாளும் முற்றக்கூறவியலா. கல்வியால் விளக்கமுடையோர் பிறந்த இவ்வுலகில் வாழேம் என்றிருத்தலும் கூடாதன்றோ? என்று சேரனது பெருமையைப் புகழ்ந்தவாறு.

(129) ஷை, 229. திணை—பொதுவியல். துறை—ஆனந்தப்பையுள்.
"கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை இன்ன நாளில் துஞ்சும் என அஞ்சி, அவன் துஞ்சியவிடத்துக் கூடலூர்கிழார் பாடியது."

கருத்து:— மேடராசி பொருந்திய கார்த்திகைநாளின் முதற்காலின்கண், பாதியிரவிலே அறுடநாளின் அடியின்வெள்ளி முதலாகப் புனர்பூசத்துக் கடையின் வெள்ளி எல்லையாக விளங்க, பங்குனி மாதத்ினது முதற்

பங்குனியுய ரழுவத்துத்
தலைநாண்மீ னிலைதிரிய
நிலைநாண்மீ னதனெதி ரேர்தர
தொன்னாண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னாது
அளக்கர்த்திணை விளக்காகக்
கனையெதிர் பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே
அதுகண்டு, யாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன்
நோயில னாயி னன்றுமற் றில்லென
அழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவும்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவும்
மேலோ ருலக மெய்தின னாகலின்
ஒண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்

---

பதினைந்தின்கண் உச்சமாகிய உத்தரமாகிய மீன் அந்த உச்சியினின்றும் சாய, அதற்கு எட்டாம் நக்ஷத்திரமாகிய மூலம் அதற்கெதிரே எழாநிற்க, அந்த உத்தரத்திற்கு முன்செல்லும் எட்டாம் மீனாகிய மிருகசீரிடம் துறையிடத்தே தாழ, கீழ்த்திசையிற் போகாது வடதிசையிற்போகாது, பூமிக்கு விளக்குப்போல ஒரு மீன் வானத்தினின்றும் வீழ்ந்தது. அதனைப்பார்த்து யாமும் பிறருமாகிய இரவலர், 'நம்முடைய மலைநாட்டு வேந்தனாயுள்ளவன் நோயிலனாகப் பெற்றால் நன்றாம்' என்று இரங்கிய நெஞ்சத்துடனே மிக அஞ்சினேம். அஞ்சினபடியே, ஏழாம்நாள் வந்ததாதலால், இன்று தன்னுடைய நால்வகைப்படையும் செயலற்று ஒழியத் தேவருலகத்தை அடைந்தான். பகைவரை ஒடுக்கும் வன்மையும், வேண்டியோர்க்கு வரையாது கொடுக்கும்

தன்றுணை யாய மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கு மாற்ற லசைவர்க்
களந்துகொடை யறியா வீகை
மணிவரை யன்ன மாஅ யோனே.

கூடலூர்கிழார்

---

### சேரமான் வஞ்சன்

(130) மதிநிலாக் கரப்ப வெள்ளி யேர்தர
வகைமா ணல்லிற்.....................
பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
இரவுப்புறம் பெற்ற வேம வைகறைப்
பரிசிலர் விசயெ..................
வரிசையி னிறுத்த வாய்மொழி வஞ்சன்
நகைவர் குறுகி னல்லது பகைவர்க்குப்
புலியின மடிந்த கல்லளை போலத்
துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்
மதியத் தன்னவென் னரிக்குரற் றடாரி
இரவுரை நெடுவா ரிப்ப வட்டிக்கு

வண்மையுமுடைய நீலமலைபோன்ற அவ்வேந்தன் தன் இன்றுணை மகளிரையும் மறந்தான் கொல்லோ—என்று சேரன் இறந்தமைக்கு ஆற்றாதிரங்கியவாறு.

(130) புறநானூறு, 398. திணை—பாடாண்டிணை, துறை—கடைநிலை.

கருத்து:—நிலாக்கரப்பவும், வெள்ளியெழவும், கோழிகூவவும், பொய்கைப் பூக்கள் மலரவும், பாணர் யாழிசையை இயக்கவும் இவ்வாறான வைகறைக் காலத்தே, பரிசிலரின் செல்வமான வாய்மைபொருந்திய சேரமான் வஞ்சனது பகைவராற் புகுதற்கரிய மூதூரிலே என்னுடைய தடாரிப்பறையை இனிது முழக்கிக்கொண்டு, 'இரவலர் கொள்கலத்தை நிறைக்கும் வள்ளால்! எங்கட்கு நீ ஆதாரமாகி அருளவேண்டும்' என்று கூறியவளவிலே, என்

உள்ளி வருநர் கொள்கல நிறைப்போய்!
தள்ளா நிலையை யாகிய ரெமக்கென
என்வர வறீஇச்
சிறிதிற்குப் பெரிதுவந்து
விரும்பிய முகத்த னாகி யெனதரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்னரைப்
புகைவிரிந் தன்ன பொங்குதுகி லுடீஇ
அழல்கான் றன்ன வரும்பெறன் மண்டை
நிழல்காண் டேறல் நிறைய வாக்கி
யானுண வருள லன்றியுந் தானுண்
மண்டைய கண்ட மான்வறைக் கருனை
கொக்குகிர் நிமிர லொக்க லார
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி யொளிர்வரு மரவுற ழாரமொடு
புரையோன் மேனிப் பூத்தசல.........
முரைசெல வருளி யோனே
..................யருவிப் பாயற் கோவே.

திருத்தாமனர்.

(131) எங்கோ னிருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல விடையின்று குறுகிச்

---

வரவறிந்து யான்கூறிய சிலவற்றுக்குப் பெரிதும் மகிழ்ந்து என் அரைக் கந்தையைக் களைந்து அழகிய மெல்லிய துகிலை உடுப்பித்து, உண்கலநிறைய மதுவினை வார்த்து என்னை உண்ணும்படி செய்ததோடு, உயர்ந்த ஊன் கலந்த சோற்றை என்சுற்றம் அருந்த விறைத்தும் தன் மார்பிலணிந்த உயர்ந்த மணிமாலையை எனக்கு அளித்தும் பெரும்புகழ் கொண்டான், பாயலின் கோவாகிய அச்சேரன் என்றவாறு.

(131) ஷை, 54. திணை—வாகை. துறை—அரசவாகை.

கருத்து:— எம்முடைய வேந்தன் இருந்த ஆரவாரமிக்க ஊரிடத்து அவ்வூரார்போலக் காலம் பாராதே அணுகி, அவனது மேம்பட்ட

செம்ம றுளவை யண்ணுந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே
இரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து
வான நாண வரையாது சென்றோர்க்
கானு தீயுங் கவிகை வண்மைக்
கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்குங் காலைப்
பாசிலைத் தொடுத்த உவலைக் கண்ணி
மாசூ ணுடுக்கை மடிவா யிடையன்
சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே.

கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரன்.

---

(132) நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே யாயினும் தம்மொடு செல்லா
வேற்றோ ராயினும் நோற்றோர்க் கொழியும்

---

நாளோலக்கத்தின்கண்ணே தலையெடுப்புடன் இறுமாந்துசென்று புகுதல், எம்போலும் இரவலாளர்க்கு எளிது. இங்ஙனம் எளிதாவதல்லது, பெருவண்மையுடைய கடுமான்கோதையோடு மாறுபட்டு வஞ்சினங்கூறிய பகைவேந்தர்க்கு அவன் நாடு; இடையன் தன் ஆட்டினத்தோடு அணுகமுடியாத புலிதங்கும் அகன்ற நிலத்தை ஒப்பதாகும் என்று.

(132) ஷை, 367, திணை—பாடாண்டிணை. துறை—வாழ்த்தியல்.

"சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை ஔவையார்"

கருத்து:— தேவருலகையொத்த சீரியநாடுகள் அரசருடையவேயாயினும் அவர்தம்மோடு அவை உடன் செல்லா. அரசக்குரிய ரல்லாத வேற்றோராயினும் தவஞ்செய்தோர்க்கே அவை உரியனவாகும். யாசித்த பார்ப்பார்க்கு

ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல் மாந்தி மகிழ்சிறந்து
இரவலர்க் கருங்கல மருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை யல்லது
ஆழுங் காலைப் புணைபிறி தில்லை
ஒன்றுபுரிந் தடங்கிய இருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்!
யானறி யளவையோ விதுவே வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும் இம்மெனப்
பரந்தியங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநுந் நாளே.

**ஔவையார்.**

---

## சேரமான் கோக் கோதைமார்பன்

(133) கோதை மார்பிற் கோதை யானும்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்

ஏற்ற கை நிறையப் பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்தும், அழகிய மகளிர் பொற்கலத்தேந்திய மதுவின்றெளிவை மாந்தி மகிழ்ச்சி மிகுந்தும், இரவலர்க்கு வேண்டிய அருங்கலங்களைக் குறைவற வீசியும், இவ்வுலகத்து நுங்கட்கு வரைந்த ஆயுள்களெல்லாம் வாழ்வீர்களாக. பெருவாழ்வளிக்கும் நல்வினையல்லாமல் இறுதிக்காலத்துக்குத் துணையாவது பிறிதில்லை. அந்தணப் பெரியோரது மூவகை வேதாக்கினிபோல, அழகுபெருக வீற்றிருக்கும் வேந்தர்காள்! இவையே யானறிந்தஉண்மை, வானத்துத்தோன்றும் மீன்களினும், பெருமேகம் பொழியும் துளிகளினும் பலவாக நும் வாழ்நாள்கள் உயர்ந்து தோன்றிப் பொலிவீராக எ-று.

(133) ஷை, 48. திணை—பாடாண்டிணை. துறை—புலவராற்றுப்படை.

மாக்கழி மலர்ந்த நெய்த லானும்
கண்ணு றும்மே கானலந் தொண்டி
அஃதெம் மூரே அவனெம் மிறைவன்
அன்னோற் படர்தி யாயி னீயும்
எம்மு முள்ளுமோ முதுவா யிரவல!
அமர்மேம் படூஉங் காலைநின்
புகழ்மேம் படுநனைக் கண்டன மெனவே.

**பொய்கையார்.**

---

(134) நாட னென்கோ ஊர னென்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ
யாங்கன மொழிகோ ஓங்குவாட் கோதையைப்

---

**கருத்து:—** கோதைமார்பன் என்ற அரசன் மார்பிலணிந்த மாலையும், அவன்மகளிர்சூடிய மாலையும், கழிநெய்தல்மலரும் ஆகிய இவற்றால் தேன்மணங் கமழாநின்றது, தொண்டி என்னும் கடற்கரைப்பட்டினம். அஃது எம்முடைய ஊர். அவன் எம்முடைய அரசன். முதுவாய் இரவல! அத்தன்மையோனிடம் போகின்றாயாயின் நீ எம்மையும்நினைத்து, 'நின் போர்ப்புகழை மேம்படச் செய்யும் அவனைக்கண்டேம் யாம்' என்று அவன்பாற் சொல்வாயாக எ-று.

(134) ஷை, 49. திணையும் துறையும் அவை; இயன்மொழியுமாம்.

**கருத்து:—** நாடன் என்று சொல்லுவேனோ, ஊரன் என்று சொல்லுவேனோ, சேர்ப்பன் என்று சொல்லுவேனோ, எவ்வாறு சொல்வேன்: எம் அரசனான கோதையை? தினைப்புனங்காப்போர் கிளிகடியும் தட்டை என்னுங் கருவியைப் புடைத்தால், அப்புனத்து அயலதாகிய விளைவயலின்கண்ணும் கடற்கரையின்கண்ணும் உள்ள புட்கள் ஒருசேர எழுந்தோடும் ஆதலால் எ-று.

**குறிப்பு:—** குறிஞ்சிமுல்லை நிலங்கட்கு உரியவனை நாடன் என்றும், மருதநிலத்துக்கு உரியவனை ஊரனென்றும், நெய்தல் நிலத்துக்கு உரியவனைச் சேர்ப்பன் என்றும் கூறுவர். சேரனது நாடு நானிலங்களின் செறிவும் உடையது என்பது கருத்து. " திரைசெய் கடலின் பெருவளமும் திருந்து

புனவர் தட்டை புடைப்பி னயலது
இறங்குகதி ரலமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே.

பொய்கையார்.

(135) நகைநன் றம்ம தானே யிறைமிசை
மாரிச் சுதையின் ஈர்ம்புறத் தன்ன
கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்
வெள்ளி வெண்தோ டன்ன கயல்குறித்துக்
கள்ளா ருவகைக் கலிமகி ழுழவர்
காஞ்சியங் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை
மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து
பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி
வருந்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை
மீதழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்
பார்வல் இருக்கும் பயங்கே ழூர!

விலனின் செழுவளமும், வரையின் வளனும் உடன்பெருகி மல்குநாடு மலைநாடு" என்றார் சேக்கிழாரும் (பெரியபு. விறன்—1)

**குறிப்பு:—** "தட்டையாவது, மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி" (குறிஞ்சிப்பாட்டு, 43, நச்.) இக்கருவி மலைநாட்டில் இன்றும் உண்டு.

(135) அகநானூறு, 346. திணை—மருதம். துறை—தோழி தலைமகற்கு வாயில்மறுத்தது.

**கருத்து:—** மருதத் தலைவனே! முன்னாள் பாணனொடுகூடி யாழிசையும் முழவும் இசைக்கச் சுற்றத்துடன் தேறலைமாந்தி எம்மனைப்பக்கமே நாடாது பரத்தையுள்ள நின் மனையிடம் சேர்ந்தபோது அப்பரத்தை அடைந்த உவகை,

யாமது பேணின்றோ விலமே நீநின்
பண்ணமை நல்யாழ்ப் பாணரொடு விசிபிணி
மண்ணார் முழவின் கண்ணதிர்ந் தியம்ப
மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி
எம்மனை வாரா யாகி முன்னாள்
நும்மனைச் சேர்ந்த ஞான்றை யம்மனைக்
குறுந்தொடி மடந்தை யுவந்தனள் நெடுந்தேர்
இழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மறுகிற் கூட லாங்கண்
வெள்ளத் தானையொடு வேறுபுலத் திறுத்த
கிள்ளி வளவன் நல்லமர் சாஅய்க்
கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி
ஏதில் மன்ன ரூர்கொளக்
கோதை மார்பன் உவகையிற் பெரிதே.

பழையன்மாறனது கூடல்மாநகரில் பெருஞ்சேனையுடன் வந்த கிள்ளிவளவன் தன்னை எதிர்த்தவருடன் போர்புரிந்து வென்று, பகைவரின் குதிரை யானை ஊர்களைக் கைப்பற்றிய காலத்தில், கோதைமார்பன் அடைந்த உவகையினும் பெரியதாகும், ஆனல், அதனை யாங்கள் பொருட்படுத்தவில்லை. பரத்தையிடஞ் செல்லவில்லை என்று நீ மறுப்பதே எங்கட்கு மிக்க நகை விளைக்கின்றது என்று. கோதைமார்பன், சேரன் போலும்.

குறிப்பு:— பழையன்மாறனது கூடல் என இயையும். பழையன்மாறனைப் பாண்டியருள் ஒருவன் என்று கூறுவர். இவ்வாறன்றி, பழையன்மாறன் என்ற பாண்டியசேனபதி, கூடலில் கிள்ளிவளவன்வந்து நடத்திய போரில் வெற்றிபெற்றகாலத்து எழுந்த உவகையின்—எனினும் அமையும்.

## சேரமான் எந்தை

(பாடியது)

(136) நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய
யாரோ பிரிகிற் பவரே சாரற்
சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து
வேனி லஞ்சினை கமழும்
தேமூ ரொண்ணுத னின்னொடுஞ் செலவே.

---

## நம்பி குட்டுவன்

(பாடியவை)

(137) முடக்கா லிறவின் முடங்குபுறப் பெருங்கிளை
புணரி யிகுதிரை தரூஉந் துறைவன்
புணரிய விருந்த ஞான்றும்
இன்னது மன்னோ நன்னுதற் கவினே.

---

(136) குறுந்தொகை, 22. துறை—செலவுக்குறிப்பறிந்து ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

கருத்து:— தலைவன் பிரிந்துசெல்வான் என்பதனைக் குறிப்பால் அறிந்து வருந்திய தலைவியை நோக்கி, 'துயரத்தால் நீர்சொரியும் கண்ணையுடையையாகி நீ இங்கே தனித்துத்தங்கும்படி, நின்னைப்பிரிந்து செல்லும் ஆற்றலுடையவர் யாவர்? தலைவர் செல்லுகை நின்னோடே ஆகும்' என்று தோழி தேற்றலாயினள் என்க.

(137) குறுந்தொகை, 109. துறை— சிறைப்புறம். தம் வேறுபாடு கண்ட புறத்தார் அலர்கூறுகின்றமை தோன்றத் தோழி தலைமகட்குக் கூறுவாளாய்க் கூறியது.

கருத்து:— தலைவனோடு நாடோறும் பயின்றுவரும் களவொழுக்கம் அச்சத்தை உண்டாக்கித் துன்பந் தருவதென்றும், ஊரில் அலரை மிகுவிப்பதென்றும் தலைவன் கேட்கும் அணிமையில் தலைவிக்குத்தோழிகூறினாள் என்க.

(138) மானடி யன்ன கவட்டிலை யடும்பின்
தார்மணி யன்ன வொண்பூக் கொழுதி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
புள்ளிமிழ் பெருங்கடற் சேர்ப்பனை
உள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே.

---

## குட்டுவன் கண்ணன்

(பாடியது)

(139) கல்லென் கானத்துக் கடமா வாட்டி
எல்லு மெல்லின்று ஞமலியு மிளைத்தன
செல்லல் ஐய! உதுவெம் மூரே
ஓங்குவரை யடுக்கத்துத் தீந்தேன் கிழித்த
குவையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்
பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே.

(138) குறுந்தொகை, 243. துறை—வன்புறையெதிர் அழிந்து சொல்லியது.

**கருத்து:—** தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி வருந்தியது கண்டு, 'நீ ஆற்றியிருக்க வேண்டும்' என்று வற்புறுத்திய தோழியை நோக்கி 'ஆற்றாமை மீதூர்ந்து வருந்தும்படி பெருங்கடற் சேர்ப்பனான தலைவனை இனி யான் நினையேன். என் கண்கள் துயில்வதாக' எனத் தலைவி கூறினாள் என்க.

(139) குறுந்தொகை, 179. துறை—பகல்வருவானை இரவுக்குறி நேர்ந்தாள்போன்று தோழி வரைவுகடாயது.

**கருத்து:—** பகலில் வந்து தலைவியோடு அளவளாவிய தலைவனை நோக்கி, 'நீ காட்டிற் கடமாவேட்டை நிகழ்த்தியதால், பகற்பொழுதும் மங்கியது நின் வேட்டை நாய்களும் மிக இளைப்புற்றன. இக்குன்றின் உச்சியிடையே உள்ளதாகிய அஃது எம் ஊராகும்'—என்று தோழி கூறினள். இதனால் நீ போகாமல் எம்முடன் இரவில் தங்கிச்செல்வாயாக என்றாளாயிற்று.

(140) சேறி ரோவெனச் செப்பலு மாற்றும்
வருவி ரோவென வினவலும் வினவாம்
யாங்குச்செய் வாங்கொ றோழி! பாம்பின்
பையுடை யிருந்தலை துமிக்கு மேற்றொடு
நடுநா ளென்னூர் வந்து
நெடுமென் பணைத்தோ ளடைந்திசி னோரே.

---

## சேரமான் இளங்குட்டுவன்

(பாடியது)

(141) நோகோ யானே நோதகு முள்ளம்
அந்தீங் கிளவி யாயமொடு கெழீஇப்
பந்துவழிப் படர்குவ ளாயினு நொந்துநனி
வெம்புமன் அளிய டானே யினியே

---

(140) குறுந்தொகை, 268. துறை—தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

**கருத்து:—** மழையும் இடியுமுடைய நடுநிசி என்று எண்ணாராய் வந்து நின்னை அணைந்த தலைவரிடம், இடையீடின்றி அவரிருத்தலை விரும்பும் நாம், "இனிச் 'செல்கின்றீரோ' என்று கூறும் வலிமையடைந்திலேம். இடி முதலிய வழியின் இடையூறுகட்கு அஞ்சி, 'திரும்ப வருவீரோ' எனக்கேட்கவும் செய்திலேம். என் செய்வது?" என்று, தலைமகன் கேட்கும் அணிமைக்கணிருந்து தோழி தலைவிக்குக் கூறினாள். இதனால் இடையீடின்றி உடனுறைதற்குரிய இல்லறத்தினை அமையுமாறு மணந்துகொள்ள வேண்டும் என்று தலைவனறியக் குறிப்பித்தவாறு.

(141) அகநானூறு, 153. திணை—பாலை, துறை—மகட்போக்கிய செவிலித்தாய் சொற்றது.

**கருத்து:—** தலைவனுடன் தலைவி சென்றதை அறிந்த செவிலித்தாய், "ஆயத்தாரோடு பந்தாடும்போது அப் பந்துவழிச் சென்றாலும் வருந்தும்

வன்க ணாளன் மார்புற வளைஇ
இன்சொற் பிணிப்ப நம்பி நங்கண்
உறுதரு விழும முள்ளா ளாய்யெனத்
தெறுகதி ருலைஇய வேனில் வெங்காட்
டுறுவளி யொலிகழைக் கண்ணுறுபு தீண்டலிற்
பொறிபிதிர் பெடுத்த பொங்கெழு கூரெரிப்
பைதறு சிமையப் பயநீங் காரிடை
நல்லடிக் கமைந்த வல்ல மெல்லியல்
வல்லுநள் கொல்லோ தானே யெல்லி
ஓங்குவரை யடுக்கத் துயர்ந்த சென்னி
மீனொடு பொலிந்த வானிற் றோன்றித்
தேம்பாய்ந் தார்க்குந் தெரியிணர்க் கோங்கின்
காலுறக் கழன்ற கண்கமழ் புதுமலர்
கைவிடு சுடரிற் றோன்றும்
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

---

## சேரமான் கணைக்கால் இரும்பொறை

(பாடியது)

(142) குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்

---

மெல்லிய என் மகள், கொடிய வெப்பமிக்க பாலைநிலத்தை வன்கணாளனாகிய தலைவனது இன்சொல்லை நம்பி அவனுடன் கடக்க வல்லவளோ" என்று கூறி வருந்தினள் என்க.

(142) புறநானூறு, 74. திணை—பொதுவியல். துறை—முதுமொழிக் காஞ்சி.

"சேரமான் கணைக்காலிரும்பொறை சோழன்செங்கணானோடு திருப்போர்ப்புறத்துப் பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையிற்கிடந்து தண்ணீர்தா என்று பெறாது பெயர்த்துப்பெற்று உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு."

தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
யீன்ம ரோவிவ் வுலகத் தானே.

---

## சேரமான்
## கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை
(பாடியது)

(143) யாங்குப் பெரிதாயினும் நோயள வெனைத்தே
உயிர்செருக் கல்லா மதுகைத் தன்மையிற்
கள்ளி போகிய களரியம் பறந்தலை

---

**கருத்து:—** வயிற்றுப்பிள்ளை இறந்து பிறப்பினும், தசைத்தடியாக ஊன் பிண்டம் வீழினும் அவற்றையும் ஆளல்ல என்று கருதாது வாளாற்போழ்ந்து சடங்கியற்றுதலில் தவறார் சேர அரசர். அங்ஙனமாக, பகைவர் வாளாற் படாமல், சங்கிலியாற் பிணிக்கப்பட்ட நாய்போலப் பிணித்துத் துன்புறுத்திய பகைவரது உபசாரத்தால் வந்த தண்ணீரை, பசித்தீயை மாற்றவேண்டித் தாமே இரந்துண்ணும் அளவுக்கு மனவலியில்லாத மக்களை அவ்வரசர் இவ்வுலகின்கட் பெறுவார்களோ? எ—று.

**குறிப்பு:—**(1–2) போர்க்களத்து பகைவர்படையால் வீழ்ந்தோரே துறக்கம் பெறுவர் என்பது அரசர் கொள்கை. அங்ஙனமின்றி நோயால் இறந்தோருடம்பைத் தருப்பையிற் கிடத்தி வாளாற் போழ்ந்து 'போரில் மாண்டோரடையும் நற்கதியை இவர் அடைக' என மந்திரபூர்வமாகப் பிரேதக்கிரியை புரிதல் பண்டை அரசர் மரபு.

(143) புறநானூறு, 245. திணை—பாடாண்டிணை. துறை—கையறுநிலை.

"சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை தன் பெருங் கோப்பெண்டு துஞ்சியகாலைச் சொல்லிய பாட்டு."

**கருத்து:—** யானுற்ற நோய் எவ்வளவு பெரிதாயினும், என்னுயிரைப் போக்கும் வலியுடையதாகாமையின், அதன் தன்மை எத்தன்மையதாகும்?

வெள்ளிடைப் பொத்திய விளைவிற கிமைத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை
இன்னும் வாழ்வ லென்னிதன் பண்பே.

---

### சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ
(பாடியவை)

(144) எஃகுளங் கழிய இருநில மருங்கின்
அருங்கட னிறுத்த பெருஞ்செ யாளனை
யாண்டுள னோவென வினவுதி யாயின்
........................................
வருபடை தாங்கிய கிளர்தார் அகலம்
அருங்கட னிறுமார் வயவ ரெறிய
உடம்புந் தோன்றா உயிர்கெட் டன்றே
மலையுநர் மடங்கி மாறெதிர் கழியத்
........................................
அலகை போகிச் சிதைந்துவே றாகிய
பலகை யல்லது களத்தொழி யாதே
சேண்விளங்கு நல்லிசை நிறீஇ
நாநவில் புலவர் வாயு ளானே.

---

கள்ளிவளர்ந்த இடுகாட்டின் வெளியிடத்து வைத்துமூட்டிய விறகிமத்தே அழலாகிய பாயலின்கண் சேர்த்தலால் மேலுலகத்தே போயினாள், என் தேவி. அவள் மாயவும் இன்னமும் உயிரிருந்து வாழ்வேன். இவ்வுலகியற்கை இருந்தவாறென்னே! எ-று.

(144) புறநானூறு, 282.

கருத்து:— பெருஞ்செயல் புரியவல்ல வீரனை 'எங்குள்ளான்' என்று என்னை உசாவுகின்றாயாயின், கூறுவேன். போர்க்களத்தில் எதிர்த்த படையைத் தனிநின்று தாக்கிய அவனது மார்பம் பகைவீரர் எறிதலால் சிதைவுற உருத்தெரியாமற்போய் அவனுயிரும் நீங்கியது. நெடுந்தூரம் பரக்கும் பெரும் புகழை நிறுவி, இப்போது அவ்வீரன் சீரிய புலவரது வாயினிடமாக உள்ளான் எ-று.

(145) அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்கு
அலமரல் வருத்தம் தீர யாழநின்
நலமென் பணைத்தோள் எய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கின் அழற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறும் நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்டல் தைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே!
மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்
நறுந்தண் பொழில கானம்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே.

---

(146) அன்றை யனைய வாகி இன்றுமெங்
கண்ணுள போலச் சுழலு மாதோ

---

(145) நற்றிணை, 9. திணை பாலை. துறை—உடன்போகாநின்ற தலைமகன் மகட்கு உரைத்தது.

**கருத்து:—** தலைவி விரும்பியவாறு அவளை இரவிலே அழைத்துச் செல்லுந் தலைமகன், விடிந்தபின் பாலைநெறியும் இடையூறும் கடந்துபோகின்ற விடத்துத் தலைமகளைநோக்கி, 'அழிவற்ற வீட்டைவிரும்பி அன்புசெலுத்தும் அடியார்கள் வழிபடுதெய்வத்தைக் கண்ணுற் கண்டாற்போல, எம் வருத்த மெல்லாந் தீரப் பெண்ணே! உன்னை அடைந்தேம். இனி நெறியெங்கும் பொழில்களும் ஊர்களுமாக உள்ளன. ஆதலின், நீ வழியில் விளையாடிக் கொண்டு வருந்தாது மெல்ல ஏகுக' என்று தலைவன் கூறினான் என்க.

(146) ஷை, 48. திணை அது. துறை—பிரிவுணர்த்திய தலைவற்குத் தோழி சொல்லியது.

**கருத்து:—** கற்புக்காலத்துப் பிரிவுணர்த்திய தலைவனைத் தோழி நோக்கி 'முன்பு நீயிர் தலைவியை உடன்கொண்டுசெல்லும் நெறியில், எதிர்த்தவரைப்

புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனின் நினையத் தோன்றிப்
புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்
கிடிஎன இடிக்குங் கோற்றொடி மறவர்
வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது
அமரிடை யுறுதர நீக்கிநீர்
எமரிடை யுறுதர ஒளித்த காடே.

---

(147) அடைகரை மாஅத் தலங்குசினை பொலியத்
தளிர்கவின் எய்திய தண்ணறும் பொதும்பிற்
சேவலொடு கெழீஇய செங்க ணிருங்குயில்
புகன்றெதிர் ஆலும் பூமலி காலையும்
அகன்றோர் மன்றநம் மறந்திசி னோரென
இணருறு புடைவதன் றலையும் புணர்வினை
ஓவ மாக்கள் ஒள்ளரக் கூட்டிய
துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி

---

போரில் தொலைத்துப் போகின்றகாலையில், எம் ஐயன்மார் பின்தொடர்ந்து வருதலும் எம்மைக் கைவிட்டு நீர் மறைந்துகொண்ட காடு இப்பொழுதும் எங்கண்ணெதிரில் உள்ளதுபோலச் சுழலாநின்றது. அத்தகைய காட்டின் எங்ஙனம் வருந்தன்மையீரோ' என மறுத்துக்கூறினள் என்க.

(147) ஷை, 118. திணை அது. துறை—பருவங்கண்டாற்றாளாய தலைவி சொல்லியது.

**கருத்து:**—வேந்தனேவிய வினைவயிற் பிரிந்துசென்ற காதலன், குறித்த பருவத்து வாராமையால் அதனை ஆற்றாத தலைவி, 'மாமரங்கள் இளந்தளிரீன்றும், சேவலுடனே குயில்கள் ஒன்றனையொன்று விரும்பிக்கூவியும், மலர்கள் மலர்ந்து நறுமணங்கமழ்ந்தும் விளங்கும் இவ்விளவேனிற்காலத்தை நோக்குந்தோறும் தலைவர் நம்மை மறந்தார் என்று வருந்துகின்றேன். அதனோடு, அழகிய புதிய பாதிரிமலரை வண்டுகள்மொய்க்க ஏந்தியவனாய்

வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
புதுமலர் தெருவுதொறு நுவலும்
நொதுமலாட்டிக்கு நோமென் னெஞ்சே.

---

(148) புலிபொரச் சிவந்த புலாலஞ் செங்கோட்டு
ஒலிபன் முத்தம் ஆர்ப்ப வலிசிறந்து
வன்சுவற் பராரை முருக்கிக் கன்றொடு
மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்
தேன்செய் பெருங்கிளை யிரிய வேங்கைப்
பொன்புரை கவளம் புறந்தரு பூட்டும்
மாமலை விடரகங் கவைஇக் காண்வரக்
கண்டிசின் வாழியோ குறுமகள்! நுந்தை
அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கட்
செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே.

---

தெருத்தோறும் விலைகூறிச் செல்லாநின்ற பூவிலை மடந்தையை நோக்குந் தோறும் மேலும் அவ்வருத்தம் மிகாநின்றது. ஆதலின் யான் எங்ஙனம் ஆற்றவல்லேன்' என்று தலைவி கூறினள் என்க.

(148) ௸, 202. திணை ௸. துறை—உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.

**கருத்து:—** களவுக்காலத்துத் தலைவியை இரவிலே உடனழைத்துக் கொண்டுசெல்லுந் தலைவன், அவளை நோக்கி, 'இளம்பெண்ணே! பூக்கள் நிரம்பிய கோங்கமரங்களால் அழகுபெற்றதும் நின் தந்தைக்குரியதுமான காட்டினை நீ காண்பாயாக' என அவளது தளர்ச்சி நீங்குமாறுகூறி மகிழ்வித்துக் கொண்டு செல்லலாயினன் என்க.

(149) அன்பினர் மன்னும் பெரியர் அகன்றலைப்
பின்பனி யமையம் வருமென முன்பனிக்
கொழுந்து முந்துறீஇக் குரவரும் பினவே
புணர்ந்தீர் புணர்மினோ வென்ன இணர்மிசைச்
செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்
இன்ப வேனிலும் வந்தன்று நம்வயிற்
பிரியல மென்று தெளித்தோர் தேஎத்து
இனியெவன் மொழிகோ யானே கயனறக்
கண்ணழிந் துலறிய பன்மா நெடுநெறி
வினைமூசு கவலை விலங்கிய
வெம்முனை யருஞ்சுர முன்னி யோர்க்கே.

---

(150) நீயே, பாடல் சான்ற பழிதபு சீறடி
அல்குற் பெருநலத் தமர்த்த கண்ணை
காடே, நிழல்கவி னிழந்த அழல்கவர் மரத்த
புலம்புவீற் றிருந்து நலஞ்சிதைந் தனவே

---

(149) நற்றிணை, 224. திணை அது. துறை— 'தோழியாற் பிரி வுணர்த்தப்பட்ட தலைமகள் பெயர்த்துஞ் சொற்கடாவப்பட்டு 'அறிவிலாதேம் என்னைசொல்லியும் பிரியாராகாரோ' என்று சொல்லியது.

கருத்து:- தலைவன் பிரிந்ததனைத் தோழி தலைவிக்குத் தெளியக்கூறி, மீட்டும் அதனையே தலைவிவினவக் கேட்டுவருந்தி, 'அன்புமிக்க பெரியராய் நின்னைநீங்கேன் என்று தெளிவித்துப் பின் பாலைநிலத்தேசென்று பிரிந்த நம் காதலர்திறத்து யான் இனி மொழிவது யாது? என்று நொந்துகூறினள் என்க.

(150) ஷை, 256. திணை அது. துறை—பொருள்வயிற் பிரிந்தானென்று ஆற்றளாய தலைமகளைத் தலைமகன் ஆற்றியது.

கருத்து:—தலைமகன் பொருள்வயிற்பிரியக் கருதியதறிந்து வருந்துகின்ற தலைவியை, 'நீ மெல்லிய அடிகளுடையை: காடுகள் கொடியன: இந்நிலை மையில் நின்னுடன் செல்லுஞ்செலவை இப்போது தவிர்ந்தேம். கார்காலத்தில்

இன்னிலை தவிர்ந்தனஞ் செலவே வைந்நுதிக்
களவுடன் கமழப் பிடவுத்தளை யவிழக்
கார்பெயல் செய்த காமர் காலை
மடப்பிணை தழீஇய மாவெருத் திரலை
காழ்கொள் வேலத் தாழ்சினை பயந்த
கண்கவர் வரிநிழல் வதியும்
தண்படு கானமுந் தவிர்ந்தனஞ் செலவே.

---

(151) நினைத்தலும் நினைதிரோ ஐய! அன்றுநாம்
பணைத்தாள் ஓமைப் படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழல் இருந்தனெ மாக
நடுக்கஞ் செய்யாது நண்ணுவழித் தோன்றி
ஒடித்துமிசைக் கொண்ட ஓங்குமருப் பியானை
பொறிபடு தடக்கை சுருக்கிப் பிறிதோர்
ஆறிடை யிட்ட வளைவைக்கு வேறுணர்ந்து
என்றூழ் விடரகஞ் சிலம்பப்
புன்றலை மடப்பிடி புலம்பிய குரலே.

---

நின்னைப்பிரியவே இயலாதாதலின் அப்பொழுதும் அச்செலவைத் தவிர்ந்தேம்' என்று அவள் ஆற்றும்வண்ணம் தலைமகன் கூறினான் என்க.

(151) ஷை, 318. திணை அது. துறை—பிரிவுணர்த்தப்பட்ட தலைமகனைத் தோழி சொல்லியது

**கருத்து:**—கற்புக்காலத்து இல்லறத்தொழுகிவந்த தலைமகன் பொருள்வயிற் பிரியவேண்டியிருத்தலைத் தோழிக்கு உணர்த்த, அவள், 'ஐயனே! அன்று யாம் ஓமைமரநிழலில் இருந்தபொழுது களிற்றியானை பிளிற்றியதை வேறுபடவுணர்ந்து அதன் பிடியானை புலம்பிய குரலை நினைத்தலும் செய்வீரோ? செய்வீராயின் கொடிய பாலைவழியில் சென்று இவளைப் பிரியத்தக்கவர் ஆவீரோ?' என்று தலைவனைநோக்கிக் கூறினள் என்க.

(152) உலகம் படைத்த காலைத் தலைவ!
மறந்தனர் கொல்லோ சிறந்திசி னோரே
முதிரா வேனில் எதிரிய அதிரல்
பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்
நறுமா ரோடமொ டெனொ றிந் தடைச்சிய
செப்பிடந் தன்ன நாற்றந் தொக்குடன்
அணிநிறங் கொண்ட மணிமரு ளைம்பாற்
றுழ்நறுங் கதுப்பிற் பையெனா மூழ்கும்
அரும்பெறற் பெரும்பயங் கொள்ளாது
பிரிந்துறை மரபின பொருள்படைத் தோரே

(153) பைம்புறப் புறவின் செங்காற் சேவல்
களரி யோங்கிய கவைமுடக் கள்ளி
முளரியங் குடம்பை ஈன்றிளைப் பட்ட
உயவுநடைப் பேடை யுணீஇய மன்னர்
முனைகவர் முதுபாழ் வரகுநெறி பெறாஉம்

(152) ஷை, 337. திணை அது. துறை—தோழி, தலைமகன் பொருள்வயிற் பிரியலுற்றானது குறிப்பறிந்து விலக்கியது; தோழி உலகியல்கூறிப் பிரிவுணர்த்தியதூஉமாம்.

**கருத்து:**—பொருள்வயிற் பிரியலுற்ற தலைவனது குறிப்பறிந்த தோழி, 'தலைவனே! உலகம்படைத்த காலமுதலாகப் பொருளீட்டி வாழ்தலை விரும்புவோர், தம்மை அடைக்கலம்புகுந்தாரைப் பாதுகாக்கவேண்டும் என்னும் அறநெறியை மறந்துபோவரோ? அங்ஙனம் மறப்பவர் சிறந்தோர் என்று சொல்லத்தக்கவரோ' என்று கூறினள் என்க.

(153) ஷை, 384. திணை அது. துறை—உடன்போகாநின்றான் மலிந்து தன்நெஞ்சிற்குச் சொல்லியது.

**கருத்து:**— தலைமகளை வைகிருளிலே உடன்கொண்டு சென்று நெடுஞ் சுரம் செல்லாநின்ற தலைமகன், தன் நெஞ்சினை நோக்கி "நெஞ்சமே! வேங்கை

ஆளில் சேய்நாட் டதரிடை மலர்ந்த
நன்னாள் வேங்கைப் பொன்மருள் புதுப்பூப்
பரந்தன நடக்கயாங் கண்டன மாதோ
காணினி வாழியென் னெஞ்சே! நாண்விட்டு
அருந்துய ருழந்த காலை
மருந்தெனப் படூஉ மடவோ ளையே.

---

(154) ஆழல் மடந்தை! யழுங்குவர் செலவே
புலிப்பொறி யன்ன புள்ளியம் பொதும்பிற்
பனிப்பவர் மேய்ந்த மாயிரு மருப்பின்
மலர்தலைக் காரான் அகற்றிய தண்ணடை
ஒண்டொடி மகளிர் இழையணிக் கூட்டும்
பொன்படு கொண்கான நன்ன னன்னாட்டு
ஏழிற் குன்றம் பெறினும் பொருள்வயின்
யாரோ பிரிகிற் பவரே குவளை
நீர்வார் நிகர்மலர் அன்னநின்
பேரமர் மழைக்கண் தெண்பனி கொளவே.

---

மலர் உதிர்ந்து பரந்துகிடப்பவற்றின்மேல், என் மனத்துயர் நீக்கிய மருந்து போன்ற இம்மடவாள் நடந்துசெல்வதைக் கண்டேம்: நீயும் கண்டு மகிழ்வாயாக' என்று தலைவன் மகிழ்ந்துகூறினன் என்க.

(154) ஷை, 391. திணை அது. துறை—பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது; வரைவுணர்த்தியதூஉமாம்.

**கருத்து:—** தலைமகன் பொருள்வயிற்பிரியக் கருதியதை அறிந்து மிக வருந்திய தலைமகளைத் தோழியணுகி, 'மடந்தாய்! கண்ணீர்மல்க நீ அழாதே. நின் காதலர், நன்னனது கொண்கானநாட்டுப் பொன்மிக்க ஏழில்மலையைப் பெறக்கூடுமேனும் நின்னைப் பிரியாரல்லர். நீ அழுவதனை அவர் கண்டால் இன்றே செலவழுங்குவர் எனத் தலைவியை வலியுறுத்திக்கூறினள் என்க.

(155) உள்ளார் கொல்லோ தோழி! கானவர்
பொன்புனை பகழி செப்பங் கொண்மார்
உகிர்நுதி புரட்டும் ஓசை போலச்
செங்காற் பல்லி தன்றுணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடிறந் தோரே.

---

(156) நசைபெரி துடையர் நல்கலு நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின தோழி! அவர் சென்ற வாறே.

---

(157) உமணர், சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை
ஊர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்காடு

---

(155) குறுந்தொகை, 16. துறை—பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகன் ஆற்றாமைகண்டு தோழி கூறியது.

கருத்து:- பொருளீட்டல் கருதித் தலைவன் பிரிந்தகாலத்து, 'அவர் நம்மை நினைப்பரோ நினையாரோ' என்று கவலையுற்ற தலைவியைநோக்கி 'அவர்சென்ற கள்ளியங்காடான பாலைநிலத்தில் ஆண்பல்லி தன்பெண்பல்லியை அழைத்தல்கேட்டு நின்னை நினைந்து மீண்டுவருவர்' என்று தோழி ஆற்றுவிப்பாளாயினள் என்க.

(156) ஷை, 37. துறை—தலைவி 'கடிதுவருவர்' என்று ஆற்றுவித்தது.

கருத்து:—தலைவனது பிரிவை ஆற்றாத தலைவியைநோக்கி 'தலைவர் நம்பால் மிக்க அன்புடையவர்; அவர் சென்ற பாலைநிலம் பெண்யானையின் பசியை நீக்கும்பொருட்டு ஆண்யானை யாமரத்தின் பட்டையை உரித்து உண்ணச்செய்து தன் அன்பைப் புலப்படுத்தும் இடமாகும் என்றுகூறித் தோழி ஆற்றுவிப்பாளாயினள் என்க.

(157) ஷை, 124. துறை—புணர்ந்துடன்போக்கினைத் தலைமகள் ஒழியப் போகலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

கருத்து:— தலைவியைப் பிரிந்து தனியே செல்லவிரும்பிய தலைவன்,

இன்று வென்றி ராயின்
இனியவோ பெரும! தமியோர்க்கு மனையே.

---

(158) வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென
நமக்குரைத் தோருந் தாமே
அழாஅல் தோழி! அழுங்குவர் செலவே.

---

(159) மெல்லியல் அரிவை! நின் நல்லகம் புலம்ப
நிற்றுறந் தமைகுவெ னாயின் எற்றுறந்து
இரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே.

---

பாலைநிலம் இவள் வருதற்குரியதன்று, துன்பம் விளைப்பது' என்றுகூற, தலைவரைப் பிரிந்தார்க்கு வீடுமட்டும் இனிமையுடையதோ' என்றுகூறித் லைவியையும் உடன்கொண்டுசெல்லும்படி தோழி அறிவிக்கலாயினள் என்க.

(158) ஷை, 135. துறை—தலைமகன் பிரியுமென வேறுபட்ட தலைமகட் த் தோழி சொல்லியது.

கருத்து:— தலைவன் பிரிய எண்ணியிருப்பதை அறிந்து வேறுபட்ட லைவியை நோக்கி, தோழி! 'மகளிர்க்கு ஆடவர் உயிர்' என்று கூறிய ராகிய தலைவர் இப்பொழுது நின்னைப் பிரிந்துசெல்லார். அழாதே; அவர் செலவைத் தவிர்வர்—என்று தோழி கூறினள் என்க.

(159) ஷை, 137. துறை— இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிவச்சம் உரைத்தது.

கருத்து:— தலைவியை ஊழ்வசத்தாற் கண்டுகூடிய தலைவன் 'நின்னை யான் பிரியேன்; பிரிவேனாயின், இரப்போர்க்கு ஈதல் செய்யாதொழிந்த நாள்கள் பலவற்றின் தீப்பயனை அடைவேனாக' எனக்கூறி, பிரிவென்பது ன்று உண்டுபோலும் என்று தலைவிகருதியஞ்சுமாறு தலைவன் கூறினன் என்க.

(160) சுரந்தலைப் பட்ட நெல்லியம் பசுங்காய்
மறப்புலிக் குருளை கோளிடங் கறங்கும்
இறப்பருங் குன்றம் இறந்த யாமே
குறுநடை! பலவுள் ளலமே நெறிமுதற்
கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சித்
தளையவிழ் பல்போது கமழும்
மையிருங் கூந்தல் மடந்தை நட்பே.

---

(161) ஓரூர் வாழினும் சேரி வாரார்
சேரி வரினும் ஆர முயங்கார்
ஏதி லாளர் சுடலை போலக்
காணக் கழிப மன்னே நாணட்டு
நல்லறி விழந்த காமம்
வில்லுமிழ் கணையிற் சென்றுசேட் படவே.

---

(160) ஷை, 209. துறை—பொருள்முற்றி மறுத்தரும்* தலைமகன் தோழிக்கு உரைப்பானாய்க் கிழத்தியைத் தெருட்டியது.

**கருத்து:**— பொருள்வயிற் பிரிந்த தலைவன், பொருளீட்டி மீண்டுவந்து தோழியை நோக்கி, 'நான் பிரிந்தவிடத்து வேறொன்றையும் நினையாமல், தலைவியுடன்கூடியுறையும் நட்பையே நினைந்திருந்தேன்' என்று கூறும் வாயிலாகத் தன் அன்பைத் தலைவியறியப் புலப்படுத்தினன் என்க.

**குறிப்பு:**— * பொருள்முற்றி மறுத்தரும் — பொருளீட்டும் முயற்சி நிறைவேறித் திரும்பிவந்த.

(161) ஷை; 231. துறை—வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**கருத்து:**—தலைவியிடம் தூதாகவந்த தோழியை நோக்கி, 'அவர் ஒரூரில் வாழினும் எம் தெருப்பக்கம் வாரார்; வந்தாலும் மனமாரத் தழுவார். நம் காமம் அழியும்படி, நம்மைக்கண்டும் அயலாரது சுடுகாட்டைப்போல விலகிச் செல்லாநின்றார். இவ்வாறு அவர்க்கு எம்பால் அன்பிலதாயிற்று' என்றுகூறித் தூதுமறுத்தாள் என்க.

(162) ஊஉ ரலரெழுச் சேரி கல்லென
ஆனா தலைக்கும் அறனில் அன்னை
தானே யிருக்க தன்மனை யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
உணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு
விண்டொட நிவந்த விலங்குமலைக் கவாஅற்
கரும்புநடு பாத்தி யன்ன
பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே.

---

(163) உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை யிரவினும் இளிவெனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர் வாழி தோழி என்றுங்
கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்

---

(162) ஷை, 262. துறை—உடன்போக்கு நேர்ந்த தோழி கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது.

**கருத்து:—** 'ஊரில் அலர் பெருகவும், தெருவில் கல்லென்று ஆரவாரமுண்டாகவும், நம்மை வருத்தும் அன்னை வீட்டில் நின்னைப்பிரிந்து தனியே தங்குவாளாக; தூரத்துள்ள நாட்டின்கண் மலையடிவாரத்தில் பெரியகளிற்றின் அடிச்சுவட்டில் தேங்கியநீரை அத்தலைவருடன் நீ இனிதாக உண்ணுதலை நான் நினைந்தேன்' என்று, தலைவியின் உடன்போக்குக்குத் தோழி உடம்பட்டுக் கூறினள் என்க.

(163) ஷை, 283. துறை—தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழி ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு 'அவர்பிரிய ஆற்றேனாயினே னல்லேன்; அவர் போயின கானகத்தின் தன்மை நினைந்து வேறுபட்டேன்' என்று கிழத்தி சொல்லியது.

**கருத்து:—** தலைவன் பொருளீட்டல்கருதிப் பிரிந்துசென்ற காலத்தில், ஆற்றாய்போலும் எனக் கவலையுற்ற தோழியை நோக்கி, 'அவர் பிரிவுக்கு

ஆற்றிருந் தல்கி அழுங்குநர்ச் செகுத்த
படுமுடை பருந்துபார்த் திருக்கும்
நெடுமூ திடைய நீரி லாறே.

---

(164) தேற்ரு மன்றே தோழி! தண்ணெனத்
தூற்றுந் துவலைத் துயர்கூர் காலைக்
கயலே ருண்கண் கனங்குழை மகளிர்
கையுறை யாக நெய்பெய்து மாட்டிய
சுடர்துய ரெடுப்பும் புன்கண் மாலை
அரும்பெறற் காதலர் வந்தென விருந்தயர்பு
மெய்ம்மலி யுவகையின் எழுதரு
கண்கலி ழுகுபனி யரக்கு வோரே.

---

(165) அளிநிலை பொருஅ தமரிய முகத்தள்
விளிநிலை கொள்ளாள் தமியள் மென்மெல

---

ஆற்ருது வருந்தினேன் அல்லேன். அவர் சென்ற பாலைநிலத்து வாழும் மறவரது கொடுஞ்செயல்களை எண்ணியே அஞ்சினேன்' என்று தலைவி கூறினள் என்க.

(164) ஷை, 398. துறை—பிரிவுணர்த்திய தோழி 'பிறர், தலைமகன் பிரிந்து வினைமுற்றி வருந்துணையும் ஆற்றியுளராவர்' என்று உலகின்மேல் வைத்து உரைத்தாட்குத் தலைமகள் ஆற்ருமை மீதூரச் சொல்லியது.

கருத்து:— தலைவனது பிரிவைத் தலைவிக்கு உணர்த்திய தோழி, 'உயர்ந்த மகளிர், பிரிந்த தம்தலைவர் வினைமுடித்துவருமளவும் ஆற்றியிருப்பர்' என்று உலகின்மேல் வைத்துக் கூறி 'நீ ஆற்றல் வேண்டும்' என்று அறிவுறுத்தினளாக, 'எம்மை அறிவுறுத்துவாரையல்லாமல் எம் துயரைப் போக்குவாரைக் கண்டிலேம்' என்று தலைவி கூறினள் என்க.

(165) அகநானூறு, 5. திணை—பாலை. துறை—பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

கருத்து:— பொருளீட்டல் கருதிப் பிரிய எண்ணிய தலைவன் தன்னெஞ்

நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற
வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள்
கண்ணிய துணரா வளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த ஓமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரல்நுதி சிதைக்கும் நிரைநிலை யதர
பரல்முரம் பாகிய பயமில் கானம்
இறப்ப எண்ணுதி ராயின் அறத்தாறு
அன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
அன்ன வாக என்னுநள் போல
முன்னங் காட்டி முகத்தின் உரையா
ஓவச் செய்தியின் ஒன்றுநினைந் தொற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு
ஆகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையல்
மோயினள் உயிர்த்த காலை மாமலர்
மணியுரு விழந்த அணியழி தோற்றம்

---

சினைநோக்கி— பிரிதலை நாம் செய்த உபசாரங்களால் அறிந்த தலைவி, நம் அருகேவந்து நம் பிரிவுக்குடம்படாத குறிப்பைப் புலப்படுத்தியதோடு, தன் மார்பில் அணைத்த புதல்வன் அணிந்திருந்த செங்கழுநீர் மாலையை மோந்தவண்ணம் பெருமூச்செறிந்தாள். அப்போது அச் சிவந்தமலர் பவளம் போலும் தன்னிறம் மாறிப் பொலிவிழந்த காட்சியைக்கண்டு, நாம் செலவைத் தவிர்ந்தோமன்றோ? நம் அணிமையிலும் இவ்வாறு வருந்தும் இயல்பினளான

கண்டே கடிந்தனம் செலவே ஒண்டொடி
உழைய மாகவும் இனைவோள்
பிழையலள் மாதோ பிரிதும்நா மெனினே.

---

(166) வாள்வரி வயமான் கோளுகி ரன்ன
செம்முகை யவிழ்ந்த முள்முதிர் முருக்கின்
சிதரற் செம்மல் தாஅய் மதரெழில்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
முகைபிணி யவிழ்ந்த கோங்கமொடு அசைஇநனை
அதிரல் பரந்த அந்தண் பாதிரி
உதிர்வீ யஞ்சினை தாஅய் எதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்
அணங்குடை நகரின் மணந்த பூவின்
நன்றே கானம் நயவரும் அம்ம
கண்டிசின் வாழியோ குறுமகள்! நுந்தை
அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பிற்
பிடிமிடை களிற்றிற் றோன்றும்
குறுநெடுந் துணைய குன்றமு முடைத்தே.

இவள், பிரிவோமாயின் உயிர் பிழைத்திருப்பளோ? ஆதலின் நாம் செல்லுமாறு எங்ஙனம்? என்றுகூறித் தலைவன் செலவுதவிர்ந்தான் என்க.

(166) ஷை, 99. திணை அது. துறை—உடன்போகிய தலைமகளைத் தலைமகன் மருட்டிச் சொல்லியது.

**கருத்து:—** தமர் அறியாதே தலைவியை உடனழைத்துக்கொண்டு செல்லுந் தலைமகன் தன் காதலியைநோக்கி, 'இளம்பெண்ணே! முருங்கு கோங்கு பாதிரி மராமலர்கள் எங்கும் பரந்து, மக்கள்வழிபடும் தெய்வத்தையுடைய கோயிலின்கண் கலந்துகிடக்கும் பூக்களைப்போல இக்காடு பொலிந்து விரும்பத் தக்கதாகாநின்றது, காண்பாயாக' என்று இன்மொழிகளால் மயக்கி அவள் மகிழச் சொல்வானாயினன் என்க.

(167) உள்ளாங் குவத்தல் செல்லார் கறுத்தோர்
எள்ளல் நெஞ்சத் தேஎச்சொல் நாணி
வருவர் வாழி தோழி! அரசர்
யானை கொண்ட துகிற்கொடி போல
அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி
ஓடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர
மழையென மருண்ட மம்மர் பலவுடன்
ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை
தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும்
அத்தக் கேழல் அட்ட நற்கோள்
செந்நா யேற்றை கம்மென ஈர்ப்பக்
குருதி யாரும் எருவைச் செஞ்செவி
மண்டமர் அழுவத் தெல்விக் கொண்ட
புண்டோர் விளக்கிற் றோன்றும்
விண்டோய் பிறங்கன் மலையிறந் தோரே.

---

(168) அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்

---

(167) ஷை, 111. திணை அது. துறை—தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகளை ஆற்றுவித்தது.

கருத்து:— தலைவன் பொருள்வயிற்பிரிய அதற்கு ஆற்றுளான தலைவியை நோக்கித் தோழி 'தமக்குள்ளஆளவிற்கு மகிழ்தலில்லாதவராய், ஏதிலார் இகழுஞ்சொல்லுக்கு நாணிப் பொருளீட்டல்கருதிக் கொடியகானத்துச் சென்றோராகிய தலைவர் விரையவருவர்' எனத் தலைவியை ஆற்றுவித்தனள் என்க.

(168) ஷை, 155. திணை அது. துறை—தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது.

கருத்து:— 'தோழி! பாவநெறிப்படாத வாழ்க்கையும், பிறன்மனைவாயிலிற் செல்லாத மேம்பாடும் பொருளாலாகும் என்றுகூறி, நீரற்றமையால் விலங்குகள்

பொருளி னாகும் புனையிழை யென்றுநம்
இருளே ரைம்பால் நீவி யோரே
கோய்நாம் உழக்குவ மாயினும் தாந்தம்
செய்வினை முடிக்க தோழி! பல்வயிற்
பயமிரை சேர்ந்த பாணாட் டாங்கண்
நெடுவிளிக் கோவலர் கூவற் றோண்டிய
கொடுவாய்ப் பத்தல் வார்ந்துகு சிறுகுழி
நீர்காய் வருத்தமொடு சேர்விடம் பெறாது
பெருங்களிறு மிதித்த அடியகத் திரும்புலி
ஒதுக்குவன கழிந்த செதும்ப லீர்வழி
செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை
மண்ணார் முழவின் கண்ணகத் தசைத்த
விரலூன்று வடுவிற் றோன்றும்
மரல்வாடு மருங்கின் மலையிறந் தோரே.

---

**(169)** எல்வளை ஞெகிழச் சாஅய் ஆயிழை
நல்லெழிற் பணைத்தோள் இருங்கவின் அழிய

---

வருந்தும் நெறியையும் மரங்கள்வாடும் இடங்களையுமுடைய மலையைக்கடந்து சென்றார், நம் காதலர். அவரது பிரிவால் நாம் நோயுழப்போமாயினும், அவர் தம் பொருளீட்டுவினையினை இனிதுமுடித்து வருவாராக' என்று தலைவி கூறினள் என்க.

**குறிப்பு:—** பாணாடு—பாணன் என்ற தலைவனது நாடு. 'பாணன் நன்னாட்டும்பர்' (113), 'வடாஅது, நல்வேற் பாணன் நன்னாட்டுள்ளதை' (325) என அகநானூற்றுள்வருதல் காண்க.

(169) ஷை, 185. திணை அது. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

**கருத்து:** – வேனிலால் வறண்ட காட்டிடத்தே பெருமலையினைக்கடந்து சென்ற நம்காதலர், நம்தோள்கள் வளைநெகிழும்படி மெலிந்து அழகுகெடுமாறு

பெருங்கை யற்ற நெஞ்சமொடு நத்துறந்து
இரும்பி னின்னுயி ருடையோர் போல
வலித்து வல்லினர் காதலர் வாடல்
ஒலிகழை நிவந்த நெல்லுடை நெடுவெதிர்
கலிகொள் மள்ளர்வில் விசையி னுடையப்
பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்
வேனி லத்தத் தாங்கண் வானுலந்து
அருவி யான்ற உயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

(170) பிரிதல் வல்லியர் இதுநத் துறந்தோர்
மறந்தும் அமைகுவர் கொல்லென் றெண்ணி
ஆழல் வாழி தோழி! கேழல்
வளைமருப் புறழு முளைநெடும் பெருங்காய்
நனைமுதிர் முருக்கின் சினைசேர் பெருங்கல்
காய்சினக் கடுவளி யெடுத்தலின் வெங்காட்டு
அழல்பொழி யானையின் ஐயெனத் தோன்றும்
நிழலி லோமை நீரில் நீளிடை

---

செயலற்ற நெஞ்சமொடு நாம் தங்கும்படி கைவிட்டமையால், இரும்புயிரை உடையவரைப் போல வன்மையுடையராயிருக்க வல்லார்போலும்—என்று தோழிக்குத் தலைவி ஆற்றாது கூறினள் என்க.

(170) ஷை, 223. திணை அது: துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

கருத்து:— தோழீ! பிரிந்துசென்ற தலைவர் நம்மை முழுதும் மறந்து தங்கிவிடுவரோ என்றெண்ணிக் கவலையில் ஆழவேண்டா. நம் காதலர்

இறந்தன ராயினும் காதலர் நம்வயின்
மறந்துகண் படுதல் யாவது புறந்தாழ்பு
அம்பணை நெடுந்தோட் டங்கித் தும்பி
அரியினங் கடுக்கும் சுரிவணர் ஐம்பால்
நுண்கேழ் அடங்க வாரிப் பையுள்கெட
நன்முகை யதிரற் போதொடு குவளைத்
தண்ணறுங் கமழ்தொடை வேய்ந்தநின்
மண்ணார் கூந்தல் மரீஇய துயிலே.

---

(171) கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ
வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச்
சில்லைங் கூந்தல் அழுத்தி மெல்லிணர்த்
தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்
இலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்
சின்மெல் லொதுக்கமொடு மென்மெல இயலிநின்
அணிமாண் சிறுபுறங் காண்கஞ் சிறுநனி
ஏகென ஏகல் நாணி ஒய்யென
மாகொள் நோக்கமொடு மடங்கொளச் சாஅய்

---

பிரிந்தனராயினும், நின் அழகிய கூந்தலில்மருவும் இன்றுயிலினை மறந்து ஒருகாலும் ஆங்குக் கண்துயிலார். ஆதலால் விரைந்துவந்து சேர்வர் என்று தோழி தலைவியை ஆற்றுவித்தாள் என்க

(171) ஷை, 261. இணை அது. துறை—புணர்ந்துடன்போயின காலை இடைச்சுரத்துப் பட்டதனை மீண்டுவந்தகாலத்துத் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

**கருத்து:—** தலைவியுடன்கூடிப் பாலைவழிச் சென்றபோது இடைவழியில் நிகழ்ந்ததை, மீண்டுவந்த தலைவன் தோழிக்குக் கூறுமிடத்து— 'புலியின் முழக்கமும் கானவரது துடியோசையும் கேட்டுத் தன் காதலி அஞ்சுவள் என்றுகருதி, யான் அவளை 'உன் பின்னழகைக் கண்டுகளிக்கும்படி சிறிதுதூரம்

நின்றுதலை இறைஞ்சி யோளே அதுகண்டு
யாமுந் துறுதல் செல்லேம் ஆயிடை
அருஞ்சுரத் தல்கி யேமே இரும்புலி
களிறட்டுக் குழூஉ மோசையுங் களிபட்டு
வில்லோர் குறும்பிற் றதும்பும்
வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட்டே.

---

(172) நெஞ்சு நெகிழ்தகுந கூறி யன்புகலந்து
அறாஅ வஞ்சினஞ் செய்தோர் வினைபுரிந்து
திறம்வே றாக லெற்றென் றோற்றி
இனைத லான்றிசின் நீயே சினைபாய்ந்து
உதிர்த்த கோடை யுட்குவரு கடத்திடை
வெருக்கடி யன்ன குவிமுகிழ் இருப்பை
மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ
மயிர்க்கால் எண்கின் ஈரினங் கவர
மைபட் டன்ன மாமுக முசுக்கலை
பைதறு நெடுங்கழை பாய்தலின் ஒய்யென
வெதிர்படு வெண்ணெல் வெவ்வறைத் தாஅய்
உகிர்நெரி யோசையிற் பொங்குவன பொரியும்

---

நீ முன்புறமாக நடப்பாயாக' என்று கூறினேன். அதற்கு அவள் என்முன் செல்லுதலை நாணியவளாய் விலகிநின்று தலைவணங்கினள். அதனால் யான் அவள்முன்னே செல்லவியலாமையின், அவ்வரியநெறியில் யாங்கள் தங்கும்படி நேர்ந்தது' என்று தலைவன் கூறினன் என்க.

(172) ஷை, 267. திணை அது. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகளது ஆற்றாமைகண்டு ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**கருத்து:—** தோழி! பேரன்புகாட்டித் தாம் பிரியாமைக்குரிய சூளுறவு செய்தோரான நந்தலைவர், பொருளீட்டல்கருதிச் சொன்னசொல் வேறுபட்டதுபற்றி நீ வருந்துதலை ஒழிவாயாக, கொடிய நெறியைக் கடந்து சென்றவர்

ஓங்கல் வெற்பிற் சுரம்பல இறந்தோர்
தாம்பழி யுடைய ரல்லர் நாளும்
நயந்தோர்ப் பிணித்தல் தேற்ரு வயங்குவினை
வாளே ரெல்வளை நெகிழ்த்த
தோளே தோழி தவறுடை யவ்வே.

(173) வானம் பெயல்வளங் கரப்பக் கானம்
உலறி இலையில வாகப் பலவுடன்
ஏறுடை யாயத் தினம்பசி தெறுப்பக்
கயனற வறந்த கோடையொடு நயனறப்
பெருவரை நிவந்த மருங்கிற் கொடுவரிப்
புலியொடு பொருது சினஞ்சிறந்து வலியோடு
உரவுக்களி றொதுங்கிய மருங்கிற் பரூஉப்பரல்
சிறுபன் மின்மினி கடுப்பஎவ் வாயும்
நிறைவன இமைக்கும் நிரம்பா நீளிடை
எருவை யிருஞ்சிறை யிரீஇய விரியிணர்த்
தாதுண் தும்பி முரலிசை கடுப்பப்
பரியின துயிர்க்கும் அம்பினர் வெருவர
உவலை சூடிய தலையர் கவலை
ஆர்த்துட னரும்பொருள் வவ்வலின் யாவதும்
சாத்திடை வழங்காச் சேட்சிமை யதர

பழியுடையவரல்லர்; நம்மாட்டு அன்புடைய அவரைப் பிணித்துக்கொள்ள அறியாத நம் தோள்களே தவறுடையன. ஆதலின் நாம் ஆற்றியிருத்தலே கடன் என்று தலைவி கூறினள் என்க.

(173) ஷை, 291. திணை அது. துறை—பொருள்வயிற் போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

கருத்து:—பொருளீட்டல்கருதிப் பிரிந்துசெல்லுந் தலைவன் தன் நெஞ்சினை நோக்கி, ‘நெஞ்சமே! என் காதலியின் மாட்சிமை பெற்ற அழகினை,

சிறியிலை நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்
உதிர்வன தாஅம் அத்தந் தவிர்வின்று
புள்ளி யம்பிணை யுணீஇய வுள்ளி
அறுமருப் பொழிந்த தலைய தோல்பொதி
மறுமருப் பிளங்கோ டதிரக் கூஉஞ்
சுடர்தெற வருந்திய அருஞ்சுரம் இறந்தாங்கு
உள்ளினை வாழிய நெஞ்சே! போதெனப்
புலங்கமழ் நாற்றத் திரும்பல் கூந்தல்
நல்லெழில் மழைக்கணங் காதலி
மெல்லிறைப் பணைத்தோள் விளங்குமாண் கவினே.

---

(174) இனிப்பிறி துண்டோ அஞ்ச லோம்பெனா
அணிக்கவின் வளர முயங்கி நெஞ்சம்
பிணித்தோர் சென்ற வாறுநினைந் தல்கலும்
குளித்துப்பொரு கயலிற் கண்பனி மல்க
ஐய வாக வெய்ய வுயிரா
இரவும் எல்லையும் படரட வருந்தி
அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்பத்
தம்மல தில்லா நம்மிவ ணொழியப்
பொருள்புரிந் தகன்றன ராயினும் அருள்புரிந்து
வருவர் வாழி தோழி! பெரிய

---

ஆறலைப்போர் கொடுஞ்செயற்கு அஞ்சி யாவரும் வழங்காத சுரத்தின் அருநெறியைக் கடந்துவந்து நினைப்பாயாயினை. இவ்வாறு நினைத்தலால் என்பயன்? என்று கூறி வருந்தினன் என்க.

(174) ஷை, 313. திணை அது. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

**கருத்து:—** தோழீ! வாழ்வாயாக. உன் நெஞ்சங்கவர்ந்த தலைவர் பொருளீட்டல் கருதிப் பிரிந்தகன்றனராயினும், அவர் அருள்புரிந்து நம்பால் வந்து

நிதியஞ் சொரிந்த நீவி போலப்
பாம்பூன் தேம்பும் வறங்கூர் கடத்திடை
நீங்கா வம்பலர் கணையிடத் தொலைந்தோர்
வசிபடு புண்ணின் குருதி மாந்தி
ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல
இல்வழிப் படூஉங் காக்கைக்
கல்லுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

(175) சாரல் யாஅத் துயர்சினை குழைத்த
மாரி யீர்ந்தளி ரன்ன மேனிப்
பேரமர் மழைக்கண் புலம்புகொண் டொழிய
ஈங்குப்பிரிந் துறைதல் இனிதன் றுகலின்
அவண தாக பொருளென் றுமணர்
கணநிரை யன்ன பல்காற் குறும்பொறைத்
தூதொய் பார்ப்பான் மடிவெள் ளோலைப்
படையுடைக் கையர் வருதொடர் நோக்கி
உண்ணு மருங்கு வின்றேன் கையது
பொன்னு குதலும் உண்டெனக் கொன்னே
தடிந்துடன் வீழ்த்த கடுங்கண் மழவர்
திறனில் சிதாஅர் வறுமை நோக்கிச்

சேர்வர். இனி வருந்தி அஞ்சுதலை ஒழிவாயாக—என்று தோழி தலைவியைத் தேற்றுவாளாயினள் என்க.

(175) அகம், 237. திணை அது. துறை—முன்னொருகாலத்துப் பொருள் வயிற்பிரிந்துவந்த தலைமகன், பின்னும் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

கருத்துரை—நெஞ்சமே! முன்பொருகால் பொருளீட்டல்கருதிப் பிரிந்த நீ, அருஞ்சுரத்திடையே என் காதலியைப் பிரிதல் தகுதியன்று என்று நினைந்து என்னைத் தனியேவிட்டு அவளிடமாக மீண்டுவந்தாயன்றோ? அத்தகைய

செங்கோல் அம்பினர் கைங்நொடியாப் பெயரக்
கொடிவிடு குருதித் தூங்குடர் கறீஇ
வரிமர வியவின் ஒருநரி யேற்றை
வெண்பரல் இமைக்கும் கண்பறி கவலைக்
கள்ளி நீழற் கதறுபு வதிய
மழைகண் மாறிய வெங்காட் டாரிடை
எமியங் கழிதந் தோயே பனியிருட்
பெருங்கலி வானந் தலைஇய
இருங்குளிர் வாடையொடு வருந்துவ ளெனவே.

---

(176) நங்கயந் துறைவி தொன்னல மழியத்
தெருளா மையின் தீதொடு கெழீஇ
அருளற நிமிர்ந்த முன்பொடு பொருள்புரிந்து
ஆள்வினைக் கெதிரிய மீளி நெஞ்சே!
நினையினை யாயின் எனவ கேண்மதி

---

உன்னை நம்பி மீட்டும் பொருளீட்டல்கருதிப் பிரிந்துபோமாறு எங்ஙனம்? என்று தலைவன் தன் நெஞ்சைநோக்கிக் கூறினன் என்க.

**குறிப்பு:—** (7–11) பலகாலும் ஆறுசெல்லும் பார்ப்பான் வெண்மையான ஓலைச்சுருளுடன் வரும் இயல்பினை நோக்கி, உண்ணாமையால் வாடிய விலா வினையுடைய இவன் கையில் உள்ளது பொன்னாதலும் கூடும் எனக்கருதி, வீணே அவனைத் தடிந்துவீழ்த்திய பாலைநிலத்து மறவர், பின்னர் அவனது வறுமைநிலையைப்பார்த்துத் தம்கையை நொடித்துப் புறம்போக என்க.

(176) அகநானூறு, 379. திணை அது. துறை—முன்னொருகாலத்துப் பொருள்வயிற் பிரிந்துவந்த தலைமகன் பின்னும் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

**கருத்து:—** மேலும் பொருளீட்டற்கு முற்பட்ட தன் நெஞ்சினைநோக்கி, நெஞ்சமே! உலகமுழுதும் ஆளும் செல்வம் பெறினும், அதன்கழிவு கனாவின்

விரிதிரை முந்நீர் மண்டிணி கிடக்கைப்
பரிதியஞ் செல்வம் பொதுமை யின்றி
நனவின் இயன்ற தாயினும் கங்குற்
கனவின் அற்றதன் கழிவே அதனால்
விரவுறு பன்மலர் வண்டுசூழ் படைச்சிச்
சுவல்மிசை யசைஇய நிலைதயங் குறுமுடி
ஈண்டுபன் னாற்றம் வேண்டுவயின் உவப்பச்
செய்வுறு விளங்கிழைப் பொலிந்த தோள்சேர்பு
எய்திய கனைதுயி லேற்றொறுந் திருகி
மெய்புகு வன்ன கைகவர் முயக்கின்
மிகுதிகண் டன்றோ விலனே நீநின்
பல்பொருள் வேட்கையிற் சொல்வரை நீவிச்
செலவுவலி யுறுத்தனை யாயிற் காலொடு
கனையெரி நிகழ்ந்த இலையி லங்காட்டு
உழைப்புறத் தன்ன புள்ளி நீழல்
அசைஇய பொழுதிற் பசைஇ வந்திவண்
மறப்பரும் பல்குணம் நிறத்துவந் துறுதர
ஒருதிறம் நினைத்தல் செல்லாய் திரிபுநின்று
உறுபுலி யுழந்த அடுமருப் பொருத்தற்குப்
பிடியிடு பூசலின் அடிபடக் குழிந்த
நிரம்பா நீளிடைத் தூங்கி
இரங்குவை யல்லையோ உரங்கெட மெலிந்தே.

---

தன்மையது. அதனால் என்காதலியொடு கூடியுறையும் இன்பத்தினும் மேம்பட்ட பொருளொன்றை யான் கண்டிலேன். நீ மேலும் பிரிந்து செல்வதை வற்புறுத்துவையாயின், அருஞ்சுரத்திடையே நீ தங்கும்போது இவளதருங் குணங்கள் பலவும் உன்னைவருத்த, அப்போது ஒருதிறம்படாது பெரிதும் நீ தயங்குவாயன்றோ?—என்று தலைவன் கூறலாயினன் என்க.

(177) தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக
அடங்காதார் மிடல்சாய அமரர்வந் திரத்தலின்
மடங்கல்போற் சினைஇ மாயஞ்செய் அவுணரைக்
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலும்
உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலிற்
சீறுருங் கணிச்சியோன் சினவலின் அவ்வெயில்
ஏறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந் தியங்குநர்
ஆறுகெட விலங்கிய அழலவி ராரிடை
மறப்பருங் காத லிவளீண் டொழிய
இறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய;

தொலைவாகி இரந்தோர்க்கொன் றீயாமை யிழிவென
மலையிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
நிலைஇய கற்பினாள் நீநீப்பின் வாழாதாள்
முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;

இல்லென இரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கல்லிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
தொல்லியல் வழாஅமைத் துணையெனப் புணர்ந்தவள்
புல்லாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;

(177) கலித்தொகை, பாலைக்கலி, பாட்டு—1. இப்பாலைக்கலி முழுதும் பாடியவர், சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆவர். துறை— "'ஒன்றாத் தமரினும்' என்னுஞ்சூத்திரத்து 'நாளது சின்மையும் இளமைய தருமையும், தாளாண் பக்கமும் தகுதிய தமைதியும், இன்மைய திழிவும் உடைமைய துயர்ச்சியும், அன்பின தகலமும் அகற்சிய தருமையும், ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்' என்பதனான் இன்மையது இழிவுகூறி இல்வாழ்க்கைநெறி ஆற்றுதற்குப் பொருள்வயிற் பிரிவேனென்ற தலைமகற்குத் தலைமகளது இயல்புகூறி இப்பெற்றியாளைப் பிரியாமையே பொருளாவதெனச் சொல்லிச் செலவழுங்குவித்தமை தோழி தலைமகட்கு வந்துசொல்லியது."

இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிழிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ
வடமீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பினாள்
தடமென்றோள் பிரியாமை பொருளாயி னல்லதை;
எனவிவள்,
புன்கண்கொண் டினையவும் பொருள்வயின் அகறல்
அன்பன் றென்றியான் கூற வன்புற்றுக்
காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கி யாங்குத் தாழ்புநின்
தொல்கவின் தொலைதலஞ்சியென்
சொல்வரைத் தங்கினர் காத லோரே.

---

(178) அறனின்றி அயல்தூற்றும் அம்பலை நாணியும்
வறனீந்தி நீசெல்லும் நீளிடை நினைப்பவும்
இறைநில்லா வளையோட இதழ்சோர்பு பனிமல்கப்
பொறைநில்லா நோயோடு புல்லென்ற நுதலிவள்
விறனலி யிழப்பவும் வினைவேட்டாய்! கேளினி;
உடையிவ ளுயிர்வாழாள் நீநீப்பி னெனப்பல
இடைகொண்டியா மிரப்பவும் எமகொள்ளா யாயினை
கடைஇய ஆற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை
அடையொடு வாடிய அணிமலர் தகைப்பன;
வல்லைநீ துறப்பாயேல் வகைவாடு மிவளென
ஒல்லாங்கியா மிரப்பவும் உணர்ந்தியா யாயினை

---

(178) ஷை, பாட்டு 2. துறை—"தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்டதோழி தலைமகட்கு அஃதுரைத்து, அவளது ஆற்றாமையின்வகை தலைமகற்குணர்த்தவும், பின்னும் பிரிவின்மேற்சென்ற உள்ளத்தனாயினானை, நீர் செல்லுங்கானமே நும்மை இடிக்குங்கேளிர்போல விலக்குமென, அவன் செலவழுங்கும் வகை அவள் கூறியது."

செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த மரம்வாடப்
புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன;

பிணிபுநீ விடல்சூழிற் பிறழ்தரு மிவளெனப்
பணிபுவந் திரப்பவும் பலசூழ்வா யாயினை
துணிபுநீ செலக்கண்ட ஆற்றிடை யம்மரத்து
அணிசெல வாடிய அந்தளிர் தகைப்பன;
எனவாங்கு,

யாம்நிற் கூறவும் எமகொள்ளா யாயினை
ஆஅ திவள்போ லருள்வந் தவைகாட்டி
மேனின்று மெய்கூறுங் கேளிர்போல் நீசெல்லுங்
கானந் தகைப்ப செலவு.

---

(179) வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தையர்
அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை
வெள்வேல் வலத்திர் பொருள்தரல் வேட்கையின்
உள்ளினி ரென்ப தறிந்தன ளென்தோழி;

காழ்விரி கவையாரம் மீவரு மிளமுலை
போழ்திடைப் படாஅமல் முயங்கியு மமையாரென்
தாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்
சூழ்வதை யெவன்கொல் அறியே னென்னும்;

---

(179) ஷை, பாட்டு 3. துறை—"பொருள்வயிற்பிரிவேனென்ற தலைமகற்கு தோழி, தலைவி செலவுக்குறிப்பறிந்தவாறும், அவளது ஆற்றாமையும் உணர்த்திச் செலவு ஒழிவாயாக எனக் கூறியது."

முள்ளூறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்
கள்ளினு மகிழ்செயு மெனவுரைத்தும் அமையாரென்
ஒள்ளிழை திருத்துவர் காதலர் மற்றவர்
உள்ளுவ தெவன்கொல் அறியே னென்னும்;

நுண்ணெழில் மாமைச் சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்
ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவர்
எண்ணுவ தெவன்கொல் அறியே னென்னும்;
எனவாங்கு,

கழிபெரு நல்கலொன் றுடைத்தென என்தோழி
அழிவொடு கலங்கிய எவ்வத்த ளொருநாள்நீர்
பொழுதிடைப் படநீப்பின் வாழ்வாளோ
ஒழுகிலிப் பெருமநின் பொருட்பிணிச் செலவே

---

(180) பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர் பட்ட ஆறுமயக் கருஞ்சுரம்
இறந்துநீர் செய்யும் பொருளினும் யாம்நுமக்குச்
சிறந்தன மாதல் அறிந்தனி ராயின்
நீளிரு முந்நீர் வளிகலன் வெளவலின்
ஆள்வினைக் கழிந்தோர் போற லல்லைத
கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவம்
நாளுங் கோண்மீன் தகைத்தலுந் தகைமே;

---

(180) ஷை, பாட்டு 4. துறை:– "தலைமகன் பொருள்வயிற்பிரிவலெனக் கேட்ட தோழி தான் ஆற்றளாய், 'நீர்செய்யும் பொருளினும் யாம் உமக்குச் சிறந்தேமென்பது நம் உள்ளத்து உளதெனின், நம்மை நாளும் புள்ளும் விலக்கும்' எனவும், 'இவள் பிரிந்திருப்பார் இருக்குமாறு இருப்பாளல்லள், பிரிந்த அன்றே இறந்துபடுவள்' எனவும் சொல்லிச் செலவழுங்குவித்தது."

கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ;
ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ;
ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ;
எனவாங்கு,
பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்டு
எந்நாளோ நெடுந்தகாய்! நீசெல்வது
அந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே.

(181) மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத்து ஆரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால்
என்னீர் அறியாதீர் போல இவைகூறின்
நின்னீர வல்ல நெடுந்தகாய்! எம்மையும்
அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடின் அதுவல்லது
இன்பமும் உண்டோ எமக்கு.

(182) வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானிங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்கவாஅங்

(181) ஷை, பாட்டு 5. துறை:— "தலைவன் செலவுக்குறிப்பறிந்து நீர்செல்லுங் கடுஞ்சுரத்துத் துன்பத்திற்குத் துணையாக எம்மையும் உடன் கொண்டு சென்மின்' எனத் தலைவி கூறியது."

(182) ஷை, பாட்டு 6. துறை— "பிரிவுணர்த்தப்பட்ட தோழி

கானங் கடத்தி ரெனக்கேட்பின் யானென்று
உசாவுகோ ஐய சிறிது;

நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்
கைபுனை வல்வில் ஞாணுளர் தீயே;

இவட்கே, செய்வுறு மண்டில மையாப் பதுபோல்
மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே;

நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய அம்பு தெரிதியே;

இவட்கே, சுனைமாண் நீலங் காரெதிர் பவைபோல்
இனைநோக் குண்கண் நீர்நில் லாவே;

நீயே, புலம்பி லுள்ளமொடு பொருள்வயிற் செலீஇய
வலம்படு திகிரி வாய்நீ வுதியே;

இவட்கே, அலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோல்
இலங்கேர் எல்வளை இறையூ ரும்மே;
எனநின்,

சென்னவை யரவத்து மினையவள் நீநீப்பின்
தன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவள்
இன்னுயிர் தருதலும் ஆற்றுமோ
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே.

---

தலைமகற்கு ‘நீர் பிரிகின்றீரென்று யான்கூறத் தலைவி கேட்பின் அவட்கு அக்காலத்து நிகழ்வனவற்றை நும்மோடு ஆராய்வதுடையேன்; நீர் செய்யும் பொருள் இவளுயிரையும் தருகிற்குமோ’ எனச் செலவழுங்கக் கூறியது.”

“இஃது ‘உடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவும், மடம்பட வந்த தோழி கண்ணும்’ என்பதனுட் செய்கை கூறுகின்றது.”

(183) நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலின்
உறலூறு கமழ்கடாஅத் தொல்கிய எழில்வேழம்
வறனுழு நாஞ்சில்போல் மருப்பூன்றி நிலஞ்சேர
விறல்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்
சொல்லா திறப்பத் துணிந்தனிர்க் கொருபொருள்
சொல்லுவ துடையேன் கேண்மின்மற் றைஇய;

வீழுநர்க் கிறைச்சியாய் விரல்கவர் பிசைக்குங்கோல்
ஏழுந்தம் பயன்கெட இடைநின்ற நரம்பறூஉம்
யாழினும் நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ;

மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது
பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறும்
திருவினும் நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ;

புரைதவப் பயன்நோக்கார் தம்மாக்க முயல்வாரை
வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவும்
அரைசினும் நிலையில்லாப் பொருளையும் நச்சுபவோ;
எனவாங்கு,

நச்சல் கூடாது பெரும! இச்செலவு
ஒழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று
மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பித்
தன்னகர் விழையக் கூடின்
இன்னுறல் வியன்மார்ப! அதுமனும் பொருளே.

---

(183) பாட்டு 7. துறை— "சொல்லாது பிரியலுற்ற தலைவன் குறிப் பறிந்து தோழி, பொருளது நிலையாமைகூறி அவனோடு கூடிச்செல்கின்ற இல்வாழ்க்கைச்செலவே பொருளென அவன் செலவழுங்கக் கூறியது."

(184) எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்!
வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீர் இவ்விடை
என்மக ளொருத்தியும் பிறள்மகன் ஒருவனும்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரோ பெரும!

காணே மல்லேம் கண்டனெங் கடத்திடை
ஆணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவரல் தாயிர்நீர் போறிர்;

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

எனவாங்கு,

இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா வாறுமற் றதுவே.

---

(184) ஷை, பாட்டு 8. துறை— "உடன்போய தலைவிபின் சென்ற செவிலி, இடைச்சுரத்து முக்கோற்பகவரைக் கண்டு 'இவ்வகைப்பட்டாரை ஆண்டுக்காணீரோ' எனவினவியாட்கு 'அவரைக்கண்டு அஃதறமெனவே கருதிப்போந்தேம்; நீரும் அவர்திறத்து எவ்வம்பட வேண்டா' என எடுத்துக் காட்டி அவர் தெருட்டியது."

(185) வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்
அலவுற்றுக் குடிகூவ ஆறின்றிப் பொருள்வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழல்
உலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்;

இடைகொண்டு பொருள்வயி னிறத்திநீ யெனக்கேட்பின்
உடைபுநெஞ் சுகவாங்கே யொளியோடற் பாள்மன்னோ
படையமை சேக்கையுட் பாயலி னறியாய்நீ
புடைபெயர்வா யாயினும் புலம்புகொண் டினைபவள்;

முனிவின்றி முயல்பொருட் கிறத்திநீ யெனக்கேட்பின்
பனியகன் படலொல்லா பசப்பூர்கிற் பாள்மன்னோ
நனிகொண்ட சாயலான் நயந்துநீ நகையாகத்
துனிசெய்து நீடினும் துறப்பஞ்சிக் கலுழ்பவள்;

பொருள்நோக்கிப் பிரிந்துநீ போகுதி யெனக்கேட்பின்
மருணோக்கம் மடிந்தாங்கே மயல்கூர்கிற் பாள்மன்னோ
இருணோக்கம் இடையின்றி ஈரத்தி னியன்றநின்
அருணோக்கம் அழியினும் அவலங்கொண் டழிபவள்;
எனவாங்கு,
வினைவெஃகி நீசெலின் விடுமிவ ளுயிரெனப்
புனையிழாய்! நின்னிலை யான்கூறப் பையென
நிலவுவேல் நெடுந்தகை நீளிடைச்
செலவொழிந் தனனாற் செறிகநின் வளையே.

(185) கலி; பாட்டு 9. துறை— "தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி 'இவ்வகைப்பட்ட சுரத்தைப் பொருள்காரணமாகப் பிரிகின்றீரெனக் கேட்பின் இவ்வகை யாகற்பாலள்' எனச் சொல்லிச் செலவழுங்குவித்தமை தலைமகட்குச் சொல்லியது."

(186) அரிதாய அறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய்! வலிப்பல்யான் கேளினி;

அடிதாங்கு மளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய்! காடென்றா ரக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே;

இன்பத்தி னிகந்தொரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவும் உரைத்தனரே;

கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉந் தகையவே காடென்றா ரக்காட்டுள்
இன்னிழ லின்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்-
எனவாங்கு, [தனரே;

---

(186) ஷை, பாட்டு 10. துறை—"தலைவி, மூன்றன்பகுதி தலைவன்கூறிப் பொருள்வயிற் பிரிகின்றகாலத்து 'காடு கடியவாயினும் இவ்வகைப்பட்டனவும் உளவென்று கூறினர், அவைகாண்டலின் வருவர்' எனத் தோழிக்குக் கூறி அதற்கு நிமித்தமும் கூறி ஆற்றுவித்தது.

"மூன்றன்பகுதி கூறுதலாவது, அறத்தினாற் பொருளாக்கி அப்பொருளாற் காமம் நுகர்வேனென்றலாம். உடைமையது உயர்ச்சிகூறிப் பிரிந்தானெனக் கிளவிகூறிற் பொருள்வயிற் பிரிதலின்றாம்; அது பொருள்வயிற்பிரிவை விலக்குமென்றலின்."

இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணும் ஆடுமா லிடனே.

---

(187) இடுமுள் நெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை யாராற் றறுசுனை முற்றி
உடங்குநீர் வேட்ட உடம்புயங்கு யானை
கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேறாகச் சார்ச்சார லோடி
நெறிமயக் குற்ற நிரம்பாநீ டத்தஞ்
சிறுநனி நீதுஞ்சி யேற்பினும் அஞ்சும்
நறுநுதல் நீத்துப் பொருள்வயிற் செல்வோய்!
உரனுடை யுள்ளத்தை செய்பொருள் முற்றிய
வளமையா னாகும் பொருளிது வென்பாய்
இளமையுங் காமமும் நின்பாணி நில்லா
இடைமுலைக் கோதை குழைய முயங்கும்
முறைநாள் கழிதல் உறுஅமைக் காண்டை
கடைநாள் இதுவென் றறிந்தாரு மில்லை
போற்றாய் பெரும! நீ காமம் புகர்பட
வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்
கூற்றமும் மூப்பும் மறந்தாரோ டோராங்கு
மாற்றுமைக் கொண்ட வழி.

(187) ஷை, பாட்டு 11. துறை—“தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி காட்டதுகடுமையும் தலைவியதுமென்மையும் ‘நாளது சின்மையும் இளமையதருமையும், தாளாண்பக்கமும் தகுதியதமைதியும், அன்பினதகலமும் அகற்சியதருமையும்’ கூறிச் செலவழுங்குவித்தது.”

(188) செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல
எரிமேய்ந்த கரிவறல் வாய்புகுவ காணுவாய்ப்
பொரிமலர்ந் தன்ன பொறிய மடமான்
திரிமருப் பேறொடு தேரறற் கோட
மரல்சாய மலைவெம்ப மந்தி யுயங்க
உரல்போ லடிய உடம்புயங்கு யானை
ஊறுநீ ரடங்கலின் உண்கயங் காணாது
சேறு சுவைத்துத்தஞ் செல்லுயிர் தாங்கும்
புயல்துளி மாறிய போக்கரு வெஞ்சுரம்;

எல்வளை! எம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியல் மேவந்த சீறடித் தாமரை
அல்லிசே ராயிதழ் அரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறின் அவ்வடி கறுக்குந வல்லவோ;

நலம்பெறு சுடர்நுதால்! எம்மொடு நீவரின்
இலங்குமா ணவிர்தூவி யன்னமென் சேக்கையுள்
துலங்குமான் மேலூர்தித் துயிலேற்பாய் மற்றுண்டை
விலங்குமான் குரல்கேட்பின் வெருவுவை யல்லையோ;

கிளிபுரை கிளவியாய்! எம்மொடு நீவரின்
தளிபொழி தளிரன்ன எழில்மேனி தகைவாட
முளியரில் பொத்திய முழங்கழ லிடைபோழ்ந்த
வளியுறின் அவ்வெழில் வாடுவை யல்லையோ;
எனவாங்கு,

---

(188) ஷை; பாட்டு 12. துறை—"தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகள், யான் நும்மொடு போதுவல் என்றாட்கு, தலைவன் அவளது மென்மையுங் காட்டின் கடுமையுங்கூறி உடன்படானாக, ஆற்றாளாய தலைவியைத் தோழி, அவர் நம்மொடு நகையாடிச்சொன்னார், பிரிவாரல்லர் என வற்புறுத்தியது."

அணையவை காதலர் கூறலின் வினைவயிற்
பிரிகுவ ரெனப்பெரி தழியாது திரிபுரீஇக்
கடுங்குரை யருமைய காடெளி தல்லது
கொடுங்குழாய்! துறக்குநர் அல்லர்
நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே.

(189) அணைமரு ளின்றுயில் அம்பணைத் தடமென்தோள்
துணைமல ரெழினீலத் தேந்தெழில் மலருண்கண்
மணமௌவல் முகையன்ன மாவீழ்வார் நிரைவெண்பல்
மணநாறு நறுநுதல் மாரிவீ ழிருங்கூந்தல்
அலர்முலை யாகத் தகன்ற அல்குற்
சிலநிரை வால்வளைச் செய்யா யோவெனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி
இனிய சொல்லி இன்னாங்குப் பெயர்ப்பது
இனியறிந் தேனது துனியா குதலே;

பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்
மருளிகொள் மடநோக்க மயக்கப்பட் டயர்த்தாயோ;

காதலா ரெவன்செய்ப பொருளில்லா தார்க்கென
ஏதிலார் கூறுஞ்சொற் பொருளாக மதித்தாயோ;

செம்மையி னிகந்தொரீஇப் பொருள்செய்வார்க் கப்பொருள்
இம்மையும் மறுமையும் பகையாவ தறியாயோ;
அதனால்,

---

(189) ஷை, பாட்டு 13. துறை—"தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்கு, 'முன்னையிற்சிறப்ப எம்வயிற் பாராட்டியதெல்லாம் எம்வயிற் பிறந்த வெறுப்பென்பது இப்பொழுதறிந்தேன்; இவ்வகைப்பட்ட போக்கு நினக்கு எவ்வகையான் வந்தது' என அவன்செலவழுங்கச் சொல்லியது."

எம்மையும் பொருளாக மதித்தீத்தை நம்முள்நாம்
கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்து
அவவுக்கை விடுத லதுமனும் பொருளே,

---

(190) அரிமான் இடித்தன்ன அஞ்சிலை வல்விற்
புரிநாண் புடையிற் புறங்காண்ட லல்லால்
இணைப்படைத் தானை யரசோ டுறினும்
கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பின்
எருத்து வலிய வெறும்நோக் கிரலை
மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி
உருத்த கடுஞ்சினத் தோடா மறவர்
பொருள்கொண்டு புண்செயி னல்லதை யன்போடு
அருள்புற மாறிய ஆரிடை யத்தம்;

புரிபுநீ புறமாறிப் போக்கெண்ணிப் புதிதீண்டிப்
பெருகிய செல்வத்தாற் பெயர்த்தரல் ஒல்வதோ
செயலையந் தளிரேய்க்கும் எழில்நலம் அந்நலம்
பயலையால் உணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால்;

பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ
தீங்கதிர் மதியேய்க்கும் திருமுகம் அம்முகம்
பாம்புசேர் மதிபோலப் பசப்பூர்ந்து தொலைந்தக்கால்;

பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப் படர்ந்துநீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தர லொல்வதோ

---

(190) ஷை, பாட்டு 14. துறை—“பிரிவுணர்த்தியதலைமகற்கு தோழி, தலைமகளது ஆற்றாமையும் இளமையதருமையுங் கூறி, நீர் பிரிந்துசெய்யக்கருதியமை எக்காலத்துஞ்செய்யலாம்; பொருளால் கழிந்த இளமை மீட்கலாமோ எனக் கூறியது.”

புரியவிழ் நறுநெய்ம் புரையுண்கண் கலுழ்பானாத்
திரியுமிழ் நெய்யேபோல் தெண்பனி யுறைக்குங்கால்;
எனவாங்கு,

அனையவை போற்றி நினை இயன நாடிக்காண்
வளமையோ வைகலுஞ் செயலாகு மற்றிவண்
முனைநிரை முறுவலார் ஆயத்துள் எடுத்தாய்ந்த
இளமையுந் தருவதோ இறந்த பின்னே.

---

(191) பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க
வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர
ஆடெழில் அழிவஞ்சா தகன்றவர் திறத்தினி
நாடுங்கால் நினைப்பதொன் றுடையேன்மன் அதுவுந்தான்;

தொன்னலந் தொலைபீங்கியாந் துயருழப்பத் துறந்துள்ளார்
துன்னருங் காதலர் துறந்தேகும் ஆரிடைக்
கன்மிசை யுருப்பறக் கனைதுளி சிதறென
இன்னிசை யெழிலியை யிரப்பவு மியைவதோ;

புனையிழாய்! ஈங்குநாம் புலம்புறப் பொருள்வெஃகி
முனையென்றார் காதலர் முன்னிய ஆரிடைச்
சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ;

ஒளியிழாய்! ஈங்குநாம் துயர்கூறப் பொருள்வயின்
அளியொரீஇக் காதல ரகன்றேகும் ஆரிடை

---

(191) ஷை; பாட்டு 15. துறை—"தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து அவன் போகிய காட்டது கடுமைநினைந்து ஆற்றாளாகிய தலைமகள், அவர்பொருட்டாக நாம் இவ்வகைப்பட்ட தெய்வங்களைப் பரவுதல் நங்கற்புக்கு இயைவதோவென, கேட்டதோழி, அவ்வாற்றானே மீண்டனர்; நீ கவலவேண்டா எனக் கூறியது."

முளிமுதல் மூழ்கிய வெம்மைதீர்ந் துறுகென
வளிதருஞ் செல்வனை வாழ்த்தவும் இயைவதோ;
எனவாங்கு,

செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வர்மாட் டினையன
தெய்வத்துத் திறனோக்கிக் தெருமரல் தேமொழி!
வறனோடின் வையகத்து வான்தருங் கற்பினாள்
நிறனோடிப் பசப்பூர்த லுண்டென
அறனோடி விலங்கின்றவ ராள்வினைத் திறத்தே.

---

(192) படைபண்ணிப் புனையவும் பாமாண்ட பலவினைப்
புடைபெயர்ந் தொடுங்கவும் புறஞ்சேர வுயிர்ப்பவும்
உடையதை யெவன்கொலென் றூறளந் தவர்வயின்
நடைசெல்லாய் நனியேங்கி நடுங்கற்காண் நறுநுதால்;

தொல்லெழில் தொலைபிவள் துயருழப்பத் துறந்துநீ
வல்வினை வயக்குதல் வலித்திமன் வலிப்பளவை
நீள்கதி ரவிர்மதி நிறைவுபோல் நிலையாது
நாளினும் நெகிழ்போடு நலனுட னிலையுமோ;

ஆற்றனோ யடவிவள் அணிவாட அகன்றுநீ
தோற்றஞ்சால்தொகுபொருள்முயறிமன்முயல்வளவை
நாற்றஞ்சால் நளிபொய்கை அடைமுதிர் முகையிற்குக்
கூற்றூழ்போற் குறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ;

---

(192) ஷை, பாட்டு 16. துறை—"பகைவர் திறைதந்த நாடுகாத்தற்கு (தலைவன்) பிரிகின்றமை யுணர்ந்து தலைவி வேறுபட்டமைகண்டு, தோழி அவனை எதிர்ப்பட்டு அவளது ஆற்றாமையும் இளமையதருமையும் கூறிச் செலவழுங்குவித்தமை தலைமகட்குக் கூறியது."

வகையெழில் வனப்பெஞ்ச வரைபோக வலித்துநீ
பகையறு பயவினை முயறிமன் முயல்வளைவைத்
தகைவண்டு புதிதுண்ணத் தாதவிழ் தண்போதின்
முகைவாய்த்த தடம்போலும் இளமையும் நிலையுமோ;
எனவாங்கு,

பொருந்தியான் தான்வேட்ட பொருள்வயி னினைந்தசொல்
திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்துபோல் மருந்தாகி மனனுவப்பப்
பெரும்பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே.

---

(193) அரும்பொருள் வேட்கையின் உள்ளந் துரப்பப்
பிரிந்துறை சூழாதி யைய! விரும்பிநீ
என்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கும் நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது
ஒழிந்தவ ரெல்லாரும் உண்ணாதுஞ் செல்லார்
இளமையுங் காமமும் ஓராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ உளநாள்
ஒரோஒகை தம்முள் தழீஇ யொரோஒகை
ஒன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினும்
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற இளமை தரற்கு.

(193) ஷை; பாட்டு 17. துறை — "ஒன்றாத்தமரினும்' என்னுஞ் சூத்திரத்தில் 'நாளது சின்மையும் இளமையதருமையும், தாளாண்பக்கமும் தகுதியதமைதியும், இன்மையதிழிவும் உடைமைய துயர்ச்சியும், அன்பின தகலமும் அகற்சிய தருமையும்" எனக்கூறிய எட்டினையும் தலைவன் கூறக்கேட்ட தோழி, அவற்றை "நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே" என்னும் விதியாற் றலைவற்குக் கூறிச் செலவழுங்குவித்தது."

(194) செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய!
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகல்முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன்
மகனல்லை மன்ற இனி;

செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
அன்பற மாறியா முள்ளத் துறந்தவள்
பண்பு மறிதிரோ வென்று வருவாரை
என்திறம் யாதும் வினவல் வினவிற்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றும லாண்டோர்
அவலம் படுதலு முண்டு.

---

(195) பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதறச்
செல்கதிர் ஞாயிறு செயிர்சினஞ் சொரிதலின்
தணிவில்வெங் கோடைக்குத் தண்ணயந் தணிகொள்ளும்
பிணிதெற லுயக்கத்த பெருங்களிற் றினந்தாங்கு
மணிதிகழ் விறல்மலை வெம்ப மண்பகத்
துணிகயந் துகள்பட்ட தூங்கழல் வெஞ்சுரம்;

---

(194) ஷை, பாட்டு 18. துறை—"பிரிவுணர்த்தப்பட்ட தோழி செலவு விலக்கவும் பிரிவின்மேற்சென்ற உள்ளத்தலைவனை, நீ பிரியின் இவள் இறந்துபடுமெனச் சொல்லியவாய்பாட்டான் மறுத்தது."

(195) ஷை, பாட்டு 19. துறை—"பிரிவுணர்த்திய தலைவற்குத் தலைவி எம்மையும் உடன்கொண்டு சென்மின் என்றாட்கு, அவன் கானின்கடுமையும் தலைவிமென்மையுங் கூறுவது கேட்ட தலைவி, நாளது சின்மையும் இளமைய தருமையுங் கூறி எம்மையும் உடன்கொண்டு சென்மின் என்றது."

கிளிபுரை கிளவியாய்! நின்னடிக் கெளியவோ
தளியுறு பறியாவே காடெனக் கூறுவீர்
வளியினும் வரைநில்லா வாழுநாள் நும்மாகத்து
அளியென உடையேன்யான் அவலங்கொண் டழிவலோ;

ஊறுநீர் அமிழ்தேய்க்கு மெயிற்றாய்! நீ யுணல்வேட்பின்
ஆறுநீர் இலவென அறனோக்கிக் கூறுவீர்
யாறுநீர் கழிந்தன்ன இளமைநுந் நெஞ்சென்னுந்
தேறுநீ ருடையேன்யான் தெருமந்திங் கொழிவலோ;

மாணிழல் வேய்வென்ற தோளாய்! நீ வரிற்றாங்கு
மாணிழ லிலவாண்டை மரமெனக் கூறுவீர்
நீணிழற் றளிர்போல நிறனாழ்த்த லறிவேனும்
தாணிழல் கைவிட்டியான் தவிர்தலைச் சூழ்வலோ;

எனவாங்கு,

அணையரும் வெம்மைய காடெனக் கூறுவீர்
கணைகழி கல்லாத கல்பிறங் காரிடைப்
பணையெருத் தெழிலேற்றின் பின்னர்ப்
பிணையுங் காணிரோ பிரியுமோ அவையே.

---

(196) பால்மருள் மருப்பின் உரல்புரை பாவடி
ஈர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்தல்
ஆறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து
பொருள்வயிற் பிரிதல் வேண்டும் என்னும்
அருளில் சொல்லும் நீசொல் லினையே

(196) ஷை, பாட்டு 20. துறை—"தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி அவனைநெருங்கிக் களவுக்காலத்தொழுக்கம் எடுத்துக்காட்டலாற் றெளிவு படமொழிந்து, பொருளது நிலையின்மையும் அவளது ஆற்றாமையுங் கூறிச் செலவுமறுத்தது."

நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி
நின்னிற் பிரியலென் அஞ்சலோம் பென்னும்
நன்னர் மொழியும் நீமொழிந் தனையே
அவற்றுள், யாவோ வாயின மாஅல் மகனே!
கிழவ ரின்னோ ரென்னாது பொருள்தான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்
அன்ன பொருள்வயிற் பிரிவோய்! நின்னின்று
இமைப்புவரை வாழாள் மடவோள்
அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே.

---

(197) உண்கடன் வழிமொழிந் திரக்குங்கால் முகனுந்தாம்
கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே றுகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கை அஃதின்றும்
புதுவ தன்றே புலனுடை மாந்திர்!

தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கட் டாவார்தாந் தந்நலந்
தாதுதேர் பறவையி னருந்திறல் கொடுக்குங்கால்
ஏதிலார் கூறுவ தெவனோநின் பொருள்வேட்கை;

நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த
செறிமுறை பாராட்டி னாய்மற் றெம் பல்லின்
பறிமுறை பாராட் டினையோ ஐய!

நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன
ஐவகை பாராட்டி னாய்மற் றெங் கூந்தற்
செய்வினை பாராட் டினையோ ஐய!

(197) ஷை., பாட்டு 21. துறை—"பிரிவுணர்த்தப்பட்ட தோழி அதற்கு உடம்படாது தலைமகனை நெருங்கிக் களவுக்காலத்தொழுக்கம் எடுத்துக்காட்டி ஆற்றுவித்து உடம்பட்டவாய்பாட்டான் மறுத்தது."

குளனணி தாமரைப் பாசரும் பேய்க்கும்
இளமுலை பாராட் டினும்மற் றெம் மார்பிற்
றளர்முலை பாராட் டினையோ ஐய!
எனவாங்கு,
அடர்பொன் அவிரேய்க்கும் அவ்வரி வாடச்
சுடர்காய் சுரம்போகு நும்மையா மெங்கண்
படர்கூற நின்றது முண்டோ தொடர்கூரத்
துவ்வாமை வந்தக் கடை

---

(198) இலங்கொளி மருப்பிற் கைம்மா உளம்புநர்
புலங்கடி கவலையிற் பூஞ்சினை யுதிர்க்கும்
விலங்குமலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்
தனியே இறப்ப யாமொழிந் திருத்தல்
நகுதக் கன்றிவ் வழுங்க லூர்க்கே;
இனியான்,
உண்ணலும் உண்ணேன் வாழலும் வாழேன்;

தோணல முண்டு துறக்கப் பட்டோர்
வேணீ ருண்ட குடையோ ரன்னர்;

நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோர்
அல்குநர் போகிய ஊரோ ரன்னர்;

கூடினர் புரிந்து குணனுணப் பட்டோர்
சூடினர் இட்ட பூவோ ரன்னர்;
எனவாங்கு,

---

(198) ஷை, பாட்டு 22. துறை—“பிரிவுணர்த்தப்பட்டு ஆற்றுளாய தலைவி எம்மையும் உடன்கொண்டு சென்மினென்றாட்கு, உடன்படாது அவன் பிரியலுற, தனது இறந்துபாடுதோன்றக் கூறியது.”

யானும் நின்னகத் தனையே னுறைது
கொலைவெங் கொள்கையொடு நாயகப் படுப்ப
வலைவர்க் கமர்ந்த மடமான் போல
நின்றாங்கு வரூஉமென் னெஞ்சினை
என்றாங்கு வாரா தோம்பினை கொண்மே.

---

(199) நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தாம்
அஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொல்
இன்தீங் கிளவியாய்! வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானும்
இதுவொன் றுடைத்தென எண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுள்
பாயல்கொண் டென்தோட் கனவுவார் ஆய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
இடுமருப் பியானை இலங்குதேர்க் கோடும்
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்று
செய்பொருள் முற்றும் அளவென்றார் ஆயிழாய்!
தாமிடை கொண்ட ததுவாயின் தம்மின்றி
யாமுயிர் வாழு மதுகை யிலேமாயின்

(199) ஷை, பாட்டு 23. துறை—“தலைமகன் குறிப்புக்கண்டு பிரிவனென ஐயுற்றுச் செல்கின்ற தலைவி, அக்காலத்துத் தலைவன் கனவின் அரற்றினமை கேட்டுப் பொருள்வயிற் பிரிகின்றானெனத் துணிந்து ஆற்றாளாய்த் தோழிக்குச் சொல்லியது.”

“‘மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே’ என்பதனால், அந்தணன் அறங்கருதித் தூதிற்பிரிந்து அவ்வரசர்செய்த பூசனை வாங்கிக்கொண்டு வருதற்கு பிரிகின்றதென்றுகொள்க. இது ‘வேற்றுநாட்டகல்வயின்விழுமம்’ கூறுகின்றது.”

தொய்யில் துறந்தா ரவரெனத் தம்வயின்
நொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்.

---

(200) வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்
ஐவரென் றுலகேத்து மரசர்க ளகத்தராக்
கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா
முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழல்
ஒள்ளுரு அரக்கில்லை வளிமகன் உடைத்துத்தன்
உள்ளத்துக் கிளைகளோ டுய்ப்போகு வான்போல
எழூவுறழ் தடக்கையின் இனங்காக்கும் எழில்வேழம்
அழுவஞ்சூழ் புகையழல் அதர்பட மிதித்துத்தங்
குழுவொடு புணர்ந்துபோங் குன்றழல் வெஞ்சுரம்
இறத்திரா லையமற் றிவணிலைமை கேட்டீமின்;

மணக்குங்கால் மலரன்ன தகையவாய்ச் சிறிதுநீர்
தணக்குங்காற் கலுழ்பானாக் கண்ணெனவு முளவன்றோ
சிறப்புச்செய் துழையராப் புகழ்பேத்தி மற்றவர்
புறக்கொடையேபழிதூற்றும்புல்லியார்தொடர்புபோல்

ஈங்குநீ ரளிக்குங்கால் இறைசிறந் தொருநாணீர்
நீங்குங்கா னெகிழ்போடும் வளையெனவும் உளவன்றே
செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு மற்றவர்
ஒல்கிடத் துலப்பிலா உணர்விலார் தொடர்புபோல்;

---

(200) ஷை, பாட்டு 24. துறை—"பிரிவுணர்த்தப்பட்ட தோழி 'நீ பிரிந்தாற் பீடிலார் தொடர்புபோல நம்மை அலர்தூற்றுவன இவ்வகைப்பட்டன சிலவுள' எனத் தலைவிஆற்றுமை கூறிச் செலவழுங்குவித்தது."

ஒருநாள்நீர் அளிக்குங்கால் ஒளிசிறந் தொருநாள்நீர்
பாராட்டாக் காற்பசக்கும் நுதலெனவு முளதன்றோ
பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை
பிரிந்தக்காற்பிறர்க்குரைக்கும்பீடிலார்தொடர்புபோல்;

எனவாங்கு,

யாம்நிற் கூறுவ தெவனுண் டெம்மினும்
நீநற் கறிந்தனை நெடுந்தகை! வானந்
துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலுநின்
அளிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே.

---

(201) ஒருகுழை யொருவன்போல் இணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போல் நனையூழ்த்த செருந்தியும்
மீனேற்றுக் கொடியோன்போல் மிஞிறார்க்குங் காஞ்சியும்
ஏனோன்போல் நிறங்கிளர்பு கஞலிய ஞாழலும்
ஆனேற்றுக் கொடியோன்போல் எதிரிய இலவமு மாங்குத்
தீதுதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோலப்
போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக;

பல்வரி இனவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் தொலைந்தவென் தடமென்தோள் உள்ளுவார்

(201) ஷை, பாட்டு 25. துறை— "மேவிய சிறப்பினேனோர்' என்னுஞ் சூத்திரத்தில் பகைமேற்சென்ற அரசன் திறைபெற்ற நாடுகாத்து அதன்கண் தன் னெறிமுறைமை அடிப்படுத்து வருவதற்குப் பிரிவன் என்றமையின், பிரிவின்கண் தலைவன் இளவேனிற்காலங்குறித்துப் பிரிய, அக்காலவரவின்கண் தலைவி ஆற்றாளாய், அவர் நமக்கு அருளுங்காலையில் அருளார்கா ணென்றாட்கு, தோழி, அவர்வரவிற்கு இக்காலம் தூதாயன்றே வந்தது? நீ ஆற்றுவாயாக என வற்புறுத்தியது."

ஒல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புகழ் உலகேத்த விருந்துநாட் டுறைபவர்;

திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த என்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
இசைபரந் துலகேத்த ஏதிலுட் டுறைபவர்;

அறல்சாஅய் பொழுதோடெம் அணிநுதல் வேறுகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யருளுவார்
ஊறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
ஆறின்றிப் பொருள்வெஃகி யகன்ற நாட்டுறைபவர்;

எனநீ,

தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன் றவர் வாய்மொழித் தூதே.

(202) ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போல் தீங்கரை மரம்நந்தப்
பேதுறு மடமொழிப் பிணையெழில் மானோக்கின்
மாதரார் முறுவல்போல் மணமௌவல் முகையூழ்ப்பக்
காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போற் கழலுபு

(202) ஷை, பாட்டு 26. துறை—"தலைவன் குறித்துப்பிரிந்த இளவேனில் வரவின்கண், 'எம்மையோ மறக்க: இக்காலத்து இவ்வூரின்கண் தாம்விளையாடும் விளையாட்டும் மறந்தாரோ' எனச் சொல்லி ஆற்றுளாய தலைவிக்குத் தோழி தலைவன்வரவுணர்ந்து கழிபுவகையாற் கூறியது"

தாதொடுந் தளிரொடுந் தண்ணறல் தகைபெறப்
பேதையோன் வினைவாங்கப் பீடிலா அரசனாட்டு
ஏதிலான் படைபோல இறுத்தந்த திளவேனில்;

நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த அணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பானாக் கூடலும் உள்ளார்கொல்,

கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னலம் நளிசாய நம்மையோ மறந்தைக்க
ஒன்னாதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற [கொல்;
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்

மையெழில் மலருண்கண் மருவூட்டி மகிழ்கொள்ளப்
பொய்யினாற் பரிவுண்ட நம்மையோ மறந்தைக்க
தைஇய மகளிர்நும் ஆயமோ டமர்ந்தாடும்
வையைவா ருயரெக்கர் நுகர்ச்சியும் உள்ளார்கொல்;
எனவாங்கு,

நோய்மலி நெஞ்சமொடு இனையல் தோழி!
நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயிற்
காமவேள் விழவாயிற் கலங்குவள் பெரிதென
ஏமுறு கடுந்திண்டேர் கடவி
நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே.

(203) பாடல்சால் சிறப்பிற் சினையவுஞ் சுனையவும்
நாடினர் கொயல்வேண்டா நயந்துதாங் கொடுப்பபோல்

(203) ஷை, பாட்டு 27. துறை—"இளவேனில் வரவின்கண் ஆற்றாத தலைவி தூதுவிடக்கருத, தோழி, 'அவர் பிரிந்திருத்தலை நம்மினும் தாம் வல்லரல்லர்' எனச் சொல்லி வற்புறுத்தியது."

தோடவிழ் கமழ்கண்ணி கையுபு புனைவார்கண்
தோடுறத் தாழ்ந்து துறைதுறை கவின்பெறச்
செய்யவன் அணியகலத் தாரமொ டணிகொள்பு
தொய்யகந் தாழ்ந்த கதுப்புப்போல் துவர்மணல்
வையைவா ரவிரறல் இடைபோழும் பொழுதினான்;
விரிந்தானா மலராயின் விளித்தானுங் குயிலாயின்
பிரிந்துள்ளா ரவராயிற் பேதுறூஉம் பொழுதாயின்
அரும்பட ரவலநோய் ஆற்றுவ ளென்னாது
வருந்தநோய் மிகுமாயின் வணங்கிறை! அளியென்னோ;
புதலவை மலராயிற் பொங்கரின வண்டாயின்
அயலதை யலராயின் அகன்றுள்ளார் அவராயின்
மதநோயில் நெஞ்சொடு மதனில ளென்னாது
நுதலூரும் பசப்பாயின் நுணங்கிறை! அளியென்னோ;
தோயின அறலாயிற் சுரும்பார்க்குஞ் சினையாயின்
மாவின தளிராயின் மறந்துள்ளார் அவராயின்
பூவெழி லிழந்தகண் புலம்புகொண் டமையாது
பாயனோய் மிகுமாயிற் பைந்தொடி! அளியென்னோ;
எனவாங்கு,
ஆயிழாய்! ஆங்கன மூரையாதி சேயார்க்கு
நாந்தூது மொழிந்தனம் விடல்வேண்டா நம்மினுந்
தாம்பிரிந் துறைத லாற்றலர்
பரிந்தெவன் செய்தி வருகுவர் விரைந்தே.

---

(204) தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலின்
அல்லாந்தார் அலவுற ஈன்றவள் கிடக்கைபோற்

---

(204) ஷை, பாட்டு 28. துறை—"பருவவரவின்கண் ஆற்றாத தலைவியைத் தோழி வற்புறுப்ப, வன்புறை யெதிரழிந்தாட்கு, தோழி அவன்வரவுணர்ந்து கழிவுவகையாற் கூறியது."

பல்பய முதவிய பசுமைதீ ரகன்ஞாலம்
புல்லிய புனிறொரீஇப் புதுநல மேர்தர
வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள
இளையவ ரைம்பால்போல் எக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற தளிர்மிசை மாயவள் திதலைபோல்
ஆயிதழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர
மேதக இளவேனி லிறுத்தந்த பொழுதின்கண்;

சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் சின்மொழி.
நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் நிறைநீவி
வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்;

போழ்துள்ளார் துறந்தார்கண் புரிவாடுங் கொள்கையைச்
சூழ்பாங்கே சுடரிழாய்! கராப்பென்மன் கைநீவி
வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணு மிருந்தும்பி
யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை யலைத்தரூஉம்;

தொடிநிலை நெகிழ்த்தார்கண் தோயுமென் னுருயிர்
வடுநீங்கு கிளவியாய்! வலிப்பென்மன் வலிப்பவும்
நெடுநிலாத் திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்;

எனவாங்கு,

வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தேகிநம்
அருந்துயர் களைஞர் வந்தனர்
திருந்தெயி றிலங்குநின் தேமொழி படர்ந்தே.

(205) அருந்தவம் ஆற்றியார் நுகர்ச்சிபோல் அணிகொள
விரிந்தானாச் சினைதொறூஉம் வேண்டுந்தா தமர்ந்தாடிப்
புரிந்தார்க்கும் வண்டொடு புலம்புதீர்ந் தெவ்வாயும்
இருந்தும்பி யிறைகொள எதிரிய வேனிலான்;
துயிலின்றி யாம்நீந்தத் தொழுவையம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னோ
வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவிற்
குயிலாலும் பொழுதெனக் கூறுந ருளராயின்;

பானாள்யாம் படர்கூரப் பணையெழி லணைமென்றோள்
மாணோக்கி னவரோடு மறந்தமைகு வான்மன்னோ
ஆனாச்சீர்க் கூடலுள் அரும்பவிழ் நறுமுல்லைத்
தேனூர்க்கும் பொழுதெனத் தெளிக்குந ருளராயின்;

உறலியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ
பெறலரும் பொழுதோடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்து
அறல்வாரும் வையையென் றறையுந ருளராயின்;
எனவாங்கு,

தனியாரோ யுழந்தானாத் தகையவள் தகைபெற
அணிகிளர் நெடுந்திண்டேர் அயர்மதி பணிபுநின்
காமர் கழலடி சேரா
நாமஞ்சால் தெவ்வரின் நடுங்கினள் பெரிதே.

---

(205) ஷை, பாட்டு 29. துறை—"பருவவரலின்கண் ஆற்றாத தலைமகள் இறந்ததுசிந்தித்து 'நம்மாட்டு அன்பிலராயினும் இக்காலத்து இவ்வூரின்கண் பண்டு தாம் விளையாடியவாறு நினைந்துவருவர், இக் காலவரவுசொல்லுவார் உளராயின்' எனக்கேட்ட பாணன் பாசறைக்கட்சென்று தலைவனைக் கண்டு கூறியது."

(206) கடும்புனல் கால்பட்டுக் கலுழ்தேறிக் கவின்பெற
நெடுங்கயத் தயலயல் அயிர்தோன்ற அம்மணல்
அடுத்தூர வரிப்பபோல் ஈங்கைவா டுதிர்புகப்
பிரிந்தவர் நுதல்போலப் பீர்வீயக் காதலர்ப்
புணர்ந்தவர் முகம்போலப் பொய்கைபூப் புதிதீன
மெய்கூர்ந்த பனியொடு மேல்நின்ற வாடையாற்
கையாறு கடைக்கூட்டக் கலக்குறூஉம் பொழுதுமன்
பொய்யேமென் றுயிழாய்! புணர்ந்தவ ருரைத்ததை;

மயங்கமர் மாறட்டு மண்வெளவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேல் தகைகாண விடுவதோ
பயங்கெழு பல்கதிர் பால்போலும் பொழுதொடு
வயங்கிழை தண்ணென வந்தவிவ் வசைவாடை;

தாள்வலம் படவென்று தகைநன்மா மேல்கொண்டு
வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ
நீள்கழை நிவந்தபூ நிறம்வாடத் தூற்றுபு
தோளதிர் பகஞ்சேரத் துவற்றும்இச் சின்மழை;

பகைவென்று திறைகொண்டபாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மல்நாம் வனப்பார விடுவதோ
புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்பல் நுதிபொர முற்றிய கடும்பனி;

எனவாங்கு,

---

(206) கலி., பாட்டு 30. துறை— "'இளவேனிற்காலத்து வருவல், அத்துணையும் ஆற்றியிரு' என்று மண்ணசையால் வேந்தன் சென்றவழி, முன்பனிக்காலமும் பின்பனிக்காலமும் வந்து வருத்தலின் ஆற்றாத தலைவியைத் தோழி, வருவரென வற்புறுப்பவும் வன்புறை எதிரழிந்தவழி, தலைவன் 'யாங்குறித்த பருவம் வருந்துணையும் ஆற்றியிராள்' எனப் பின்பனிக்காலத்து வருகின்ற வரவுணர்ந்து தோழி கழியுவகையாற் கூறியது."

வாளாதி வயங்கிழாய்! வருந்துவள் இவளென
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மீளிவேற் றானையர் புகுதந்தார்
நீளுயர் கூடல் நெடுங்கொடி யெழவே.

---

(207) எஃகிடை தொட்டகார்க் கவின்பெற்ற ஐம்பால்போல்
மையற விளங்கிய துவர்மண லதுவது
ஐதாக நெறித்தன்ன அறலவிர் நீளம்பால்
அணிநகை இடையிட்ட ஈகையங் கண்ணிபோற்
பிணிநெகிழ் அலர்வேங்கை விரிந்தபூ வெறிகொளத்
துணிநீரால் தூமதி நாளால் அணிபெற
ஈன்றவள் திதலைபோல் ஈர்பெய்யுந் தளிரொடும்
ஆன்றவ ரடக்கம்போல் அலர்ச்செல்லாச் சினையொடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடும்
நல்லவர் நுடக்கம்போல் நயம்வந்த கொம்பொடும்
உணர்ந்தவர் ஈகைபோல் இணரூழ்த்த மரத்தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடும்
நயந்தார்க்கோ நல்லைமன் இளவேனில்! எம்போல;
பசந்தவர் பைதல்நோய் பகையெனத் தணித்துநம்
இன்னுயிர் செய்யும் மருந்தாகிப் பின்னிய
காதல ரெயிறேய்க்கும் தண்ணருவி நறுமுல்லைப்
போதாரக் கொள்ளுங் கமழ்குரற் கென்னுந்
தூது வந்தன்றே தோழி
துயரறு கிளவியோ டயர்ந்தீகம் விருந்தே.

(207) கலி. பாட்டு 31. துறை—"காலவரவுகண்டு ஆற்றாளாயின விடத்துத் தோழி காலத்தை நோக்கி 'அழகிதாகச் செய்தாய் வந்து' எனச் சொல்லி, தலைவிக்கு 'நங்காதலர் வருகின்றாரெனச் சொல்லிவந்த தூதுகாண் இது; நாம் விருந்தயர்கம்' எனச் சொல்லியது."

(208) வீறுசால் ஞாலத்து வியலணி காணிய
யாறுகண் விழித்தபோற் கயம்நந்திக் கவின்பெற
மணிபுரை வயங்கலுள் துப்பெறிந் தவைபோலப்
பிணிவிடு முருக்கிதழ் அணிகயத் துதிர்ந்துகத்
துணிகய நிழல்நோக்கித் துதைபுடன் வண்டார்ப்ப
மணிபோல அரும்பூழ்த்து மரமெல்லாம் மலர்வேயக்
காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது
தாதவிழ் வேனிலோ வந்தன்று வாரார்நம்
போதெழி லுண்கண் புலம்ப நீத்தவர்;
எரியுரு வுறழ இலவ மலரப்
பொரியுரு வுறழப் புன்குபூ வுதிரப்
புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்பத்
தமியார்ப் புறத்தெறிந் தெள்ளி முனியவந்து
ஆர்ப்பது போலும் பொழுதென் அணிநலம்
போர்ப்பது போலும் பசப்பு; நொந்து
நகுவனபோல் நந்தின கொம்பு; நைந்துள்ளி
உகுவது போலுமென் நெஞ்சு; எள்ளித்
தொகுபுட னாடுவ போலுமயில்; கையில்
உகுவன போலும் வளை; என்கண்போல்
இகுபறல் வாரும் பருவத்தும் வாரார்
மிகுவது போலுமிந் நோய்;
நரம்பின் தீங்குரல் நிறுக்குங் குழல்போல்
இரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூதத்
தூதவர் விடுதரார் துறப்பார்கொல் நோதக
இருங்குயில் ஆலு மரோ;
எனவாங்கு;

(208) ஷை, பாட்டு 32. துறை—"பருவவரவின்கண் வன்புறை யெதிரழிந்து ஆற்றாளாயினாளைத் தோழி தலைவனது வரவுணர்ந்து கூறி ஆற்றுவித்தது."

புரிந்துநீ; எள்ளுங் குயிலையும் அவரையும் புலவாதி
நீவிதழ் உண்கண்ணாய்! நெறிகூந்தல் பிணிவிட
நாள்வரை நிறுத்துத்தாஞ் சொல்லிய பொய்யன்றி
மாலைதாழ் வியன்மார்பர் துனைதந்தார்
காலுறழ் கடுந்திண்டேர் கடவினர் விரைந்தே.

---

(209) மன்னுயிர் ஏமுற மலர்ஞாலம் புரவின்று
பன்னீராற் பாய்புனல் பரந்தூட்டி யிறந்தபிற்
சின்னீரான் அறல்வார அகல்யாறு கவின்பெற
முன்னொன்று தமக்காற்றி முயன்றவ ரிறுதிக்கண்
பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போற்
பன்மலர் சினையுகச் சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப
இன்னமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினான்;

விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் விளிப்பவும்
பிரிவஞ்சா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவும்
கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
எரிபொத்தி யென்னெஞ்சஞ் சுடுமாயி னெவன்செய்கோ;

பொறைதளர் கொம்பின்மேற் சிதரினம் இறைகொள
நிறைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவும்
முறைதளர்ந்த மன்னவன் கீழ்க் குடிபோலக் கலங்குபு
பொறைதளர்பு பனிவாருங் கண்ணாயி னெவன்செய்கோ;

தளையவிழ்பூஞ் சினைச்சுரும்பு யாழ்போல இசைப்பவும்
கொளைதளரா தவர்தீமை மறைப்பென்மன் மறைப்பவும்
இளையழிய வாழ்பவன் ஆக்கம்போற் புல்லென்று
வளையானா நெகிழ்போடுந் தோளாயி னெவன்செய்கோ;

---

(209) ஷை, பாட்டு 34. துறை—"பருவங்கண்டு வன்புறையெதிரழிந்து ஆற்றாளாய தலைவிக்குத் தோழி அவன்வரவுணர்ந்து கழிபுவகையாற் கூறியது."

எனவாங்கு,
நின்னுண்ணோய் நீயுரைத் தலமரல் எல்லா! நாம்
எண்ணிய நாள்வரை யிறவாது காதலர்
பண்ணிய மாவினர் புகுதந்தார்
கண்ணுறு பூசல் கைகளைந் தாங்கே.

---

(210) மடியிலான் செல்வம்போல் மரனந்த அச்செல்வம்
படியுண்பார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப
மாயவள் மேனிபோல் தளிரீன அம்மேனித்
தாஅய சுணங்குபோல் தளிர்மிசைத் தாதுக
மலர்தாய பொழில்நண்ணி மணிநீர கயம்நிற்ப
அலர்தாய துறைநண்ணி அயிர்வரித் தறல்வார
நனியெள்ளுங் குயில்நோக்கி இனைபுகு நெஞ்சத்தால்
துறந்துள்ளா ரவரெனத் துனிகொள்ள லெல்லாநீ;

வண்ணவண் டிமிர்ந்தானா வையைவா ருயரெக்கர்த்
தண்ணருவி நறுமுல்லைத் தாதுண்ணும் பொழுதன்றோ
கண்ணிலா நீர்மல்கக் கவவிநாம் விடுத்தக்கால்
ஒண்ணுதால்! நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;

மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்தவர்
வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ
வலனுக வினையென்று வணங்கிநாம் விடுத்தக்கால்
ஒளியிழாய்! நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;

---

(210) ஷை, பாட்டு 35. துறை—"வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி 'இக்காலம் அல்லவோ அவர் வருதுமெனச் சொன்னகாலம்' என வன்புறை யெதிரழிந்தாளை 'நீ துனிகொள்ளல் அவர் வந்தார்' எனத் தலைவன் வரவுணர்ந்து தோழி ஆற்றுவித்தது."

நிலனாவில் திரிதரூஉம் நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ
பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்காற்
சுடரிழாய்! நமக்கவர் வருதுமென் றுரைத்ததை;
எனவாங்கு;
உள்ளுதொ றுடையுநின் உயவுநோய்க் குயிர்ப்பாகி
எள்ளுறு காதலர் இயைதந்தார் புள்ளியற்
காமர் கடுந்திண்டேர்ப் பொருப்பன்
வாய்மை யன்ன வைகலொடு புணர்ந்தே.

---

(211) கொடுமிடல் நாஞ்சிலான் தார்போல் மராத்து
நெடுமிசைச் சூழு மயிலாலுஞ் சீர
வடிநரம் பிசைப்பபோல் வண்டொடு சுரும்பார்ப்பத்
தொடிமகள் முரற்சிபோல் தும்பிவந் திமிர்தர
இயனெறீஇ யவைபோல எவ்வாயும் இம்மெனக்
கயனணி பொதும்பருட் கடிமலர்த் தேனூத
மலராய்ந்து வயின்வயின் விளிப்பபோல் மரனூழ்ப்ப
இருங்குயி லாலப் பெருந்துறை கவின்பெறக்
குழவி வேனில் விழவெதிர் கொள்ளும்
சீரார் செவ்வியும் வந்தன்று
வாரார் தோழிநங் காத லோரே;
பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று நுதல்
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன தோள்;
நனியறல் வாரும் பொழுதென வெய்ய
பனியறல் வாருமென் கண்;

---

(211) ஷை, பாட்டு 36. துறை—"காலங்கண்டு ஆற்றாத தலைவியது நிலைமைகண்டு ஆற்றாத தோழி, தான் ஆற்றாளாய் அவட்குக் கூறியது."

மலையிடைப் போயினர் வரனசைஇ நோயொடு
முலையிடைக் கனலுமென் னெஞ்சு;

காதலிற் பிரிந்தார் கொல்லோ வறிதோர்
தூதொடு மறந்தார் கொல்லோ நோதகக்
காதலர் காதலுங் காண்பாங் கொல்லோ
துறந்தவ ராண்டாண் டுறைகுவர் கொல்லோ யாவது
நீளிடைப் படுதலும் ஒல்லும் யாழநின்
வாளிடைப் படுத்த வயங்கீ ரோதி
நாளணி சிதைத்தலு முண்டென நயவந்து
கேள்வி யந்தணர் கடவும்
வேள்வி யாவியின் உயிர்க்குமென் னெஞ்சே.

(212) மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
தன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கன்னவில் தோளாயோ என்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்

இளங்கோவடிகள்.

---

(213) வாட லுழுஞ்சில் விளைநெற் றந்துணர்
ஆடுகளப் பறையின் அரிப்பன ஒலிப்பக்

---

(212) சிலப்பதிகாரம், 21 — வஞ்சினமாலை, வரி. 11—15.

குறிப்பு:— (1) கரிகால்வளவன் மகள்—ஆதிமந்தியார். இவர் நல்லிசைப் புலமை வாய்ந்தவர். வஞ்சிக்கோன்—ஆட்டன் அத்தி என்பான். இப்பெயர் அத்தி எனவும் வழங்கும். இவ்விருவர் வரலாறும் அடியில் வருமாறு:—

ஆதிமந்தியார், ஒருகால் தன் தந்தை கரிகால்வளவன் கழார்முன்றுறையில் நடத்திய நீர்விழாவிலே தன் கணவனான அத்தியுடன் நீர்விளையாட்டு நிகழ்த்தும் போது, அவனைக் காவிரிவெள்ளம் கவர்ந்துகொள்ள, இவர் அவனைக் காணாமல் பல்லிடங்களிலும் தேடிச்சென்று கடற்கரையில் அரற்றிக்கொண்டு நின்றார். அப்போது கடல் தன் அலைக்கரங்களால் ஆட்டனத்தியை ஏந்திக்கொண்டுவர, ஆதிமந்தியின் துயரை அறிந்த அங்கே நீராடிவந்த மருதி என்பாள், அவனைக் கண்டு நீரிற்பாய்ந்து அத்தியைக் கரைசேர்த்ததோடு, பெரிய கடலலையொன்று அந்த மருதியை இழுத்துச் சென்றது. ஆதிமந்திக்குக் காதலனைக்காட்டிய அவ்வுத்தமி, முடிவில் தன்னுயிரிழந்து பெரும்புகழ் பெற்றாள் என்க. சங்கப் புலவர் பலரும் இவ்வரலாற்றைச் சிறப்பித்தலைப் பின்வரும் பாடல்களிற் காண்க. இவ்வத்தியை வஞ்சிக்கோன் என்று இளங்கோவடிகள் கூறுதலால், சேரர்மரபினன் இவன் என்பது அறியப்படும்.

(213) அகநானூறு, 45. திணை—பாலை. துறை—வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

கோடை நீடிய அகன்பெருங் குன்றத்து
நீரிலா ராற்று நிவப்பன களிறட்டு
ஆளில் அத்தத் துழுவை யுகளுங்
காடிறந் தனரே காதலர் மாமை
அரிநுண் பசலை பாஅய்ப் பீரத்து
எழில்மலர் புரைதல் வேண்டும் அலரே
அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்
இன்னிசை யார்ப்பினும் பெரிதே யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
ஆதி மந்தி போலப் பேதுற்று
அலந்தனெ னுழல்வென் கொல்லோ பொலந்தார்க்
கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்
வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய
உடைமதி லோரரண் போல
அஞ்சுவரு நோயொடு துஞ்சா தேனே.

வெள்ளிவீதியார்.

---

**கருத்து:—** 'காதலர், நம்மைப்பிரிந்து காடுகடந்தார்; அதனால் நம்பால் உண்டான மாமைநிறம் பீர்க்கின் மலர் போன்றது. ஊரில் உண்டான அலரோ பெரிது; யான் வருத்தத்தால் தூக்கமின்றி ஆதிமந்திபோலக் காதலனைக் கைவிட்ட சிறுமையோடு துன்பத்துடன் தேடித்திரிவேனோ' என்றாள் தலைவி.

ஊரில் உண்டான அலர்மிகுதிக்கு, அன்னி என்பவன் குறுக்கைப்போர்க் களத்தில் திதியன் என்பானுடைய காவன்மரமான புன்னையை வெட்டித் துண்டித்தகாலையில் கூத்தர் எடுத்த புகழிசைமுழக்கம் உவமிக்கப்பட்டது. வானவரம்பன்—சேரன். இதுபாடியவரும் நல்லிசைப்புலமை மெல்லியலாருள் ஒருவர் ஆவர்.

(214) மண்கனை முழவமொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்டுறை யூரனெஞ் சேரி வந்தென
இன்கடுக் கள்ளின் அஃதை களிற்றொடு
நன்கல னீயும் நாண்மகி ழிருக்கை
அவைபுகு பொருநர் பறையின் ஆனாது
கழறுப என்பவவன் பெண்டிர் அந்திற்
கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற்
சுரியலம் பொருநனைக் கண்டி ரோவென
ஆதி மந்தி பேதுற் றினையச்
சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்
அந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே.

பரணர்

(215) இதலை மாமை தளிர்வனப் பழுங்கப்
புதலிவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்

(214) ஷை, 76. திணை—மருதம். துறை—“தலைமகனை நயப்பித்துக் கொண்டானென்று கழறக்கேட்ட பரத்தை தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.”

**கருத்து:**— தலைவன் என்சேரிக்குவந்த அவ்வளவிற்கே அவன் பெண்டிர் எம்மை இகழ்வராயின், ஆதிமந்தி துன்பத்தில் ஆழும்படி அவள்கணவனைக் காவிரி கொண்டொளித்தாற்போல, தலைவனை யான் பற்றிச்செல்ல எண்ணி யுள்ளேன் என்றவாறு.

“தலைவனது காமக்கிழத்தியாய இளமைப்பருவத்தாளொருத்தி, தன்பால் தலைவன் வருவதுபற்றித் தலைவி புலந்ததாகக் கேட்டவழிப் பெருமிதங்கொண்டு கூறியது” என்பர் நச்சினார்க்கினியர் (தொல்)

(215) ஷை, 135. திணை—பாலை. துறை—“தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றது.”

பசலை பாய்ந்த நுதலே னாகி
எழுதெழில் மழைக்கண் கலுழநோய் கூர்ந்து
ஆதி மந்தியின் அறிவுபிறி தாகிப்
பேதுற் றிசினே காதலந் தோழி!
காய்கதிர் திருகலிற் கனைந்துகால் கடுகி
ஆடுதளி ரிருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கின் அறைமிசைத் தாஅங்
காடிறந் தனரே காதலர் அடுபோர்
வீயா விழுப்புகழ் விண்தோய் வியன்குடை
ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போலக்
கலங்கின்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே.

பரணர்.

(216) வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்கென்
மேனி யாய்நலந் தொலைதலின் மொழிவென்
முழவுமுகம் புலராக் கலிகொ ளாங்கண்
கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்

---

**கருத்து:—** தோழீ! நம் காதலர் பிரிந்துசென்றார். என் நெஞ்சு, வேளிர் பதினால்வர்கூடித் தாக்கியதால் கழுவுள் என்ற தலைவனது காமூர் என்ற நகர் கலங்கியவாறு கலங்காநின்றது. அவர் இன்னும் வந்திலாமையால் காதலனைப் பிரிந்த ஆதிமந்திபோல அறிவுதிரிந்து மயங்கியுள்ளேன் எ-று.

(216) ஷை, 222. திணை—குறிஞ்சி. துறை—தலைமகன் சிறைப்புறத் தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

**கருத்து:—** கழார்த்துறையில் நடந்த நீர்விழாவில் ஆடிய ஆட்டனத்தியின் அழகினை விரும்பிக் காவிரி கவர்ந்துசெல்ல, அதனால் அவனைத் திசைமுழுதும் தேடி மதிமருண்டு வருந்திய ஆதிமந்திக்கு, அவள் காதலனைக்காட்டித் தான்

ஆட்ட னத்தி நலனயந் தரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
ஆதி மந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி தோழி பன்னாள்
உரவுரு மேறொடு மயங்கி
இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்த ணாறே.

பரணர்

---

(217) மணிமருள் மலர முள்ளி யமன்ற
துணிநீ ரிலஞ்சிக் கொண்ட பெருமீன்
அரிநிறக் கொழுங்குறை வெளவினர் மாந்தி
வெண்ணெ லரிநர் பெயர்நிலைப் பின்றை
இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்
பனிபடு சாய்ப்புறம் பரிப்பக் கழனிக்
கருங்கோட்டு மாஅத் தலங்குசினைப் புதுப்பூ
மயங்குமழைத் துவலையிற் றுஅ மூரன்
காமம் பெருமை யறியேன் நன்றும்

---

கடலிற்புகுந்து உயிர்நீத்த மருதி என்பவளைப் போல, தலைவன் பிரிவால் வருந்திய உனக்கு அவனைக் கொணர்ந்துகாட்டி யானும் புகழ்பெறுவேன் என்று தலைவிக்குத் தோழி கூறினள் என்க.

(217) ஷை, 236. திணை—மருதம். துறை—ஆற்றாமைவாயிலாகப் புக்க தலைமகன்நீக்கத்துக்கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**கருத்து:**—இரவில், தலைவன் சாந்தணிந்து பட்டாடை ஒளிர, நம் இல்லில் மகளிரைப்போல ஒருசார் நாணிநின்ற இருக்கைகண்டு மனமிளகியவளாய்;

உய்ந்தனென் வாழி தோழி! அல்கல்
அணிகிளர் சாந்தின் அம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை
அறியா மையின் அழிந்த நெஞ்சின்
ஏற்றிய லெழில்நடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்ட னத்தியைக் காணீ ரோவென
நாட்டி னட்டின் ஊரி னூரிற்
கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
ஆதி மந்தி போல
ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே.

பரணர்

---

(218) செல்லல் மகிழ்ந! நிற் செய்கட னுடையென்மன்
கல்லா யானை கடிபுனல் கற்றென
மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை

---

'ஆதிமந்திபோலத் துன்பத்தைச்சொல்லி மயங்குதலினின்றும் நான் பெரிதும் தப்பினேன்' என்று தோழிக்குத் தலைவி கூறலாயினள் என்க.

**குறிப்பு:—** (14-20) ஏறுபோன்ற எழில்நடையையும் மிக்கவலியினையும் மயிர்முடியினையுமுடைய ஆட்டனத்தியைக் கண்டீர் அல்லீரோ என்று நாடு தோறும் ஊர்தோறும் சென்றுகூறியும், என் தலைவனைக் கடல்கொண்டது போலும், புனல்கொண்டொளித்ததுபோலும் என்று தன் துன்பநிலையைச் சொல்லியும் காதலனைத் தப்பவிட்ட ஆதிமந்தி என்க.

(218) அகநானூறு, 376. திணை—மருதம். துறை—காதற்பரத்தை புலந்து சொல்லியது.

**கருத்து:—** தலைவனே! செல்லற்க. ஆட்டனத்தியின் அழகைவிரும்பிக் காவிரி அவனைக்கவர்ந்து சென்றதுபோலச் சேரிப்பரத்தை நின்னைக்கொண்டு

ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்
கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்
தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை
ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்
கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று
இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்பப்
புனல்நயந் தாடும் அத்தி அணிநயந்து
காவிரி கொண்டொளித் தாங்கு மன்னோ
நும்வயிற் புலத்தல் செல்லேம் எம்வயிற்
பசந்தன்று காண்டிசின் நுதலே அசும்பின்
அந்தூம்பு வள்ளை யழற்கொடி மயக்கி
வண்தோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்
துய்த்தலை முடங்கிறாத் தெறிக்கும் பொற்புடைக்
குரங்குளைப் புரவிக் குட்டுவன்
மரந்தை யன்னவென் னலந்தந்து சென்மே.

பரணர்

---

(219) நொடுத்தேன் மகிழ்ந! செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்ச லென்ற ஆஅ யெயினன்

---

சென்றாள்; நின்னிடம் எமக்கு வெறுப்பில்லை. ஆயினும் எம் நுதல் நிறமாறி அழகிழந்தது. அவ்வழகினைத் திரும்ப என்னிடந் தந்துசெல்க எ—று.

(18) மரந்தை—சேரநாட்டதொரு நகரம்; மாந்தையின் வேறானது.

(219) ஷை, 396. திணை—மருதம். துறை—காதற்பரத்தை தலைமகற்குச் சொல்லியது.

**கருத்து:—** தலைவனை எதிர்ப்பட்ட காதற்பரத்தை அவனைத் தடுத்து, **அத்தியின்** ஆடற்கோலத்தை விரும்பி அவனைக் காவிரி கொண்டொளித்தாற்

இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன்னுயிர் கொடுத்தனன் சொல்லிய தமையாது
தெறலருங் கடவுள் முன்னர்த் தேற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்து
ஆர்வ நெஞ்சந் தலைத்தலை சிறப்பநின்
மார்புதரு கல்லாய் பிறனு யினையே
இனியான் விடுக்குவெ னல்லென் மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந் துறைய
அடுந்திறல் அத்தி ஆடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின்
மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ
ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்னவென் நலந்தந்து சென்மே.

பரணர்

---

போல, நின் இல்லக்கிழத்தி நின்னை வவ்வுதல் கூடும்; ஆதலால், யான் நின்னை வெளியில் விடேன் என்று, ஆட்டனத்தி வரலாற்றை உவமைகூறிப் புலந்தனள் என்க.

**குறிப்பு:—** நன்னன் புன்னுநாடு என்றும் பாடம். நன்னன் புன்னுட்டைக் கடிந்த காலத்தில், ஆயெயினன் என்ற வேண்மான் அந்நாட்டார்க்கு அபய மளித்து, நன்னன் படைத்துணையாகிய மிஞிலியொடு போர்புரிந்து தன்னுயிர் இழந்தான் என்பது வரலாறு. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலோடு பொருது இறந்தவன் நன்னன் என்பது பதிற்றுப்பத்தால் தெரியவருதலின், அந்நன்னனுக்குப் பகையாய் உயிர்கொடுத்த ஆயெயினன் சேரன் படைத்துணை யானவன் என்று கருதலாம். புன்னுடு என்பது சேரமானுட்சிக்கு உட்பட்டதாகப் பிற்காலத்தும் இருந்தமை குறிப்பிடத்தக்கது (சேரன்—செங்குட்டுவன்.)

(220) மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமோர் ஆடுகள மகனே.

ஆதிமந்தி

---

அதியமான் நெடுமானஞ்சி.

(221) குன்றும் மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற என்னயந் தருளி யீதுகொண்டு
ஈங்கனஞ் செல்க தானென என்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்

---

(220) குறுந்தொகை 31. திணை—மருதம். துறை—நொதுமலர்வரைவுழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநின்றது.

**கருத்து:—** அயலார் தலைவியை மணஞ்செய்ய முயன்றுவந்த காலத்தில், அதுகாறும் தலைவனோடு தனக்குள்ள தொடர்புச் செய்தியை வெளியிடாதிருந்த தலைவி, "யான் ஆடுகளத்தில் துணங்கைக் கூத்து நிகழ்த்தும் இயல்புடையேன். ஆங்கு என்னோடும் நட்புச்செய்த தலைவனொருவன் உளன், பெருமைமிக்கோனாகிய அவனும் ஓர் ஆடுகளமகனுவன். யாங்கள் நிகழ்த்திய துணங்கைக்கூத்தில் எனக்குத் தலைக்கை தந்து, பின்பு என் கைவளைகள் நெகிழும்படி பிரிந்த அவன் இப்போது எங்குள்ளானோ? வீரர்கள் குழுமிய விழாவினும், மகளிர் குழுமிய துணங்கைக் கூத்தினும் மற்றும் பலவிடங்களினும் நான் அவனைத் தேடியும் கண்டேனில்லை" என்று முன்னிகழ்ந்த உண்மையைத் தோழிக்கு வெளிப்படுத்தினள் என்க.

**குறிப்பு:—** "இது காதலற்கெடுத்த ஆதிமந்தி பாட்டு. இவை தத்தம் பெயர்கூறிற் புறமாம் என்றஞ்சி வாளாது கூறினர்" என்பர் நச்சினார்க்கினியர் (தொல். அகத். 54, உரை).

(221) புறநானூறு, 207. திணை—பாடாண்டிணை. துறை—பரிசிற்றுறை.

காணா தீத்த இப்பொருட்கு யானோர்
வாணிகப் பரிசில னல்லென் பேணித்
தினையனைத் தாயினும் இனிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே.

பெருஞ்சித்திரனார்

---

(222) வாயி லோயே! வாயி லோயே!
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கு உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே!
கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி
தன்னறி யலன்கொல் என்னறி யலன்கொல்
அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே அதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை

“அதியமான் நெடுமான் அஞ்சியுழைச்சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது, இதுகொண்டு செல்கென்று அவன் பரிசில்கொடுப்பக் கொள்ளாது அவர் சொல்லியது.”

**கருத்து:**—பரிசில்பெற்றுச் செல்வதற்காகக் குன்றுகள் மலைகள் பலவற்றைக் கடந்து யான் வந்தேன் என்று சொல்லிநின்ற என்னை அன்புற்றருளி, ‘தான் இப்பொருளைக்கொண்டு இவ்வாறு போக” என்று சொல்ல, என்னை எத்தன்மையனாக அறிந்தான், வீரனான வேந்தன்? என்னை அழைத்துக்காணாமலே தந்த இப்பொருளை ஏற்பதற்கு, யான் ஓர் இலாபமே கருதிவந்த பரிசிலன் அல்லேன். பரிசிலரது கல்விமுதலியவற்றின் எல்லையை அறிந்து கொடுத்து விடுத்தால், அப்பரிசு தினையளவாயினும் விரும்பி ஏற்றற்குரிய பெருமையுடையதாகும் எ-று.

(222) ஷை, 206. திணையும் துறையும் அவை.

“அதியமான் நெடுமான்அஞ்சி பரிசில் நீட்டித்தானைப் பாடியது.”

**கருத்து:**—வாயில்காவலனே! கல்வியறிவாலுயர்ந்த பரிசிலர்க்கு அடையாத வாயிலைக்காப்பவனே! தலைவனாகிய நெடுமானஞ்சி தன்தரம் அறியாதவனோ?

மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினு மத்திசைச் சோறே.

ஔவையார்.

(223) ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
இழையணி யானை இயல்தேர் அஞ்சி
அதியமான் பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் களிறுதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே
அருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கவன் தாளே.

ஔவையார்.

அதுகிடக்க, என்றிறந்தான் அறியாதவனோ? அறிவும் புகழுமுடையோர் இறந்துபோன வறிய உலகமாக இஃது இல்லையே. எம்முடைய யாழ்முதலிய அடங்கிய பையைத் தூக்கிக்கொண்டேம். எம் தட்டுமுட்டுக்களையும் கட்டிக் கொண்டேம். கைத்தொழில் வல்ல தச்சப்பிள்ளைகள் காட்டிடஞ் சென்றால் அக்காட்டகம் அவர்க்கு எவ்வாறு பயன்படுமோ அவ்வாறே யாங்கள் யாதொரு திசையிடம் செல்லினும் அத்திசைக்கண் எங்கட்குச் சோறு உண்டு எ—று.

(223) டை, 101. திணை—அது; துறை—பரிசில்கடாநிலை.

கருத்து:— யாம் ஒருநாட் சென்றிலேம், இரண்டுநாட் சென்றிலேம்; பலநாளும் பயின்று பலரொடுகூடச் செல்லினும் முதற்சென்ற நாள்போன்ற விருப்பத்தையுடையவன், யானைதேர்ப் படைகளையுடைய அதியமான்அஞ்சி. பரிசிலைப் பெறுங்காலம் நீட்டிப்பினும் நீட்டியாதொழியினும், யானை தன் கொம்பிடையே வைத்த கவளம்போல நம் கையகத்ததே, அப்பரிசில்; ஒருகாலும் அது தப்பாது. அதனை நுகர ஆசைப்பட்ட நெஞ்சமே! நீ அதற்காக வருந்தவேண்டா. அவன்தான் வாழ்வதாக எ—று.

(224) யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்கு
அருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை
என்வாய்ச் சொல்லு மன்ன ஒன்னார்
கடிமதி லரண்பல கடந்த
நெடுமா னஞ்சி! நீ யருளன் மாறே.

ஔவையார்.

(225) ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும! எமக்கே மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெரும! நின் ஒன்னா தோர்க்கே.

ஔவையார்.

---

(224) ஷை, 92. திணை—அது. துறை—இயன்மொழி.

**கருத்து:**—யாழோசைபோல இசையால் இன்பமும் செய்யா; காலத்தோடும் கூடியிரா; பொருளும் அறியவாரா. ஆயினும், பிள்ளைகளுடைய மழலைச் சொற்கள் தந்தையர்க்கு அருளுதல் பொருந்தியன. பகைவர் மதிலரண்கள் பலவற்றையும் வென்ற நெடுமானஞ்சி! நீ அருளுதலால் என்வாய்ச் சொற்களும் அத்தன்மைய ஆயின எ—று.

(225) ஷை, 94. திணை—வாகை. துறை—அரசவாகை.

**கருத்து:**— ஊரிடத்தே சிறுபிள்ளைகள், தனது வெள்ளிய கொம்புகளைக் கழுவும்படி நீர்த்துறையிற்படியும் பெரிய களிறு அப்பிள்ளைகட்கு எவ்வளவு எளியதாய் இனியதாகும், அவ்வாறே பெருமானே! எங்கட்கும் நீ எளியனும் இனியனுமாகின்றாய். ஆனால், அக்களிற்றின் நெருங்கமுடியாத மதம்பட்ட நிலைமை எவ்வாறு இன்னாதாகும், அதுபோலப் பெரும! நின் பகைவர்க்கு இன்னாதவனா யுள்ளாய் எ—று.

(226) அறவை நெஞ்சத் தாயர் வளரு
மறவை நெஞ்சத் தாயி லாளர்
அரும்பலர் செருந்தி நெடுங்கான் மலர்கமழ்
....................மன்ன முற்றத்து
ஆர்வலர் குறுகி னல்லது காவலர்
கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
அரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற பன்னா ளன்றியும்
சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்
வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருநன் அளியன் தானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை
முதுநீர்ப் பாசி யன்ன உடைகளைந்து
திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியும்
அமிழ்தன மரபின் ஊன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி
முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற

---

(226) ஷை, 390. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

**கருத்து:—** என் தடாரிப்பறையை முழக்கிக்கொண்டு பிறரைப் பாடிநின்ற பலநாள்போலன்றி, அவனது நகர்க்குட் சென்று அவன் வாயிலை அடைந்த **அன்**றிரவே, 'கடைவாயிலில் நின்ற பொருநன் அளிக்கத்தக்கான்' என்று அருளி, தன்னிடம் யான் வருதலைவிரும்பி, என் அரையிற்கட்டிய பாசிபோன்ற நைந்த உடையைக்களைந்து புத்துடையை உடுக்கச்செய்தும், மகிழ்ச்சிவிளைக்கும் மதுவோடு அமிழ்தம்போலும் அடிசிலை வெள்ளிக்கலத்தில் பெய்து ஊட்டியும், ஊர்ப்பொதுவிடத்துக் கூடியிருந்த என் சுற்றத்தின் வறுமை நீங்க

அகடுநனை வேங்கை வீகண் டன்ன
பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே உண்டுறை
மலையல ரணியுந் தலைநீர் நாடன்
கண்டாற் கொண்டுமவன் திருந்தடி வாழ்த்தி
..............................................
வானறி யலவென் பாடுபசி போக்கல்
அண்ணல் யானை வேந்தர்
உண்மையோ வறியல் காண்பறி யலரே.

ஔவையார்.

---

(227) வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி!
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும! நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட

---

வேண்டிய நெற்போரை நல்கியும் 'மற்றும் வேண்டிய பொருள்களைக் கொள்க' என்றான், காவிரியின் தலைநீர் பாயும் நாடனை அதியமான். எ—று.

(227) ஷை, 91, திணை—பாடாண்டிணை. துறை—வாழ்த்தியல்.

"அவனை (அஞ்சியை) அவர் (ஔவையார்) நெல்லிப்பழம்பெற்றுப் பாடியது"

**கருத்து:—** வீரவாளைக் கையிற்கொண்டு பகைவரை வென்ற **அதியர்** கோமானே! **அஞ்சி!** பெரியமலையுச்சியில் உண்டான சிறிய இலைகளையுடைய நெல்லியின் இனிய பழத்தை, இது பெறுதற்கரியது என்று **கருதாது** **அதனாற்** பெறும் பேற்றினை எமக்குக் கூறாது மனத்துள் அடக்கிக்கொண்டு

*சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது*
*ஆதல் நின்னகத் தடக்கிச்*
*சாதல் நீங்க எமக்கீத் தனையே.*

ஔவையார்.

---

(228) *ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்*
*தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்*
*கவிழ்ந்த மண்டை மலர்க்குந ர் யாரெனச்*
*சுரன்முத லிருந்த சில்வளை விறலி!*
*செல்வை யாயிற் சேணோ னல்லன்*
*முனைசுட வெழுந்த மங்குல் மாப்புகை*
*மலைசூழ் மஞ்சின் மழகளி றணியும்*
*பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி*
*பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை*
*மெழுகுமெல் லடையிற் கொழுநிணம் பெருப்ப*
*அலத்தற் காலை யாயினும்*
*புரத்தல் வல்லன் வாழ்கவன் றாளே.*

ஔவையார்.

*சாதல் நீங்க எமக்கு அளித்தாய்; ஆகலால், பிறைசூடிய திருமுடியினையும் நீலமணிமிடற்றினையும் உடைய சிவபிரான்போல நீ நிலைபெறுவாயாக எ—று.*

**குறிப்பு:—** *சாதற்குக் காரணமாகிய நஞ்சுண்டும் நிலைபெற்றிருந்த சிவபிரான்போல, நீயும் சாவாதிருத்தல் வேண்டுமென்பதாம்.*

(228) ஷை, 103. *திணை—பாடாண்டிணை; துறை—விறலியாற்றுப்படை.*

**கருத்து:—** *ஒருதலையில் பதலைப்பறையும் மற்றைத்தலையில் முழவும் தொங்கும்படி காவடியைத்தூக்கிக்கொண்டு, 'இடுவோரில்லாமையால் கவிழ்ந்த மண்டையாகிய என் உண்கலத்தை மலர்ப்பவர் யாவர்' என்று பாலைநெறியில் இருந்து வருந்தும் விறலி! இப்போது பகைமுனையை அழித்தவனாய், பகைவர்*

(229) இழையணிப் பொலிந்த ஏந்துகோட் டல்குல்
மடவர லுண்கண் வாணுதல் விறலி!
பொருநரு முளரோநும் அகன்றலை நாட்டென
வினவ லானுப் பொருபடை வேந்தே!
எறிகோ லஞ்சா அரவி னன்ன
சிறுவன் மள்ளரு முளரே யதாஅன்று
பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்னு மென்னையு முளனே.

ஔவையார்.

---

(230) இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து

---

தேயத்துள்ளான் அதியமானஞ்சி. அவன் தூரத்துள்ளவனும் அல்லன். நீ அவன்பாற் செல்வையாயின், உலகம் வறுமையுற்ற காலமாயினும் ஓயாமல் உண்ணவும் தின்னவும் நின் உண்கலம் நிரம்ப அளிக்கவல்லன். அவன்தாள் வாழ்வதாக என்று.

(229) ஷை, 89. திணையும் துறையும் அவை.

கருத்து:— 'அழகுமிக்க விறலி! 'உங்கள் நாட்டில் என்னோடு பொருவாரும் உளரோ' என்று என்னைக் கேட்கின்ற போர்வேந்தே! நீ போர்புரியக் கருதினால், அடிக்குங்கோலுக்கு அஞ்சாது எதிர்மண்டும் பாம்பைப்போன்ற வலிய வீரரும் உளர். அதுவேயன்றி, மன்றில்தொங்கும் முழவின்கண்ணி லிருந்து காற்றடித்துண்டாம் ஓசையைக்கேட்பின், அது போர்ப்பறை என்று மகிழும் என்னுடைய தலைவனும் உளன்— என்று அஞ்சியின் வீரம் சிறப்பிக்கப் பட்டவாறு.

(230) ஷை, 95. திணை—பாடாண்டிணை. துறை—வாண்மங்கலம்.

"அவன் (அதியமான் நெடுமானஞ்சி) தூதுவிடத் தொண்டைமானுழைச் சென்ற ஔவைக்கு அவன் படைக்கலக்கொட்டில் காட்ட அவர் பாடியது."

கருத்து:— இவைதாம், மயிற்பீலி அணியப்பட்டும், மாலை சூடப்பட்டும், அடிப்பிடி அழகுபடுத்தப்பட்டும், தைலம் பூசப்பெற்றும், காவலுள்ள அரண்

கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்
உண்டாயிற் பதங்கொடுத்து
இல்லாயி னுடனுண்ணும்
இல்லோர் ஒக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.

**ஔவையார்.**

---

(231) உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரல்
மறப்புலி யுடலின் மான்கண முளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
இருளு முண்டோ ஞாயிறு சினவின்
அச்சொடு தாக்கிப் பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய
வரிமணல் ஞெமரக் கற்பக நடக்கும்

---

மனைக்கண்ணே அலங்காரமாக உள்ளன. செல்வமுண்டாயிற் கொடுத்தும், இல்லையாயிற் பலரோடு கூடியுண்டும் வறியர்சுற்றத்துக்குத் தலைவனாகவுள்ள எம் வேந்தனுடைய கூரிய வேல்களாகிய அவையோ, பகைவரைக் குத்துதலால் நுனி முரிந்து கொல்லனது பணிக்களரியாகிய கூடத்தில் எந்நாளும் தங்குவனவாயின—என்று அதியமானது கொடைச்சிறப்பையும் வென்றிச்சிறப்பையும் பழித்ததுபோலப் புகழ்ந்தவாறு.

(231) ஷை, 90. திணையும் துறையும் அவை.

**கருத்து:—** மலைச்சாரலில் வீரமிக்க புலி சீறுமாயின் அதனை எதிர்க்கவல்ல மானினமும் உண்டோ? ஞாயிறு வெம்பியெழுமாயின், வானத்திலும் திசைகளிலும் செறியும் இருளும் உண்டோ? பண்டங்களின் பாரமிகுதியால் நிலத்துட்பதிந்த சகடத்தினது ஆழ்ச்சியைப் போக்கவல்ல எருத்துக்குப்

பெரிமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ
எழுமரங் கடுக்கும் தாள்தோய் தடக்கை
வழுவில் வன்கை மழவர் பெரும!
இருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே.

ஔவையார்

(232) களம்புகல் ஓம்புமின் தெவ்விர்! போரெதிர்ந்து
எம்முளும் உளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே.

(233) யாவிர் ஆயினும் கூழை தார்கொண்டு
யாம்பொருது மென்ற லோம்புமின் ஓங்குதிறல்
ஒளிறிலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூண் அம்பகட்டு மார்பின்

போதற்கரிய துறையுமுளதோ? அவைபோல, வீரர்க்குத் தலைவனே! நீ போர்க்களத்துப் புகுவையாயின் நின் நிலத்தைக் கைப்பற்றி ஆரவாரிக்கும் வீரரும் இவ்வுலகில் உளரோ; இல்லையன்றே—என்று அதியமானது வீரத்திறத்தைப் புகழ்ந்தவாறு.

(232) ஷை 87. திணை—தும்பை. துறை—தானைமறம்.

**கருத்து:—** பகைவீர்! போரில் மாறுபாடுகொண்டு நீவிர் அமர்க்களத்திற் புகுதலைத் தவிருங்கள். ஒருநாளில் எட்டுத்தேர் செய்யவல்ல தச்சன் ஒரு மாதங்கூடி ஆராய்ந்து செய்த தேர்க்காலை யொப்பவனும், எங்களுள்ளும் ஒரு வீரன் உளன்—என்று அதிகமானது வீரத்திறத்தைப் புகழ்ந்தவாறு.

(233) ஷை, 88. திணையும் துறையும் அவை.

**கருத்து:—** பூணணிந்த வலிய மார்பினையும் முழவுபோலுந் தோளினையுமுடைய என் இறைவனை அஞ்சியைக் காணாத முன்பு, எப்படிப்பட்டவரா

விழவுமேம் பட்ட நற்போர்
முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே.

ஔவையார்.

(234) போற்றுமின் மறவீர்! சாற்றுதும் நும்மை
ஊர்க்குறு மாக்க ளாடக் கலங்கும்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை
நுண்பல் கருமம் நினையாது
இளையனென் றிகழிற் பெறலரி தாடே.

ஔவையார்.

(235) உடைய ராயி னுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயும்
மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி

யினும் தம் படைவலிகொண்டு அவனோடு பொரக்கூடும் என்று பேசிக்கொள்ளலாம்; கண்டபின் அதுசெய்தல் அரிதாம் என்று அதியமானது பேராற்றலைக் கூறியவாறு.

(234) ஷை, 104. திணை—வாகை. துறை—அரசவாகை.

கருத்து:— வீரர்காள்! நுமக்கு நாங்கள் அறிவிப்பேம். நீங்கள் பாது காத்துக்கொண்மின். ஊரிலுள்ள இளஞ்சிறுவர்கள் ஆடக்கலங்கும் காலளவான நீரினுள்ளே யானையையும் கொன்றுவீழ்க்கும் இழுத்தல்வலியுள்ள முதலையை ஒப்பான் எம் இறைவன். அவனது நுண்ணிய செயல் பலவற்றையும் நினையாதே, இளையனென்று அவனை நீவிர் இகழ்ந்து மதியாதிருப்பீராயின், நுங்களுக்கு வென்றிபெறுதல் அரிது எ—று.

(235) ஷை, 315. திணை—வாகை. துறை—வல்லாண்முல்லை.

கருத்து:—நெடுமானஞ்சி செல்வமுள்ளபோது பலரோடுண்ணுதல் வல்லவனுவன். படைவீரர் முதலிய தனக்குரியவரினும் மிகுதியாக இரப்போர்க்கு

இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்தான் தோன்றுங் காலே.

**ஔவையார்.**

---

(236) போர்க்குறைஇப் புகன்றுகழித்தவாள்
உடன்றவர்காப்புடை மதிலழித்தலின்
ஊனுற மூழ்கி யுருவிழந் தனவே
வேலே, குறும்படைந்த வரண்கடந்தவர்
நறுங்கள்ளின் நாடுநைத்தலிற்
சுரைதழீஇய இருங்காமொடு
மடைகலங்கி நிலைதிரிந்தனவே
களிறே, எழூஉத்தாங்கிய கதவமலைத்தவர்
குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற்
பரூஉப்பிணிய தொடிகழிந்தனவே

---

அளிப்பவனுவன். பெண்டிர்விரும்பும் துணைவனுவன். அவன், வீட்டினிறப்பிற் செருகப்பட்ட தீக்கடைகோலைப்போலத் தன்வலி வெளிப்பட வேண்டாத காலத்து அடங்கியிருக்கவும் வல்லன்; வெளிப்படத் தோன்றவேண்டிய காலத்து அந்தக்கடைகோலாலே கக்கப்பட்ட தீப்போலத் தோன்றவும் வல்லன் எ-று,

(236) ஷை, 97. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

கருத்து:— போர்செய்தற்கு உறைகழித்த அவன் (அதியமான்) வாள்கள், பகைவருடலிற் குளித்தலால் வடிமிக்கனவாயின. வேல்களோ, பகைநாடழித்தலால், காம்புடனே ஆணிகலங்கி நிலைகெட்டன. அவன் களிறுகள்தாம், பகையரணை அழித்தலால், இறுகப் பிணித்த கிம்புரிகள் கழன்றன. அவன் குதிரைகள்தாம் பகைவர்மார்புகளைத் துகைத்து ஓடுதலால், குருதியுடன் கூடிய குளம்பையுடையவாயின. அவன்தானும், அம்புபடுதலால் துளைபட்ட

மாவே, பரந்தொருங்கு மலைந்தமறவர்
பொலம்பைந்தார் கெடப்பரிதலிற்
களனுழந் தசைஇய மறுக்குளம் பினவே
அவன்றானும், நிலந்திரைக்கும் கடற்றானைப்
பொலந்தும்பைக் கழற்பாண்டிற்
கணைபொருத துளைத்தோலன்னே
ஆயிடை, உடன்றோ ருய்தல் யாவது தடந்தாட்
பிணிக்கதிர் நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்குரித் தாகல் வேண்டிற் சென்றவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே மறுப்பின்
ஒல்வா னல்லன் வெல்போ ரானெனச்
சொல்லவுந் தேறீ ராயின் மெல்லியற்
கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக்
குறுந்தொடி மகளிர் தோள்விடல்
இறும்பூ தன்றஃ தறிந்தா டுமினே.

ஔவையார்.

---

(237) முனைத்தெவ்வர் முரணவியப்
பொரக்குறுகிய நுதிமருப்பினின்

---

பரிசையுடையன். அவ்விடத்து அவனால் வெருளப்பட்டோர் பிழைத்தல் எங்கேயுள்ளது? நும் வளமிக்க பழைய ஊர்கள் நுமக்கு உரியவாக விரும்பினால், பகைவீர்! நேரிற்போய் அவனுக்குத் திறைகொடுத்தல் வேண்டும். கொடீராயின் உடம்படுவானல்லன். இவ்வாறு யான் சொல்லவும் தெளியீராறல், நும் அழகிய உரிமைமகளிரது தோளைப் பிரிந்துறைதல் வியப்பன்று இதனை அறிந்து போர்செய்வீராக. எ-று.

(237) ஷை 93. திணை—வாகை. துறை—அரசவாகை. திணை வஞ்சியும் துறை கொற்றவள்ளையுமாம்.

**கருத்து:—**நின் போர்யானைகள் போகக்கண்ட பகைவர், தம் மதிலரண்களின் கதவங்களையும் கணையமரங்களையும் புதியவாயிடுதற்குப் பழையவற்றைக்

இனக்களிறு செலக்கண்டவர்
மதிற்கதவ மெழுச்செல்லவும்
பிணனழுங்கக் களனுழக்கிச்
செலவமைஇய மறுக்குளம்பினின்
இனநன்மாச் செலக்கண்டவர்
கவைமுள்ளிற் புழையடைப்பவும்
மார்புறச் சேர்ந்தொல்காத்
தோல்செறிப்பினின் வேல்கண்டவர்
தோல்கழியொடு பிடிசெறிப்பவும்
வாள்வாய்த்த வடுப்பரந்தநின்
மறமைந்தர் மைந்துகண்டவர்
புண்படுகுருதி யம்பொடுக்கவும்
நீயே, ஐயவி புகைப்பவும் தாங்கா தொய்யென
உறுமுறை மரபிற் புறநின் றுய்க்கும்
கூற்றத் தனையை யாகலிற் போற்றார்
இரங்க விளிவது கொல்லோ வரம்பணைந்து
இறங்குகதி ரலம்வரு கழனிப்
பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே.

ஔவையார்.

(238) அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்
அரும்பெறல் மரபிற் கரும்பிவண் தந்தும்

---

கழிக்கவும், நின் போர்க்குதிரைகள் செல்லக்கண்ட அப்பகைவர், வேலமுட்களால் காட்டுவாயில்களை அடைக்கவும், நின் வேற்படையைக்கண்ட அவர் தம் இடுகென்னும் படையிலே காம்புடன் பிடியைச் செறிக்கவும், நின் வீரரின் வலிமையைக்கண்ட அப்பகைவர் தம் அம்புகளைத் தூணியகத்தே ஒடுக்கிக் கொள்ளவும் கூற்றத்தை ஒப்பாகி நீ அவருயிரைக் கொள்ளுகின்றாய். வளம்பொருந்திய அப்பகைவரது நாடு, அவர் இரங்கும்படி கெடுவது கொல்லோ! என்றும்.

(238) ஷை, 99. திணையும் துறையும் அவை.

**கருத்து:**— தேவர்களை வழிபட்டு அவர்க்கு வேள்வியில் ஆவுதிகளை அருந்து

நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல
ஈகையங் கழற்கால் இரும்பனம் புடையற்
பூவார் காவிற் புனிற்றுப்புலால் நெடுவேல்
எழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்
வழுவின் றெய்தியும் அமையாய் செருவேட்டு
இமிழ்குரல் முரசின் எழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் னாற்றல் தோற்றிய
அன்றும் பாடுநர்க் கரியை யின்றும்
பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி யேந்திய தோளே.

ஔவையார்.

வித்தும், பெறுதற்கரிய கரும்பை விண்ணுலகத்தினின்றும் இவ்வுலகத்திற் கொண்டுவந்து தந்தும் உலகமுழுதும் ஆண்டவின் முன்னோர்போல, வீரக் கழலணிந்த காலினையும், பனந்தோடாகிய தாரினையும், வானோர் வந்திருந்த தாகிய காவினையும், நெடிய வேலினையுமுடையையாய், எழிலார்ந்தினைய முடைய அரசுரிமையைத் தவறுதலின்றி நீ பெற்றாயாயினும் அதனோடு அமையாமல் போரைவிரும்பி எழுஅரசரையும் எதிர்த்துவென்று நின் ஆற்றலைத் தோற்றுவித்த அன்றும் பாடுநர்க்கு அரியவனும் இருந்தாய். முரண்மிக்க கோவலூரையும் பிறஅரண்களையும் அழித்துவென்ற நின் தோளை இன்றும் காணும் பரணன் பாடினன் [illegible]

**குறிப்பு:—**(5) அதியமானுக்குப் பனந்தார்கூறியது சேரமாற்கு உறவாதலின். (6) பூவார் கா—வானோர் இவன் முன்னோர்க்கு வரங்கொடுத்தற்காக வந்திருந்ததொரு சோலை. (11–12) இன்றும் பரணன் பாடினன் என்றது அவனும் தன் பெருமையாற் பாடினான்; பிறராற் பாடப்படுதல் அரிது என்றதாம்.

**(239)** கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசிவெண் டோடு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னு மாறாது சினனே யன்னோ
உய்ந்தன ரல்லரிவன் உடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னாவே.

**ஔவையார்.**

**(240)** திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்

(239) ஷை, 100. திணையும் துறையும் அவை.

“அதியமான், தவமகன் பிறந்தவனைக் கண்டானை ஔவையார் பாடியது.”

**கருத்து:**—கையில் உள்ளது வேல்; காலினிடத்தது வீரக்கழல்; உடம்பின் கண்ணது வேர்வை; மிடற்றின் கண்ணது ஈரம்புலராத பசியபுண்; இளம்பனையின் உச்சியில் உள்ள ஊசித்தன்மையமைந்த தோட்டையும் வெட்சி மலரையும் வேங்கைப்பூவுடன் சூடி இளம்புலியொடு பொருத யானைபோல் இன்னமும் சினம் நீங்கிற்றில்லை; அந்தோ! இவனை இவ்வாறு சினப்பித்தோர் பிழைத்தவரல்லர்; பகைவரை வெகுண்டு பார்த்த இவன்கண்கள், பிறந்த தன் புதல்வனை நோக்கியும் சிவப்பு நீங்காவாயின எ—று.

(240) ஷை, 93. திணை— வாகை; துறை—அரசவாகை.

“அவன் (அதியமான் நெடுமான் அஞ்சி) பொருது புண்பட்டுநின்றானை அவர் (ஔவையார்) பாடியது.”

தார்தாங் குதலு மாற்றார் வெடிபட்டு
ஓடல் மரீஇய பீடில் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதல் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலும் உய்ந்தனர் மாதோ
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்து
அண்ணல் யானை யடுகளத் தொழிய
அருஞ்சமம் ததைய நூறிநீ
பெருந்தகை! விழுப்புண் பட்ட மாறே.

**ஔவையார்.**

**(241)** எறிபுனக் குறவன் குறைய லன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினும் குறுகுக குறுகாது சென்று

**கருத்து:**—நின்னொடும் எதிர்த்துவந்த அரசர்கள் போரிற் சிதறியழிகையாலும், நீ சீரிய புண்பட்டபடியாலும் நோய்வாயிலாக இறந்த உடம்பை, வாளாற்படாத குற்றம் நீங்கவேண்டி அந்தணர் தருப்பைப்புல்லிற் கிடத்தி 'வீரசுவர்க்கம் பெற்ற வேந்தர் சென்ற உலகத்திற் செல்க' என்று வாளோச்சி அடக்கும் இழிவினின்றும் நின் பகைவர் தப்பினார்கள். பெருந்தகாய்! இனி நின்னொடு எதிர்ப்பார் இல்லாமையால், முரசுமுழங்கச் சென்று போர்வெல்லுதல் என்பது உனக்கு எங்கேயுள்ளது?

(241) ஷை, 231. திணை—பொதுவியல். துறை—கையறுநிலை.

**கருத்து:**—கரியவிறகால் அடுக்கப்பட்ட ஈமத்தின்கண்ணே எரியும்அழலால் இவனுடல் சுடப்பட்டுச் சிறுகினும் சிறுகுக. சிறுகாமல் விசும்புற நீளினும்

விசும்புற நீளினும் நீள்க பசுங்கதிர்த்
திங்க ளன்ன வெண்குடை
ஞாயிற் றன்னோன் புகழ்மா யலவே.

ஔவையார்.

---

**(242)** இல்லா கியரோ காலை மாலை
அல்லா கியர்யான் வாழு நாளே
நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே.

ஔவையார்.

---

**(243)** சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே

---

நீஉ. மதிபோலும் வெண்கொற்றக்குடையையுடைய ஒள்ளிய ஞாயிற்றை யொத்த இவனது புகழ் ஒருகாலும் மாயா எ-று.

(242) ஷை, 232. திணையும் துறையும் அவை.

**கருத்து:—** அவனையின்றிக் கழிகின்ற காலையும் மாலையும் இனி எனக்கு இல்லையாகுக. யான் உயிர்வாழும் நாள் எனக்கு ஒருபயனும் படாமையால் அவையும் அல்லவாகி ஒழிக. நடப்பட்ட கல்லின்கண்ணே பீலியைச்சூட்டி தெளித்த மதுவைச் சிறுகலத்தால் உகுப்பவும் அதனைக் கொள்வானோ! உயர்ந்த மலைபொருந்திய நாடுமுழுதும் கொடுப்பவும் கொள்ளாதவன் (ஆகிய அதியமான் அஞ்சி) எ-று.

(243) ஷை, 235. திணையும் துறையும் அவை.

**கருத்து.—** சிறிய அளவுள்ள மதுவைப் பெறுவானாயின் எங்களுக்கு அதனைத் தருவன், அது போயிற்றே! பேரளவான மதுவைப் பெறுவானாயின்

யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயு மன்னே
அம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநருமில்லைப் பாடுநர்க்கொன் றீகுநருமில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்

அதனை யாமுண்டு பாட எஞ்சிய மதுவைத் தான்விரும்பி நுகர்வான், அதுவும் போயிற்றே! சிற்றளவாகச் சோறுபெற்றாலும் யாங்களருந்த மிகப்பலவாக உண்கலங்களையிட்டுக் கூட உண்பன், அதுகழிந்ததே! பேரளவாகச் சோறு பெற்றாலும் அவ்வாறே பலரொடு கூட உண்பன், அதுவும்கழிந்ததே. அம்போடு வேல் தைத்து உருவும் இடமாகிய போர்க்களமுழுதும் அவன் சென்று நிற்பன், அது கழிந்ததே! நரந்தப்பூ நாறும் தன் கைகளால், புலால்நாறும் எம்முடைய தலைகளை அருளோடு தடவிக்கொடுப்பான்; அதுகழிந்ததே! அவனது மார்பகத்துப் பாய்ந்துதைத்த வேலானது, பெரிய பாணரது அகன்ற மண்டையின் துளையை உருவி, இரப்பாளர் கையுள்ளும் தைத்துருவி, தான் புரந்துவந்த சுற்றத்தாரது புல்லிய கண்ணிற்பாவை ஒளிமழுங்கச்செய்து, அழகிய சொல்லையாராயும் நுண்ணிய ஆராய்ச்சியையுடைய புலவரது நாவின் கண்ணே போய் வீழ்ந்தது; எமக்குப் பற்றாகிய இறைவன் எவ்விடத்துள்ளான் கொல்லோ? இனிப் பாடுவாரும் இல்லை; பாடுவார்க்கு ஒன்று ஈவாரும் இல்லை. குளிர்ந்த நீர்த்துறையிலே பகன்றையின் தேன்மிக்க பெரியமலர் பிறராற்

சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன் றீயாது வீயும் உயிர்தவப் பலவே.

ஔவையார்.

---

(244) கன்றமர் ஆயங் கானத் தல்கவும்
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவுங்
களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்
வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட்
பொய்யா எழினி பொருதுகளஞ் சேர
ஈன்றோள் நீத்த குழவி போலத்
தன்னமர் சுற்றந் தலைத்தலை யினையக்
கடும்பசி கலக்கிய இடும்பைகூர் நெஞ்சமொடு
நோயுழந்து வைகிய உலகினும் மிகநனி
நீயிழந் தனையே அறனில் கூற்றம்!
வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான்
வீழ்குடி யுழவன் வித்துண் டாங்கு
ஒருவ னுருயி ருண்ணு யாயின்
நேரார் பல்லுயிர் பருகி
ஆர்குவை மன்னேவவ னமரடு களத்தே.

சூடப்படாமற் கழிந்தாற்போலப் பிறர்க்கு ஒரு பொருளைக் கொடுக்காது, மாய்ந்துபோகும் உயிர்கள் உலகில் மிகப்பல எ—று.

(244) ஷை, 230. திணை—பொதுவியல். துறை—கையறுநிலை.

"அதியமான் தகடூர்பொருது வீழ்ந்த எழினியை அரிசில்கிழார் பாடியது."

**கருத்து:—** கன்றைமேவிய ஆனிரை மேய்ந்தகாட்டினிடத்தே பிறிதொன்றால் ஏதமின்றிக் கிடப்பவும், காட்டின்வழிப்போவார் தாம்வேண்டிய விடத்தே வருந்தாமற்றங்கிச் செல்லவும், களத்தில் நெற்பொலி காவலின்றியே கிடப்பவும் தன் செங்கோலாட்சி செலுத்திய எழினி பொருது போர்க்களத்தின் கண்ணே வீழ்தலால், பெற்றதாயாற் கைவிடப்பட்ட குழவிபோல இவ்வுலகம் வருந்தும் விதனத்தினும், மிகப்பெரிதாக நீ இழந்தாய்; அறமில்லாத கூற்றமே

(245) முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமி ழருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்ன தாகக் கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன்றுணைப் பயிருங் குன்ற நாடன்
குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியல னன்பின னெனநீ
வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்!
நல்லை காணிற் காதலந் தோழீ
கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயவரு பனுவற்
றொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்

(245) அகநானூறு, 352. திணை—குறிஞ்சி. துறை—வரைந்தெய்திய பின்றை மணமனைக்கட்சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

வரைவுமலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

**கருத்து:**—தோழீ! குன்றநாடனை தலைவன் நற்குலத்தவன், தன்னோடு கலந்தவரைப் பிரியாதவன், பொய்ம்மொழி சொல்லாதவன், அன்புடையன் என்று அவன்பெருமைகளைக் கூறி என்னோடு கூட்டிவைத்தனையன்றோ. அவ்வாறே என் காதலன், அதியமானஞ்சியின்புகழை நிலைபெறச்செய்த பாண்மகனுனவன் நூன்முறைப்படி அமைத்த இசைப்பண்ணைக் காட்டிலும், புதியதாக இயற்றிய இசைத்திறத்தைக்காட்டிலும், வதுவைநாளில் அடைந்த மகிழ்ச்சியினும் எமக்கு மிக இனியனாக உள்ளான் எ—று.

**குறிப்பு:**— 1–7. கற்பாறையிடமாக மயில் நின்றுகொண்டு தன் முன்னே ஆடிநிற்க, பின்நிற்கும் ஆண்குரங்கொன்று பலாப்பழத்தைக் கையிற்கொண்டு

புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினு மினியனா லெமக்கே.

அஞ்சியத்தை மகள் நாகையார்.

---

(246) அம்ம வாழி தோழி! காதலர்
வெண்மணல் நிவந்த பொலங்கடை நெடுநகர்
நளியிருங் கங்குற் புணர்குறி வாய்த்த
களவுங் கைம்மிக அலர்ந்தன்று அன்னையும்
உட்கொண் டோவாள் காக்கும் பிற்பெரிது
இவணுறைபு எவனோ அளியளென் றருளி
ஆடுநடைப் பொலிந்த புகற்சியி னாடுகோள்
அள்ளனைப் பணித்த அதியன் பின்றை
வள்ளுயிர் மாக்கிணை கண்ணவிந் தாங்கு
மலைகவி னழிந்த கனைகடற் றருஞ்சுரம்
வெய்ய மன்றநின் வையெயிறு உணீஇய
தண்மழை யொருநாள் தலையுக ஒண்ணுதல்
ஒல்கியல் அரிவை நின்னொடு செல்கஞ்
சின்னாள் ஆன்றனை யாகெனப் பன்னாள்

---

தன்பெண்குரங்கினை அழைக்கும் நிலை, விழாக்காலத்தே ஆடல்வல்ல விறலியின் பின்பே முழவம்வாசிப்பவன் நிற்பதுபோலும் என்றவாறு.

(246) ஷை, 325. திணை—பாலை. துறை—கொண்டுநீங்கக் கருதியொழிந்த தலைமகன்பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குறிப்பு:— 7–9. தன்னாட்டினைக் கைக்கொண்ட அள்ளன் என்பானை அதியமான் போரில்வென்று பணியச்செய்தபின் அவ்வதியனது கிணைப்பறையின் ஓசை ஓய்ந்தநிலை, பாலைநிலத்தின் கடுமையால் மலை கவினிழந்ததற்கு உவமிக்கப்பட்டுள்ளமை காண்க.

இனி, 'நாடுகோள் அள்ளனைப்பணித்த' என்பதற்கு, பகைநாட்டினைக் கைக்கொள்ளும்படி அள்ளன் என்ற தன் படைத்தலைவனைப் பணிகொண்ட

உலைவி னுள்ளமொடு வினைவலி யுறீஇ
எல்லாம் பெரும்பிறி தாக வடாஅது
நல்வேற் பாணன் நன்னாட் டுள்ளதை
வாட்கண் வானத் தென்றூழ் நீளிடை
ஆட்கொல் யானை அதர்பார்த் தல்குஞ்
சோலை யத்த மாலைப் போகி
ஒழியச் சென்றோர் மன்ற
பழியெவ னுங்கொல் நோய்தரு பாலே.

மாமூலனார்.

---

(247) அருந்துய ருழத்தலி னுண்மை சான்மெனப்
பெரும்பிறி தின்மையி னிலேனு மல்லேன்
கரைபொரு திழிதருங் கான்யாற் றிகுகரை
வேர்கிளர் மராஅத் தந்தளிர் போல
நடுங்க லானா நெஞ்சமொ டிடும்பை
யாங்கனந் தாங்குவென் மற்றே யோங்குசெலற்
கடும்பகட் டியானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்ச மோடிச்சேண் விளங்கத்

---

என்றும், 'அதியன்பின்றை...இணைகண்ணவிந்தாங்கு' என்பதற்கு அதியமான் இறந்தபின்பு இணைப்பறை ஒலியவிந்தாற்போல என்றும் வேறுபொருளும் கூறுவர்.

(247) நற்றிணை, 381. திணை—முல்லை. துறை—பிரிவிடையாற்றாளாகிய தலைமகள் பருவவரவின்கண் சொல்லியது.

**கருத்து:—** தலைமகன் தன் அரசனது போர்வினை காரணமாகப் பிரிந்து சென்றவிடத்து ஆற்றாத தலைவி, அவன்குறித்த பருவம் வந்ததுகண்டு, 'அவர் கூறிய கார்காலம் வந்துவிட்டது. இன்னும் இறந்துபடுதலின்றி யானும் உயிரோடிராநின்றேன். கலக்கநீங்காத உள்ளத்துடனே இத்துன்பத்தை யான் எங்ஙனம் தாங்கவல்லேன்' என்று மனமழிந்து கூறியவாறு.

தேர்வீ சிருக்கை போல
மாரி யீரீஇ மான்றன்றால் மழையே.

ஔவையார்.

---

(248) அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்டுறை யூரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் னெஞ்சிற் படரே
ஓவா தீயு மாரி வண்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தேர் அஞ்சி
கொன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே.

ஔவையார்.

---

குறிப்பு:— (7-10) யானைப்படையுடைய நெடுமானஞ்சி அருள் நிறைந்த உள்ளத்தோடு நீண்டகாலம் தன் பெயர்விளங்க இரவலர்க்குத் தேர்ப் பரிசு கொடுக்கும் நாளோலக்கம்போல மழைபெய்யும் கார்காலம் என்க.

(248) குறுந்தொகை, 91. திணை—மருதம். துறை—பரத்தையர்மாட்டுப் பிரிந்த தலைமகன் வாயில்வேண்டிப் புக்கவழித் தன்வரைத்தன்றி அவன் வரைத்தாகித் தன்னெஞ்சு நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லியது.

பரத்தையிற்பிரிந்து வந்தவழி வேறுபட்ட கிழத்தியைத் தோழி கூறிய தூஉமாம்.

கருத்து:— பரத்தையரிடம் சென்று மீண்டுவந்த தலைவன் தலைவியின் உடன்பாட்டை வேண்டி நின்றவிடத்து, தான் அவனிடம் ஊடலையுடைய ளாயினும் தன் நெஞ்சம் அவனிடம் செல்வதை அறிந்த தலைவி, அந்நெஞ்சை நோக்கி ‘நீ அவன்பால் அன்பினையாயின் பலநாள் தூங்காதுறையும் துன்பம் அடைவாய்’ என்று கூறியவாறு.

குறிப்பு:— (5-8) பெருங்கொடையும் படையுமுடைய அதியமானஞ்சி யின் போர்க்களமுள்ள ஊரினர் அச்சத்தால் தூங்காமைபோல நீயும் தூங்கா யென்றபடி.

## அதியமான் நெடுமான் அஞ்சி மகன் பொகுட்டெழினி

(249) மதியேர் வெண்குடை அதியர் கோமான்
கொடும்பூண் எழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
ஒருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
உருகெழு மன்னர் ஆரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்து
அணங்குடை மரபின் இருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்
வைகல் உழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே
ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ உண்ணெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
ஊண்முறை யீத்த லன்றியும் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்து

---

(249) புறநானூறு, 392. திணை—பாடாண்டிணை. துறை—கடைநிலை.

கருத்து:— அதியர்கோமானுன எழினியின் வாயிற்கடையில் விடியற் காலத்தே நின்றுகொண்டு என் கிணைப்பறையை முழக்கியவண்ணம், 'பகைவர் மதிலரண்களை அழித்த பெருவீரனே! நீ நீடுவாழ்க' என்று யான் வாழ்த்தினேனாக, அன்றே என்னையழைத்து அழுக்கடைந்த என் அரைக்கந்தையைக் களைந்து உயர்ந்த மெல்லிய ஆடையை உடுப்பித்தும், தேட்கடுப்புப் போலும் நாட்பட்ட மதுவைப் பருகும்படி பொற்கலத்தில் ஊற்றியளித்தும், உண்

அரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவண் தந்தோன் பெரும்பிறங் கடையே.

ஔவையார்.

(250) அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பிற்
றிரண்டுநீடு தடக்கை யென்னை யிளையோற்கு
இரண்டெழுந் தனவாற் பகையே யொன்றே
பூப்போ லுண்கண் பசந்துதோள் நுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன் றொன்றே
விழவின் றாயினும் படுபதம் பிழையாது
மையூன் மொசித்த வொக்கலொடு துறைநீர்க்
கைமான் கொள்ளு மோவென
உறையுள் முனியுமவன் செல்லு மூரே.

ஔவையார்.

ணத்தக்க விருந்தளித்தும் பேரருள் புரிந்தான்; வானுலகத்து அமுதை ஒத்த சுவையுள்ள கரும்பை இவ்வுலகிற் கொணர்ந்துதவியவனது வழித்தோன்றலான அவன் எ-று.

(250) புறநானூறு, 96. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

**கருத்து:—** என் இறைவன்மகனான இளையோனுக்குப் பகை இரண்டு தோன்றின. அவற்றுள், தன்னைப்பார்த்த மகளிர் தோள்கள் மெலியும்படி அவர் நெஞ்சு பிணித்ததனால் அவர் வருந்த உண்டாகியது ஒரு பகை; மற்றொன்று, அவன் படையெடுத்துச்சென்ற ஊரில் யாறு குளன் முதலிய நீர் நிலைகளை அவன் படைச்சுற்றங்களும் யானைகளும் முகந்துவிடும் என்றுகருதி ஊரார் அங்குறைதலை வெறுப்பதனால் உண்டாயது—எனப் பொகுட்டெழினியின் இன்பச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு.

(251) எருதே யிளைய நுகமுண ராவே
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே
அவலிழியினும் மிசையேறினும்
அவண தறியுநர் யாரென உமணர்
கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன
இசைவிளங்கு கவிகை நெடியோய்! திங்கள்
நாள்நிறை மதியத் தனையையிருள்
யாவண தோநின் னிழல்வாழ் வோர்க்கே.

ஔவையார்.

---

(252) கூந்த லாம்பல் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி
யாமஃ தயர்கஞ் சேறுந் தானஃது
அஞ்சுவ துடைய னாயின் வெம்போர்

---

(251) ஷை, 102. திணையும் துறையும் அவை.

**கருத்து.**—எருதுகள் நுகம்பூண்டு பழகாத இளமையவாதலையும், பண்டம் பெரிதாக இடப்பட்டிருத்தலையும், செல்லும்வழியின் ஏற்றிழிவையும் உணர்ந்து உப்புவாணிகர் அச்சுமரத்தோடு சேர்த்துக் கட்டிய சேமவச்சுப்போன்ற பெரியோனே! நீ திங்களாகிய நாள்நிறைந்த மதியத்தை ஒப்பாய். ஆதலின் நின் நிழலில் வாழ்வார்க்குத் துன்பமாகிய இருள் எவ்விடத்தது? எ-று.

**குறிப்பு:**—(5) சேமவச்சு என்றது, ஏற்றிழிவுடைய வழியில் அச்சுமுறிந்தவிடத்துச் சேமவச்சு உதவினாற்போல, நீ காக்கின்ற நாட்டிற்கு ஓர் இடையூறு உற்றால் அது நீக்கிக் காத்தற்குரியை என்பதாம். இதனால் பொருட்டெழினி தன் தந்தையாட்சியில் இளவரசனாய் நாடுகாத்தவன் என்பது பெறப்படும்.

(252) குறுந்தொகை 80. திணை—மருதம். துறை—தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சொல்லியது.

**கருத்து:**— தலைவி தன்னைக் குறைகூறினாள் என்பதுகேட்ட பரத்தை சினங்கொண்டு, 'யாம் நீர்விளையாடச் செல்வேம்; தலைவன் தானே எம்வயப் பட்டு உடன்வருவான். அவனை வாராமற் காக்கும் வன்மை தலைவிக்கு

நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடு காக்கதன் கொழுநன் மார்பே.

ஔவையார்.

---

(253) அகலறை மலர்ந்த அரும்புமுதிர் வேங்கை
ஒள்ளிலைத் தொடலை தைஇ மெல்லென
நல்வரை நாடன் தற்பா ராட்ட
யாங்குவல் லுநள்கொல் தானே தேம்பெய்து
மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி
ஈனாத் தாயர் மடுப்பவும் உண்ணாள்
நிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பின்
எம்முடைச் செல்வமும் உள்ளாள் பொய்ம்மருண்டு
பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச்
சில்பரிக் குதிரைப் பல்வேல் எழினி
கெடலருந் துப்பின் விடுதொழில் முடிமார்
கனையெரி நடந்த கல்காய் கானத்து
வினைவல் அம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து
வீங்குமென் சுரைய வேற்றினந் தரூஉம்
முகைதலை திறந்த வேனிற்
பகைதலை மணந்த பல்லதர்ச் செலவே.

தாயங்கண்ணனார்.

---

உளதாயின், எழினி என்ற தலைவன் தன் ஆனிரையைக் கைப்பற்றிய பகைவரிடத்திலிருந்து அதனை மீட்டுக் காத்தாற்போலத் தலைவனை எம்மிடத்தினின்று மீட்டுக்காப்பாளாக' என்று கூறலாயினள் என்க.

(253) அகநானூறு. 105. திணை—பாலை. துறை—மகட்போக்கிய தாய் சொல்லியது.

**குறிப்பு:**—10-17. எழினியின் போர்வினையை முடித்தற்பொருட்டு **அவனது** மறவர் பகைவரை வென்று, ஏறுகளுடன் கூடிய பசுநிரையைக் கைக்கொண்டுவரும் பலவாகிய சுரநெறி என்க.

## வாட்டாற்று எழினியாதன்

(254) கீழ்நீரான் மீன்வழங்குந்து
மீநீராற் கண்ணன்ன மலர்பூக்குந்து
கழிசுற்றிய விளைகழனி
அரிப்பறையாற் புள்ளோப்புந்து
நெடுநீர்கூஉம் மணற்றண்கால்
மென்பறையாற் புள்ளிரியுந்து
நனைக்கள்ளின் மனைக்கோசர்
தீந்தேறல் நறவுமகிழ்ந்து
தீங்குரவைக் கொளைத்தாங்குந்து
உள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்குக் கேளாகுவன்
கழுமிய வென்வேல் வேளே
வளநீர் வாட்டாற் றெழினி யாதன்
கிணையேம் பெரும!
கொழுந்தடிய சூடென்கோ
வளநனையின் மட்டென்கோ
குறுமுயலின் நிணம்பெய்தந்த
நறுநெய்ய சோறென்கோ
திறந்து மறந்து கூட்டுமுதல்

---

(254) புறநானூறு, 396. திணை—பாடாண்டிணை. துறை—கடைநிலை

**கருத்து:—** நீர்நிலவளங்கள் மிக்க வாட்டாற்று எழினியாதன், ஊக்கமில்லார்க்கு வலிமை தருபவன்; சுற்றமில்லார்க்குச் சுற்றமாகுவன்; அவனது கிளையினர் யாங்கள். ஊனோ, தேறலோ, சோறோ, பிறவுணவுகளோ வேண்டியவர்க்கு வேண்டியவாறு அளிப்பவனான அவ்வேளினுடைய பாடல்சான்ற வளத்தை யாமும் பிறரும் வாழ்த்தும்படி; நிறைமதிபோல அவனது நல்லிசை விளங்கித் தோன்றுவதாக எ—று.

முகந்து கொள்ளும் உணவென்கோ
அன்னவை பலபல................
.........................................ருநதய
இரும்பே ரொக்கல் இருஞ்செஞ்சிய
அழித்துவப்ப ஈத்தோனெந்தை
எம்மோர் ஆக்கக் கங்குண்டே
மாரிவானத்து மீனுப்பண்
விரிகதிர வெண்டிங்களின்
விளங்கித் தோன்றுகஅவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிரைசால் நன்கலன் நல்கி
உரைசெலச் சிறக்கஅவன் பாடல்சால் வளனே.

மாங்குடி மருதனார்.

---

கண்ணனெழினி

(255) மாமலர் வண்ணம் இழந்த கண்ணும்
பூநெகிழ் அணையிற் சாஅய தோளும்
நன்னர் மாக்கள் விழைவன ராய்ந்த
தொன்னலம் இழந்த துயரமொ டென்னதூஉம்

---

குறிப்பு:—வாட்டாறு என்பது மலைநாட்டுள்ளதும் திருவட்டாறு என்று இப்போது வழங்குவதுமான தலமாகும். நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளுள், நம்மாழ்வாரால் பாடப்பெற்றது இத்தலம். எழினி என்ற பெயராலும் வேள் என்று வழங்கப்படுதலாலும் இத்தலைவன் மலைநாடாண்ட சேரர்கிளையினன் என்பது அறியப்படும்.

(255) அகநானூறு, 197. திணை—பாலை. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

குறிப்பு:—(7) கண்ணன் எழினி என்ற பெயரால், இவன் அதியாமன்

இனையல் வாழி தோழி முனையெழ
முன்னுவ ரோட்டிய முரண்மிகு திருவின்
மறமிகு தானைக் கண்ண னெழினி
தேமுது குன்றம் இறந்தன ராயினும்
நீடலர் யாழநின் நிரைவளை நெகிழத்
தோள்தாழ்பு இருளிய குவையிருங் கூந்தல்
மடவோட் டழீஇய விறலோன் மார்பிற்
புன்றலைப் புதல்வன் ஊர்பிழிந் தாங்குக்
கடுஞ்சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்டு
இனஞ்சால் வேழங் கன்றூர்பு இழிதரப்
பள்ளி கொள்ளும் பனிச்சுரம் நீந்தி
ஒள்ளிணர்க் கொன்றை யோங்குமலை யத்தம்
வினைவலி யுறூஉம் நெஞ்சமொடு
இனைய ராகிநப் பிரிந்திசி னோரே.

மாமூலனார்.

---

## வானவன்மறவன் பிட்டன்

(256) செய்வினைப் பிரித லெண்ணிக் கைம்மிகக்
காடுகவி னொழியக் கடுங்கதிர் தெறுதலின்
நீடுசினை வறிய வாக ஒல்லென
வாடுபல் லகலிலைக் கோடைக் கொய்யும்
தேக்கம லடுக்கத் தாங்கண் மேக்கெழுபு

---

மரபினன் என்பதும், (8) தேமுது குன்றம் என்பதனால், முதுகுன்றமென்பது இவனுக்குரிய மலை என்பதும் தெரியலாம். முதுகுன்றம்—விருத்தாசலம்.

(256) அகநானூறு, 143. திணை—பாலை. துறை—பொருள்வயிற்பிரியக் கருதிய தலைமகனைத் தோழி தலைமகளது ஆற்றாமைகண்டு செலவழுங்குவித்தது.

முளியரிற் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்மிமிர் நெடுங்கொடி விடர்முகை முழங்கும்
வெம்மலை யருஞ்சுரம் நீந்தி ஐய
சேறு மென்ற சிறுசொற் கிவட்கே
வசையில் வெம்போர் வானவன் மறவன்
நசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும்
பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்
மைதவழ் உயர்சிமைக் குதிரைக் கவாஅன்
அகலறை நெடுஞ்சுனைத் துவலையின் மலர்ந்த
தண்கமழ் நீலம் போலக்
கண்பனி கலுழ்ந்தன நோகோ யானே.

ஆலம்பேரி சாத்தனார்.

---

(257) நன்னுதல் பசப்பவும் ஆள்வினை தரீஇயர்
துன்னருங் கானந் துன்னுதல் நன்றெனப்
பின்னின்று சூழ்ந்தனை யாயின்நன் றின்றுச்
சூழ்ந்திசின் வாழிய நெஞ்சே! வெய்துற
இடியுமிழ் வானம் நீங்கி யாங்கணும்

---

குறிப்பு:—(10-13) பிட்டன் என்ற தலைவன் சேரமானுடைய படைத் தலைவன் என்பதும், குதிரை மலைக்கு உரியவன் என்பதும், கொடைத்திற முடையான் என்பதும் இப்பாட்டால் அறியப்படும்.

(257) ஷை., 77. திணை—பாலை. துறை—தலைமகன், பிரியக்கருதிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்குவித்தது.

குறிப்பு:—இதுவும், சேரர்படைமுதலியான பிட்டனது வீரப்பெருமை கூறியபடி. (7-10)இவ்வடிகள்கூறும் வழக்குத் தெளியப்படவில்லை. 'ஊராண்மை நாட்டாண்மைக்கழகங்கட்கு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தற்பொருட்டுத் தகுதியுடையார் பலரும் குடத்தின்கண் எழுதிப் போகட்ட ஓலைகளை அக்

குடிபதிப் பெயர்ந்த கட்டுடை முதுபாழ்க்
கயிறுபிணிக் குழிசி யோலை கொண்மார்
பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின்
உயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த
தறுக ணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
செஞ்செவி யெருவை அஞ்சுவர இறுக்கும்
கல்லதர்க் கவலை போகிற் சீறூர்ப்
புல்லரை யித்திப் புகர்படு நீழல்
எல்வளி யலைக்கும் இருள்கூர் மாலை
வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை
ஆனா நறவின் வண்மகிழ்ப் பிட்டன்
பொருந்தா மன்னர் அருஞ்சமத் துயர்த்த
திருந்திலை யெஃகம் போல
அருந்துயர் தருமிவள் பனிவார் கண்ணே.

மருதனிளநாகனார்.

குடத்தினின்று எடுத்து, தேரப்பட்டார் இவரென அறிதற்குரிய 'குடவோலை' வழக்குக் கல்வெட்டால் அறியப்படுதலின், அவ்வழக்கினைக் குறிப்பனவே இவ்வடிகள் என்று சிலர் கருதுவர். 'கயிறுபிணிக்குழிசி' 'பொறிகண்டழிக்கும்' என்ற தொடர்களும் உவமையும், அவர் கருத்துக்கு ஏற்ப அமையாமையின், அஃது ஆராய்ச்சிக்கு உரியதாகும்.

## சேரர்பொது

### வானவன்

(258) வயவா ளெறிந்து வில்லி னீக்கிப்
பயநிரை தழீஇய கடுங்கண் மழவர்
அம்புசேட் படுத்து வன்புலத் துய்த்தெனத்
தெய்வஞ் சேர்ந்த பராரை வேம்பிற்
கொழுப்பா வெறிந்து குருதி தூஉய்ப்
புலவுப்புழுக் குண்ட வான்க ணகலறைக்
களிறுபுற முரிஞ்சிய கருங்கா லிலவத்து
அரலை வெண்கா ழாலியிற் றூஉம்
காடுமிக நெடிய வென்னார் கோடியர்
பெரும்படைக் குதிரை நற்போர் வானவன்
திருந்துகழற் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு
நாஞ்செலி னெவனோ தோழி! காம்பின்
விளைகழை யுடைந்த கவண்விசைக் கடியிடிக்
கனைசுட ரமையத்து வழங்கல் செல்லா
இரவுப்புன மேய்ந்த உரவுச்சின வேழம்
தண்பெரும் படாஅர் வெரூஉம்
குன்றுவிலங் கியவினவர் சென்ற நாட்டே.

கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார்.

(258) அகநானூறு, 309. திணை—பாலை. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**கருத்து:**—கூத்தர், வானவனது சேவடியைக் காணவிரும்பி இடைப்பட்ட காடு கடுமையுஞ்சேய்மையுமுடைய என்னுமற் சென்றாற்போல, குன்றுகள் குறுக்கிடும் நெறிகளையுடைய நம்தலைவர் சென்ற நாட்டின்கண் நாமும்சென்றால் என்னையோ எ—று.

(259) ஆளி நன்மான் அணங்குடை யொருத்தல்
மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப
ஏந்தல் வெண்கோடு வாங்கிக்குருத் தருந்தும்
அஞ்சுவரத் தகுந ஆங்கண் மஞ்சுதப
அழல்கான்று திரிதரும் அலங்குகதிர் மண்டிலம்
நிழல்சூன் றுண்ட நிரம்பா நீளிடைக்
கற்றுரிக் குடம்பைக் கதநாய் வடுகர்
விற்சினந் தணிந்த வெருவரு கவலைக்
குருதி யாடிய புலவுநா றிருஞ்சிறை
எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி
பச்சூன் கொள்ளை சாற்றிப் பறைநிவந்து
செக்கர் வானின் விசும்பணி கொள்ளும்
அருஞ்சுரம் நீந்திய நம்மினும் பொருந்தார்
முனையரண் கடந்த வினைவல் தானைத்
தேனிமிர் நறுந்தார் வானவன் உடற்றிய
ஒன்னாத் தெவ்வர் மன்னெயில் போலப்
பெரும்பாழ் கொண்ட மேனியள் நெடிதுயிர்த்து
வருந்துங்கொல் அளியள் தானே சுரும்புண
நெடுநீர் பயந்த நிரையிதழ்க் குவளை
எதிர்மல ரிணைப்போ தன்னதன்
அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே.

மதுரை இளங்கௌசிகனார்.

(259) ஷை, 381. திணை அது. துறை—தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**குறிப்பு:—** இடைச்சுரத்தில் தலைவியை நினைந்து வருந்திய தலைவன், தலைமகளது மேனி பொலிவிழந்ததற்கு, பெரும்படையுடைய சேரமானுடைய பகைவரது எயில்கள் பெரும்பாழானமையை உவமித்துக்கூறினமை காண்க.

(260) ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப் பூட்கை உரவோன் மருக!
வல்லே மல்லேம் ஆயினும் வல்லே
நின்வயிற் கிளக்குவ மாயிற் கங்குல்
துயில்மடிந் தன்ன தூங்கிரு ளிறும்பிற்
பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந!
தெறலரு மரபின்நின் கிளையொடும் பொலிய
நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற அந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட்கு இனியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன் அதற்கொண்டு
சினமிகு தானை வானவன் குடகடற்
பொலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்
பிறகலஞ் செல்கலா தனையேம் அத்தை
இன்மை துரப்ப இசைதர வந்துநின்
வண்மையிற் றொடுத்தனம் யாமே முள்ளெயிற்று
அரவெறி யுருமின் முரசெழுந் தியம்ப
அண்ணல் யானையொடு வேந்துகளத் தொழிய
அருஞ்சமந் ததையத் தாக்கி நன்றும்
நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே.

மாறோக்கத்து நப்பசலையார்.

---

(260) புறநானூறு, 126. திணை—பாடாண்டிணை. துறை—பரிசிற்றுறை.

**குறிப்பு:**—(10—16) மலையமான் திருமுடிக்காரியின் பெருமையைப் புகழுமிடத்து, அத்தலைவனது புகழ்முழுதையும் புலவர்பெருமானான கபிலர் வேறுபுலவர்க்கு இடமின்றிப் பாடிவிட்டமையால், சேனைமிகுதியுடைய

### வானவரம்பன்

(261) அறியாய் வாழி தோழி! நெறிகுரற்
சாந்தார் கூந்த லுளரிப் போதணிந்து
தேங்கமழ் திருநுதற் றிலகந் தைஇயும்
பல்லித ழெதிர்மலர் கிள்ளி வேறுபட
நல்லிள வனமுலை யல்லியொ டப்பியும்
பெருந்தோட் டொய்யில் வரித்துஞ் சிறுபரட்டு
அஞ்செஞ் சீறடிப் பஞ்சி யூட்டியும்
எற்புறந் தந்து நிற்பா ராட்டிப்
பல்பூஞ் சேக்கையிற் பகலும் நீங்கார்
மனைவயி னிருப்பவர் மன்னே துனைதந்து
இரப்போ ரேந்துகை நிறையப் புரப்போர்
புலம்பி லுள்ளமொடு புதுவதந் துவக்கும்
அரும்பொருள் வேட்டம் எண்ணிக் கறுத்தோர்
சிறுபுன் கிளவிச் செல்லல் பாழ்பட
நல்லிசை தம்வயின் நிறுமார் வல்வேல்
வான வரம்பன் நன்னாட் டும்பர்

சேரவேந்தன் மேலைக்கடலிலே தன் மரக்கலப்படையைச் செலுத்தியகாலத்து, வேற்றரசரின் மரக்கலம் ஆங்குச் செல்லமாட்டாத அத்தன்மையுடையேம் ஆயினேம்' என்று, சேரனது கப்பற்படையின் மாட்சிவிளங்க உவமை கூறியுள்ளமை அறியத்தக்கது. இச்சேரன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஆவன்.

(261) அகநானூறு 389, திணை—பாலை. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.

**கருத்து:—** 'என் நுதலில் திலதமணிந்தும், மார்பகத்தே வேறுமலர்களுடன் அல்லிப்பூவினை அப்பிஅலங்கரித்தும், என் சிற்றடிகட்குச் செம்பஞ்சூட்டியும் இவ்வாறு என்னைப் பேணியதோடு உன்னைப் பாராட்டியும், பகலினும் பூஞ்

வேனில் நீடிய வெங்கடற் றடைமுதல்
ஆறுசெல் வம்பலர் வேறுபிரிந் தலறக்
கொலைவெம் மையின் நிலைபெயர்ந் துறையும்
பெருங்களிறு தொலைச்சிய இருங்கே ழேற்றை
செம்புல மருங்கிற் றன்கால் வாங்கி
வலம்படு வென்றியொடு சிலம்பகஞ் சிலம்பப்
படுமழை யுருமின் முழங்கும்
நெடுமர மருங்கின் மலையிறந் தோரே.

**நக்கீரர்.**

சேக்கையைவிட்டு அகலாதிருந்த தலைவர், இப்போது நாம் தனித்திருக்க நம்மைப்பிரிந்து, வானவரம்பனான சேரனது நல்லநாட்டுக்கு அப்பாலுள்ள கொடிய காட்டுநெறியிற் சென்றனர். அதனால் யான் ஆற்றியிருப்பது எங்ஙனம்? எனத் தன்னை ஆற்றியிருக்குமாறு வற்புறுத்திய தோழிக்குத் தலைவி கூறினள் என்க.

(262) விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு
வளங்கெழு மாமலை பயங்கெடத் தெறுதலின்
அருவி யான்ற பெருவரை மருங்கின்
சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயங் காணாது
பாசி தின்ற பைங்கண் யானை
ஓய்பசிப் பிடியொ டொருதிறன் ஒடுங்க
வேய்கண் உடைந்த வெயிலவிர் நனந்தலை
அரும்பொருள் வேட்கையின் அகன்றன ராயினும்
பெரும்பே ரன்பினர் தோழி! இருங்கேழ்
இரலை சேக்கும் பரலுயர் பதுக்கைக்
கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கால் ஆசினி ஒடுங்காட் டும்பர்
விசிபிணி முழவின் குட்டுவன் காப்பப்
பசியென வறியாப் பணைபயில் இருக்கைத்
தடமருப் பெருமை தாமரை முனையின்

---

(262) ஷை, 91. திணை—பாலை. துறை—பிரிவிடைமெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

**கருத்து:—** 'ஞாயிறு கடுமையாகக் காய்தலால் நீரற்று யானைகள் பசியால் வருந்தும் பாலைவனத்தே, பொருள்வேட்கைகாரணமாக நம் தலைவர் பிரிந்து சென்றாரேனும், பின்பாற் பேரன்புள்ள அவர், குட்டுவனது வளமிக்க குடநாட்டைப்பெறுவதாயினும் பின்னலங்களை மறந்து வேற்றிடத்தே நெடுங்காலம் தங்குவாரல்லர்' என்று தோழி தலைவியைத் தேற்றுவாளாயினள் என்க.

**குறிப்பு:—**(11-17) ஆறலைகள்வர் வாழும் ஒடுங்காட்டுக்கு அப்பால், குட்டுவன் காப்பதால் பசியென்பதை அறியாத மருதநிலத்து ஊர்களையுடையதும், எருமைகள் தாமரைகளை மேய்ந்து தெவிட்டி வெறுக்குமாயின் பலா

முடமுதிர் பலவின் கொழுநிழல் வதியும்
குடநாடு பெறினும் தவிரலர்
மடமா னோக்கி! நின் மாணலம் மறந்தே.

மாமூலனார்.

---

வஞ்சிமாநகர்

(263) ஆங்குத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
வாங்குவிற் றானை வானவன் வஞ்சியின்
வேற்று மன்னரும் உழிஞைவெம் படையும்
போற்புறஞ் சுற்றிய புறக்குடி கடந்து
சுருங்கைத் தூம்பின் மனைவளர் தோகையர்
கருங்குழல் கழீஇய கலவை நீரும்
எந்திர வாவியில் இளைஞரும் மகளிரும்
தந்தமில் ஆடிய சாந்துகழி நீரும்
புவிகா வலன்றன் புண்ணிய நன்னாட்
சிவிறியும் கொம்பும் சிதறுவிரை நீரும்
மேலை மாதவர் பாதம் விளக்கும்
சீல வுபாசகர் செங்கைநறு நீரும்

---

வின் கொழுவிய நிழற்கண்ணே தங்குவதுமாகிய வளமிக்க குடநாடு என்க. இதனால், சேரனது குடநாடு, ஒடுங்காடு என்ற பிரதேசத்துக்கு வடக்கிலுள்ளது என்பது பெறப்படும். குட்டுவன் — குட்டநாட்டுக்குரியவன்.

(263) மணிமேகலை, 28— கச்சிமாநகர்புக்க காதையின் ஒருபகுதி (1 முதல் 136 அடிகள்).

**கருத்து:—** மணிபல்லவத்தில் புண்ணியராசனோடு சென்றிருந்த மணிமேகலை அவ்வரசனை அவனது சாவகநாட்டுக்கு அனுப்பிவிட்டு, ஆகாயவழியே சென்று வஞ்சிமாநகர்ப்புறத்தே இறங்கி, அங்கே அமைக்கப்பெற்ற கோட்டத்துட்புகுந்து தாய் கண்ணகியையும் தந்தை கோவலனையும் வணங்கித் துதித்

அறஞ்செய் மாக்கள் அகில்முதல் புகைத்து
நிறைந்த பந்தற் றசும்புவார் நீரும்
உறுப்புமுரண் உருமற் கந்தவுத் தியினுற்
செறித்தரைப் போர்தஞ் செழுமனை நீரும்
என்றிந் நீரே எங்கும் பாய்தலிற்
கன்றிய கராமும் இடங்கரும் மீன்களும்
ஒன்றிய புலவொழி யுடம்பின வாகித்
தாமரை குவளை கழுநீ ராம்பற்
பூமிசை பரந்து பொறிவண் டார்ப்ப
இந்திர தனுவென இலங்ககழ் உடுத்து
வந்தெறி பொறிகள் வகைமாண் புடைய
கடிமதி லோங்கிய இடைநிலை வரைப்பிற்
பசுமிளை பரந்து பஃறொழில் நிறைந்த
வெள்ளிக் குன்றம் உள்கிழிந் தன்ன
நெடுநிலை தோறும் நிலாச்சுதை மலரும்
கொடிமிடை வாயில் குறுகினள் புக்குக்
கடைகாப் பமைந்த காவ லாளர்
மிடைகொண் டியங்கும் வியன்மலி மறுகும்
பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர்
கண்ணொடை யாட்டியர் காழியர் கூவியர்
மைந்நிண விலைஞர் பாசவர் வாசவர்
என்னுநர் மறுகும் இருங்கோ வேட்களும்
செம்பு செய்ஞ்ஞரும் கஞ்ச காரரும்
பைம்பொன் செய்ஞ்ஞரும் பொன்செய் கொல்லரும்

---

தனள். அப்போது கண்ணகி, மதுரையழித்த வரலாறுபற்றி உசாவிய மணிமேகலைக்கு தான் அழிக்க நேர்ந்த காரணத்தை விரிவாக எடுத்துரைத்ததோடு, பௌத்தசமயத்தை அவள் தழுவி ஒழுகவேண்டிய அவசியத்தையும் கூறினள்.

அவற்றைக்கேட்ட மணிமேகலை, பத்தினியை வணங்கி விடைபெற்றுக்

மரங்கொல் தச்சரும் மண்ணீட் டாளரும்
வரந்தர வெழுதிய ஓவிய மாக்களும்
தோலின் றுன்னரும் துன்ன வினைஞரும்
மாலைக் காரரும் காலக் கணிதரும்
நலந்தரு பண்ணும் திறனும் வாய்ப்ப
நிலங்கலம் கண்டம் நிகழக் காட்டும்
பாணர் என்றிவர் பல்வகை மறுகும்
விலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோடு
இலங்குமணி வினைஞ ரிரீஇய மறுகும்
வேத்தியல் பொதுவியல் என்றிவ் விரண்டின்
கூத்தியல் பறிந்த கூத்தியர் மறுகும்
பால்வே றாக எண்வகைப் பட்ட
கூலங் குவைஇய கூல மறுகும்
மாகதர் சூதர்வே தாளிகர் மறுகும்
போகம் புரக்கும் பொதுவர்பொலி மறுகும்
கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை
வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும்
பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்
பன்மணி பகர்வோர் மன்னிய மறுகும்
மறையோர் அருந்தொழில் குறையா மறுகும்
அரைசியல் மறுகும் அமைச்சியல் மறுகும்
எனைப்பெருந் தொழில்செய் ஏனோர் மறுகும்

கொண்டு, முனிவன்வேடத்துடன் வஞ்சியம்பதியினுள்ளே, செங்குட்டுவன் என்னும் சேரர்பெருமானது புகழ் விளங்கும்படி செல்வானாயினன். சென்றவன், புறநகரத்தில் இருந்த சமயவாதிகள் பலருடனும் அளவளாவி அவரவர் தத்தம் கொள்கைகளைக் கூறக்கேட்டு அவற்றை அறிந்துகொண்டான். பின், அவ்வஞ்சியுள்ளிருந்த தாய் மாதவியையும், அவள் தோழி சுதமதியையும், ஆசிரியராகிய அறவணவடிகளையும் காணவிரும்பிப் புறநகரத்தைக் கடந்துசென்று

மன்றமும் பொதியிலும் சந்தியும் சதுக்கமும்
புதுக்கோள் யானையும் பொற்றார்ப் புரவியும்
கதிக்குற வடிப்போர் கவின்பெறு வீதியும்
சேணோக் கருவி தாழ்ந்தசெய் குன்றமும்
வேணவா மிகுக்கும் விரைமரக் காவும்
விண்ணவர் தங்கள் விசும்பிடம் மறந்து
நண்ணுதற் கொத்த நன்னீர் இடங்களும்
சாலையும் கூடமும் தமனியப் பொதியிலும்
கோலங் குயின்ற கொள்கை யிடங்களும்
கண்டுமகிழ் வுற்றுக் கொண்ட வேடமோடு
அந்தர சாரிகள் அமர்ந்திழி துறையும்
இந்திர விகாரம் எனவெழில் பெற்று
நவையறு நாதன் நல்லறம் பகர்வோர்
உறையும் பள்ளிபுக் கிறைவனை நல்லாள்
கோவலன் றாதை மாதவம் புரிந்தோன்
பாதம் பணிந்துதன் பாத்திர தானமும்
தானப் பயத்தாற் சாவக மன்னவன்
ஊனமொன் றின்றி உலகாள் செல்வமும்
செல்வற் கொணர்ந்தத் தீவகப் பீடிகை
ஒல்காது காட்டப் பிறப்பினை யுணர்ந்ததும்
உணர்ந்தோன் முன்னர் உயர்தெய்வம் தோன்றி

அந்நகரினுள்ளே போய்; பலவகைச் சாதியாரும் தொழிலாளரும் இருக்கும் வீதிகளையும் மற்றும் பலவிடங்களையும் முறையே கண்டுமகிழ்ந்தாள். பின், பௌத்த முனிவர் தங்கியுள்ள தவச்சாலையுட் புகுந்து, அங்கே தவஞ்செய்து கொண்டிருந்த பாட்டனான மாசாத்துவானைக் கண்டுபணிந்து, தன் வரலாறுகளை அவனுக்கு எடுத்துரைத்தாள். அவற்றைக்கேட்ட மாசாத்துவான் அவள் வருகைக்கு மிக மகிழ்ந்து, கோவலன் கண்ணகிகள் இறந்தபின், தான் எல்லாப்பொருளையும் துறந்து பௌத்தமதத்தைச் சார்ந்து தவஞ்செய்தலை மேற்

மனங்கவல் கெடுத்ததும் மாநகர் கடல்கொள
அறவண வடிகளும் தாயரும் ஆங்குவிட்டு
இறவாது இப்பதிப் புகுந்தது கேட்டதும்
சாவக மன்னன் தன்னா டெய்தத்
தீவகம் விட்டித் திருநகர் புகுந்ததும்
புக்கபின் அந்தப் பொய்யுரு வுடனே
தக்க சமயிகள் தந்திறங் கேட்டதும்
அவ்வவர் சமயத் தறிபொரு ளெல்லாம்
செவ்வி தன்மையிற் சிந்தைவை யாததும்
நாதன் நல்லறம் கேட்டலை விரும்பி
மாதவற் றேர்ந்து வந்த வண்ணமும்
சொல்லின ளாதலிற் றாயோய்! நின்னையென்
நல்வினைப் பயன்கொல் நான்கண் டதுவெனத்
தையல்! கேள்நின் தாதையுந் தாயும்
செய்ததீ வினையிற் செழுநகர் கேடுறத்
துன்புற விளிந்தமை கேட்டுச் சுகதன்
அன்புகொள் அறத்திற் கருகனே னாதலின்
மனைத்திற வாழ்க்கையை மாயமென் றுணர்ந்து
தினைத்தனை யாயினுஞ் செல்வமும் யாக்கையும்
நிலையா வென்றே நிலைபெற வுணர்ந்தே
மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்
புரிந்த யானிப் பூங்கொடிப் பெயர்ப்படூஉந்
திருந்திய நன்னகர் சேர்ந்தது கேளாய்

கொண்டு வஞ்சிமாநகர் வந்ததையும், அவ்வாறு வந்தகாரணம் —"முற்காலத்தில் இந்நகரை ஆண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்ற அரசன் தன் தேவிமாரோடு இச்சோலைக்கு வந்திருந்தபோது, இலங்காதீபத்துள்ள சமனொளியிலிருந்து வந்த அந்தரசாரிகளான சாரணர் இச்சோலையில் இறங்கி ஒரு சிலாதலத்தில் இருந்தனர். அவர்களை அரசன் வணங்கி அமுதுசெய்வித்துத் துதித்தான். அப்போது, நின் தந்தையாகிய கோவலனுக்கு ஒன்பதாந்

குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் முன்னாள்
துப்படு செவ்வாய்த் துடியிடை யாரொடும்
இப்பொழில் புகுந்தாங் கிருந்த வெல்லையுள்
இலங்கா தீவத்துச் சமனொளி யென்னும்
சிலம்பினை யெய்தி வலங்கொண்டு மீளும்
தரும சாரணர் தங்கிய குணத்தோர்
கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோர்
அரைசற் கேது அவ்வழி நிகழ்தலிற்
புரையோர் தாமுமிப் பூம்பொழி லிழிந்து
கற்றலைத் திருந்துழிக் காவலன் விரும்பி
முற்றவ முடைமையின் முனிகளை யேத்திப்
பங்கயச் சேவடி விளக்கிப் பான்மையின்
அங்கவர்க் கறுசுவை நால்வகை யமிழ்தம்
பாத்திரத் தளித்துப் பலபல சிறப்பொடு
'வேத்தவை யாரொடு மேத்தின னிறைஞ்சலிற்
பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமும்
மறத்தகை முதல்வ னருளிய வாய்மை
இன்ப ஆரமு திறைவன் செவிமுதற்
றுன்பம் நீங்கச் சொரியும் அந்நாள்
நின்பெருந் தாதைக் கொன்பது வழிமுறை
முன்னோன் கோவலன் மன்னவன் றனக்கு

**முன்னோனை** கோவலனும் உடனிருந்தனன். வந்திருந்த சாரணர்கள் **அரசனுக்கு** அறவுரைகள் பலவும் உபதேசித்தனர். அவற்றைக் கேட்டிருந்த **கோவலன்,** தானும் தன் முன்னோரும் ஈட்டிய பலகோடி தனங்களையும் **ஏழுதினத்துள்** இரவலர்க்குக் கொடுத்துவிட்டுப் பின்பு தவஞ்செய்யலாயினன்.

நீங்காக் காதற் பாங்க னுதலிற்
றீங்கா நல்லறந் தானுங் கேட்டு
முன்னோர் முறைமையிற் படைத்ததை யன்றித்
தன்னா னியன்ற தனம்பல கோடி
ஏழுநாள் எல்லையுள் இரவலர்க் கீத்துத்
தொழுதவம் புரிந்தோன் சுகதற் கியற்றிய
வானோங்கு சிமையத்து வாலொளிச் சயித்தம்
ஈனோர்க் கெல்லாம் இடர்கெட வியன்றது
கண்டுதொழு தேத்துங் காதலின் வந்து.

கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்.

---

(264) நயங்குதிரைப் பெருங்கட லுலகுதொழத் தோன்றி
வயங்குகதிர் விரிந்த உருகெழு மண்டிலம்
கயங்கண் வறப்பப் பாஅய் நன்னிலம்
பயங்கெடத் திருகிய பைதறு காலை
வேறுபல் கவலைய வெருவரு வியன்காட்டு
ஆறுசெல் வம்பலர் வருதிறங் காண்மார்

---

அவன் அக்காலத்தில் புத்ததேவனுக்குக் கட்டுவித்த சைத்தியத்தைத் தரிசித்தற்காக இங்கு வந்தேன்" என்பதுமுதலிய செய்திகளை விரிவாக மணிமேகலைக்குக் கூறினன் எ-று.

குறிப்பு:- இப்பாட்டுள், வஞ்சிமாநகரின் அமைதியும் பிறவளங்களும் பழைய சேரனொருவனது வரலாறும் அழகாகக் கூறப்பட்டிருத்தல் அறியத்தக்கது.

(264) அகநானூறு, 263. திணை—பாலை. துறை—மகட்போக்கிய தாய் சொல்லியது.

கருத்து:— "கொடிய வேனிற்காலத்தே ஆறலைகள்வர் ஒளித்துறையும் அரும்பாலைவழியாக, தன்னுடன் அழைத்துக்கொண்டு சென்ற திண்ணியனாகிய காளையிடம் என் மகள் வைத்திருந்த அன்புநிலையை யான் முன்னரே

வில்வ லாடவர் மேலா ளொற்றி
நீடுநிலை யாஅத்துக் கோடுகொ ளருஞ்சுரம்
கொண்டனன் கழிந்த வன்கட் காளைக்கு
அவள்துணி வறிந்தனெ னாயி னன்றே
ஒளிறுவேற் கோதை யோம்பிக் காக்கும்
வஞ்சி யன்னவென் வளநகர் விளங்க
இனிதினிற் புணர்க்குவென் மன்னே துனியின்று
திருநுதற் பொலிந்தவென் பேதை
வருமுலை முற்றத் தேமுறு துயிலே.

கருவூர்க் கண்ணம்பாளனார்.

---

## கருவூர்

(265) கேள்கே டூன்றவும் கிளைஞ ராரவும்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவும்
ஆள்வினைக் கெதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து
ஆரங் கண்ணி யடுபோர்ச் சோழர்
அறங்கெழு நல்லவை உறந்தை யன்ன
பெறலரு நன்கல னெய்தி நாடும்
செயலருஞ் செய்வினை முற்றின மாயின்

---

அறிந்திருந்தேனாயின், சேரவேந்தன் பாதுகாவலுடன் காக்கின்ற வஞ்சியை யொத்த என் வளம்பொருந்திய மனையகம் பொலிய, அவனை அவளுடன் எளிதிற் கூட்டிவைத்திருப்பேன்; அந்தோ! அது கழிந்ததே'' என்று செவிலித் தாய் இரங்கிக்கூறினள் என்க.

(265) அகம், 93. திணை—பாலை. துறை—வினைமுற்றி மீளலுறுந் தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

குறிப்பு:— உறந்தை (உறையூர்), கூடல் (மதுரை) என்ற, சோழபாண்டியர்

அரண்பல கடந்த முரண்கொள் தானை
வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங் காடி நாறு நறுநுதல்
நீளிருங் கூந்தல் மாஅ யோளொடு
வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
நலங்கே ழாகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே! வரிநுதல்
வயந்திகழ் பிமிழ்தரும் வாய்புகு கடாஅத்து
மீளி மொய்ம்பொடு நிலனெளியாக் குறுகி
ஆள்கோட் பிழையா அஞ்சுவரு தடக்கைக்
கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீர் உயர்கரைக் குவைஇய
தண்ணான் பொருநை மணலினும் பலவே.

நக்கீரர்

---

மு சி றி

(266) மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பின் மனைமறுக்குந்து

---

தலைநகரங்களைக் கூறிய நக்கீரர், இறுதியில் கோதையின் திருமா வியனகரான கருவூரினருகில் ஓடும் ஆன்பொருநையாற்றின் மணலை உவமை முகத்தாற் சிறப்பித்திருத்தல் அறியத்தக்கது.

(266) புறநானூறு, 343. திணை—வாகை. துறை—மூதின்முல்லை.

குறிப்பு:— (1–10) பிடித்தமீன்களை நெல்லுக்குப் பிரதியாக விற்றுக் குவித்து அந்நெற்குவியலை ஏற்றிய தோணியால் மனைகளை மறுகச்செய்வதும்,

மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குறுந்து
கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமும்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
முழங்குகடன் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையல ளிவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட விறுத்த வேணி யாயிடை
வருந்தின்று கொல்லோ தானே பருந்துயிர்த்து
இடைமதிற் சேக்கும் புரிசைப்
படைமருங் காரிடை நெடுந லூரே.

பரணர்.

---

(267) சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த
நெடுஞ்செம் புற்றத் தொடுங்கிரை முனையிற்
புல்லரை யிருப்பைத் தொள்ளை வான்பூப்

---

மனையிற் குவிக்கப்பட்ட மிளகுமூடைகளால் ஆரவாரமிக்க கடலைக் கலங்கச்செய்வதும், மரக்கலமேற்றிவந்த பொற்பரிசம் கழித்தோணிகளாற் கரைசேர்க்கப்படுவதும்— இவ்வாறு மலைப்பண்டங்களையும் கடற்பண்டங்களையும் ஒருசேரக் கொண்டு, தன்கண் வருவார்க்குக் கொடுக்கும் குட்டுவனது கடல்முழக்கம் பெற்ற முசிறி என்க.

(267) அகநானூறு, 149. திணை—பாலை. துறை—தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.

பெருங்கை யெண்கி னிருங்கிளை கவரும்
அத்த நீளிடைப் போகி நன்றும்
அரிதுசெய் விழுப்பொரு ளெளிதினிற் பெறினும்
வாரேன் வாழியென் னெஞ்சே! சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமா ணன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ
அருஞ்சமங் கடந்து படிமம் வவ்விய
நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்
கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய
ஓடியா விழவி னெடியோன் குன்றத்து
வண்டுபட நீடிய குண்டுசுனை நீலத்
தெதிர்மலர்ப் பிணைய லன்னவிவள்
அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே.

எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்.

---

## தொண்டி

(268) வான்கடற் பரப்பிற் றூவற் கெதிரிய
மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த

---

குறிப்பு:— பாண்டியன் முசிறியை வளைத்து முற்றுகையிட்ட செய்தி கூறும் இப்பாட்டினுள், சுள்ளியம்பேராற்றில் யவனரது வேலைப்பாடமைந்த மரக்கலங்கள் பொன்களை ஏற்றிவந்து அப்பொன்களுக்குப் பிரதியாக மிளகு மூடைகளை ஏற்றிச்செல்லும் வளமிக்கது, அப்பேராற்றருகில் உள்ள முசிற் என்ற பட்டினம் என்று கூறப்படுதல் குறிப்பிடத்தக்கது.

(268) அகநானூறு, 10. திணை—நெய்தல். துறை—இரவுக்குறிவந்த

மூடவுழுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்
புள்ளிறை கூரு மெல்லம் புலம்ப!
நெய்த லுண்கண் பைதல கலுழப்
பிரித லெண்ணினை யாயி னன்றும்
அரிதுற் றனையாற் பெரும! உரிதினிற்
கொண்டாங்குப் பெயர்தல் வேண்டுங் கொண்டலொடு
குரூஉத்திரைப் புணரி யுடைதரு மெக்கர்ப்
பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டுமண லடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி யன்னவிவ ளலனே.

அம்மூவனார்.

---

(269) பெருங்கடற் பரப்பிற் சேயிறா நடுங்கக்
கொடுந்தொழில் முகந்த செங்கோல் அவ்வலை
நெடுந்திமிற் றொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு
அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்
திண்டேர்ப் பொறையன் தொண்டி யன்னவெம்
ஒண்டொடி ஞெமுக்கா தீமோ தெய்ய
ஊதை யீட்டிய உயர்மண லடைகரைக்

---

தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனை எதிர்ப்பட்டுநின்று தோழி சொல்லியது.

(269) ஷை, 60. திணை—நெய்தல். துறை—தலைமகற்குத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

கோதை யாயமொடு வண்டல் தைஇ
ஓரை யாடினும் உயங்கும்நின் னொளியெனக்
கொன்னும் சிவப்போள் காணின் வென்வேற்
கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினும் செறிய
அருங்கடிப் படுக்குவள் அறனில் யாயே.

குடவாயிற் கீரத்தனார்.

---

(270) குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை
இருஞ்சேற் றள்ளல் நாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்றலைச் சிறாஅர்
நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென
அல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது
பைதற் பிள்ளை தழீஇ ஒய்யென
அங்கட் பெண்ணை அன்புற நரலும்
சிறுபல் தொல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்
கழிசேர் புன்னை யழிபூங் கானற்
றணவா நெஞ்சமொடு தமியன் வந்துநம்
மணவா முன்னும் எவனோ தோழி!
வெண்கோட்டு யானை விறற்போர்க் குட்டுவன்
தெண்டிரைப் பரப்பிற் றொண்டி முன்றுறைச்
சுரும்புண மலர்ந்த பெருந்த ணெய்தல்
மணியேர் மாணல மொரீஇப்
பொன்னேர் வண்ணங் கொண்டவென் கண்ணே.

நக்கீரர்.

(270) நற்., 290. திணை—நெய்தல். துறை—இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

(271) அல்குபடர் உழந்த அரிமதர் மழைக்கட்
பல்பூம் பகைத்தழை நுடங்கும் அல்குற்
றிருமணி புரையு மேனி மடவோள்
யார்மகள் கொல்இவள் தந்தை வாழியர்
துயர முறீஇயினள் எம்மே அகல்வயல்
அரிவனர் அரிந்தும் தருவனர் பெற்றுந்
தண்சேறு தாஅய் மதனுடை நோன்றாட்
கண்போல் நெய்தல் போர்விற் பூக்கும்
திண்டேர்ப் பொறையன் தொண்டி
தன்திறம் பெறுகஇவ ளீன்ற தாயே.

---

(272) பருவரல் நெஞ்சமொடு பல்பட ரகல
வருவர் வாழி தோழி! மூவன்
முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்
கானலந் தொண்டிப் பொருநன் வென்வேற்
றெறலருந் தானைப் பொறையன் பாசறை
நெஞ்சம் நடுக்குறூஉந் துஞ்சா மறவர்
திரைதபு கடலின் இனிதுகண் படுப்பக்
கடாஅங் கழீஇய கதனடங்கு யானைத்

(271) நற்றிணை, 8. திணை—குறிஞ்சி. துறை—இயற்கைப் புணர்ச்சி யிறுதிக்கண் தலைமகளை ஆயத்தொடுங்கண்ட தலைமகன் சொல்லியது.

(272) ௸, 18. திணை—பாலை. துறை—பிரிவிடை யாற்றாளாகிய தலைவியைத் தோழி வற்புறுத்தியது.

**கருத்து:—** தலைவன் பிரிந்து வேற்றுநாட்டுச் சென்றபோது தலைவி வருந்துவதைக் கண்ட தோழி, அத்தலைவியைநோக்கி ‘ பாலைக் குன்றுகள்வழிச்

தடாஅ நிலை யொருகோட் டன்ன
ஒன்றிலங் கருவிய குன்றிறந் தோரே.

பொய்கையார்.

---

(273) அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்
குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தித்
தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்
மெல்லம் புலம்ப! யான்கண் டிசினே
கல்லென் புள்ளின் கானலந் தொண்டி
நெல்லரி தொழுவர் கூர்வா ளுற்றெனப்
பல்லிதழ் தயங்கிய கூம்பா நெய்தல்
நீரலைத் தோற்றம் போல
ஈரிய கலுழும்நீ நயந்தோள் கண்ணே.

(274) குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி முன்றுறை

சென்ற தலைவர் நின்வருத்தம் நீங்கும்படி விரைவில் வருவாராவர்? என்று ஆற்றுவிப்பாளாயினள் என்க.

குறிப்பு:— தொண்டிப்பட்டினத்தின் தலைவனாகிய சேரமானது பாசறையிலே இருந்த வீரர்களை ஒற்றைக்கொம்பனான மதம்பிடித்த யானையொன்று தூங்கவொட்டாமல் துன்புறுத்தி வந்ததென்றும், அதன்மதம் நீங்கியபின்பே அவ்வீரர் இனிதுறங்கலாயினர் என்றும் இப்பாட்டில் குறிக்கப்படுதல் அறியத்தகும்.

(273) ௸, 195. திணை—நெய்தல். துறை—தலைவன் களவின்கண் நெடுங் காலம்வந்தொழுக ஆற்றாளாயின தோழி வரைவுகடாயது.

(274) குறுந்தொகை, 128. திணை—நெய்தல். துறை—அல்லகுறிப்

அயிரை யாரிரைக் கணவந் தாஅங்குச்
சேயள் அரியோட் படர்தி
நோயை நெஞ்சே! நோய்ப்பா லோயே.

பரணர்

---

(275) பாசவ லிடித்த கருங்கா ழுலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
தொண்டி யன்னஎன் னலந்தந்து
கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே.

குன்றியனார்.

---

(276) திரையிமி ழின்னிசை யளைஇ யயலது
முழவிமி ழின்னிசை மறுகுதொ றிசைக்கும்

---

பட்டு மீளும் தலைமகன் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது. 'உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண்' தலைமகன் கூறியதூஉமாம்.

(275) ஷை, 233. திணை—மருதம். துறை—தலைமகன் பரத்தையின் மறுத்தந்து வாயில்வேண்டித் தோழியிடைச்சென்று தெளிப்பான் புக்காற்குத் தோழி சொல்லியது.

[ஐங்குறுநூற்றில் 171 முதல் 180 வரையுள்ள இப்பத்து முழுதும் பாடிய வர் அம்மூவனார்.]

(276) எ—து, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீக்கும் தலைமகன், ஆயத்தோடு செல்லும் தலைமகளைக்கண்டு சொல்லியது.

பழையவுரை:— திரையின் ஒலியொடு கலந்து முழவு ஒலிக்கும் என்றது, உடன்செல்கின்ற ஆயத்தார் மகிழ்ச்சியரவமும், உழையராய் எதிர்வருகின்றார் மகிழ்ச்சியரவமும் கூறியவாறு.

தொண்டி யன்ன பணைத்தோள்
ஒண்டொடி யரிவையென் னெஞ்சுகொண் டோளே. (1)

---

(277) ஒண்டொடி யரிவை கொண்டனள் நெஞ்சே
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி யாங்கண்
உரவுக் கடலொலித் திரையென
இரவி னானுந் துயிலறி யேனே. (2)

(278) இரவி னானு மின்றுயி லறியாது
அரவுறு துயர மெய்துப தொண்டித்
தண்ணறு நெய்தல் நாறும்
பின்னிருங் கூந்த லணங்குற் றோரே. (3)

---

(279) அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன
மணங்கமழ் பொழிற்குறி நல்கினள் நுணங்கிழைப்

(277) எ-து, 'கண்டுயில்கின்றிலை, இதற்குக் காரணமென்' என்று வினவிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

(278) எ-து, தலைமகன்குறிவழிச் சென்று தலைமகளைக்கண்ட பாங்கன் தன்னுள்ளே சொல்லியது.

பழையவுரை:— 'தொண்டித் தண்ணறுநெய்தல்போல் நாறும் கூந்தல்' என்றது, செய்மைக்கண்ணே நாறுதல் நோக்கி.

(279) எ-து, குறிவழிச்சென்று தலைமகளைக் கண்டுவந்த பாங்கன் 'அவள் நின்றுழிநின்றாள்' என்று கூறியவழி, ஆண்டுச் செல்லக்கருதிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

பொங்கரி பரந்த உண்கண்
அங்கலிழ் மேனி அசைஇய வெமக்கே. (4)

---

(280) எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோள்
நன்னுத லரிவையொடு மென்மெல இயலி
வந்திசின் வாழியோ மடந்தை!
தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே. (5)

---

(281) பண்பும் பாயலுங் கொண்டனள் தொண்டித்
தண்கமழ் புதுமலர் நாறும் ஒண்டொடி
ஐதமைந் தகன்ற வல்குற்
கொய்தளிர் மேனி! கூறுமதி தவறே. (6)

---

(282) தவறில ராயினும் பனிப்ப மன்ற
இவறுதிரை திளைக்கும் இடுமணை னெடுங்கோட்டு

---

(280) எ—து, பாங்கற்கூட்டங் கூடிநீங்குந் தலைமகன், 'இனிவரு மிடத்து நின்றோழியோடும் வரவேண்டும்' எனத் தலைமகட்குச் சொல்லியது.

(281) எ—து, தலைமகளுந் தோழியும் ஒருங்குநின்றுழிச்சென்ற தலைமகன் 'இவள் என்னை இவைகோடற்குக் காரணம் என்' என்று தோழியை வினவியது.

ப—ரை. கொண்டனளென்றது தலைவியை எனக்கொள்க.

(282) எ—து, தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழி 'இவள் என்னை வருத்துதற்குச் செய்த தவறு என்' என்று வினைய தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது.

ப—ரை. இதன் இறைச்சி:— நீரருகிலத்து முண்டகநறுமலர் கமழும்

முண்டக நறுமலர் கமழும்
தொண்டி யன்னோள் தோளுற் றோரே. (7)

(283) தோளுங் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்
குட்டுவன் தொண்டி யன்ன
எற்கண்டு நயந்துநீ நல்காக் காலே. (8)

(284) நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப!
அலவன் றாக்கத் துறையிறாப் பிறழும்
இன்னொலித் தொண்டி யற்றே
நின்னல தில்லா இவள்சிறு நுதலே. (9)

(285) சிறுநனி வரைந்தனை கொண்மோ பெருநீர்
வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்

---

தொண்டியன்னோள் என்றது, இவள் காமனுகி நுகர்தற்குரியள் எ—று. தோளுற்றோ ரென்றது, தோளை எதிர்ப்பட்டோர் எ—று.

(283) எ—து, தலைமகன் தோழியை இரந்துகுறையுறுவான் சொல்லியது.

ப—ரை:— ‘செங்கோற்குட்டுவன் தொண்டியன்ன என்’ என்றது, தன்னைத் தேறுதற்பொருட்டுத் தன் செப்பம் கூறியவாறு.

(284) எ—து, குறியிடத்து வந்து புணர்ந்துநீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு வரைவுகடாயது.

ப—ரை,— ‘அலவன் தாக்கத் துறையிறாப் பிறழும்’ என்றது, இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகியஞான்று இவள் உயிர்வாழாள் என்பதாம்.

(285) எ—து, தாழ்த்து வரையக்கருதிய தலைமகனைத் தோழி நெருங்கிக் கடிதின் வரையவேண்டும் எனச் சொல்லியது.

பறைதபு முதுகுரு கிருக்கும்
துறைகெழு தொண்டி யன்னவிவ ணலனே.

அம்மூவனார்.

---

## மாந்தை

(286) பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கா ழுவற் பொதிப்புற விருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கா லலவன் கொண்டகோட் கசாந்து
கொள்ளா நரம்பி னிமிரும் பூசல்
இரைதேர் நாரை யெய்தி விடுக்கும்
துறைகெழு மாந்தை யன்ன இவணலம்
பண்டு மிற்றே கண்டிசிற் றெய்ய
உழையிற் போகா தளிப்பினுஞ் சிறிய
ஞெகிழ்ந்த கவினலங் கொல்லோ மகிழ்ந்தோர்
கட்களி செருக்கத் தன்ன
காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே.

அம்மூவனார்.

---

பறை:— வலைவர்தந்த கொழுமீன் வல்சிக்கண்ணே பறத்தல்கெட்ட முதுகுருகு இருக்கும் என்றது, நொதுமலர்க்கு மகட்பேச வந்திருக்கின்ற சான்றோர் உளர் என்பதாம்.

இவை பத்தும், சொல்வகையாற் றொடர்ச்சி பெறுதலேயன்றிக் கிளவி வகையாற் றொடர்ச்சியுடையவாறும் அறிக.

(286) நற்றிணை, 35. திணை—நெய்தல். துறை—மணமனைப் பிற்றை ஞான்று புக்க தோழி, 'நன்காற்றுவித்தாய்' என்ற தலைமகற்குச் சொல்லியது.

குறிப்பு:— தொண்டிமுசிறிகள்போலச் சேரர்க்குச் சிறந்த கடற்கரைப் பட்டினங்களுள் மாந்தையும் ஒன்றாகும்.

(287) யாரை எலுவ! யாரே நீயெமக்கு
யாரையு மல்லை நொதும லாளனை
அனைத்தாற் கொண்கநம் மிடையே நினைப்பிற்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவன்
வேந்தடு மயக்கத்து முரசதிர்ந் தன்ன
ஓங்கற் புணரி பாய்ந்தாடு மகளிர்
அணிந்திடு பல்பூ மரீஇ யார்ந்த
ஆபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை யன்னவெம்
வேட்டனை யல்லையால் நலந்தந்து சென்மே.

அம்மூவனார்.

---

(288) ஒறுப்ப ஓவலர் மறுப்பத் தேறலர்
தமியர் உறங்கும் கௌவை யின்றாய்
இனியது கேட்டின் புறுகவிவ் வூரே
முனாஅது, யானையங் குருகின் கானலம் பெருந்தோடு
அட்ட மள்ள ரார்ப்பிசை வெரூஉம்
குட்டுவன் மாந்தை யன்னஎங்
குழைவிளங் காய்நுதற் கிழவனு மவனே.

கொல்லிக்கண்ணன்.

---

(287) ஷை, 395. திணை—நெய்தல். துறை—நலந்தொலைந்தது.

**கருத்து:—** தோழி தலைவனை நெருங்கி 'அன்ப! நீ அயலானாக இராநின்றாய்; எமக்கு உறவினனுமல்லை; நின்னால் என் தோழி நலனிழந்தாள்; அதனை அவட்குத்தந்து செல்வாயாக' என்று கடுமைதோன்றக் கூறி வரைவு கடாயது.

(288) குறுந்தொகை, 34. திணை—பாலை. துறை—வரைவு மலிந்தமை ஊர்மேல்வைத்துத் தோழி கிழத்திக்குச் சொல்லியது.

(289) நண்கடற் படுதிரை பெயர்த்தலின் வெண்பறை
நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்
ஊரோ நன்றுமன் மாந்தை
ஒருதனி வைகிற் புலம்பா கின்றே.

கூடலூர்கிழார்.

---

## வெளியம்

(290) பனிவா ருண்கணும் பசந்த தோளும்
நனிபிற ரறியச் சாஅய் நாளும்
கரந்தன முறையும் நம்பண் பறியார்
நீடினர் மன்னோ காதல ரெனநீ
எவன்கை யற்றனை இகுளை! அவரே
வான வரம்பன் வெளியத் தன்னநம்
மாணலந் தம்மொடு கொண்டனர் முனாஅது
அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்
பெருங்கன் மீமிசை இயமெழுந் தாங்கு
வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை
சூர்புக லடுக்கத்து மழைமாறு முழங்கும்
பொய்யா நல்லிசை மாவண் புல்லி
கவைக்கதிர் வரகின் யாணர்ப் பைந்தாள்
முதைச்சுவல் மூழ்கிய கான்சுடு குருஉப்புகை

---

(289) ஷை, 166. திணை-நெய்தல். துறை—காப்புமிகுதிக்கண் தோழி தலைமகட்கு உரைத்தது.

(290) அகநானூறு, 359. திணை—பாலை. துறை—பிரிவிடைவேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

அருவித் துவலையொடு மயங்கும்
பெருவரை யத்த மியங்கி யோரே.

மாமூலனார்.

---

வாகைப் பெருந்துறை

(291) கரைபாய் வெண்டிரை கடுப்பப் பலவுடன்
நிரைகா லொற்றலிற் கல்சேர் புதிரும்
வரைசேர் மராஅத் தூழ்மலர் பெயல்செத்து
உயங்கல் யானை நீர்நசைக் கலமரச்
சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்றல்
அலங்கல் உலவை யரிநிழ லசைஇத்
திரங்குமரற் கவ்விய கையறு தொகுநிலை
அரந்தி னூசித் திரள்நுதி யன்ன
திண்ணிலை யெயிற்ற செந்நா யெடுத்தலின்
வளிமுனைப் பூளையி னொய்யென் றலறிய
கெடுமா னினநிரை தாஇய கலையே
கதிர்மாய் மாலை யாண்குரல் விளிக்கும்
கடல்போற் கானம் பிற்படப் பிறர்போற்

---

குறிப்பு:—வெளியநாடு, வெளியம் என்ற ஊர்கள், திருவாங்கூர்ச் சீமையில் செங்கணூச்சேரி, மாவேலிக்கரைத் தாலூகாக்களில் முறையே உள்ளமை அறியத்தக்கது.

(291) அகநானூறு, 199. திணை—பாலை. துறை—பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

**கருத்து:—** 'பிறர்போல் பொருளீட்டல்கருதித் தலைவியைப் பிரிந்து செல்வேமாயின் நன்று' என்னும் பொருளாசை உள்ளத்தைத் தூண்ட, பெருங் கானமும் பிற்படும்படி நீ செல்லுதற்குரியை; யானோ, களங்காய்க்கண்ணி

செல்வே மாயினெம் செலவுநன் றென்னும்
ஆசை யுள்ள மசைவின்று துரப்ப
நீசெலற் குரியை நெஞ்சே! வேய்போல்
தடையின மன்னும் தண்ணிய திரண்ட
பெருந்தோள் அரிவை யொழியக் குடாஅது
இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவிற்
பொலம்பூண் நன்னன் பொருதுகளத் தொழிய
வலம்படு கொற்றந் தந்த வாய்வாட்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடுதந் தன்ன
வளம்பெரிது பெறினும் வாரலென் யானே.

**கல்லாடனார்.**

---

கழுமலம்

(292) இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅல் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து
இனமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையும்

---

நார்முடிச் சேரலானவன், குடநாட்டு வாகைப்பெருந்துறைப் போரிலே நன்னனொடு பொருது அவனைவென்று தானிழந்த நாட்டைத் திரும்பப்பெற்றாற் போன்ற வளம்பெற்றாலும், என் அழகிய காதலியை நீங்கி நின்னோடு வாரேன் எ-று.

**குறிப்பு:—** 'பூழிநாட்டைப் படையெடுத்துத் தழீஇ, உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை, நிலைச்செருவி னாற்றலை யறுத்து' **வெற்றி பெற்றவன்** இந்நார்முடிச்சேரல் என்பது பதிற்றுப்பத்தால் அறிந்தது (**இந்நூல்** 38-39-ம் பாடல்கள் பார்க்க).

(292) ஷை, 270. திணை—நெய்தல். துறை—பகற்குறிக்கண் வந்து நீங்கும் தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

மெல்லம் புலம்ப! நெகிழ்ந்தன தோளே
சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை
பராஅரைப் புன்னை வாங்குசினைத் தோயும்
கானலம் பெருந்துறை நோக்கி யிவளே
கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்
நற்றேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன
அம்மா மேனி தொன்னலந் தொலையத்
துஞ்சாக் கண்ணள் அலமரும் நீயே
கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்
சேவலொடு புணராச் சிறுகரும் பேடை
இன்று துயங்குங் கங்குலும்
நும்மூ ருள்ளுவை நோகோ யானே.

சாகலாசனார்.

---

## தகடூர்

(293) மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்டது
எவ்வழி யென்றி வியன்றார் மார்ப!
எவ்வழி யாயினும் அவ்வழித் தோன்றித்
திண்கூர் எஃகின் வயவர்க் காணின்
புண்கூர் மெய்யி னுராஅய்ப் பகைவர்

---

குறிப்பு:— 'குட்டுவன் கழுமலம்' என்பதனால், சோணாட்டுக் கழுமலமாகிய சீகாழியின் இது வேறு என உணர்க.

(293) தொல்காப்பியம். பொருளதிகாரம், 67-ஆம் சூத்திரம்—நச்சினார்க்கினியர் மேற்கோள்.

"பொன்முடியார் சேரமானுக்குத் தகடூரின் தன்மை கூறியது".

பைந்தலை துமித்த மைந்துமலி தடக்கை
ஆண்டகை மறவர் மலிந்துபிறர்
தீண்ட றகாது வெந்துறை யானே.

**பொன்முடியார்.**

கொல்லிமலை

(294) முளிகொடி வலந்த முள்ளரை யிலவத்து
ஒளிர்சினை யதிர வீசி விளிபட
வெவ்வளி வழங்கும் வேய்பயில் மருங்கிற்
கடுநடை யானை கன்றொடு வருந்த
நெடுநீர் அற்ற நிழலி லாங்கண்
அருஞ்சுரக் கவலைய என்னாய் நெடுஞ்சேட்
பட்டனை வாழிய நெஞ்சே! குட்டுவன்
குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை
வண்டுபடு வான்போது கமழும்
அஞ்சி லோதி அரும்பட ருறவே.

**முடத்திருமாறன்.**

---

(294) நற்றிணை, 105. திணை—பாலை. துறை—இடைச்சுரத்து மீள லுற்ற நெஞ்சினைத் தலைமகன் கழறியது.

**கருத்து:—** பொருள்வயிற் பிரிந்து பாலைவழியே சென்ற தலைமகன் தலைவியை நினைந்து மீளலுற்ற நெஞ்சினைநோக்கி, 'நெஞ்சமே! காடு கடுமைய என்று முன்னமே நீ கருதாமல் நம்காதலி தனித்துவருந்தும்படி புறப்பட்டு நெடுந்தூரம் வந்துற்றனை; இன்று நீ மீளத்தொடங்குவையாயின் நின்முயற்சி நன்றுகாண்; வாழ்வாயாக'— என்று கடிந்து கூறியது.

**குறிப்பு:—** (7–8) குட்டுவன்குடவரை — கொல்லிமலை. 'கொல்லிக் குடவரை' என்ப (அகம், 213; குறுந். 89). இம்மலைச்சுனையிற் பூக்கும்

(295) குணகடல் முகந்து குடக்கேர்பு இருளித்
தண்கார் தலைஇய நிலந்தணி காலை
அரசுபகை நுவலும் அருமுனை யியவின்
அழிந்த வேலி யங்குடிச் சீறூர்
ஆளில் மன்றத் தல்குவளி யாட்டத்
தாள்வலி யாகிய வன்க ணிருக்கை
இன்றுநக் கனைமன் போலா வென்று
நிறையுறு மதியின் இலங்கும் பொறையன்
பெருந்தண் கொல்லிச் சிறுபசுங் குளவிக்
கடிபதங் கமழுங் கூந்தல்
மடமா அரிவை தடமென் றோளே.

எயினந்தை மகன் இளங்கீரனார்.

(296) வினைநன் றாதல் வெறுப்பக் காட்டி
மனைமாண் கற்பின் வாணுத லொழியக்
கவைமுறி யிழந்த செந்நிலை யாஅத்து

குவளைமலர் நறுமணங்கமழ்வது என்பது, 'கொல்லிச்சுனைவாய் தொடையவிழ் தண்குவளை சூடான்' என்ற புறப்பொருள் வெண்பாமாலைத் தொடராலும் அறிவாகும் (பொதுவியற்படலம்).

(295) ஷை, 343. திணை—பாலை. துறை—பொருள்வயிற் பிரிந்த தலைமகன் ஆற்றானாய்த் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

கருத்து:— பொருள்வயிற் பிரிந்து இடைச்சுரத்துற்ற தலைமகன் தலைமகளை நினைந்து காதல்மிகுதலாலே 'நெஞ்சமே! நம் காதலியின் தோள்களை இப்பொழுது நினைந்து மகிழ்கின்றனையேனும், அவற்றை இங்கு அடைதல் அரிதன்றோ' என்று இரங்கிக்கூறியவாறு.

(296) அகநானூறு, 36. திணை—பாலை. துறை—தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

ஒன்றோங் குயர்சினை யிருந்த வன்பறை
வீளைப் பருந்தின் கோள்வல் சேவல்
வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரும்
இளிதேர் தீங்குரல் இசைக்கும் அத்தம்
செலவருங் குரைய என்னாது சென்றவண்
மலர்பா டான்ற மையெழில் மழைக்கண்
தெளியா நோக்க முள்ளினை உளிவாய்
வெம்பர லதர குன்றுபல நீந்தி
யாமே யெமிய மாக நீயே
ஒழியச் சூழ்ந்தனை யாயின் முனாஅது
வெல்போர் வானவன் கொல்லி மிமிசை
நுணங்கமை புரையும் வணங்கிறைப் பணைத்தோள்
வரியணி யல்குல் வாலெயிற் ரோள்வயிற்
பிரியா யாயின் நன்றுமன் தில்ல
அன்றுநம் அறியா யாயினும் இன்றுநம்
செய்வினை யாற்றுற விலங்கின்
எய்துவை யல்லையோ பிறர்நகு பொருளே.

**மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார்.**

---

(297) வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்டு
ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்க்
கொய்குழை யதிரல் வைகுபுல ரலரி

---

(297) ஷை, 213. திணை—பாலை. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி
இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவி னாட்பலி கொடுக்கும்
வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து
நிழற்கவி னிழந்த நீரில் நீளிடை
அழலவி ரருஞ்சுரம் நெடிய வென்னாது
அகற லாய்ந்தன ராயினும் பகல்செலப்
பல்கதிர் வாங்கிய படுசுட ரமையத்துப்
பெருமரங் கொன்ற கால்புகு வியன்புனத்து
எரிமருள் கதிர திருமணி யிமைக்கும்
வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை
வேயொழுக் கன்ன சாயிறைப் பணைத்தோட்
பெருங்கவின் சிதைய நீங்கி யான்றோர்
அரும்பெறல் உலகம் அமிழ்தொடு பெறினும்
சென்றுதாம் நீடலோ இலரே யென்றும்
கலம்பெயக் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கை
வலம்படு வென்றி வாய்வாட் சோழர்
இலங்குநீர்க் காவிரி யிழிபுனல் வரித்த
அறலென நெறிந்த கூந்தல்
உறலின் சாயலொ டொன்றுதல் மறந்தே.

தாயங்கண்ணனார்.

---

**கருத்து:—** தோழீ! நம் தலைவர் வேங்கடத்துக்கு அப்பாலுள்ள வடுகர் தேயத்து அருஞ்சுரம் கடக்கத் துணிந்தனரேனும், நின்னுடன் ஒன்றியிருத்தலை மறந்து நின்கவின் சிதையும்படி, தேவருலகை அமிழ்தொடு பெற்றாலும் சிறிதும் தாழ்த்திரார் என்று, வானவனது கொல்லியாகிய குடவரையிலுள்ள (தலைவி) என்க.

(298) இடைபிற ரறித லஞ்சி மறைகரந்து
பேஎய் கண்ட கனவிற் பன்மாண்
நுண்ணிதி னியைந்த காமம் வென்வேல்
மறமிகு தானைப் பசும்பூட் பொறையன்
கார்புகன் றெடுத்த சூர்புகல் நனந்தலை
மாயிருங் கொல்லி யுச்சித் தாஅய்த்
ததைந்துசெல் அருவியின் அலரெழப் பிரிந்தோர்
புலங்கந் தாக இரவலர் செலினே
வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும்
உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்
நிரைபறைக் குரீஇயினங் காலைப் போகி
முடங்குபுறச் செந்நெல் தரீஇயர் ஓராங்கு
இரைதேர் கொட்பின வாகிப் பொழுதுபடப்
படர்கொள் மாலைப் படர்தந் தாங்கு
வருவரென் றுணர்ந்த மடங்கெழு நெஞ்சம்
ஐயந் தெளியரோ நீயே பலவுடன்
வறன்மரம் பொருந்திய சிள்வீ டுமணர்
கணநிரை மணியி னார்க்கும் சுரனிறந்து
அழிநீர் மீன்பெயர்ந் தாங்கவர்
வழிநடைச் சேறல் வலித்திசின் யானே.

ஔவையார்.

---

(299) குன்றோங்கு வைப்பின் நாடுமீக் கூறும்
மறங்கெழு தானை யரச ருள்ளும்
அறங்கடைப் பிடித்த செங்கோ லுடனமர்

---

(298) ஷை 303. திணை—பாலை. துறை—தலைமகனது பிரிவின்கண் வேட்கைமீதூர்ந்த தலைமகள், தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

(299) ஷை, 338. திணை—குறிஞ்சி. பாலை. துறை—அல்லகுறிப்பட்ட தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

மறஞ்சாய்த் தெழுந்த வலனுயர் திணிதோட்
பலர்புகழ் திருவிற் பசும்பூட் பாண்டியன்
அணங்குடை யுயர்நிலைப் பொருப்பிற் கவாஅன்
சினையொண் காந்தள் நாறும் நறுநுதற்
றுணையீ ரோதி மாஅ யோள்வயின்
நுண்கோல் அவிர்தொடி வண்புறஞ் சுற்ற-
முயங்கல் இயையா தாயினும் என்றும்
வயவுறு நெஞ்சத் துயவுத்துணை யாக
ஒன்னார் தேஎம் பாழ்பட நூறும்
துன்னருந் துப்பின் வென்வேற் பொறையன்
அகலிருங் கானத்துக் கொல்லி போலத்
தவாஅ. லியரோ நட்பே அவள்வயின்
அறாஅ லியரோ தூதே பொரூஅர்
விண்பொறக் கழித்த திண்பிடி யொள்வாட்
புனிற்றான் றரவின் இளையர் பெருமகன்
தொகுபோர்ச் சோழன் பொருள்மலி பாக்கத்து
வழங்க லானாப் பெருந்துறை
முழங்கிரு முந்நீர்த் திரையினும் பலவே.

மதுரைக் கணக்காயனார்.

---

(300) ஆனா நோயொடு அழிபடர்க் கலங்கிக்
காமங் கைம்மிகக் கையறு துயரங்
காணவும் நல்கா யாயிற் பாணர்
பரிசில் பெற்ற விரியுளை நன்மான்
கவிகுளம்பு பொருத கன்மிசைச் சிறுநெறி

(300) நற்றிணை, 185. திணை—குறிஞ்சி. துறை—பாங்கற்குத் தலைவன் சொல்லியது.

குறிப்பு:— (10–11) கொல்லிமலையில், தெய்வத்தால் அமைக்கப்பட்ட பாவையொன்று உண்டென்பதும், அது தன் பேரழகால் கண்டார் மனத்தைக் கவர்ந்து மயக்குவதென்பதும் பின்வரும் சங்கநூற்பாடல்களால் அறியப்படும்.

இரவலர் மெலியா தேறும் பொறையன்
உரைசால் உயர்வரைக் கொல்லிக் குடவயின்
அகலிலைக் காந்தள் அலங்குகுலைப் பாய்ந்து
பறவை யிழைத்த பல்கண் இருஅற்
றேனுடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை யன்னோள்
கொலைசூழ்ந் தனளால் நோகோ யானே.

பரணர்

(301) பாவடி யுரல பகுவாய் வள்ளை
ஏதில் மாக்கள் நுவறலும் நுவல்ப
அழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே
பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
5 கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்னஇம்
மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே.

பரணர்.

(302) அயத்துவளர் பைஞ்சாய் முருந்தி னன்ன
நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வாய்
ஆகத் தரும்பிய முலையள் பணைத்தோள்

இதனை அமைத்த தெய்வம், ஒரு பூதமாகும். இளவெயிற் காலத்தில் இதன் சோபை மிக்கு விளங்குவதென்பர் (நற். 192). “ காற்பொரு திடிப்பினும் கதமுறை கடுகினும், உருமுடன் றெறியினும் ஊறுபல தோன்றினும், பெருநிலம் கிளரினும் திருநல உருவின், மாயாவியற்கைப் பாவை ” என்றும் இதனைச் சிறப்பிப்பர் முன்னோர் (நற். 201).

(301) குறுந்தொகை, 89. திணை—மருதம். துறை—தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது; தலைமகற்குப் பாங்காயினர் கேட்பச்சொல்லி வாயின்மறுத்ததூஉமாம்.

(302) அகநானூறு, 62. திணை—குறிஞ்சி. துறை—அல்லகுறிப்பட்டுழித் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயும் அறியா மறையமை புணர்ச்சி
பூசற் றுடியிற் புணர்புபிரிந் திசைப்பக்
கரந்த கரப்பொடு நாஞ்செலற் கருமையிற்
கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று
நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல
நடுங்கஞர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைதந் தோளே வென்வேற்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
ஒளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக்
கடவு ளெழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅ யோளே.

பரணர்

(303) தோளுந் தொல்கவின் தொலைந்தன நாளும்
அன்னையு மருந்துய ருற்றன ளலரே
பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்
எழுவுறழ் திணிதோ ளியறேர்ச் செழியன்
நேரா வெழுவ ரடிப்படக் கடந்த
ஆலங் கானத் தார்ப்பினும் பெரிதென
ஆழல் வாழல் தோழி! யவரே
மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத் தும்பர்
அறையிறந் தகன்றன ராயினு நிறையிறந்

(303) ஷை, 209. திணை—பாலை. துறை—பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.

குறிப்பு:—முன்னூர்மன்னனான மலையமான் திருமுடிக்காரி, புகழ்பெற்ற வல்விலோரி என்ற கொல்லிமலைத்தலைவனைப் போரிலே கொன்று, அக் கொல்லியைச் சேரமானுக்கு உரிமையாக்கினன் என்ற வரலாறு அறியத்தக்கது.

துள்ளா ராதலோ வரிதே செவ்வேன்
முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலற் கீத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவு ளாக்கிய
பலர்புகழ் பாவை யன்னவிவ ணலனே.

கல்லாடனார்.

---

உதியன் அட்டில்

(304) யாமம் நும்மொடு கழிப்பி நோய்மிகப்
பனிவார் கண்ணேம் வைகுது மினியே
ஆன்றல் வேண்டும் வான்றோய் வெற்ப!
பல்லான் குன்றிற் படுநிழற் சேர்ந்த
நல்லான் பரப்பிற் குழூஉ ராங்கண்
கொடைக்கட னேன்ற கோடா நெஞ்சின்
உதியன் அட்டில் போல ஒலியெழுந்து
அருவி யார்க்கும் பெருவரைச் சிலம்பின்
ஈன்றணி யிரும்பிடி தழீஇக் களிறுதன்
தூங்குநடைக் குழவி துயில்புறங் காப்ப
ஒடுங்களை புலம்பப் போகிக் கடுங்கண்
வாள்வரி வயப்புலி கல்முழை யுரறக்

---

(304) அகநானூறு, 168. திணை—குறிஞ்சி. துறை—இரவுக்குறிவந்த தலைமகனை இரவுக்குறி விலக்கி (தோழி) வரைவுகடாயது.

குறிப்பு:—சேரவேந்தர், வறுமையுற்ற மக்களின் பசிப்பிணி நீக்கவேண்டி அறச்சாலைகளை நாடெங்கும் அமைத்து அன்னதானம் புரிந்துவரும் சீரிய இயல்பினர் என்பது மலைநாட்டில் இன்றும்திகழும் அறச்செயல்களால் யாவரும் அறிவர். இத்தகைய அரிய செயலை மிகப்பழங்காலமுதலே சேரவேந்தர் மேற்கொண்டிருந்தவர்என்பது, பாரதப்போரில் பாண்டவசேனைக்கு உணவளித் துதவிய பெருஞ்சோற்றுதியன் சேரலாதனது வரலாற்றாலும், குழுமூரில்

கானவர் மடிந்த கங்குல்
மானதர்ச் சிறுநெறி வருதல் நீயே.

கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான்.

---

### சேரர்திருநாள்

(305) ஓங்குதிரை வியன்பரப்பின்
ஒலிமுந்நீர் வரம்பாக
..............................
கொடும்பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்தும்
தண்கடல் நாடன் ஒண்பூங் கோதை
பெருநா ளிருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை கடுப்பப் பலவுடன்
சேறும் நாற்றமும் பலவின் சுளையும்
வேறுபடக் கவினிய தேமாங் கனியும்
பல்வே றுருவிற் காயும் பழனும்
கொண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி
மென்பிணி யவிழ்ந்த குறுமுறி யடகும்
அமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக் கடிகையும்

கொடைக்கடனேன்ற கோடாநெஞ்சின் உதியன் அட்டிலின்' சிறப்பாக இப்பாட்டிற் கூறப்பட்டவற்றாலும் நன்கறியலாகும்.

(305) மதுரைக்காஞ்சியில் 523 முதல் 535 வரையுள்ள அடிகள்.

**கருத்து:—** கூத்தருடைய சுற்றம் சேர்ந்திருந்து வாழ்த்தும் குளிர்ந்த கடல்நாடனான சேரமானது பிறந்ததிருநாள் ஓலக்கத்திலே, சீரியோர் திரண்டுண்ணும் ஆரவாரத்தையொப்ப, பலாச்சுளைகளும், மாம்பழங்களும், பல்வகைக் காய்களும், பழங்களும், கற்கண்டுத் துண்டுகளும், இறைச்சிகளோடு சோறும் கிழங்குகளும் கொண்டுவந்து பரிமாறுவாரால், மக்கள் பலவிடங்களிலும் ஆரவாரத்துடன் உண்ண என்றவாறு.

**குறிப்பு:—** பெருநாள் — பிறந்தநாள். இவ்வடிகட்கு நச்சினார்க்கினியர் வேறுகருத்துக் கூறுவர்.

புகழ்படப் பண்ணிய பேருன் சோறும்
கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்
இன்சோறு தருநர் பல்வயின் நுகர"

**மாங்குடி மருதனார்.**

## பதிற்றுப்பத்தினுள்
## விடுபட்ட பாடல்கள்

**(306)** இருங்கண் யானையொ டருங்கலந் துறுத்துப்
பணிந்துவழி மொழித லல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே
உருமுடன்று சிலைத்தலின் விசும்பதிர்ந் தாங்குக்
கண்ணதிர்பு முழங்குங் கடுங்குரன் முரசமொடு
கால்கிளர்ந் தன்ன வூர்திக் கான்முளை
எரிநிகழ்ந் தன்ன நிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
நீர்துனைந் தன்ன செலவின்
நிலந்திரைப் பன்ன தானையோய்! நினக்கே.

---

**(307)** இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து
நிலம்புடையூ வெழுதரும் வலம்படு குஞ்சரம்
எரியவிழ்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல லிவுளி
கோன்முனைக் கொடியினம் விரவா வல்லோ

(306) புறத்திரட்டு, பகைவயிற்சேறல், 8; தொல். புறத். 6, இளம். 8; நச். மேற். அடி. 1. சீவக. 339. நச். மேற்கோள்.

**குறிப்பு:**—முதற்பத்தையோ பத்தாம்பத்தையோ சார்ந்த இவை, தொல்காப்பிய உரைகளாலும் புறத்திரட்டாலும் தெரியவந்தனவாகும்.

(307) தொல். புறத். 12, 15. நச். மேற்கோள்.

டுன்வினை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்
தருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்வேட் டனவே முரசங் கண்ணுற்றுக்
கதித்தெழு மாதிரங் கல்லென வொலிப்பக்
கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப
நெடுமதி னிரைஞாயிற்
கடிமிளைக் குண்டுகிடங்கின்
மீப்புடை யாரரண் காப்புடைத் தேஎம்
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
ஒல்லா மன்னர் நடுங்க
நல்ல மன்றவிவண் வீங்கிய செலவே.

---

(308) வந்தனென் பெரும! கண்டனென் செலற்கே
களிறு கலிமான் றேரொடு சுரந்து
நன்கல னீயு நகைசா லிருக்கை
மாரி யென்னாய் பனியென மடியாய்
பகைவெம் மையி னசையா வூக்கலை
வேறுபுலத் திறுத்த விறல்வெந் தானையொடு
மாறா மைந்தர் மாறுநிலை தேய
மைந்துமலி யூக்கத்த கந்துகால் கீழ்ந்து
கடாஅ யானை முழங்கும்
இடாஅ வேணிநின் பாசறை யேனே.

(308) புறத்திரட்டு, பாசறை. 8.

## வேள் ஆய்.

—::—

(309) களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாணர் உய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
ஈகை யரிய இழையணி மகளிரொடு
சாயின் றென்ப ஆஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை அடிசில்
பிறர்க் கீவின்றித் தம்வயி றருத்தி
உரைசால் ஓங்குபுகழ் ஓரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

—

---

(309) புறநானூறு, 127. திணை—பாடாண்டிணை. துறை — கடைநிலை.

**கருத்து:—** சிறிய யாழைக்கொண்டு இனிய பாட்டைப் பாடவல்ல பாணர்கள் பரிசிலாகப் பெற்றுக்கொண்டு போனமையால் களிறுகள் இல்லையான நெடிய தறியின்கண்ணே காட்டுமயில்கள் இனத்தோடு தங்குவதும், பிறஅணிகளையெல்லாம் கொடுத்துவிட்டமையால் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தை மட்டும் அணிந்த மகளிரோடு பொலிவின்றிச் சாய்ந்ததுமாக உள்ளது என்று சொல்லுவர், ஆயுடைய அரண்மனையை. இவ்வாறாயினும், உணவைப் பிறர்க்கு உதவாமல் தம்முடைய வயிற்றையே நிறைக்கும் புகழற்ற செல்வத்தைக் கொண்ட பிறஅரசர் அரண்மனை, இதனை ஒவ்வாது — என்று ஆயது கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு.

(310) மன்றப் பலவின் மாச்சினை மந்தி
இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் தெண்கண் கனிசெத்து அடிப்பின்
அன்னச் சேவல் மாறெழுந்து ஆலும்
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்
ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ அரிதே.

ஷை முடமோசியார்.

(311) சூறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து
வேங்கை முன்றிற் குரவை அயரும்
தீங்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்
ஆஅ யண்டிரன் அடுபோர் அண்ணல்
இரவலர்க்கு ஈத்த யானையிற் கரவின்று

---

(310) ஷை, 128. திணை—பாடாண்டிணை. துறை—வாழ்த்து; இயன்மொழியுமாம்.

**கருத்து:**— மன்றத்தில் பலாமரத்தின் கோட்டில் வாழும் மந்தியானது பரிசிலரால் தொங்கவிடப்பட்ட மத்தளத்தைப் பலாப்பழமென்று கருதித் தட்டினவிடத்து, அங்குவாழும் அன்னச்சேவல் அவ்வோசைக்கு மாறாக ஒலிக்கும் ஆயின் பொதியின்மலை, ஆடும்விறலியர் அணுகினல்லது வேற்றரசர் அணுகுதல் அரிது எ—று.

(311) ஷை, 129. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

**கருத்து:**—சிறியமனையிலே குறமக்கள் முதிர்ந்த மதுவை நுகர்ந்து, வேங்கை மரமுள்ள முற்றத்தின்கண் குரவைக்கூத்தாடும் பெரிய மலையையுடையவனும் போர்வல்லவனுமாகிய ஆய் அண்டிரன் இரப்போர்க்கு அளித்த யானைத் தொகையை விண்ணில் அங்கங்கேதோன்றும் நக்ஷத்திரங்களுக்கு ஒப்பிடல்

வான மீன்பல பூப்பின் ஆனது
ஒருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே.

ஷ முடமோசியார்.

---

(312) விளங்குமணிக் கொடும்பூண் ஆஅய்! நின்னாட்டு
இளம்பிடி ஒருசூல் பத்தீ னும்மோ
நின்னும்நின் மலையும் பாடி வருநர்க்கு
இன்முகம் கரவாது உவந்துநீ யளித்த
அண்ணல் யானை எண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே.

ஷ முடமோசியார்.

---

(313) மழைக்கணஞ் சேக்கும் மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன்

---

பொருந்தாது. ஒரிடத்தும் கரிய இடமின்றிப் பெருக அந்நட்சத்திரங்கள் அடர்ந்து வெண்மையைச் செய்யுமாயின் அது பொருந்துவதாகும் எ-று.

(312) ஷை, 130. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

**கருத்து:—** ஆய்வள்ளால்! நின்னாட்டிலே, இளையபிடியும் ஒருகருப்பம் பத்துக்கன்றுகளைப் பெறுவதோ, நின்னையும் நின் மலையையும் பாடிவரும் பரிசிலர்க்கு இன்முகத்தோடு நீ கொடுத்த உயர்ந்த யானைகளை எண்ணுமிடத்து, நீ கொங்கரை மேல்கடற்கண்ணே ஓட்டிய நாளில், அவர்கள் புறங்கொடுத்துப் போகட்ட வேல்களினும் பலவாகும் என்று ஆயது கொடைச்சிறப்பும் வென்றிச் சிறப்பும் கூறியவாறு.

(313) ஷை, 131. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

**கருத்து.—** உயர்ந்த மலைக்குத் தலைவனும் சுரபுன்னைக்கண்ணியுடையவனுமாகிய அண்டிரனது மலையைப்பாடினவோ, களிறுகளை மிகவுடைய இந்த அழகிய காடுகள் எ-று.

குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையஇக் கவின்பெறு காடே.

ஷை. முடமோசியார்.

---

(314) முன்உள்ளு வோனைப் பின்உள்ளி னேனே
ஆழ்கென் உள்ளம் போழ்கென் நாவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே
நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
5 குவளைப் பைஞ்சுனை பருகி அயல
தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்
வடதிசை யதுவே வான்தோய் இமயம்
தென்திசை ஆஅய் குடியின் றாயிற்
பிறழ்வது மன்னோஇம் மலர்தலை யுலகே.

ஷை. முடமோசியார்.

---

(315) மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பின் அல்லது காண்பறி யலையே

---

**குறிப்பு:—** யானைக்குப் பிறப்பிடமாயுள்ள காட்டினும், ஆயைப்பாடினோர் யானைகளை மிக உடையர் என்று அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறு.

(314) ஷை, 132. திணை—பாடாண்டிணை; துறை—இயன்மொழி.

**கருத்து:—** யாவரினும் முன்னே நினைக்கப்படுமவனைப் பின்பே நினைத்தேன் யான். அக்குற்றத்தால் எனதுள்ளம் அமிழ்ந்திப்போவதாக; அவனையன்றிப் பிறரைப் புகழ்ந்த நாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக; அவன் புகழன்றிப் பிறர் புகழைக்கேட்ட செவியும் பாழூர்க் கிணறுபோலத் தூர்வதாக. வடதிசைக்கண்ணே வானைப் பொருந்தும் இமயமலையும் தென்றிசைக்கண்ணே ஆய்குடியும் இல்லையாயின் இப்பரந்த உலகம் கீழ்மேலதாகிக் கெடும் எ—று.

(315) ஷை, 133. திணை—பாடாண்டிணை, துறை—விறலியாற்றுப்படை.

**கருத்து:—** மெல்லிய இயல்பினையுடைய விறலி! நீ வள்ளலான வேள் ஆயின் நல்லிசையைச் செவியாற் கேட்பதல்லது அவன் வடிவைக் கண்டறியாய்,

காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர இயலி
மாரி யன்ன வண்மைத்
தேர்வேள் ஆயைக் காணிய சென்மே.

டி. முடமோசியார்.

(316) இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்
பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப்பட் டன்றவன் கைவண் மையே.

டி. முடமோசியார்.

(317) கொடுவரி வழங்கும் கோடுயர் நெடுவரை
அருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித்
தடவரல் கொண்ட தகைமெல் ஒதுக்கின்

---

காண்டலை விரும்பினையாயின், கொண்டைமேற் காற்றடிக்கும்படி மயில் போல நடந்துசென்று அவ்வேளைக்காணச் செல்வாயாக எ-று.

**குறிப்பு:-** பிறிதொன்றால் இடையூறில்லை யாதலால், அவனை எளிதிற் கண்டு பயன்பெறலாகும் என்றபடி. ஆய், மாரிபோன்ற வண்மையனாதலின் அம்மாரியைக் கண்ட மயில்போலக் களித்துச்செல் என்பது குறிப்பு.

(316) டி, 134. திணை-பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

**கருத்து:—** இப்பிறப்பிலே செய்ததொன்று மறுபிறப்பிற்கு உதவும் என்றுகருதி, பொருளை விலையாகக் கொடுத்து அதற்கு அறத்தைக்கொள்ளும் வணிகனல்லன், ஆய். பெரியோர் பலரும் சென்றவழி என்று உலகங்கருத அந்த நற்செய்கையிலே அமைந்தது அவ்வள்ளலது கைவண்மை எ-று

(317) டி, 135. திணை—பாடாண்டிணை. துறை—பரிசிற்றுறை.

**கருத்து:—** நெடிய மலையிற் சிறியவழியை ஏறுதலால் வருத்தமுற்று நடக்கின்ற விறலி என் பின்னேவர, என் சிறிய யாழை ஒருமருங்கிலே

வளைக்கை விறலியென் பின்ன ளாகப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந்து இசைப்பப்
படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்
ஒல்கல் உள்ளமொடு ஒருபுடைத் தழீஇப்
புகழ்சால் சிறப்பின்நின் நல்லிசை உள்ளி
வந்தனென் எந்தை! யானே என்றும்
மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு
கறையடி யானை இரியல் போக்கும்
மலைகெழு நாடன் மாவேள் ஆஅய்!
களிறும் அன்றே மாவும் அன்றே
ஒளிறுபடைப் புரவிய தேரும் அன்றே
பாணர் பாடுநர் பரிசிலர் ஆங்கவர்
தமதெனத் தொடுக்குவ ராயின் எமதெனப்
பற்றல் தேற்றாப் பயங்கெழு தாயமொடு
அன்ன வாகநின் ஊழி நின்னைக்
காண்டல் வேண்டிய அளவை வேண்டார்
உறுமுரண் கடந்த ஆற்றற்
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே.

டி. முடமோசியார்.

---

அணைத்தவண்ணம் நினது நற்புகழை நினைந்து எந்தாய்! யான் இங்கு வந்தேன். பரிசிலர்க்கு யானைக்கொடை வழங்கும் மலைநாடனே! மாவேள் ஆயே! யான் வேண்டியது யானையுமன்று, குதிரையுமன்று, தேருமன்று; பாணரும் புலவரும் கூத்தரும் நின் செல்வம் முழுதும் தம்மதென்று வளைத்துக்கொள்வராயின் அது எம்முடையதென்று மீட்டுக்கொள்ளுதலை அறியாத உரிமைச் சுற்றத்துடன்கூடி, மற்றும் அத்தன்மையவாக விளங்குக நின் வாழ்நாட்கள். யான் வந்தது, நின்னைக் காண்டல் வேண்டிய மாத்திரையே, பெருவன்மையும் புகழுமுடைய வேந்தே! எ—று.

(318) கானல் மேய்ந்து வியன்புலத்து அல்கும்
புல்வாய் இரலை நெற்றி யன்ன
பொலமிலங்கு சென்னிய பாறுமயிர் அவியத்
தண்பனி உறைக்கும் புலரா ஞாங்கர்
மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி
இருங்கலை ஓர்ப்ப இசைஇக் காண்வரக்
கருங்கோற் குறிஞ்சி அடுக்கம் பாடப்
புலிப்பற் றூலிப் புன்றலைச் சிறாஅர்
மான்கண் மகளிர்க் கான்றோர் அகன்றுவர
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முகை அடுக்கத்துச் சினைமுதிர் சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடும் ஊன்றும்
இருங்கேழ் வயப்புலி வரியதட் குவைஇ
விருந்திறை நல்கும் நாடன் எங்கோன்
கழல்தொடி ஆஅய் அண்டிரன் போல
வண்மையும் உடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே.

டி முடமோசியார்.

---

(318) டி, 374. திணை—பாடாண்டிணை. துறை—பூவைநிலை.

**கருத்து:—** யான், பனியுறைக்கும் அதிகாலையில் ஆயின் பெருமலையை அடைந்து அங்கே பலாமரமுள்ள மன்றத்தில் தங்கி எனது மத்தளத்தை முழக்கிக்கொண்டு அவன் மலைவளத்தைப் பாடினேன். அவ்வளவில், முள்ளம் பன்றியின் கொழுவிய இறைச்சித் துண்டமும்; சந்தனக்கட்டைகளும், யானை மருப்பும் ஆகிய மூன்றனையும் வேங்கைப்புலித் தோலில் பரப்பிக்குவித்து எனக்கு விருந்துமளித்தான், எங்கோனான ஆய் அண்டிரன். ஞாயிறே! அவ்வள்ளலைப் போன்ற வண்மையை நீ உடையையோ? ஒரு பயனுமின்றியே ஆகாயத்தில் வீணே ஏன் நீ விளக்கமுறுகின்றாய்? எ-று.

(319) அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த ஒல்குநிலைப் பல்காற்
பொதியில் ஒருசிறை பள்ளி யாக
முழாஅரைப் போந்தை அரவாய் மாமடல்
நாரும் போழும் கிணையொடு சுருக்கி
ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
ஊழிரந்து உண்ணும் உயவல் வாழ்வைப்
புரவெதிர்ந்து கொள்ளும் சான்றோர் யாரெனப்
பிரசந் தூங்கும் அறாஅ யாணர்
வரையணி படப்பை நன்னாட்டுப் பொருந!
பொய்யா ஈகைக் கழல்தொடி ஆஅய்!
யாவரும் இன்மையிற் கிணைப்பத் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங்கு யானும்
ஒருநின் உள்ளி வந்தனென் அதனாற்
புலவர் புக்கில் ஆகி நிலவரை
நிலீஇயர் அத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய உலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
பெரிய ஓதினும் சிறிய உணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடில் மன்னரைப் பாடன்மார் எமரே.

ஷை. முடமோசியார்.

---

(319) ஷை, 375. திணை—பாடாண்டிணை. துறை—வாழ்த்தியல்.

**கருத்து:—** 'என் வறுமைநிலையைப் போக்கிப் பாதுகாக்கவல்ல பெரியோர் யாவர்' என்று மன்றத்தின்கண் கிடந்து வருந்தியும் என்னிலைமையைக் கேட்பார் யாவரும் இல்லாமையால், வள்ளலான ஆயே! நின்னையே நினைந்து வந்தேன். அதனால், புலவர் வாழும் வீடாகி நீ இவ்வுலகில் நிலைநிற்பாயாக. நின்னையில்லாது வறுமைப்பட்ட உலகத்தில் புலவர் விளங்காராகுக. வலியச் சென்று பெரிய பொருளுரைகளை ஓதினும் சிறிதும் உணரமாட்டாத பெருமையற்ற பெருஞ்செல்வரை எம்மவர் பாடாதொழிவாராக எ—று.

(320) நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆயும் ... ... ...

இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்.

(321) திண்டேர் இரவலர்க்கு ஈத்த தண்டார்
அண்டிரன் வருஉ மென்ன ஒண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

(322) ஆடுநடைப் புரவியும் களிறும் தேரும்
வாடா யாணர் நாடும் ஊரும்
பாடுநர்க் கருகா ஆஅய் அண்டிரன்
கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு

(320) சிறுபாணாற்றுப்படை, அடி 96—99.

கருத்து:— நீலநாகமானது அளித்த உடையினை ஆலின்கீழிருந்த சிவபிரானுக்கு உவப்புடன் கொடுத்தவனும், வில்லைத்தாங்கியதும் சந்தனம் பூசிப்புலர்ந்ததுமாகிய திண்ணியதோளினையும் அன்புகனிந்த இன்சொல்லினையு முடையவனுமான ஆய் என்னும் வள்ளலும் எ—று.

(321) புறநானூறு, 241. திணை—பொதுவியல். துறை—கையறுநிலை.

கருத்து:— 'தேர்க்கொடையுடைய வேள் ஆய் வருகிறான்' என்று வச்சிராயுதந்தரித்த இந்திரனது அரண்மனையில் முரசம் முழங்க வானத்தின் கண்ணே ஓர் ஓசை எழுந்தது எ—று.

குறிப்பு:— இத்தகைய வண்மையுடையவனை வானோர் எதிர்கொண்டு உபசரித்தல் நிச்சயம்எனத் தற்குறிப்பேற்றம் என்ற அணிபெறக் கூறியவாறு.

(322) ஷை, 240. திணை—பொதுவியல். துறை—கையறுநிலை.

கால னென்னும் கண்ணிலி உய்ப்ப
மேலோர் உலகம் எய்தினன் எனாஅப்
பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை ஒருசிறை அல்கி
ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்
வாடிய பசிய ராகிப்பிறர்
நாடுபடு செலவின ராயினர் இனியே.

குட்டுவன் கீரனார்.

---

(323) யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
இழைவலந்த பல்துன்னத்து
இடைப்புரைபற்றிப் பிணிவிடாஅ
ஈர்க்குழாத்தோ டிறைகூர்ந்த
பேஎற்பகையென ஒன்றென்கோ
உண்ணாமையின் ஊன்வாடித்
தெண்ணீரிற் கண்மல்கிக்

---

கருத்து:—உயர்ந்த குதிரையானைதேர்களையும் நாடூர்களையும் தன்னைப் பாடுவார்க்குக் குறையறக் கொடுக்கும் ஆய் அண்டிரன், தன் உரிமைமகளிரோடு காலனென்னுங் கொடியவன் கொண்டுபோகத் தேவருலகை அடைந்தான். அவனதுடம்பு புறங்காட்டின் ஒருபுடையிலே தங்கி ஒள்ளிய தீச்சுட மாய்ந்துவிட்டது. அதனால், பொலிவற்ற கண்ணையுடையவராய்ப் புரப்பவரைக் காணாமல் தம்சுற்றத்துடன் பசியால்வாடிப் புலவர்கள் பிறருடைய நாட்டை நோக்கிச் செல்வாராயினர்; இப்பொழுது. இஃதொருநிலைமை இருந்தவாறென்னே!—என்று இரங்கியவாறு.

(323) ஷை, 136. திணை—பாடாண்டிணை. துறை—பரிசில்கடாநிலை.

கருத்து:—தைக்கப்பட்ட எம் கந்தையில்தங்கிய சீலைப்பேனாகிய பகையும், எம் சுற்றத்தின் பசிப்பகையும், ஆறலைகள்வர் எம் நிலைதளரும்படி அலைக்கும்

கசிவுற்றவென் பல்கிளையொடு
பசியலைக்கும் பகையொன்றென்கோ
அன்னதன்மையும் அறிந்தியார்
நின்னதுதாவென நிலைதளர
மரம்பிறங்கிய நளிச்சிலம்பிற்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகையொன்றென்கோ
ஆஅங்கு, எனைப்பகையும் அறியுநன் ஆய்
எனக்கருதிப் பெயரேத்தி
வாயாரநின் இசைநம்பிச்
சுடர்சுட்ட சுரத்தேறி
இவண்வந்த பெருநசையேம்
எமக்கீவோர் பிறர்க்கீவோர்
பிறர்க்கீவோர் தமக்கீபவென
அனைத்துரைத்தனன் யானாக
நினக்கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசில் அல்கலும்
தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினும் ஏத்தி
உண்குவம் பெருமநீ நல்கிய வளனே.

துறையூர் ஓடைகிழார்.

---

பகையும் ஆகிய இவ்வெல்லாப் பகையையும் அறிபவன் ஆயே என்று கருதி எமது வாக்கினால் நினதுபெயரைச் சொல்லிவாழ்த்தி, வெப்பமிக்க இக்காட்டைக்கடந்து விருப்பத்துடன் இங்கு வந்தேம், இவ்வாறு வறுமையுற்ற எங்களுக்கிடுவோரன்றே பயன்கருதாது பிறர்க்கிடுவோர்; எம்மையொழிந்த பிறர்க்கிடுவோர், பயன்கருதலால் தங்களுக்கே இடுவோராவர், நினக்குப் பொருந்தியதை ஆராய்ந்து எமக்குப் பரிசிலாகத்தந்து விடுப்பாயாக. குளிர்ந்த நீர் ஓடும் துறையூர்த்துறையிலுள்ள நுண்மணல்களினும் பலநாள் நீ வாழ்வாயாக என ஏத்தியவண்ணம் நீதந்த செல்வத்தை உண்பேம் எ-று.

(324) ஆய்நலந் தொலைந்த மேனியும் மாமலர்த்
தகைவனப் பிழந்த கண்ணும் வகையில
வண்ணம் வாடிய வரியும் நோக்கி
ஆழ லான்றிசின் நீயே உரிதினின்
ஈதல் இன்பம் வெஃகி மேவரச்
செய்பொருட் டிறவ ராகிப் புல்லிலைப்
பராரை நெல்லி யம்புளித் திரள்காய்
கான மடமரைக் கணநிரை கவரும்
வேனில் அத்தம் என்னாது ஏமுற்று
விண்பொரு நெடுங்குடை இயல்தேர் மோரியர்
பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த
அறையிறந்து அகன்றன ராயினும் எனையதூஉம்
நீடலர் வாழி தோழி! ஆடியல்
மடமயில் ஒழித்த பீலி வார்ந்துதஞ்
சிலைமாண் வல்விற் சுற்றிப் பலமாண்
அம்புடைக் கையர் அரண்பல நூறி
நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன்
சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்துத்
தலைநாள் அலரி நாறும்நின்
அலர்முலை யாகத்து இன்துயில் மறந்தே.

உமட்டூர்கிழார் மகனார் பெருங்கொற்றனார்.

---

(324) அகநானூறு, 69. திணை — பாலை. துறை—பொருள்வயிற்பிரிந்து நீட்டித்தான் தலைமகனெனக் கவன்ற தலைமகட்கு, வருவரென்பதுபடச் சொல்லித் தோழி ஆற்றுவித்தது.

கருத்து:— நம் தலைவர் பிறர்க்குக் கொடுக்கும் இன்பமே விரும்பி அதற்குரிய பொருளையீட்டல்கருதி மலைக்கணவாய்வழியைக் கடந்துசென்றனரேனும், நின் ஆகத்தின் இன்துயிலை மறந்து சிறிதும் தாழ்ப்பவரல்லர் என்று தோழி தலைவியைத் தேற்றுவாளாயினள் என்க.

(325) நெஞ்சுநடுங் கரும்படர் தீர வந்து
குன்றுழை நண்ணிய சீறா ராங்கண்
செலீஇய பெயர்வோள் வணர்சுரி ஐம்பால்
நுண்கோ லகவுநர்ப் புரந்த பேரிசைச்
சினங்கெழு தானைத் தித்தன் வெளியன்
இரங்குநீர்ப் பரப்பிற் கானலம் பெருந்துறைத்
தனந்தரு நன்கலஞ் சிதையத் தாக்கும்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்
முனைமுரண் உடையக் கடந்த வென்வேல்
இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவன் ஆர நன்னன்
ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்
களிமயிற் கலாவத் தன்ன தோளே

---

குறிப்பு:— (10) மோரியர்—வடநாட்டுப் பேரரச மரபினர், இவர்கள், இப் பாரதநாடு முழுதையும் தம் அடிப்படுத்துவந்த காலையில், தென்பாலுள்ள அரசர் பணியாராக, அவரை வெல்லுதல்கருதித் தெற்கே படையெடுத்து வந்தனரென்றும், அப்போது இடையிலுள்ள மலைக்கணவாய் ஒன்று தங்கள் தேர் செல்வதற்கு ஏற்றதாக இல்லாதிருந்ததனால், அது செல்லும்படி வழியைச் செப்பனிட்டனர் என்றும் புலவர்கள்பலராலும் பாடப்படுதல் குறிப்பிடத் தக்கது.

(325) அகநானூறு, 152. திணை—குறிஞ்சி. துறை—இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

கருத்து,— நெஞ்சே! என் மனக்கவலைதீர வந்துகூடி, குன்றிடத்துள்ள தன் சிற்றூர்க்குச் செல்ல மீள்பவளாகிய நம் தலைவியின் வளைந்துசுருண்ட கூந்தல்கள், நன்னனது பாழிச்சிலம்பில் உள்ள மயிலின் தோகையை ஒத்தன. இவள்தோள்கள், நள்ளியதுமலையில் உள்ள காந்தளின் மணங்கமழ்ந்தும், வள்ளலாகிய ஆய் என்பானது தலையாறென்னும் இடத்துள்ள மூங்கிற்கணுவை யொத்தும், தூரத்துள்ளனவாயினும் நாம் நடுங்கத்தக்க துயரினைத்தரும் எ—று.

வல்வில் இளையர் பெருமகன் நள்ளி
சோலை யடுக்கத்துச் சுரும்புண விரிந்த
கடவுட் காந்த ளுள்ளும் பலவுடன்
இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி
வல்லினும் வல்லா ராயினும் சென்றோர்க்குச்
சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும்
மாஅல் யானை ஆஅய் கானத்துத்
தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேயமைக் கண்ணிடை புரைஇச்
சேய வாயினும் நடுங்குதுயர் தருமே.

பரணர்.

---

(326) கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமம் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்விரை கமழும் கூந்தற் றூவினை

---

**குறிப்பு:—** (5–13) தித்தன் வெளியனது கானலம் பெருந்துறையிலே, பொன்னை ஏற்றிவரும் மரக்கலங்களைத் தாக்கும் இறால்மீன்தொகுதிபோலத் தனக்குப் பகைவிளைத்துவந்த பிண்டன் என்பவனைப் போரில் வென்றவனும், வெற்றிவேலும் வள்ளன்மையுமுடையவனும், பாரம் என்ற நகர்க்குத் தலைவனுமான நன்னன் என்பானது ஏழின்மலையைச் சார்ந்த பாழிச்சிலம்பு என்க.

(19—22) பரிசில்கருதி வந்தவர்க்கு, அவர் கல்வியில் வல்லாராயினும் அல்லாராயினும், மிடாச்சோற்றை உண்கலமாகிய மண்டையின் நெடுங்குழி நிறையும்படியாகக் கொடுத்தளிக்கும் ஆய்வேளின் கானத்துள்ள தலையாறு என்க.

(326) ஷை; 198. திணை—குறிஞ்சி. துறை—புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்குநோக்கிய தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

**கருத்து:—** என்னுள் மறைத்துவைத்திருந்த காமத்தை அடக்கவியலாமல் வெளியிட்டு இரந்த என் இன்மொழியை விரும்பியேற்று, நள்ளிரவிலே

நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பின்
இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்
ஆன்ற கற்பிற் சான்ற பெரியள்
அம்மா அரிவையோ அல்லள் தெனாஅது
ஆஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்
ஏர்மலர் நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் மாதோ என்னுமென் னெஞ்சே.

பரணர்.

---

(327) கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குரு கார்ப்பின் ஆஅய்
வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
பண்ணமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும்

---

பெய்யும் மழையிடையே மறைந்து சிலம்பொலியை அடக்கிக்கொண்டு மடமயில் போல வந்து நடுயாமத்தில் நம்மை முயங்கிமீளும் இவள், மானுடப்பெண் அல்லள்; தெற்கே ஆய்நாட்டிலுள்ள பெருமலையை அடுத்த கவிரம் என்ற பக்கச் சிலம்பின் சுனையில் உறையும் சூர்மகளேயாவள் என்று என்மனங் கருதாநின்றது எ—று.

(327) நற்றிணை, 167. திணை—நெய்தல். துறை—தோழி பாணற்கு வாயில் மறுத்தது. தூதொடு வந்த பாணர்க்குச் சொல்லியதூஉமாம்.

கருத்து:— பரத்தையிடமிருந்து பிரிந்துவந்த தலைமகன், தன்னிடம் மனைவி ஊடியதறிந்து அவ்வூடல் நீங்குமாறு அவளைத் தேற்றவேண்டிப் பாணனை அவளிடம் அனுப்ப, வந்தஅவனை நோக்கித் தோழி 'பாண! நீ கூறும் பொய்ம்மொழிகள் அழகிழந்த தலைவியின் நுதலில் உண்டான சிறுவேறுபாட்டை நீக்கக்கூடியன அல்லகண்டாய்; ஆதலின் மீண்டுசெல்வாயாக என்று வெகுண்டு கூறியவாறு.

தண்ணந் துறைவன் தூதொடும் வந்த
பயன்தெரி பனுவற் பைதீர் பாண!
நின்வாய்ப் பணிமொழி களையா பன்மாண்
புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்
மணங்கமழ் கானல் மாணல மிழந்த
இறையே ரெல்வளைக் குறுமகள்
பிறையேர் திருநுதற் பாஅய பசப்பே.

(328) நனிமிகப் பசந்து தோளும் சாஅய்ப்
பனிமலி கண்ணும் பண்டு போலா
இன்னுயி ரன்ன பிரிவருங் காதலர்
நீத்து நீடின ரென்னும் புலவி
உட்கொண் டூடின்று மிலையோ மடந்தை!
உவக்காண் தோன்றுவ ஓங்கி வியப்புடை
இரவலர் வருஉம் அளவை அண்டிரன்
புரவெதிர்ந்து தொகுத்த யானை போல
உலகம் உவப்ப ஓதரும்
வேறுபல் லுருவின் ஏர்தரு மழையே.

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

**குறிப்பு:—** (1—4) புன்னைக்கிளைகளில் குருகுகள் கூடி ஆரவாரிக்கும் ஒலி, வேள் ஆயின் நாளோலக்கத்திலே புலவர்கள் பரிசிலாகப் பெற்ற தேர்களின் ஓசைபோன்றது என்று அவ்வேளின் கொடை சிறப்பிக்கப்பட்டது.

(328) ஷை, 237. திணை—பாலை. துறை—தோழி உரைமாறுபட்டது.

**கருத்து:—** தலைவன் பிரிந்தகாலத்துத் தலைவியின் துன்பம் நீங்குமாறு தேற்றுதற்கு உரையாடத்தொடங்கிய தோழி, அவ்வுரையை ஏற்காமலே தலைவி ஆற்றியிருப்பதை அறிந்து வியந்து, "மடந்தாய்! தலைவர் வருவதாகக் கூறிய பருவத்தின் அடையாளமாக மழை வாராநின்றதுகாண். அதுகாறும் 'தலைவர் நீத்தகன்றார்' என என்னிடம் கூறினையுமில்லை. இஃதொரு வியப்பே" என்று மாறுபடக் கூறினள் என்க.

**குறிப்பு:—** (7—8) மழை எழுந்து வருதற்கு, இரவலர்க்குக் கொடுத்தல் கருதி ஆயண்டிரன் சேர்த்துவைத்த யானைத்திரள் உவமிக்கப்படுதல் காண்க

(329) பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனென் என்றனள்
இனியறிந் தேன்அது துனியா குதலே
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையும் காந்தளும் நாறி
ஆம்பல் மலரினும் தான்தண் ணியளே.

மோசிகீரனார்.

---

## நாஞ்சில் வள்ளுவன்

(330) இரங்கு முரசின் இனஞ்சால் யானை
முந்நீ ரேணி விறல்கெழு மூவரை
இன்னு மோர்யா னவாவறி யேனே
நீயே, முன்யா னறியு மோனே துவன்றிய
கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது
கழைக்கரும்பின் ஒலிக்குந்து
கொண்டல் கொண்டநீர் கோடை காயினும்
கண்ணன்ன மலர்பூக்குந்து
கருங்கால் வேங்கை மலரி னாளும்
பொன்னன்ன வீசுமந்து
மணியன்னநீர் கடற்படருஞ்
செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந!

(329) குறுந்தொகை, 84. திணை—பாலை. துறை—மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

(330) புறநானூறு, 137. திணை—பாடாண்டிணை. துறை—இயன் மொழி; பரிசிற்றுறையுமாம்.

**கருத்து:—** இவ்வுலகில், வென்றிபொருந்திய மூவேந்தரை யாரொருவனே இன்னமும் பாடும் அவாவில்லாதவன். நீதான், முன்னே தொடங்கி யான் அறிந்தவன். வளப்பமிக்க வரைப்பக்கத்தையுடைய நாஞ்சில் என்னும் மலைக்குரிய வீரனே! அருவிகளைக்கொண்ட மலைநாட்டையுடையாய்! நீ வாழ்வாயாக. நின்னைப்பெற்றோரான தந்தையுந்தாயும் வாழ்வார்களாக எ—று.

சிறுவெள் ளருவிப் பெருங்கல் நாடனை
நீவா ழியர்நின் தந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே.

ஒருசிறைப் பெரியனார்.

---

(331) ஆனினங் கலித்த அதர்பல கடந்து
மானினங் கலித்த மலைபின் னொழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
உள்ளி வந்த வள்ளுயிர்ச் சிறியாழ்
சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண!
நீயே பேரெண் ணலையே நின்இறை
மாறி வாவென மொழியலன் மாதோ
ஒலியிருங் கதுப்பின் ஆயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து
மரனணி பெருங்குரல் அனையன் ஆதலின்
நின்னை வருதல் அறிந்தனர் யாரே.

மருதன் இளநாகனார்.

---

குறிப்பு:— (5–11) நீர்சிறைந்த பள்ளத்தில் விதைத்த வித்து நீரின்மையாற் சாவாது கரும்புபோலத் தழைப்பதும், மழையாற் சொரியப்பட்ட நீர் கோடைகாயினும் குவளைமுதலிய மலர்களைப் பூப்பதும், வேங்கையின் பொன் போலும் பூவைச்சுமந்து மணிபோலும்நீர் கடற்கட் செல்வதும் ஆகிய மலைப் பக்கத்தையுடைய நாஞ்சில் என்க.

(331) ஷை, 138: திணை—பாடாண்டிணை. துறை—பாணாற்றுப்படை. கருத்து:— வழிகள் பலவற்றையும், மலைகளையும், நீர்த்துறைகளையும் கடந்து சிறிய யாழுடனும் சிதைந்த உடையுடனும் வந்த முதிய பாணனே! நீதான், நாஞ்சிற்பொருநனிடம் சிலகருதிச் செல்லும் பேரெண்ணத்தையுடையை; அவனோ 'பின்பொருநாள் வா' என்று சொல்லாதவன்; கிளிமருவிய அகன்ற புனத்திலே, மரப்பொந்தின்கண் அக்கிளிகள் சேமித்து வைத்த பெரிய கதிரையொப்பவன். நீ அவன்பாற் பரிசில் பெற்றுவரும்போது நின்னைப் பழைய பாணன் என்று உன்னை அறிபவர் யாவர்? எ—று.

(332) சுவலழுந்தப் பலகாய
சில்லோதிப் பல்லிளை ருருமே
அடிவருந்த நெடிதேறிய
கொடிமருங்குல் விறலியருமே
வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவல்
ஓடாப் பூட்கை உரவோர் மருக!
உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருந!
மாயா வுள்ளமொடு பரிசில் துன்னிக்
கனிபதம் பார்க்குங் காலை யன்றே
ஈத லானுன் வேந்தே வேந்தற்குச்
சாத லஞ்சாய் நீயே ஆயிடை
இருநில மிளிர்ந்திசி னுஅங் கொருநாள்
அருஞ்சமம் வருகுவ தாயின்
வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே.

மருதன் இளநாகனர்.

குறிப்பு:— (9—10) கிளிகள் மரப்பொந்தில் வைத்த கதிர்கள், வழிப் போவார்க்குப் பசிநீங்கப் பயன்படுமாறுபோலப் பயன்படுபவன் என்க.

(332) ஷை, 139. திணை—பாடாண்டிணை. துறை—பரிசில்கடாநிலை.

கருத்து:— இளைஞர்களும் விறலியருமாகிய என்சுற்றம் வாழ்தலைவிரும்பிப் பொய்சொல்லேன்; உண்மையே கூறுகின்றேன். வலியோர்மரபில் உதித்தோய்! நாஞ்சிற்பொருந! என் வறுமையுள்ளநிலைமை கொடியது; பரிசிற்கு விரும்பிவந்த நான் நின்பின்புநின்று உன் மனநெகிழ்ந்த சமயத்தைப்பார்க்கும் காலமன்று, ஏனெனில், நினக்கு வேண்டியவற்றைத் தருதலில் சிறிதும் குறையான் உன் தலைவனை வேந்தன். அவ்வேந்தன்பொருட்டுச் சாதற்கும் நீ அஞ்சாய். பெரியநிலம் பிறழ்ந்தாற்போல ஒருநாள் பொறுத்தற்கரிய போர் வருவதாயின், என் பசித்துன்பமுள்ள சுற்றம் பெரிதும் வருந்துவதாகும் எ—று.

(333) தடவுநிலைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்!
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினே மாகத் தான்பிறர்
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே அன்னதோர்
தேற்றா ஈகையு முளதுகொல்
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.

ஔவையார்.

---

(334) தென்பவ் வத்து முத்துப் பூண்டு
வடகுன் றத்துச் சாந்த முரீஇ
..................ங்கடற் றானை
இன்னிசைய விறல்வென்றித்
தென்னவர் வயமறவன்
மிசைப்பெய்தநீர் கடற்பரந்து முத்தாகுந்து
நாறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய

---

(333) ஷை, 140. துறை—பாடாண்டிணை. துறை—பரிசில்விடை.

கருத்து:—செந்நாப்புலவீர்! நாஞ்சிற்பொருநன் நிச்சயமாக அறிவுபோதாதவன். சமைத்துண்பதற்காக அவனிடம் சென்று நாங்கள் சில அரிசி வேண்டினேமாக, தான் பரிசிலர்க்கு உதவும் வரிசையை அறிந்தவனாதலால், தன் மேம்பாட்டையும் சீர்தூக்கி, மலைபோல்வதொரு யானையை அளித்தான். ஆதலால், ஒருவற்கு ஒன்றனைக்கொடுக்குமிடத்து இத்தகைய தெளியாக் கொடையும் உளதோ தான்? பெரியோர், தாங்கள் செய்யக்கடவ முறையைத் தெரிந்து செய்யார்கொல்லோ எ—று.

(334) ஷை, 380. திணை—பாடாண்டிணை. துறை—இயன்மொழி.

கருத்து:— கடல்போலும் சேனையும் புகழ்மிக்க வெற்றியையுமுடைய பாண்டியர்தம் வீரனான நாஞ்சிற்பொருநன், வலிமிக்கு எதிர்த்த பகைவர்க்கு

வேறுபெ...............த்துந்து
திஞ்சுளைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மையன்
நட்பெதிர்ந் தோர்க்கே யங்கை அண்மையன்
வல்வேற் கந்த னல்லிசை யல்ல
.....................த்தார்ப் பிள்ளையஞ் சிறாஅர்
அன்ன ளுகன் மாறே யிந்நிலம்
இலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே.

கருவூர்க் கதப்பிள்ளை.

---

## நன்னன்

(335) நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளி ரோம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநற் கறிந்தும் அன்னோட்
டுன்னல மாதோ வெனினுமஃ தொல்லாய்
தண்மழை தவழுந் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற் றெடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய இருளளை மாய்கற் போல
மாய்கதில் வாழிய நெஞ்சே! நாளும்
மெல்லியற் குறுமகள் நல்லகம் நசைஇ

...னைத்தற்கு எட்டாத தூரத்தில் உள்ளவன்; அன்பாலடைந்தார்க்கு அகங்கைபோல அண்மையன்; அத்தன்மையனாதலால், இந்த உலகத்தே வற்கடக் காலம் வரினும் எம்போல்வார் தனித்து வருந்துதல் இல்லை. என் சுற்றங்களும் பொலிவு பெறுவனவாகும் எ—று.

குறிப்பு:— (5) 'தென்னவர் வயமறவன்' என்பதனால் இவன் பாண்டியரின் படைத்தலைவன் என்பதும், (12) கந்தன் என்ற இயற்பெயரினன் என்பதும் தெரியலாகும்.

(335) அகநானூறு, 258. திணை—குறிஞ்சி. துறை—அல்லகுறிப்பட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

அரவிரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி
இரவின் எய்தியும் பெறுஅய் அருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்து
உள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக்
காமம் கைம்மிக உறுதர
ஆறு அரும்படர் தலைத்தந் தோயே.

பரணர்.

---

(336) கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுறல் அங்கோ டுதிர வலங்கடந்து
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
இரவுக்குறும்பு அலற நூறி நிரைபகுத்து
இருங்கல் முடுக்கர்த் திற்றி கெண்டும்
கொலைவில் ஆடவர் போலப் பலவுடன்
பெருந்தலை எருவையொடு பருந்துவந் திறுக்கும்
அருஞ்சுரம் இறந்த கொடியோர்க்கு அல்கலும்
இருங்கழை யிறும்பின் ஆய்ந்துகொண் டறுத்த
நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரொடு
அகவுநர்ப் புரந்த அன்பிற் கழல்தொடி
நறவுமகிழ் இருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூர் அன்னநின்
அலர்முலை யாகம் புலம்பப் பலநினைந்து
ஆழ லென்றி தோழீ! யாழவென்

---

**குறிப்பு:—** (1-3) நன்னன் உதியன் என்பதனால் சேரர்தொடர்பு இந் நன்னனுக்கு இருந்தமையும், இவனது பாழிச்சிலம்பில் பொற்குவியல்கள் இவன் முன்னோரால் சேமித்துப் பாதுகாக்கப்பட்டுவந்தன என்பதும் அறியப்படும்.

(336) அகம், 97. திணை—பாலை. துறை—வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

கண்பனி நிறுத்தல் எளிதோ குரவுமலர்ந்து
அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்
அறலவிர் வார்மணல் அகன்யாற் றடைகரைத்
துறையணி மருது தொகல்கொள வோங்கிக்
கலிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்து
இணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை அம்மஞ் சூர
நுகர்குயில் அகவும் குரல்கேட் போர்க்கே.

**மாமூலனார்.**

(337) அறந்தலைப் பிரியா தொழுகலும் சிறந்த
கேளிர் கேடுபல வூன்றலும் நாளும்
வருந்தா உள்ளமொ டிருந்தோர்க் கில்லெனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதல்
மையீ ரோதி அரும்படர் உழத்தல்
சின்னாள் தாங்கல் வேண்டும் என்றநின்
நன்மாண் எல்வளை திருத்தினர் ஆயின்
வருவர் வாழி தோழி! பலபுரி
வார்கயிற் றொழுகை நோன்சுவற் கொளீஇப்
பகடுதுறை ஏற்றத் துமண்விளி வெரீஇ
உமைமான் அம்பிணை இனனிரிந் தோடக்
காடுகவின் அழிய உரைஇக் கோடை
நின்றுதின விளிந்த அம்பணை நெடுவேய்க்

---

**குறிப்பு:—** (10—13) நன்னன் என்பான் வேளிர் மரபினன் என்பதும், கூத்தர் முதலியவரை ஆதரித்த வள்ளல் என்பதும், இவனதூர்களுள் வியலூர் என்பது ஒன்றென்பதும் அறியலாகும். இவ்வியலூர் ஒருகாற் செங்குட்டுவனால் போரில் அழிக்கப்பட்டது (இந்நூல், பக். 57, 110).

(337) ஷை, 173. திணை—பாலை. துறை—தலைமகன்பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

கண்விடத் தெறிக்கும் மண்ணா முத்தம்
கழங்குறழ் தோன்றல பழங்குழித் தாஅம்
இன்களி நறவின் இயல்தேர் நன்னன்
விண்பொரு நெடுவரைக் கவாஅற்
பொன்படு மருங்கின் மலையிறந் தோரே.

முள்ளியூர்ப் பூதியார்.

---

(338) அரம்போழ் அவ்வளை செறிந்த முன்கை
வரைந்துதாம் பிணித்த தொல்கவின் தொலைய
எவனாய்த் தனர்கொல் தோழி! ஞெமன்ன்
தெரிகோ லன்ன செயிர்தீர் செம்மொழி
உலைந்த ஒக்கல் பாடுநர் செலினே
உரன்மலி உள்ளமொடு முனைபா ழாக
அருங்குறும் பெறிந்த பெருங்கல வெறுக்கை
சூழாது சுரக்கும் நன்னன் நன்னாட்டு
ஏழிற்குன்றத்துக் கவாஅற் கேழ்கொளத்
திருந்தரை நிவந்த கருங்கால் வேங்கை
எரிமருள் கவளம் மாந்திக் களிறுதன்
வரிநுதல் வைத்த வலிதேம்பு தடக்கை

---

**குறிப்பு:—** (16—18) நன்னன்மலை—ஏழிற்குன்றம்; ‘நன்ன னன்னாட்டு ஏழிற்குன்றத்துக் கவான்’ (அகம். 349) என்பர். இது மேலைக்கடலருகில் உள்ள கண்ணனூரிலிருந்து வடக்கே 18 மைலில் உள்ளதொரு மலையெனவும் ‘ஸப்த சைலம்’ என வழங்குவதெனவும் கூறுவர்.

(338) ஷை, 349. திணை—பாலை. துறை—தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

**கருத்து:—** தோழி, மொழிவேறுபட்ட தேயத்துள்ள பாலைவழியைக் கடந்து சென்றோரான தலைவர், என்னை மணந்ததனால் அமைந்த இயற்கையழகு கெடும்படி என்ன பொருளைக்கருதினரோ? என்று தலைவி கூறினள்.

கல்லூர் பாம்பிற் றோன்றும்
சொல்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே.

மாமூலனார்.

---

(339) மேற்றுறைக் கொளீஇய கழாலிற் கிழ்த்துறை
உகுவா ரருந்தப் பகுவாய் ஆமை
கம்புள் இயவ னாக விசிபிணித்
தெண்கட் கிணையிற் பிறழும் ஊரன்
இடைநெடுந் தெருவிற் கதுமெனக் கண்டென்
பொற்றொடி முன்கை பற்றின னாக
அன்னா யென்றனென் அவன்கைவிட் டனனே
தொன்னசை சாலாமை நன்னன் பறம்பிற்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினே னாகி மற்றது
செப்பலென் மன்னால் யாய்க்கே நற்றேர்க்
கடும்பகட்டு யானைச் சோழர் மருகன்
நெடுங்கதிர் நெல்லின் வல்லங் கிழவோன்
நல்லடி யுள்ளா னாகவும் ஒல்லார்
கதவ முயறலு முயல்ப அதாஅன்று
ஒலிபல் கூந்தல்! நம்வயின் அருளாது

---

குறிப்பு:— (5-9) நன்னனது பெருவள்ளன்மையும் அவனாட்டுள்ள ஏழிற்குன்றத்தின் சிறப்பும் இவ்வடிகளிற் கூறப்படுதல் காண்க.

(339) ஷை, 356. திணை—மருதம். துறை—பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பக் கூறியது.

கருத்து:— இரந்துபின்னின்ற தலைவனுக்கு அவன் குறையைநீக்கி யுதவுவதாகக்கூறிய தோழி, தலைமகள்முன்சென்று "தோழீ! நம் தலைவன் ஊர்நடுவே திடீரென்று என்னைக்கண்டு, என் பொற்றொடி அணிந்த கையைப் பற்றிக் கொண்டான். உடனே யான் 'அன்னாய்' என்று கூப்பிட, அதற்கஞ்சி அவன் தான்பிடித்த கையை நெகிழவிட்டுச் சென்றுவிட்டனன். சோழர்குலத்

கொன்றனை யாயினும் கொலைபழு தன்றே
அருவி யாம்பல் கலித்த முன்றுறை
நன்னன் ஆஅய்பிரம் பன்ன
மின்னீர் ஓதி! என்னைநின் குறிப்பே.

**பரணர்.**

---

(340) தாழ்பெருந் தடக்கை தலைஇய கானத்து
வீழ்பிடி கெடுத்த வெண்கோட்டு யானை
உண்குளகு மறுத்த உயக்கத் தன்ன
பண்புடை யாக்கைச் சிதைவுநன்கு அறீஇப்
பின்னிலை முனியா னாகி நன்றும்
தாதுசெய் பாவை யன்ன தையல்
மாதர் மெல்லியல் மடநல் லோள்வயின்
தீதின் றாக நீபுணை புகுகென
என்னும் தண்டு மாயின் மற்றவன்
அழிதகப் பெயர்தல் நனியின் னாதே
ஒல்லினி வாழி தோழி! கல்லெனக்
கணமழை பொழிந்த கான்மடி இரவில்
தினைமேய் யானை இனனிரிந் தோடக்
கல்லுயர் கழுதிற் சேணோன் எறிந்த

---

தோன்றலான நல்லடி என்பான் நாடளிக்கும் அரசனாயிருப்பவும், அயலார் நம் மனைக்கதவைத் திறந்து உட்புக இனி முயலவுங்கூடும். இது நிகழ்வதற்குமுன் நம் தலைவன் அருளின்றி நம்மைக் கொன்றனனாயினும் குற்றமின்று. தலைவி! இனி நின் உள்ளக்குறிப்பு யாதோ?" என்று கூறினள் என்க.

குறிப்பு:— நன்னனுக்குப் பிரம்பு என்ற நகரும் உண்டுபோலும்.

(340) ஷை, 392. திணை—குறிஞ்சி. துறை—பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.

**கருத்து:—** 'பெருமலைநாடனை தலைவன் நின்னைப் பிரிபவனாதல் அரிது. அவன் பிரிபவனாயின், நின்னலத்தைப் போற்றிவருவேனை யான், நன்னன் போல ஆகுவன்' என்றாள் தோழி என்க.

வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென
மறப்புலி உரற வாரணம் கதற
நனவுறு கட்சியின் நன்மயில் ஆல
மலையுடன் வெரூஉம் மாக்கல் வெற்பன்
பிரியுந னாகலோ அரிதே அதாஅன்று
உரிதல் பண்பிற் பிரியுந னாயின்
வினைதவப் பெயர்ந்த வென்வேல் வேந்தன்
முனைகொல் தானையொடு முன்வந் திறுப்பத்
தன்வரம் பாகிய மன்னெயில் இருக்கை
ஆற்றா மையிற் பிடித்த வேல்வலித்
தோற்றம் பிழையாத் தொல்புகழ் பெற்ற
விழைதக ஓங்கிய கழைதுஞ்சு மருங்கிற்
கானமர் நன்னன் போல
யானா குவல்நின் நலந்தரு வேனே.

மோசிகீரனார்.

---

(341) எம்வெங் காமம் இயைவ தாயின்
மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த

குறிப்பு:- களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், நன்னன் கைப்பற்றியாண்ட பூழிநாட்டின்மேற் படையெடுத்தபோது, அந்நன்னனது அரண் வலியற்றுப் போனமையால், அவன் காட்டிற்சென்று ஒளிந்துகொள்ளலாயினன் என்க. அவ்வாறு ஒளித்த நன்னன்போல நானும் காடுசென்று மறைவேன் என்றவாறு. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் நன்னனைவென்ற வரலாறு இந்நூல், 39, 291-ஆம் பாடல்களிற் காண்க.

(341) ஷை, 15. திணை — பாலை. துறை — மகட்போக்கிய தாய் சொல்லியது.

கருத்து:- 'என் அருமை மகள், தான் காதலித்தவனோடுகூடிச் சென்ற கொடிய நெறி, அந்நியரை உபசரித்துப் பாதுகாக்கவல்ல அறிவுடைய

பாக லார்கைப் பறைக்கட் பீலித்
தோகைக் காவின் துளுநாட் டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்
செறிந்த சேரிச் செம்மன் மூதூர்
அறிந்த மாக்கட் டாகுக தில்ல
தோழி மாரும் யானும் புலம்பச்
சூழி யானைச் சுடர்ப்பூண் நன்னன்
பாழி யன்ன கடியுடை வியனகர்ச்
செறிந்த காப்பிகந் தவனொடும் போகி
அத்த இருப்பை யார்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகணிலம் பரக்கக்
கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி
வன்கை எண்கின் வயநிரை பரக்கும்
இன்றுணைப் படர்ந்த கொள்கையொ டொராங்குக்
குன்ற வேயிற் றிரண்டவென்
மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே.

முற்றிற்று



மக்களை உடையதாகுக' என்று தலைவனுடன் போகிய தன் மகளை நினைந்து அவள்தாய் இரங்கிக்கூறியவாறு.

**குறிப்பு:—** நன்னனது பாழி என்ற நகரம் செறிந்த காவலையுடைய தென்பது இதனால் புலனாகும்.

# அநுபந்தம்

[சேரவரசர், வேற்றரசருடன் புரிந்த பெரும் போர்களிலே இறந்துபடவும் தோல்வியுறவும் நேர்ந்த சந்தர்ப்பங்களும் உண்டு. அவைபற்றிப் புலவர்கள்பாடிய பாடல்களையும் குறிப்புக்களையும் சங்க நூல்களிற் காணலாம். அவை இந்நூலுட் சேர்க்கப்படவில்லை. ஆயினும், துன்பநிலைகளிலும் சேரவேந்தரின் ஒப்புயர்வற்ற வீரப் பெருமைகள் அக்குறிப்புகளால் நன்கு விளங்குதலின், அவற்றுள் முக்கியமானவை கீழே காட்டப்படும்.]

## (1) போர்ப்புறத்துப் போர்

i. "சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரைக் கழாத்தலையாரும் பரணரும் பாடியவை" (புறநானூறு, 62, 63), இவர்கள் பாடிய செய்யுட்கள், படிப்பவருள்ளங்களைப் பெரிதும் உருக்கக்கூடியனவாம்,

ii. "சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியோடு போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்து, ஆரம் கழுத்தினதாக* உயிர்போகாது கிடந்தானைக் கழாத்தலையார் பாடியது" (புறநா. 368). இப்பாட்டால், போர்க்களத்தில் உயிர்போகும் நிலையினும் புலவர்க்கு உள்ளதையுதவிய பெருவள்ளல் நெடுஞ்சேரலாதன் என்பது தெளிவாகும்.

## (2) வெண்ணிப்போர்.

"சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகாற்பெருவளத்தானோடு பொருது, புறப்புண்ணாணி வடக்கிருந்தானைக் கழாத்தலையார் பாடியது "(புறநா. 65). புறப்புண்ணாணி வடக்கிருத்தல்—முதுகிற்பட்ட புண்ணுக்கு வெட்கி உயிர்விடத்துணிந்து வடதிசைச்

* 'ஆரங்கழுத்தன்னதாக' என்பது அச்சுப்பிரதிப் பாடம்.

சேர்தல். இப்போர், வெண்ணிப்பறந்தலையில் நடந்ததாகும். வெண்ணிக்குயத்தியார் என்ற பெண்பாற்புலவரும் (புறநா. 66), மாமூலனாரும் (அகநா. 55) சேரமான் இப்போரில் நிகழ்த்திய அரிய செயலைப்புகழ்ந்திருத்தல் குறிப்பிடத்தக்கது. இவற்றால், போரிடையே மானங்கெடவரின் உயிர்வாழ விரும்பாதவர் சேரவேந்தர் என்பது வெளியாகும்.

## 3. கழுமலப்போர்.

சோழன் செங்கணானுக்கும் சேரமான் கணைக்காலிரும்பொறைக்கும் கழுமலம் என்ற இடத்தில் நடந்த பெரும்போரிலே, நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்ற தலைவர்கள் சேரமான்பக்கத்தும், பழையன் என்ற சேனாபதி சோழன் பக்கத்தும் நின்று பொருதபோது சோழசேனாபதி இறந்துபட்டான். அதனால் கடுஞ்சினங்கொண்ட சோழன், பெரும்படையுடன் தானே நேரிற் சென்றுபொருது தாக்கி, சேரனைச் சிறைப்படுத்து அவனது கழுமலத்தையும் கைப்பற்றினன். இப்போரின் வரலாற்றை குடவாயிற் கீரத்தனார் பாடிய அகநானூறு 44-ம் பாடலினும், சிறைப்பட்ட சேரனது வீரவரலாற்றை இந்நூல் 142-ம் பக்கத்தும் காண்க. பொய்கையார் என்ற புலவர், சோழனது போர்ச்சிறப்பைக் "களவழி நாற்பது" என்ற நூலாற்பாடி இச்சேரனைச் சிறைமீட்டார் என்பர். கழுமலம் என்பது சேரனாட்டுள்ளதோர் ஊர்.

## 4. கருவூர்ப் போர்.

"சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரெறிந்தானை" ஆலத்தூர்கிழாரும் கோவூர்கிழாரும் பாடியுள்ளார் (புறநா. 36, 373). வஞ்சிமுற்றத்தில் நடந்த இப்போர் எந்தச் சேரனுடன் நடத்தியதென்று தெரியவில்லை.

## 5. காரியாற்றுப் போர்.

மாவண்கிள்ளி என்ற சோழன் காரியாறு என்ற களத்தில் சேரனையும் பாண்டியனையும் வென்றான் என்றும், இப்போரைச் சோழன் தம்பி நடத்தியவன் என்றும் சாத்தனார் கூறுவர் (மணிமேகலை, 19, 119-127). இங்கும், சேரன் யாவன் என்பது தெரியவில்லை.

## 6. குறும்பொறைப் போர்.

கொடுமுடி என்ற தலைவனுக்கும் சேரமானொருவனுக்கும் குறும்பொறை என்ற ஊர்க்குக் கிழக்கே நடந்த போரில், சேரனது யானைப்படையை அக் கொடுமுடி அழித்துத் தன் தலைநகரான ஆமூரைக் காத்தசெயல், ஆமூர்க்கவுதமன் சாதேவனார் என்ற புலவராற் பாடப்பட்டுள்ளது (அகநா. 159). இச்சேரன் பெயர் தெரிந்திலது.

---

## [தலைவர்சிலரைப் பற்றிய குறிப்புக்கள்]

### 1. பிட்டன்.

சேரசேனாபதியான பிட்டன் என்பவனைப் பற்றிய பாடல்களையும் குறிப்புக்களையும் இந்நூல், 256--257ஆம் பாடல்களிற் காணலாம். இப்பிட்டன்மகன் கொற்றனும் பிட்டனென்றே வழங்கப் படுகின்றான். இவனை 'மலைகெழுநாடன்' (புறநா. 170) என்பர். வடமவண்ணக்கன் தாமோதரனார் என்ற புலவர்—“ வன்புல நாடன் வயமான் பிட்டன், ஆரமர் கடக்கும் வேலும் அவனிறை, மாவள் ளீகைக் கோதையும், மாறுகொள் மன்னரும் வாழியர் நெடிதே” (புறநா. 172) என்று இவனையும் இவன் அரசனான சேரமானையும் அழகுறப் பாடியிருத்தல் அறியத்தக்கது.

### 2. நன்னன்.

இத்தலைவனைப்பற்றிய செய்திகளை இந்நூல் 335-338 வரையுள்ள பாடல்களிற் காணலாம். இந்நன்னனது படைத்தலைவன் மிஞிலி என்பான். இச்சேனாபதி, வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்ற சேரர் படைத்துணைவனைப் போரிற் கொன்றபோது, நன்னன் புரிந்த செயல் அகநானூற்றில் (208) கூறப்பட்டுள்ளது.

## [ஊர்களைப் பற்றிய சில குறிப்புக்கள்]

—:o:—

வஞ்சி:- "குடபுலங் காவலர் மருமான் ஒன்னார்
வடபுல இமயத்து வாங்குவிற் பொறித்த
எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க் குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சி"
(சிறுபாணாற்றுப்படை. அடி 47–50)

மாந்தை:- "குரங்குளைப் புரவிக் குட்டுவன் மரந்தை (அகநா. 376), "இலங்குநீர்ப் பரப்பின் மரந்தையோர் பொருந', (இந்நூல். 110) என்பவற்றால், மரந்தை என்ற நகரம் சேரநாட்டில் உண்டென்பது தெரியலாம், இது, மாந்தை என்ற சேரநாட்டுக் கடற் கரைப்பட்டினத்தின் வேறானதாகும்.

உம்பற்காடு:- இது சேரநாட்டில் வளமிக்க ஒரு பகுதி யாம், (இந்நூல், 21,33,34-ம் பக்கக்குறிப்புக்கள் காண்க). யானைகளை மிகுதியாக உடைமையால், இஃது இப்பெயர்பெற்றது போலும். [உம்பல்–யானை] வேழக்காடு என்ற பகுதியொன்று, மலைநாட்டில் உண்டு (T. A. S. I. 188). உம்பற்காட் டிளங்கண்ணனார் என்ற புலவரது பெயரால் அந்நாட்டு ஊரொன்றும் இப்பெயர் பெற்றிருந்த தென்பது தெரியலாம். 'உம்பற்பெருங்காடு' என்று, எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்ற புலவராலும் இப்பிரதேசம் சிறப்பிக்கப்பட் டுள்ளது (அகநா. 357).

மற்றுமுள்ள நாடு, ஊர், மலை, நதி முதலியவற்றை, இந்நூலுள் தனிப்பட அமைக்கப்பட்டுள்ள 'பெயர்க்குறிப்பகராதி' மூலம் அறிந்துகொள்க.

# பெயர் அகராதி.

[எண்கள்—பாட்டெண்கள்]

# பொருட் குறிப்பகராதி.

எண்கள்—பாட்டெண்கள்.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

# பிழையும் திருத்தமும்

| பக்கம், | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| xvii | 34 | உவ்ள | உள்ள |
| xxii | 30 | கொள்வனுலும் | கொள்வதனுலும் |
| 3 | 23 | 231 | 233 |
| 8 | 2 | பெண்டிரிற்சேரும் | பெண்டிரிற்றேரும் |
| 22 | 26 | மண்ணுவாயில் | மண்ணுவாயின் |
| 100 | 7 | துயிலொற்றுப் | துயிலாற்றுப் |
| 131 | 2 | கடவட் | கடவுட் |
| 141 | 30 | மதூரை | மதுரை |
| 159 | 5 | சமந்தாங்கவம் | சமந்தாங்கவும் |
| 167 | 21 | நேர்த்து | சேர்த்து |
| 201 | 11 | தணணுமை | தண்ணுமை |
| 204 | 25 | நலகத் | நல்கத் |
| 205 | 28 | நீடித்த | நீட்டித்த |
| 217 | 27 | "பொறைய! | பொறைய! |
| 218 | 6 | செய்யுட் | செய்யுள் |
| 220 | 3 | நசைவர்க் | நகைவர்க் |
| 230 | 4 | ளொய்யெனத | ளொய்யெனத் |
| 233 | 4 | வருத்தம | வருத்தம் |
| 240 | 13 | குறுந்தெர்கை | குறுந்தொகை |
| 253 | 25 | 813 | 313 |
| 262 | 14 | வீயுகுப வைபோல் | வீயுகு பவைபோல் |
| 280 | 17 | மாததொடு | மரத்தொடு |
| 283 | 2 | கையுபு | தையுபு |
| 283 | 4 | செய்யவன் | செய்யவள் |
| 289 | 27 | கூறினன் | கூறினள் |
| 296 | 26 | அகநானூறு 36 | அகநானூறு 33 |
| 301 | 18 | தெடர்பு | தொடர்பு |
| 312 | 26 | பவைர் | பகைவர் |
| 330 | 27 | அதியாமன் | அதியமான் |

| | | | |
|---|---|---|---|
| 345 | 19 | மறத்தகை | அறத்தகை |
| 380 | 19 | பாடாடிணை | பாடாண்டிணை |
| 380 | 23 | புரமுன்றி | புகழுன்றி |
| 382 | 28 | பெருவன்மையும் | பெருவண்மையும் |
| 388 | 22 | பெருங்கொற்றனார் | பரங்கொற்றனார் |
| 400 | 13 | உர்ன்மலி | உரன்மலி |

பக்கம் 221-ல், 131-ஆம் பாடலின் மேலே சேரமான் குட்டுவன் கோதை என்ற தலைப்பும், பக்கம் 222-ல், 182-ஆம் பாடலின் மேலே சேரமான் மாரிவெண்கோ என்ற தலைப்பும், பக்கம் 301-ல், 232-ஆம் பாடலின் கீழ், ஔவையார் என்ற பெயரும், பக்கம் 320-ல், 224-ஆம் பாடலின் கீழ் அரிசில்கிழார் என்ற பெயரும், பக்கம் 404-ல், 341-ஆம் பாடலின் கீழ் மாமூலனார் என்ற பெயரும் சேர்த்துக்கொள்க.